நெல்லைச் சித்தாந்த சைவச் செந்நெறிக் கழக வெளியீடு நிர். 19.

உ
சிவமயம்

# நாடும் நவீனரும்

திருநெல்வேலிப் பேட்டை சித்தாந்த பண்டிதபூஷணம்
**ஆ. ஈசுரமூர்த்திப் பிள்ளை அவர்கள்**
எழுதியது



ஸ்ரீ மாதவச் சிவஞான சுவாமிகள்



நெல்லை மாவட்டம் பாபநாசம், விக்கிரமசிங்கபுரத்தில் அவதரித்த
**ஸ்ரீ மாதவச்சிவஞான சுவாமிகள்**
176வது குருபூசை (சித்திரை ஆயில்யம்) வெளியிடு

**சித்தாந்த சைவச் செந்நெறிக் கழகம்**
73, கீழப்புதுத் தெரு, திருநெல்வேலி — 6.
4—5—1960

மகாவித்வான் ஸ்ரீ மீனுக்ஷிசுந்தரம் பிள்ளை அவர்கள் இயற்றிய

# ஸ்ரீ மாதவச் சிவஞான யோகிகள் சரித்திரம்

### மகப்பேறு

ஒருபதுதிங் களுசிரம்ப வொள்ளியநல் லோரையெழப்
பெருகுசம யத்துளுநற் பெருஞ்சைவங் குதுகலிப்பத்
திருததவி ரதனுள்ளுஞ் சித்தாந்த சைவமெழூஉப்
பொருவருநல் லின்படையப் போதநூ லுவப்பூற.

செப்பரிய தமிழ்வழங்கு தேயமெலாங் களிசிறப்ப
வெப்பரிய மறையோரு மெல்லோருங் கொண்டாட
வெப்பரிய சோழுட்டு மெய்த்துறைசை நகருவப்ப
வொப்பரிய தவப்பெரியோ ரொருவரவ தரித்தனரால்.

### பிள்ளைத் திருநாமம்

மிக்களா விபசூந வினைகழியப் பின்ளுளி
லக்களா வியவரையா ரருள்கருது தந்தையார்
திக்களா வும்பெருமைச் சேயார்க்குத் திருநாம
மூக்களா லிங்கமென மொழிந்தனர்பல் கிளையுவப்ப.

### காப்புப் பருவம்

தண்ணியபே றெடுத்தணிந்தீ சானரவர் முதலாக
வெண்ணியவான் பதினெருவ ரிணையடிகள் கைதொழுது
மண்ணியமா மணிபுரைய வருமகவை வழுவாது
கண்ணியபே ரருளினெடு காப்பதுநுங் கடனென்ருர்.

### செங்கீரைப் பருவம்

இருகையுமுன் பதித்தொருதா ளெடுத்தொருதா ளூறமடித்துத்
தருகைமலி சித்தாந்த சைவமலாற் பிறிதொன்றும்
வருகையுறல் சம்மதியோ மெனமறுக்கு மாட்சிமையிற்
றிருகையுறர் தலையசைத்துச் செங்கீரை யாடினுர்

### தாலப் பருவம்

அத்தமணித் தூணிறுவி யாய்துகிர்விட் டங்கிடத்தி
முத்தவட மதிற்பொருத்தி முழுமணித்தொட் டிலையணைத்துச்
சித்தமுற வதிற்கிடத்திச் செங்கைதொட்டுத் தாதியர்க
டத்தமனங் களிசிறப்பந் தாலோதா லெனவுவந்தார்.

### சப்பாணிப் பருவம்

ஆயபன்மூ லத்தொடுமொவ் வாதமுர ணுரையெழுதித்
தீபசம வாதஞ்செய் சிவப்பிரகாச பெயரீர்
நாயகமா யினிரென்று நகைத்திடக்கை தட்டுதல்போற்
றூயவனயார் கைகுவித்துச் சப்பாணி கொட்டினுர்.

நெல்லைச் சித்தாந்த சைவச் செந்நெறிக் கழக வெளியீடு நிர். 19

உ
சிவமயம்

# நாடும் நவீனரும்

திருநெல்வேலிப் பேட்டை சித்தாந்த பண்டித பூஷணம்
**ஆ. ஈசுரமூர்த்திப் பிள்ளை அவர்கள்**
எழுதியது.



நன்கொடையாளர்:

**சிவஸ்ரீ சி. ச. ஆழ்வாரப்ப பிள்ளை அவர்கள்**
நூல் வியாபாரம்,
தெற்கு ரதவீதி, திருநெல்வேலி டவுண்.






ஸ்ரீமத் சிவஞான சுவாமிகள்
176-வது குருபூசை வெளியீடு

சித்திரை ஆயில்யம் ௦ 4—5—60

79/3

உ

திருச்சிற்றம்பலம்

ஸ்ரீ மெய்கண்ட தேசிகன் திருவடி வாழ்க.

# ஆசியுரை

சிவபெருமான் படிகம்போல் பரிசுத்தர்: நித்திய நிர்மலர்: அதனால் அவர் பேரறிவினர் பேரறிவே அவரது பேராற்றலுக்குக் காரணம். பேரறிவும் பேராற்றலும் இல்லாதவருடைய கருணை பயனளிக்காது. இதனால் சிவபெருமான் பேரறிவும் பேராற்றலும் பெருங்கருணையு முள்ளவரென்று வேதாகமங்களும் திருமுறைகளும் முழங்கும்.

உயிர்கள் அறிவுள்ளவை. ஆனால் அறியாமையைச் செய்யும் ஆணவமலத்தோடு கூடியவை. களிம்போடு விரவிய செம்புபோல: செம்பு உள்ள நாள் தொடக்கம் களிம்போடு கலந்தது. உயிரும் உள்ளவன்றே மலத்தோடு விரவியது. செம்புறு களிம்பு ரசவேதையால் நீங்கும், உயிரைப் பற்றிய மலம் சிவஞானத்தால் நீங்கும். அப்போது அவ்வுயிர் தனக்குரிய அறிவு விளங்கப்பெறும். அந்த அறிவும் சிற்றறிவே ஆகும். அந்த அறிவு அதற்குரிய சுவபாவ தர்மம். அது ஒரு பேரறிவின் வழித்தாக அன்றி எந்த இன்பத்தினையும் அறிந்து நிலையாக அனுபவித்தற்கு உரியதன்று. ஆனால் அந்தச் சிற்றறிவும் அப்போது முற்றும் மலத்தால் மறைக்கப்பட்டுக் கிடக்கும். அதனால் அறிவிலன், அமூர்த்தன் நித்தன் என்னும் பட்டங்களைப் பெற்று, ஆணவ மலமேதானாய்க் கிடக்கும். இவ்வனம் ஆணவத்தோடு அத்துவிதமானபடி என்றும் மலத்தோடு விரவாத விஞ்ஞானப் பிழம்பாகிய தாணுவினோடு அத்துவிதமாய்க் கிடக்கும் பேறு வாய்க்குந்தனையும் அவ்வுயிர் ஒன்றனையும் அறிந்து இயற்றி இன்பத்தின் லேசந்தானும் எய்தியிடாது. உயிர் அறிவுடைப் பொருளாகவும் இன்பப் பேற்றைப் பெறுதற்கு உரியதாகவும் இருந்தும் தனது மலினம் காரணமாக மலத்தோடு விரவி அறிவற்று இன்பப் பேற்றிற்குப் பரமசாதனமாகிய அறிவு இழந்து, அறியாமையில் தலைப்பட்டு நிற்கிறது, அவ்வுயிர்களின் மாட்டுக் கருணையுள்ள சிவபெருமான் அவ்வுயிர்களுக்கு இன்ப வாழ்வு அளிக்கக் கருதிப் படைத்தல் காத்தல் அழித்தல், மறைத்தல் அருளல் என்ற அருஞ் செயல்களின் வழியாக அருள் புரியா நிற்பர். திருமாலாதி பெத்தாந்தகணத்தவரும் பசுக்களே. அவர்களும் இம்முறையில் அருள் பெற்றவரே யாவர். அவ்வருஞ் செயல்களால் அவ்வுயிர்களைப்பற்றிய மலமாசு நீக்குதல் முன்னைய பேறு ஆகும். பின்னைய பேறு மீண்டும் அத்துணை மலத்திற் சாராதும் தமக்கே உரிய இன்பப் பேற்றினைப் பொருந்தலும் அதனின்றும் மீளாது திளைத்தலும். இந் நெறியானே இத்தனையும்

செய்த சிவ பரம் பொருளில் தமது விளக்கிய இச்சா ஞானக் கிரியாசக்தி களைப் பிரிவறப் பதித்தலுமே அவ்வுயிர்களின் நன்றிக் கடப்பாடான செயலாகும். 'அயரா அன்பின் அரன்கழல் செலும்' என்பதும் இப்பொருட்டு. அங்ஙனம் உயிர்களைப்பற்றிய பந்தம் பக்குவத்தில் நீங்குவது, பக்குவத்தை வருவித்தற்குச் செய்யப்படும் செயல்கள் உயிர்களை மாயாகருவிகளில் கூட்டுவித்துப் போகத்தில் நிறுத்தி அனுபவிக்குமாறு செய்தல். அதனால் (மூர்த்தி, தலம், தீர்த்தம், குரு பாரம்பரியம் வேதாகமாதிசாத்திரக் கேள்வி, சற்சார்பு, பிராயச்சித்தம், தவம் முதலியவைகளால்) பொதுவுஞ் சிறப்புமாகிய புண்ணியங்கள் வளர அவ்வுயிர்களைப்பற்றிய மலம் நீக்க நீங்குந் தன்மைத்தாகும். அதுவே உயிர்க்குப் பக்குவமாம்; கொளுத்தக் கொள்ளுந் தன்மை மாணாக்கனுக்குப் பக்குவமாதல் போலவாம் உடம்பில் நோயுற்றோன் வைத்தியன் வழி நிற்றல், கொள்வோன் ஆசான் வழி நிற்றல் கடன். அங்ஙனமே சிவன் ஆணைவழி நிற்றல் உயிர்க்குக் கடன். அறிவுடைய மக்கட்கு, சித்தாந்த சைவருக்கு அது பெருங் கடனாதல் கூற வேண்டுமோ? நம்மவர்க்கு நன்னெறியறிதல் எளிதன்று. சில்வாழ்நாள் பல் பிணிச் சிற்றறிவினேம் ஆதலால் என்க. வேதாரஞ்சகன் மால் புரந்தரன் முதலியோரும் இத்தகையினரே. எத்திறத்தோருர் ஒப்ப வீடு பேறடைதற்பொருட்டு எழுந்த நூல்களே வேதாகமங்களாம். அவைகளே அநாதி அமலனாற் செய்யப்பட்ட ஆதி நூல்களாம். அவ்விருநூல்களன்றி வேறு எந்த நூல்களும் பிரமாணமாக மாட்டா. எந்தப் பெரிய சிவஞானிகளும் அவ்விரு நூல்களின் வரம்பை மனதினாலுங் கடத்தல் செய்யார். அவற்றா லுணர்த்தப்படும் வடித்த பொருள் எம்மால் தெள்ளத் தெளிய உணர்ந்துகொள்ளப்படுவதன்று. சற்சம்பிரதாயத்தின் வழி அவற்றின் உண்மை புலனாம். தம்மறிவு கொண்டியலும் துப்புரவில்லாவறிவு அத்துணைச் சம்பிரதாயத்தின் முன்பு துகளாக்கப்படும். நமது சிவானுபவச் செல்வர்கள் நம்மாட்டுவைத்த பெரு வரம்பு ஆகும் அச்சம்பிரதாயம். ஒரு நன் மாணாக்கனது கல்வி நலக்கெல்லாம் கற்பவை கற்றலிலும் கற்றபின் நிற்றலிலுமே அமைவன. ஒரு பொருளின் இயல்பு பிற பொருளோடு கலவாமையில் வைத்தே உணரப்படும். அங்ஙனமே நூல் நெறி அதற்குரியவரம்பிலிருந்தும் கடவாமைபற்றியே உணர்ந்துகொள்ளப்படும். அவ் வரம்பில் நின்று கற்கும் கல்வியே கல்வியாகும். இவ் வியல்பு சைவ நெறிக்கு இன்றியமையாது வேண்டப்படும். அது ஆன்றோர் வழித்தாக உணரப்படும். அதுவே தொல்லாசிரியர் வகுத்த மரபெனவும் சற்சம்பிரதாயமெனவும் தொன்றுதொட்டு அனுபவமுடைய தேசிகன் திருவருளெனவும், அதனைப் பெறுமாறு முயல்வது நம்மவர்க்கெல்லாம் கடனெனவும் நமது சிவஞானச் செல்வர்கள் விதந்து கூறி அந் நெறி பேணு

மாறு நமக்கு அருள்புரியா நிற்பர். இந் நெறியின் சிறப்பேமென்பார் ஒரோவிடத்து மயங்குதல் இயல்பேயாகும். என்னை? தம்மை உணர்ந்து தமையுடைய தன்னுணர்வார் ஆதல் எவர்க்கும் எளிதன்று ஆகலான் எங்க அங்ஙனம் பிறழ உணர்வார் புண்ணியமும் உடையராயின் தமது போக்கின் பொருந்தாமை கண்டு திருந்துதலுஞ் செய்வர். தமது புறநெறிக்கு வருந்துதலுஞ் செய்வர். வேதாகம விதியைத் தெற்றென உணராதும் அவற்றை உணரும் நியாய தருக்க வரம்பில் தலைப்படாதும் தம்மறிவு கொண்டு இயலுதல் சிற்றுயிர்க்கு இயல்பேயாகும். அன்னரெல்லாம் தவமுடையராயின் நூல்வரம்பினை உணர்த்த உணர்ந்து திருந்திப் பயன் பெறற்பாலராவர். அங்ஙனம் தவமிலராயின் தமது புன்னெறியதனிற் செல்லும் போக்கினையே நன்னெறியாக்கொண்டு அந்நெறியை நிறுத்திப் பரப்பவும் முயல்வர். அங்ஙனம் செல்லுதல் அவரது போகூழின் வலியாயின் மற்றதை யார் தடுத்து நிறுத்தற்பாலர். ஒன்றனைப் பிறழ உணர்தல் உயிர்களுக்கு இயல்பு. அது பொருந்தாமையை நியாய தருக்க வரம்பு கொண்டுணரும் வேதாகம நெறியை அறிந்து உணர்த்தவல்ல சான்றோர் நல்லுரை கேட்டு மாற்றிக்கொண்டு நன்னெறி கடைப் பிடித்தல் சன்மார்க்கர்கள் உயர்தற்பொருட்டு மேற்கொள்ளுங்கடனும். அங்ஙனம் அவர் திருந்தாது வேறு சூழ்நிலைகளால் பேதுற்று மயங்கியழியுமிடத்து அவர் தம்மாற்றங்கேட்டுப் பிறர் மயங்காதவாறு அவரைக் காத்தல் கற்றறிந்த மாந்தர் கடனாம். நன்னெறியாளர் அயல் நெறி கண்டு மயங்கி அங்குமிங்குமாக அலமருங்கால் அதனை விலக்கி அவரைச் செந்நெறியில் நிறுத்தாது போயின் சன்மார்க்கர்களுக்கு அது பெரும் பழியாகும் எங்க.

இதனை 'நிறுத்திடவலானமல ஞானெறியை யென்று
மறுத்திட வலானவல மார்க்க மயலுற்றே
நிறுத்திலன் மறுத்தில னெனின்'

அவன் சிவாபராதியாவன் எனச் சிவாகமும் செப்புமெங்க. இதுவே புறச்சமய நிராகரணமும் சுவமத ஸ்தாபனமுமாகிய உத்தமோத்தம சிவ புண்ணியமென்பது சைவ நூற்றுணிபுமெங்க. இந்த நெறியிலே நின்று பணிபுரிந்தவர்களே எமது சமயாசாரியர்களும் சந்தானசாரியர்களும் அவர்களின் வழிவந்த சிவானுபூதிச் செல்வர்களுமாவர். இந்த நெறி பேணிக் காத்தல் எம்மவர்க்கு உற்ற கடனும். இந்த நெறியிலே நின்று என்றும் சிறந்த நூலுரைகளானும் பல கண்டன நூல்களானும் சைவத்துக்குத் தொண்டாற்றுபவர் நமது சித்தாந்த சைவ சிலர், சித்தாந்த பண்டித பூஷணம், சிவத்திரு ஆ. ஈசுரமூர்த்திப் பிள்ளை அவர்கள் ஆவார்கள். இப்போது இவர்கள் செய்த ஒரு பெரு நூல் "நாடும் நவீனரும்" என்பது. இது சித்தாந்த சைவ வரம்பிகந்து

கருதியும், பேசியும் எழுதியும் வந்த பல்லோரது கொள்கைகள் பொருந்தா வென்பதை நியாய தருக்க வரம்பில் நின்று பிரமாணங்கள் கொண்டும் தெளிவு செய்து காட்டித் தொன்மை சற்சம்பிரதாயங்கள் கொண்டும் சைவ சமய வரம்பை நன்கு நிருபித்து நிலை நிறுத்தியிருக்கிறார்கள். இந் நூலின் வாயிலாக சைவ நூற் பொருள்கள் எண்ணற்றவை தெளிவு செய்யப்பெற்றுள்ளன. பல்லோரது மயக்க உரைகளை மறுத்துத் தெளிவு செய்யப்பட்டுள்ளன. இங்ஙனம் செயற்கருஞ் செயல் புரிவோரை ஆதரிப்போர் பெரிதும் அரியராகிய இந்த நாளிலே இங்ஙனம் பணிபுரியும் ஒப்பற்ற ஒரு சைவ சீலரைக் கொண்டு சைவ சாத்திர போதனை செய்வித்தலும் சிறந்த நூலுரைகள், கண்டனக் கிரந்தங்களை அச்சிட்டுப்பரப்பி நன்னெறிநிறுத்துதலும் சித்தாந்த சைவத்திற்கு ஆற்றும் ஒப்புயர்வற்ற உத்தமோத்தம சிவ புண்ணியமாம். அவ்வரிய நல்லறங்களை ஆற்றிவருவோர் தவஞானச் செல்வர்களாய் சிவஞானப் பேற்றிற்கு உரியர்களாய்த் திகழ்வார்களென்பது சிவ சாத்திர துணிபு ஆகும். இந்த நூலை அச்சிடுவித்து உபகரிப்போராகிய எமது அன்புமிக்க மகா புருஷ செல்வச் சிரஞ்சீவி (சிவ புண்ணிய சீலர்) சி. ச. ஆழ்வாரப்ப பிள்ளை அவர்களும் இந்த நூலாசிரியராகிய புலவர் பெருமானும் நோயின்றி யியன்றயாக்கையும் நீண்ட வாணாளும் மனோதிடமும், நிகரறு நற் சிவதரும சிவஞான தான புண்ணியமும் வளரப்பெற்று எங்கள் குலதெய்வமாகிய ஸ்ரீ ஞான சம்பந்தப் பெருமானது திருவருட்பேற்றிற்கு உரியராகி நீடு வாழ்க வென, அவரது பொன்னடிப் போதுகளைச் சிந்தையினும் சென்னியினும் வைத்து வந்தித்து வாழ்த்துகின்றேன். சாதுக்கள் க்ஷேமார்த்தம், இந்த சத்கிரந்தம் இவ்வுலகில் நின்று நிலவுக. ஆழ்க தீயது; சத் சம்பிரதாயம் ஓங்குக. சன்மார்க்க நெறி பற்றி திருநெறித்தொண்டர் குழாம் உய்தி பெற்று வாழ்க.

இங்ஙனம்

**ஈசான சிவாசாரியர்**

உ
சிவமயம்.

# பதிப்புரை

இப்பொழுது நம் நாடு, அதிலும் குறிப்பாக நம் தமிழ்நாடு இருக்கும் நிலைமை உலகம் அறிந்ததே. தனக்கு ஒரு மகன் பிறந்திருக்கிறான் என்றால் தானும் தன் மனைவியும் கூட்டுறவால் பிறந்திருக்கிறான் என்பது அவன் தெரியாமலில்லை. ஆனால்

'நான் பிறந்த காரணத்தை நானே தெரியுமுன்னே
ஏன் பிறந்தாய் மகனே!'

என்று சினிமாவில் பாடவே அப்பாடலைத் தெருத்தெருவாய் வீடு வீடாய் ரேடியோ மூலமாகவும் ஒலிபரப்பி மூலமாகவும் கேட்டுக் குழந்தைகள் முதல் யாவரும் பாடி மகிழ்கின்றார்கள்.

இதுபோல நாட்டில் அநேக விஷயங்கள் பேசப்படுகின்றன. பத்திரிகைகளிலும் வெளியிடப்படுகின்றன. பொருளாதாரம் என்றால் என்ன என்று தெரியாதவர் பொருளாதாரத்தைப்பற்றிப் பேசுகிறார். அவரும் தம்மை ஒரு அரசியல் தலைவர் என்று சொல்லிக்கொள்கிறார். அப்படியே ஆலய வழிபாடு, சமயம், மொழி முதலிய விஷயங்கள் என்ன என்று தெரியாதவரும் அரசியலில் ஈடுபட்டுத் தமக்குச் செல்வாக்கு இருக்கிறது என்ற எண்ணத்தால் அவற்றைப்பற்றி மனம் போனபடி பேசுகிறார், எழுதுகிறார். அதனைப் பாமர மக்களும் நம்புகிறார்கள்.

ஒரு வியாதிக்கு மருந்து கொடுக்க வேண்டுமென்றால் வைத்திய சாஸ்திரம் முறையாகக் கற்றுத் தேர்ந்தவர் தவிர மற்றவர்கள் துணிந்து மருந்து கொடுத்து அந்த நோயாளியும் அந்த மருந்தைச் சாப்பிடுவாரானால் அவர் கதி என்னவாகும் என்று வாசகர்களே சிந்தித்து முடிவு செய்து கொள்ளலாம்.

தமிழ்மொழி என்ன என்று தெரியாதவர்களும் அம்மொழியைப் பற்றிச் சண்டப்பிரசண்டம் செய்கிறார்கள். உதாரணமாக 'நிலையம்', 'நிலயம்' என்ற இந்த இரண்டு சொற்களில் எது சரி என்று தெரியாமல் இன்று 'நிலையம்

என்றே தமிழ்ப் பண்டிதர்களும், தமிழ்ப் பேராசிரியர்களும் எழுதி வருகிறார்கள். அதை மற்றவர்களும் காப்பியடிக் கிறார்கள். தம்முடைய பெயரில்கூட சம்ஸ்கிருதம் கலக்கக் கூடாதென்று நினைத்த தீவிரத் தமிழன்பர் மறைமலையடி கள் கூட 'நிலயம்' என்றுதான் எழுதியிருக்கிறார்கள். அது தான் சரியான முறையும் கூட.

'ஹிந்து' என்ற பதத்திற்குப் பாரசீக பாஷையில் கரி யன், பொய்யன் அடிமை என்று பொருளாம். இன்னும் சிலர் அதற்கு ஒதுக்கப்பட்டவர்கள், பிரஷ்டர் என்றும் பொருள் சொல்கிறார்கள். முழு விபரம் இப்புத்தகம் 115-ம் பக்கம் பார்க்க ஆனால் நம் சென்னைமாகாணத்தில் சைவ, வைணவ ஆலயங்களை மட்டும் நிர்வகிக்க ஏற்பட்ட இலாக்காவுக்கு 'ஹிந்து அறநிலயப் பாதுகாப்பு இலாக்கா' என்று பெயரிட் டிருக்கிறார்கள். இதில் வரும் ஹிந்து என்ற பதம் என்ன பொருளில் வந்திருக்கிறது என்று அவர்களையேதான் கேட்க வேண்டும்.

இப்படியே இன்னும் அநேக விஷயங்கள் இருக் கின்றன. சுயநலப்பிரியர்கள் மக்களிடம் தங்கள் செல்வாக் கைப் பயன்படுத்திக்கொண்டு நயம்படப் பேசி அவர்கள் மன தில் விஷ வித்துக்களை விதைத்து விடுகிறார்கள். அதில் ஆலய வழிபாட்டு விஷயமும் ஒன்று.

வானம் வறக்குமேல் சிறப்பொடு பூசனை செல்லாது என்பது வள்ளுவர் வாக்கு. இதிலிருந்து மக்கள் நலனுக் காக கோவில்களில் பூசனை முறையாக நடக்கவேண்டுமென் பது திருவள்ளுவர் திருவுள்ளம் என்று தெரியக் கிடக் கிறது.

ஆகவே தொன்றுதொட்டு ஆன்றோர் ஆலய வழி பாட்டு முறைகளை வகுத்து வைத்திருக்கிறார்கள். அம் முறைப்படி நடந்துவந்த காலங்களில் மழையும் ஒழுங்காகப் பெய்தது, நாடும் செழித்திருந்தது. இப்பொழுது சில கால மாகக் கோவில் வேண்டாம், வழிபாடு வேண்டாம், ஏதோ வழிபாடு இருந்தாலும் பழைய முறைப்படி வேண்டாம் என்ற பலவற்றைக் கொள்கையாக வுடைய நாத்திகர்கள் ஆஸ்தி கர் போல் ஆஷாடபூதி வேஷம் போட்டுக்கொண்டு ஆலய வழிபாட்டு முறையை நிந்திக்கவும், சில ஊர்களில் மாற்றி யமைக்கவும், வேறு சில இடங்களில் வழிபாட்டுமுறைகளைக்

குறைத்து அதற்குரிய பணத்தை பள்ளிக்கூடம் முதலான வைகளுக்குச் செலவிடவும் முறை தவறி நடந்த காலத்தி லிருந்து மழையும் பெய்கிறது, ஆனால் முறை தவறிப் பெய் கிறது என்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயம். அதாவது அது வேண்டியகாலத்தில் பெய்யாமல் கெடுக்கிறது, வேண் டாத காலத்தில் பெய்தும் கெடுக்கிறது.

எனவே, மக்கள் தலைவர்கள் என்று சொல்லிக் கொள்பவர்கள் பேசும் பேச்சும், எழுதும் எழுத்தும் அனு சரிக்க வேண்டியவைதானா என்று சிந்தித்துக் கையாள வேண்டிய நிலையில் இருக்கிறோம் நாம் இன்று. அச் சிந்த னைக்கு உதவி செய்வது இப்புத்தகம்.

ஸ்ரீலஸ்ரீ ஈசான சிவாசாரிய சுவாமிகள் பேசும் பொழுது அடிக்கடி சொல்வார்கள்; 'பயிர் தழைக்க வேண்டு மானால் தோன்றிய களைகளைப் பிடுங்கி எறியவேண்டும். எறிந்தாலல்லது பயிர் செழிக்காது. மேனி காணாது. அது போல ஆன்மலாபம் பெற விரும்புகிறவர்கள் தங்கள் மன மாகிய வயலில் நவீனக் கொள்கைகளாகிய களைகள் தோன்ற இடங் கொடுக்கக்கூடாது. எப்படியோ தோன்றி விட்டால் அந்த நிமிடமே அதைப் பிடுங்கி எறியவேண்டும். இல்லையேல் ஆன்ம லாபமாகிய பயிர்களைத் தழைக்கவிடாத படி நவீனக் கொள்கைகளாகிய களைகள் கெடுத்துக்கொண் டே இருக்கும்' இக்காலத்தில் பத்திரிகைகளில் காணப்படும் சமயம். மொழி சம்பந்தமான செய்திகள் மக்கள் மனதில் களைகளை உண்டுபண்ணுவனவாகவே இருக்கின்றன நன்மை செய்வன அல்ல. அச்செய்திகள் எப்படி என்னவித மான தீமைகளைச் செய்கின்றன என்று சிந்தித்து அத்தீமை கள் நம் மனதில் இடம் கொள்ளாமல் காப்பதற்கும் இடங் கொண்ட தீமைகளைக் களைந்து நன்மை அடைவதற்கும் உறுதுணையாக இருப்பது இப்புத்தகம்.

சைவ சமய அனுஷ்டானத்திற்கு இடையூறாக சமண மதமோ பௌத்த மதமோ மாயாவாத மதமோ தலை யெடுத்து வந்த காலத்தில் அம்மதங்களைச் சைவ சமயாசாரி யர்கள். நால்வர் தோன்றி, வாதில் வென்று சிவபரத்து வத்தை நிலைநாட்டியிருக்கிறார்கள். சந்தானாசாரியர்களும்

மற்றைச் சமயங்களின் குற்றங்குறைகள் என்ன; சைவத்தின் மேன்மை என்ன என்று எடுத்துக்காட்டிச் சிவஞான போதம் முதலிய ஞானநூல்களை அருளிச் செய்தார்கள். சுமார் 200 ஆண்டுகளுக்கு முன்னே தோன்றிய ஸ்ரீமத் சிவஞானசுவாமிகள் அந்நூல்களில் உள்ள விஷயங்களையும் தர்க்கங்களையும் இலக்கணம் இலக்கியம் முதலியவைகளையும் விளக்கி திராவிடமாபாடியம் முதலிய பல நூல்கள் இயற்றி சைவசமயிகளுக்குத் தம் சமயத்தைப் பற்றியும் அச்சமயக் கடவுளாகிய சிவபெருமானுடைய பரத்துவத்தைப் பற்றியும் உள்ளங்கை நெல்லிக்கனி போல் எடுத்துக்காட்டித் திருக்கைலாய பரம்பரை துறைசை யாதீனத்திற்கு ஞான பானுவாய் விளங்கினுர்கள். அப்பெருமானுருடைய குரு பூஜை தினம் சித்திரை ஆயில்யம் (4—5—'60)

இக்காலத்தில் மக்களால் மேற்கூறிய சமணம். பௌத்தம், மாயாவாதம், உலோகாயதம் முதலிய மதங்களில் எந்த மதத்தை இவர் சார்ந்தவர் என்று பலரைத் தெளிவாய்த் தெரிய முடியவில்லை. ஆயினும் அவர் ஒரு வரம்புமின்றி ஒவ்வொரு மதத்தின் சில சில கொள்கைகளை 'அவையே நல்ல கொள்கைகள்' என்று தப்பாக அர்த்தம் பண்ணிக் கொள்வர். அவர் சைவ சமய வேஷத்தில் நின்று சைவ சமயத்திற்கு விரோதமான அந்தக் கொள்கைகளைச் சைவ சமயக் கோயில்களிலேயே, சைவர்களுடைய செலவிலேயே பிரசாரம் செய்து பிழைத்து வருகிறுர்கள். ஆகவே முற்காலத்தில் சமயாசாரியர்களும், சந்தானுசாரியர்களும் ஸ்ரீமத் சிவஞான சுவாமிகளும் பரமதநிராகரணம் செய்து சுவமத ஸ்தாபனம் செய்ததுபோல அதே தொண்டை இக்காலத்திற் கேற்ற விதத்தில் இக்கால மக்கள் கேட்கும் கேள்விகளுக்குத் தகுந்தபடி தர்க்கரீதியாகப் பதிலெழுதி சைவஸ்தாபனம் செய்வதற்கு இந் நூலாசிரியர் சித்தாந்த பண்டித பூஷணம் பேட்டை ஆ. ஈசுரமூர்த்திப் பிள்ளை அவர்கள் ஒருவரே வல்லார் என்பது இப்புத்தகத்தை படிப்பவர்களுக்கு நன்கு விளங்கும். நாட்டில் எங்காவது வேறு யாரும் இருக்கலாம். ஆனல் பத்திரிகைகளின் மூலமாகவோ, புத்தக ரூபமாகவோ பிரசங்கத்தின் மூலமாகவோ சைவத்தை எதிர்த்துப்பிரசாரம் செய்பவர்களுக்குப் பத்திரிகை வாயிலாக சுடச்சுடப் பதில் கொடுத்து சிவபரத்துவ நிச்சயம்செய்தவர் பிறரை நமக்குத்

தெரியவில்லை. வேலையிலிருந்து ஓய்வெடுத்துக்கொண்ட பிறகும் வரம்பு கடவாமல் சைவசமய போதனை செய்து வரும் ஆசிரியர் அவர்களுக்கு நீண்ட ஆயுளையும் தேக ஆரோக்கியத்தையும் சலியாத மன வலிமையையும் கொடுத்தருளும்படி எல்லாம் வல்ல சிவபெருமானைப் பிரார்த்திப்பதைத் தவிர அவர்களுக்கு வேறு என்ன கைம்மாறும் செய்ய முடியாத நிலையிலிருக்கிறோம்.

1947வது வருஷ முதல் 1958வது வருஷம்வரை பத்திரிகைகளில் வந்த அபத்தப் பிரசங்கங்களைக் கண்டித்து எழுதியவைகளின் தொகுப்பே 'நாடும் நவீனரும்' என்ற இப் புத்தகமாகும். சைவ சமயிகளில் பெரும்பாலார் தம் சமய உண்மைகளைத் தெரியாது விபூதி ருத்திராட்சம் அணிந்திருந்தாலும் கூட பிற சமயக் கொள்கைகளை அறியாமலே அனுஷ்டித்து வருபவர்களுக்கு அறிவுறுத்துவதற்கு இப் புத்தகம் தக்க உதவியாயிருக்குமாதலால் இப்புத்தகத்தை அச்சிட்டு இலவசமாகத் தகுதியுடையவர்களுக்கு வழங்கிச் சைவ சமயப் பிணக்கறுத்து அவர்களைச் சிவபெருமானுடைய அடியவர்களாக்கித் "தான்பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்ற முதுமொழிக்கு இலக்காகத் திகழ்பவர்கள் நெல்லை நூல் வியாபாரம் சிவஸ்ரீ சி. ச. ஆழ்வாரப்ப பிள்ளை அவர்கள். தம்மைப்பற்றிப் புகழ்ந்து பேசுவதையோ எழுதுவதையோ விரும்பாதவர்கள். ஆனால் அவர்கள் செய்த நன்றியை நாங்கள் எடுத்துச் சொல்லாமல் இருந்தால் நன்றி மறந்த செயலுக்கு உட்படுவேமோ என்ற பயத்தில் இந்த இரண்டொரு சொற்கள் எழுதினோம். அவர்கள் வாழ்க பல்லாண்டு. வளர்க அவர்களது சிவத்தொண்டு.

இப்புத்தகத்தைப்பெறும் அன்பர்கள் தங்கள் அபிப்பிராயத்தை, சாதகமாயிருந்தாலும் சரி, பாதகமாயிருந்தாலும் சரி எங்களுக்கு எழுதியனுப்பும்படிக் கேட்டுக்கொள்கிறோம்.

இப்புத்தகம் அச்சிடுவதில் ஈடுபட்ட இக்கழக உறுப்பினர்கள் பல தொழில் துறையில் இருப்பதால் சில பிழைகள் அவர்கள் கண்ணுக்குத் தப்பிவிட்டன. இதன் இறுதியிற் சேர்க்கப்பட்டிருக்கும் பிழை திருத்தத்தின் படி அப்பிழைகளையும் திருத்திக்கொண்டு படிக்கும்படி கேட்டுக்கொள்கிறோம்.

சித்தாந்த சைவச் செந்நெறிக் கழகத்தார்,
73, கீழப்புதுத் தெரு,
4—5—1960 திருநெல்வேலி டவுண்.

# நன்றியுரை

'சைவாலயங்களில் சம்ஸ்கிருத மந்திரங்களே வேண்டும்' என்றொரு புத்தகத்தை நான் எழுதி 1954-இல் வெளியிட்டேன். அதற்கொரு அனுபந்தமும் அவசியமாயிற்று. அதனையும் எழுதினேன். 'சைவாலயங்களில் சம்ஸ்கிருத அர்ச்சனையே வேண்டும்' என்னுங் கட்டுரையே அது. 'செட்டிநாடு' என்ற வாரப் பத்திரிகையில் அது சிறிது சிறிதாக வந்துகொண்டிருந்தது. தமிழர்ச்சனைப் பிரியருள் முன்னேடிகள் பலர் தடுத்தும் அப் பத்திரிகாசிரியர் திரு. பாலகவி இராமநாதன் செட்டியாரவர்கள் அக் கட்டுரையைத் துணிந்து வெளியிட்டது அவர்களது ஆண்மைக்கோரடையாளமாகும். அவர்களை என்னால் மறக்க முடியாது. பின்னர் அப்பத்திரிகை நின்றது. அதனால் அக்கட்டுரையின் பிற்பகுதி வெளிவரவில்லை. இப்போது அக்கட்டுரை முழுவதும் மிகச்சில மாறுதலுடன் 'நாடும் நவீனரும்' என்ற பெயர் தாங்கி இப் புத்தக வடிவில் வெளிவந்துள்ளது.

சைவாலயங்களில் தமிழர்ச்சனை வேண்டுமென்றொரு புதுக்கொள்கை சில வருடங்களாகத் தோன்றி வருகிறது. அதை ஆதரிப்பார் சிலர். 'தமிழ்நாடு' முதலிய பத்திரிகைகளில் அவர் எழுதி வந்த வாசகங்கள் பல. அவற்றை வாசகர் படித்திருப்பர். பல முக்கியமானவர் எழுதியவற்றிலிருந்து அநேக பகுதிகளை அவை பிரசுரமான பத்திரிகைகளின் பெயர் தேதிகளோடு எடுத்துக்காட்டி அப்பகுதிகளின் பொருந்தாமையை விசாரணை முகத்தால் விளக்கி, நடைமுறையிலுள்ளபடி சைவாலயங்களில் சம்ஸ்கிருத மந்திரங்களோடுதான் அர்ச்சனை செய்யவேண்டுமென்பதை இப்புத்தகம் நிரூபித்திருக்கிறது.

இப்புத்தகத்தில் விசாரணைக்கு எடுத்துக்கொள்ளப்பட்ட பகுதிகள் வந்த பத்திரிகைகள் என்னிடமிருக்கின்றன. அப்பகுதிகளையும் அவற்றை எழுதியவரின் பெயர்களையும் தெரியவிரும்புகிறவர் என்னிடம் வந்தால் அவற்றைக்காட்ட நான் சித்தமாயிருக்கிறேன். மூன்றாண்டுக் காலம் அப் பத்திரிகைகள் என்னிடமிருக்கும். அதற்கு மேல் அவற்றை வைத்துக் காப்பாற்ற என்னால் முடியாது. அவை கெட்டு விடக்கூடும்.

என் புத்தகத்தில் அத்தியாயங்களுக்கு எண்களையே நான் தலைப்பாகக் கொடுத்தேன். ஆனால் பக்கங்களில் வலத்திலும் இடத்திலும் சிறிது தடித்த எழுத்தில் விஷயச் சுருக்கங்களும் பல அடிக்குறிப்புக்களும் கொடுத்துப் புத்தகத்தை மேலுந் தெளிவுபடுத்தி உபகரித்தவர் உயர்திரு K. பாலன் அவர்கள். அவை யெல்லாம் அந்நூலுக்குக் கண்ணாடி போல்வன. அவ்வுபகாரத்தைச் செய்த அவர்களுக்கு என் நன்றி உரியதாகுக.

இந்நூலைத் தம் பொருட்செலவில் அச்சிட்டு உபகரித்தவர்கள் உயர்திரு சி. ச. ஆழ்வாரப்ப பிள்ளை யவர்கள். நெல்லைப் பிரமுகரான அவர்கள்பாற் பல சிறப்புக்களுள. அவற்றைச் சிறிதாவது விரித்துச் சொல்லலாம். ஆனால் அடக்கமே அணியாகக் கொண்ட அவர்கள் என்னைத் தடுத்துவிட்டார்கள். அதனால் அவற்றை நான் விடுகிறேன். இந் நூலின் தரத்தையும் இன்றியமையாமையையும் தெளியக்கண்டு இதனை அச்சிட்டுதவிய அச் சிவபுண்ணியப் பெருந்தகையாருக்கு என் நன்றி உரியதாகுக.

நெல்லைச் சித்தாந்த சைவச் செந்நெறிக்கழகத்தார் இந்நூலைத் தம் கழகத்தின் வெளியீடாக ஏற்றுக்கொண்டார்கள். அச்சமயவரம்பைப் போற்றிவரும் அவர்களுக்கு என் நன்றி உரியதாகுக.

அடியேனையும் பொருளாகக்கொண்டு அடியேனுக்கு ஆசியும், இப் புத்தகத்துக்கு அணியுஞ் செய்தருளிய பழனி, சைவ சித்தாந்த சரபம், மகாமகோபாத்யாய சிவாகம ஞானபானு காசிவாசி சிவஸ்ரீ ஈசானசிவாசாரிய சுவாமிகளின் திருவடிகளை நான் வணங்குகின்றேன்

நெல்லை, இம்பீரியல் அச்சக உரிமையாளர் தவிர்க்க முடியாத பல வேலைகளுக்கிடையே இந்நூலை அச்சிட்டுப் புத்தகமாக்கிப் பூர்த்திசெய்தார்கள். அச்சுப் பிழை சரிபார்க்கும் பொறுப்பும் பல தடவைகள் அவர்களுக்கிருந்தது. இடத்துக்கேற்ப எழுத்துக்களைப் பொருந்த அமைத்துப் புத்தகத்தை அழகுற அச்சிட்டார்கள். அவர்களுக்கு என் நன்றி உரியதாகுக.

இந் நூலிறுதியில் பிழை திருத்தம் சேர்க்கப்பட்டிருக்கிறது. அதன்படி பிழைகளைத் திருத்திக்கொண்டு நூலைப் படிப்பவருக்குக் கருத்து இடையறவு படாது.

17—3—60 **ஆ. ஈசுரமூர்த்திப் பிள்ளை**

| | பொருளடக்கம் | பக்கம் |
|---|---|---|

| | பொருளடக்கம் | பக்கம் |
|---|---|---|
| 75 | சைவம் வைணவம் ஒன்றுக்கொன்று துணை என்பதிலும் கூட்டு மகாநாடு கூட்டுவதிலும் உட்கருத்தென்ன? | 109 |
| 76 | ஹிந்து என்ற பதத்தின் பொருள் என்ன? அது சமயச் சார்புள்ள பெயரா? | 115 |
| 77 | ஹிந்து மதமும் பௌத்தமும் | 124 |
| 78 | தமிழுக்கு, உயிர், அறம், வீடு எவை? | 126 |
| 79 | பாஷையைக் கடவுள் எனலாமா? | 127 |
| 80 | கிறிஸ்தவம் லத்தீன் மொழியைக் கடவுள் வாக்கு எனக் கொள்கிறதா? | 128 |
| 81 | தாய்மொழி வழிபாட்டால் கடவுள் பக்தி உண்டாகுமா? | 129 |
| 82 | உண்மையான ஆஸ்திகர்கள் யார்? | 130 |
| 83 | கோவில்களுக்கு பக்தர்கள் வேண்டும் என்றால் வயிறு வளர்த்தால் போதுமா? | 133 |
| | **13** | |
| 84 | பல மொழிகளில் அர்ச்சனை செய்வது சாத்தியமா? | 133 |
| 85 | நோயாளியின் விருப்பத்திற்கேற்ற மருந்து | 137 |
| 86 | தாய் மொழி வழிபாடு | 139 |
| 87 | உள்ளத்தைத் தொடும் மொழி எது? | 140 |
| 88 | ஒரு நூலின் சொல்லுக்குச் சக்தி உண்டா? சொல்லின் பொருளுக்குச் சக்தி உண்டா? | 142 |
| 89 | நூலின் மூல ஆசிரியர், உரையாசிரியர், மொழிபெயர்ப்பாசிரியர்,—யார் கருத்து வலிமையுடையது? | 144 |
| 90 | மொழிப்பயிற்சியும் மன நிறைவும் | 145 |
| 91 | கேட்டுப்படிப்பவன் குருடனா? பார்த்துப்படிப்பவன் செவிடனா? | 146 |
| 92 | மொழிக்கும் ஆன்ம வளர்ச்சிக்கும் என்ன சம்பந்தம் | 147 |
| 93 | கடவுளுக்குச் சகல பாஷைகளும் தெரியுமா? | 148 |
| 94 | சைவத் தமிழ் நூல்களைப் பயில்வதோடு சைவச் சம்ஸ்கிருத நூல்களைப் பயில்வது அவசியமா? | 150 |
| 95 | சம்ஸ்கிருதத்தில் வல்லவராயிருந்தவர்கள் ஒருவரா? இருவரா? | 151 |

| | பொருளடக்கம் | பக்கம் |
|---|---|---|
| 118 | தமிழரசுக் கழகத்தார் தமிழையுங் கெடுக்க வந்த கேடர் | 187 |
| 119 | ஈ. வே. ரா. வும் தமிழர்ச்சனையும் | 191 |
| 120 | அருள் நெறித் திருக்கூட்டத் தலைவரும், அவர் கொள்கையும் வேடமும் | 192 |
| 121 | சைவசமயக் கோயில்களில் சைவ சமயத்துக்கு விரோதமான பிரசாரம் | 197 |
| 122 | காந்திஜியின் சமரச மனப்பான்மையும் - மதமும் | 197 |
| 123 | ராஜாஜியின் சமயப்பற்று | 198 |
| 124 | ஹிந்துமத அறநிலய பாதுகாப்பு நிலய ஆணையாளரும் தமிழர்ச்சனையும் | 201 |
| 125 | முடிப்புரை 15 | 202 |

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்
ஸ்ரீ மெய்கண்ட தேசிகன் திருவடி வாழ்க.

# நாடும் நவீனரும்

'சைவாலயங்களில் சம்ஸ்கிருத மந்திரங்களே வேண்டும்' என்ரெரு புத்தகத்தை நான் எழுதி வெளியிட்டேன். நவீனர் அதைப் படித்தாரோ? என்னவோ? அவருடைய பிடிவாத புத்தி மாருமலிருந்து வருகிறது. ஆகலின் அப்புத்தகத்தில் மறுக்கப்பட்டவற்றை அவர் திரும்பத் திரும்பக் கூறி வருகின்ருர். அவருக்குச் சைவ நூல்களிலிருந்து சில வாக்கியங்களும் வேறு சிலவும் கிடைத்தன. அவை தமிழர்ச்சனைக்குப் பிரமாணங்களென்கிருர் அவர். உண்மையில் அவை யெல்லாம் அவ்வர்ச்சனையை ஆதரியா. அதைக் காட்டுவதே இப்புத்தகம். ஆகலின் இது என் முதற் புத்தகத்துக்கு அனுபந்தமாகும்.

**சைவாலயங்களில் சம்ஸ்கிருத அர்ச்சனையேவேண்டும்.**

ஆலயங்களில் பிரதிஷ்டையாதி சகல கிரியைகளும் சம்ஸ்கிருதத்தில் நடைபெறுக,

'அர்ச்சனையும் சம்ஸ்கிருதத்தில் செய்யக்கூடாது என்று நாம் சொல்லவில்லை. வடமொழியில் அர்ச்சனை செய்யக்கூடாது என்று யாராவது சொன்னல் நாம் அதை எதிர்ப்போம்'
(15—6—55 தினத்தந்தி)

ஆனல் அர்ச்சனையை யாரேனுந் தமிழில் வேண்டுமென விரும்பினல் அவருக்காக அவ்வர்ச்சனையை மாத்திரம் அம்மொழியிலுஞ் செய்ய வேண்டும், அவ்வர்ச்சனையாவது

'மந்திரஞ் சொல்லிப் பூக்களை சாமி மீது போடுவது'
(16—5—55 தினத்தந்தி)

என்கிருரவர். அது வாத விஷயத்துக்கு ஒரு வரம்பாயிற்று. வாத விஷயமாவது தினத்தந்தி விளக்கிய அர்ச்சனை மாத்திரமே. அவ்வாதம் முடிகிற வரையிலாவது அவர் அவ்வரம்பில் நிற்பாராக. இனி அவர் அவ்வர்ச்சனைக்குப் பிரமாணங்க ளெனக் கூறுவனவற்றை யாராய்ந்துகொண்டு போகலாம்.

## 1

அகத்தியர் தேவாரத் திரட்டு என்பது ஒரு நூல். அதில் குருவருள், பரையின் வரலாறு, அஞ்செழுத்துண்மை, கோயிற்றிறம், சிவனுருவம், திருவடிகள், அர்ச்சனை, அடிமை என எட்டுத் தலைப்புகளுள. அவற்றுள் அர்ச்சனையென்பதற்கு முன் தமிழ் என்பதைச் சேர்த்துத் தமிழர்ச்சனை யென வைத்துக் கொண்டு

**அகத்தியர் தேவாரத் திரட்டும் தமிழ் அர்ச்சனையும்**

'அகத்தியர் தேவாரத் திருமறைகளிலிருந்து அர்ச்சனைப் பதிகம் என்று திரட்டிக் கொடுத்திருப்பதையும் மறுக்க முடியுமா?' (21—5—55 தமிழ் நாடு)

என்கிறார் நவீனர். அது தமிழர்ச்சனையானால் மற்றை யேழு தலைப்புகளும் தமிழ்க் குருவருள், தமிழ்ப் பரையின் வரலாறு, தமிழஞ்செழுத்துண்மை, தமிழ்க் கோயிற்றிறம், தமிழ்ச் சிவனுருவம், தமிழ்த் திருவடிகள், தமிழடிமை யென்றாக வேண்டும். அது கேலிக்கிடம். தமிழ் என்பதை அர்ச்சனை யென்பதற்கு முன் மாத்திரம் சேர்க்கவேண்டும், மற்றவற்றின் முன் சேர்க்க வேண்டாம் என அவர் கூறலாம். அதற்குக் காரண மென்னை? அஃதவராற் கூற முடியாது. அதனால் அவர் கூறும் அர்ச்சனை வேறு, அத்திரட்டிலுள்ள அர்ச்சனை வேறு என்பது சித்தம்.

இன்னும் ஆத்மார்த்தம், பரார்த்தம் எனச் சிவபூசை யிரண்டு வகை. அவற்றுள் ஒவ்வொன்றும் ஆதி யோடந்தம் அர்ச்சனை யெனப்படும். அத்திரட்டிலுள்ள அர்ச்சனை யென்ற தலைப்பிற்கும் சிவபூசை யென்பதே பொருள். அத்திரட்டின் உரையில் அதனைக் காண்க. [1]'சிவார்ச்சன மார்ச்சனமாகிற் பவமகலும்' என்பது கோயிற் புராணம். சிவார்ச்சனம்—சிவபூசை. அப்புராணவுரையில் அதனைக்காண்க. ஆதிசைவருக்கு அர்ச்சக ரென்பதும் பெயர். அதுவும் சிவபூசகரென்னும் பொருளே கொண்டது. ஆகவே அவ்வர்ச்சனைப் பதிகங்கள் சிவபூசையைக் குறிக்கவே எழுந்தன. அர்ச்சனையில் ஓதற்குரியவென்று அவை அத்திரட்டிற் சேர்க்கப்படவில்லை. அகத்தியர் அவற்றை யோதி அர்ச்சனை செய்தா ரென்பதும் பொய்.

'ஆகவே ............ தமிழ் மந்திரங்கள் மூலமே வழிபாடு செய்தார் ......அகத்தியரும் அப்படியே' (8-6-55 தினமணி)

என்ற நவீனர் தீர்ப்புச் செல்லாதாயிற்று. அவ்வழிபாடாவது அர்ச்சனை. அவர்,

---

1 தலமெவையு முணர்ந்தமுனி தனயன்முக மிகநோக்கிப்
புவனமலி போகங்கள் பொருந்துமருந் தவம்புரிந்தாற்
சிவகதியு மிதுவன்று சிவார்ச்சனமார்ச் சனமாகிற்
பவமகலும் பரபோகம் பெறலாகு மெனப்பகர்ந்தான்.
[கோயிற் புராணம் — வியாக்கிரபாதச் சருக்கம் 4]

'பூசை வேறு அர்ச்சனை வேறு ......... மீண்டும் சொல்லு
கிறேன் பூசை வேறு அர்ச்சனை வேறு' (8-6-55 தினமணி)

என்கிறார். அதற்குப் பிரமாணம் என்னையோ? ஆனால் சிவ பூசையில் அர்ச்சனை யென வொரு பகுதி வழக்கத்தில் இருந்து வருகிறது. அது கொண்டு அவர் அப்படிப் பிரித்தார் போலும். ஆனால் அத் திரட்டி லுள்ள அவ்வர்ச்சனையாவது பூசையே. ஆகலின் அவ்வர்ச்சனை அவர் கூறும் அர்ச்சனைக்குச் சிறிதும் ஆதார மாகா தென்க.

## 2

[1]'மன்னிய வித் தமிழ்க் கிளவி மந்திரங்கள் கணித்து' என்றது காஞ்சிப் புராணம்; தமிழில் மந்திரங்களிருந்தன, அவற்றை அகத்தியர் கணித்திருக்கிறார் என்பது அவ்வடியினால் தெரிகிறது என்கிறார் நவீனர்.

**காஞ்சிப் புராணமும் தமிழ் மந்திரங்களும்**

அகத்தியரியற்றிய தமிழ் இலக்கண நூல் அகத்தியம். அது மறைந்தது. ஆயினும் அதிலுள்ள சில சூத்திரங்களாவது இப்போது கிடைக்கின்றன. அந்நூல் இருந்த தென்பதற்கு அவை சான்றாம். ஆனால் அவர் கணித்தனவாகச் சொல்லப்படுகிற தமிழ் மந்திரங்களிருந்தனவா? அவற்றுள் இரண்டொன்று கூட இப்போது அகப்படவில்லை. நவீனரும் எடுத்துக் காட்டினாரிலர். அதனால் அம் மந்திரங்கள் இருந்தன வென்பது ஆதாரமற்றதாயிற்று. எனவே அவை அன்றுமில்லை யென்க. ஆயின் அப்புராண அடிக்குப் பொருள் வேண்டுமே. அவ்வடியில் 'இத்தமிழ்க் கிளவி மந்திரங்கள்' என்றிருக்கிறது. அதிலுள்ள இகரம் சுட்டுவ தெதனை? தமிழ்க் கிளவி யென்பதையாவது மந்திரங்கள் என்பதையாவது அது சுட்டும். சுட்டினால் இந்தத் தமிழ்க் கிளவி, இந்த மந்திரங்கள் என்றாகும். எந்தத் தமிழ்க் கிளவி? எந்த மந்திரங்கள்? என்ற வினாக்கள் அடுத்து எழுவன. அவற்றிற்கு விடைகளை அப்புராணத்தில் முந்திய பாட்டிற் காணலாம்.

[2]'மூன்றுறழ்ந்த பதிற் றெழுத்தால் முடிவதுமாய் உனக்கினிதாய்த்
தோன்றிடு மத்தமிழ்ப் பாடைத் துதிகொண்டு' என்பதது.

---

1 மன்னிய இத் தமிழ்க்கிளவி மந்திரங்கள் கணித்தடியேன்
செந்நெறியின் வழுவாஇத் திருக்காஞ்சி நகர்வரைப்பின்
உன்னனுக்க ளாகிஇனி துறைந்திடவும் பெறவேண்டும்
இன்னவரம் எனக்கருளாய் எம்பெருமான் என்றிரந்தான்.
[காஞ்சிப்புராணம் — தழுவக்குழைந்த படலம் 245]

2 மூன்றுறழ்ந்த பதிற்றெழுத்தான் முடிவதுமாய் உனக்கினிதாய்த்
தோன்றிடும்அத் தமிழ்பாடைத் துதிகொண்டு மகிழ்ந்தருளி
ஆன்றவரம் எல்லார்க்கும் இவ்வரைப்பின் அளித்தருளாய்
என்றெடுத்த மொழிகல்வி எவற்றினுக்கும் இறையோனே!
[காஞ்சிப்புராணம் -தழுவக்குழைந்த படலம் 244] சிவஞான முனிவரர்

முதல் வினாவுக்கு 'மூன்றுறழ்ந்த பதிற்றெழுத்தால் முடிவது மாய் உனக் கினிதாய்த் தோன்றிடுமத் தமிழ்ப் பாடை' என்பது விடை. அடுத்த வினாவுக்குத் 'துதி' என்பது விடை. ஆகவே அத் தமிழ்ப் பாடைத் துதியே இத் தமிழ்க் கிளவி மந்திரங்கள் ஆகும். தமிழ்ப் பாடையும் தமிழ்க் கிளவியு மொன்றே. ஆதலின் அதை விடுக.

**தோத்திரம் மந்திரம் ஆகுமா?**

துதியும் மந்திரங்களுமேஈண்டு ஆய்வுக்குரியன. துதி — தோத்திரம். அப்புராணம் தோத்திரங்களையே மந்திரங்க ளென்றது. அப்பொருளுக்கே அவ்விகரம் இடந்தருகிறது. ஆனால் தோத்திரங்கள் மந்திரங்களாமா? ஆகா. நவீனரும் அதை ஏற்றனர்.

'மந்திரம் வேறு அர்ச்சனை வேறு. மந்திரம் என்பது மன தில் வைத் தெண்ணப் படுவது. அர்ச்சனை என்பது தோத் திர மொழிகள்தான்' (16—6—55 தமிழ்நாடு) என்றாரவர்.

ஆனால் அப்புராணத்தில் தோத்திரங்களை மந்திரங்களென அகத்தியர் சொன்னார். அதற்குப் பிரமாணமுண்டு. ஆனால் அதன் கருத்து வேறு. என்னை? அதனைத் திருமுறைகளில் வைத்துக் காணலாம். அவையுந் தோத்திரங்களே. நவீனருக்கும் அது சம்மதம். அவற்றை நோக்கிக்[1] 'கண்ட பெரு மந்திரமே மூவர் பாடல் கை காணா மந்திரங் கண் ணுதலோன் கூறல்' என்றது திருமுறை கண்ட புராணம். கண்ணுதலோன் கூறலாவது சம்ஸ்கிருத வேதம். அது கை காணா மந்திரம். மூவர் பாடலோ (கை) கண்ட பெரு மந்திரம். மூலர் பாடல் திரு மந்திரமும், மூவர் பாடல் பெருமந்திரமு மாயின. திரு மந்திர மானதற்குக் காரணம் [2]என் புத்தகத்திற் காண்க. பெரு மந்திர

---

1 கொண்டு குலசேகரனுங் கோன்பால்வந்து குஞ்சரத்தோ
னருள் செய்த கொள்கை யெல்லா;
மண்டு பெருங் காதலுடன் சொல்லியந்த வண்டமிழின்
பெருமைதனை வகுத்துச்சொல்வார்,
கண்ட பெரு மந்திரமே மூவர்பாடல் கைகாணா மந்திரங்
கண்ணுதலோன் கூற,
வெண்டிசையுஞ் சிவனருளைப் பெறுதற்காக விம்மொழியின்
பெருமையையா னியம்பக்கேணீ.
[திருமுறை கண்ட புராணம். ஸ்ரீ உமாபதி சிவாச்சாரியார்]

2 அத்திருமுறையில்
"இட்ட விதழ்களிடையந் தரத்திலே
யட்டறவ் விட்டதின் மேலே உவ்விட்டுக்
கிட்ட விதழ்களின் மேலே கிரோம்சிரோ
மிட்டுவா மத்திற் கிரோங் கென்ற மேவிடே" (திருமந்திரம்)
என்று வருகிறது. அன்ன பாடல்கள் பல. அவற்றிலுள்ள மந்திரங்க ளெல்லாம் சம்ஸ்கிருதமே. அவ்வாசிரியர் அவற்றை யப்படியே தந்தார். அவற்றுள் ஒன்றையாவது தமிழிற் பெயர்க்கவில்லை. ஏன்? அவற்றை யப்படியே ஓதவேண்டும். அவர் கட்டளை அது. அதனாற்றான் அத்திருமுறை திருமந்திரமென் றாயிற்று.
[ஆதிசைவர்கள், சைவாலயங்களில் சம்ஸ்கிருதமந்திரங்களே வேண்டும். பக்.8]

மானதற்கும் அதுவே காரணம். வேதத்தில் மந்திரங்களின் பொருள் மறைந்து கிடக்கும். அதனுல் அவ்வேதம் கை காணு மந்திரமெனப் பட்டது. கை காணு — மறைவான. அப்பொருளை அனுபவத்திற் கண்டனர் மூவர். அதனை வெளிப்படப் புகல்வது அவர் பாடல். அதனுல் அப்பாடல் (கை) கண்ட பெரு மந்திர மெனப்பட்டது. (கை) கண்ட — வெளிப்படையான. வெளிப்படப் புகல்வதாவது [1]'வேத நான்கினு மெய்ப் பொருளாவது — நாத னுமை நமச்சிவாயவே' என்பது போலப் புகல்வது. அம்மட்டோ? அறிஞர் அத்திருமுறைகளை ஒருமுறை கூர்ந்து படிக்க. பஞ்சாக்கரம், பிரணவம், பஞ்சப் பிரமம், ஷடங்கம், ஸ்ரீருத்ரம் முதலிய வேத மந்திரங்கள் அவற்றிலிருப்பதை அவரறிவார். அவை அம்மந்திரங்களைத் தம்பாற் கொண்டு போற்றுவன. [2]'வண்டமிழ் தன்னுற் சிவனஞ் செழுத்துந் துதிப்பார்', [3]'அரிய வஞ்செழுத்தையு மரசு போற்றிட' என்பன காண்க, இன்னு மொன்று

'மந்திரங்க ளெழுகோடி யாதலி னுன் மன்னுமவ
ரீந்தவகை திருமுறைகளேழாக வெடுத்தமைத்துப்
பந்தமுறு மந்திரங்கள் பதினென்று மாதலின
லந்தமுறை நாண்கி னெடு முறை பதினென் ருக்கினுர்'

என்றது அத்திருமுறை கண்ட புராணத்தில் உள்ள மற்றெரு பாடல். மந்திரங்கள் எழுகோடி — சம்ஸ்கிருதத்திலுள்ள சப்த கோடி மகா மந்திரங்கள். மந்திரங்கள் பதினென்று — அம்மொழியிலுள்ள பஞ்சப் பிரம ஷடங்க மந்திரங்கள். அத்திருமுறைகள் அம்மந்திரங் களை அனுசரித்தன வென்பது அப்பாடலால் விளங்கும். இப்படிப் பலவகையாலும் அத்திருமுறைகள் வேத மந்திரங்களோடு தொடர் புடையவாயின. அதனுற்ருன் அவையும் மந்திரமெனப்பட்டன. திருத் தொண்டர் திரு நாமக் கோவையு மொரு தோத்திரம். அதனை

---

1 காதலாகிக் கசிந்துகண் ணீர்மல்கி
ஓதுவார்தமை நன்னெறிக் குய்ப்பது
வேதம் நான்கினும் மெய்ப்பொரு ளாவது
நாதன் நாமம் நமச்சிவாயவே. [சம்பந்தர் — 3-ம் திருமுறை]

2 அப்பரி சவ்வினை முற்றியவரகன்றேகிய பின்ன
ரொப்பரு மாகடல்புக்க வுறைப்புடைமெய்த் தொண்டர்தாமு
மெப்பரி சாயினு மாகவேத்துவனெந்தையை யென்று
செப்பிய வண்டமிழ் தன்னுற் சிவனஞ்செழுத் துந்துதிப்பார்.
[சேக்கிழார் — திருநாவுக்கரசு நாயனுர் புராணம் 125.]

3 பெருகிய வன்பினர் பிடித்தபெற்றியால்
வருமலரோன் முதலமரர் வாழ்த்துதற்
கரியவஞ்செழுத்தையு மரசு போற்றிடக்
கருநெடுங் கடலினுட் கன் மிதந்ததே.
[சேக்கிழார் — திருநாவுக்கரசு நாயனுர் புராணம் 127]

[1]'மந்திரமாக் கொண்டு........விளம்ப வேண்டு மென்றது அக்கோவை. மந்திரமாக் கொண்டு — மந்திரம் போலக் கொண்டு. ஆகவே தோத்திரங்களை மந்திரங்களெனக் கோடல் உபசாரம் பற்றி வந்ததொரு வழக்கே யெனத் தெளிக.

**அகத்தியரும் சிவஞான முனிவரரும் தமிழ் மந்திரங்கள்மூலம் வழிபாடு செய்தனரா?**

அகத்தியர் கணித்த மந்திரங்களும் அங்ஙனமே. அவை தமிழ்ப்பாடைத் துதிகள் தான். அவர் வைதிகோத்தமர். அதனால் அத்துதிகளும் வேத மந்திரங்களைத் தழுவிச் சென்றிருக்கும். ஆகலின் அவை மந்திரங்களெனப்பட்டன. அவையு மிப்போது கிடைக்க வில்லை. அதற்கேற்பக் கணித்து என்ற பதமும் அப் புராணத்தில் பிரயோக மாயிற்று. அப் புராணத்தின் மூலம் "பாடைத் துதி" என்பதை 'பாஷா ஸ்துதி' என்றது; அது போல் 'தமிழ்க் கிளவி மந்திரம்' என்பதையும் 'பாஷா மந்திரம்' என்று சொல்லியிருக்கலாம். ஆனால் 'பாஷா மய மந்திரம்' என அதிலிருக்கிறது. அம் 'மய' சப்தத்தின் பொருளை ஆய்க. தமிழ்க் கிளவி மந்திரம் அல்லது தமிழ் மந்திரம் என்பது தமிழ்வேதம் என்பது போன்றதே. இன்னும்

'அர்ச்சனை என்பது தோத்திர மொழிகள் தான்' என்றார் நவீனர். அகத்தியர் அத்தமிழ் மந்திரங்களால் அர்ச்சனை செய்திருந்தாராயின் அந் நவீனரின் கருத்துப்படியும் அவை 'மனதில் வைத்தெண்ணப்படும் மந்திரங்க'ளாகாமல் தோத்திர மொழிகளே யாகும். அன்றியும் அகத்திய முனிவரோ சிவஞான முனிவரரோ ஆலயங்களில் அத் தினத் தந்தி யர்ச்சனை செய்தாரென்பதற்கு அவர் சரித்திரங்களிலோ, செய்யுட்களிலோ, எவ்வகைச் சான்றுங் கிடையாது. அங்ஙனமாக,

> 'மாதவச் சிவஞான முனிவர் தமிழ் மந்திரங்கள் மூலமே வழிபாடு செய்தார். தமிழ் முனிவர் அகத்தியரும் அப்படியே'
> (8—6—55 தினமணி)

என்ற நவீனர் தீர்ப்புக் கற்பனையேயாமென்க.

---

1 மந்திரமாக் கொண்டு மயிர் சிலிர்த்து — கைந்தருகி
மெய்யன்பா லென்றும் விளம்பப் பெறுவார்கள்.

[திருத்தொண்டர் திருநாமக்கோவை — சிவஞான முனிவரர்]

## 3

'சாத்திய கதவைத் திறந்தது; திறந்த கதவைச் சாத்தியது தமிழ். ஓடும் நீரில் எதிர்த்து வந்தது தமிழ் ஏடு. நெருப்பில் எரியாதது தமிழ் ஏடு. எலும்பைப் பெண்ணுரு வாக்கியது தமிழ். இந்தத் தமிழ் மொழியில் அர்ச்சனை செய்வது தவரு?' (16—6—55 தமிழ்நாடு) என்கிருர் நவீனர்.

அவ்வற்புதங்கள் திரு முறை யாதி சைவ நூற்களின் ஆற்றலால் நிகழ்ந்தன. நூலுக்குரிய அவ்வாற்றல் தமிழாகிய மொழிக்குரிய தாதல் யாங்ஙனம்? அது மொழிக்குரியது தானெனின், நவீனர் பேசுவதுந் தமிழ்; நான் பேசுவதுந் தமிழ்; அத் தமிழும் அத்தகைய அற்புதங்களைச் செய்ய வல்லதாதல் வேண்டும். அஃதில்லை. அதனுல் தெரிவதென்னை? நூலுக்குரிய ஆற்றலை மொழிக் கேற்றுவது தவறு என்பதே. அப்படி யேற்றுவது மயங்க வைத்தலுமாம். ஆனல் அச் சைவ நூல்கள் தமக்கே உரிய ஆற்றலைப் புலப்படுத்தித் தமிழுக்குப் பெருமை யளித்தன. தமிழ் மொழிப் பெருமைக்கு அச் சைவ நூல்கள் காரணமே யன்றி அச் சைவ நூல்களின் ஆற்றலுக்குத் தமிழ் மொழி காரண மன்று. அவ்வாற்றலைக் காட்டி அப்பெருமையை விளம்பரஞ் செய்வதே

தமிழில் அர்ச்சனை செய்வது தவரு? அன்ரு?

'தொண்டர் நாதனைத் தூதிடை விடுத்தது முதலை
யுண்ட பாலனை யழைத்தது மெலும்புபெண் ணுருவாக்
கண்டதும் மறைக் கதவினைத் திறந்ததுங் கன்னித்
தண்டமிழ்ச் சொலோ மறுபுலச் சொற்களோ சாற்றீர்'
[திருவிளையாடற் புராணம் — திருநாட்டுச் சிறப்பு]

என்ற பாடலுக்கும் அது போன்ற பிற பாடல்களுக்குங் கருத்தாகும். ஆனல் திருமுறையாதிய வற்றின் ஆற்றலுக்குக் காரணம் வேறு. அதைப்

'பாலைநெய்தல் பாடியதும் பாம்பொழியப் பாடியதுங்
காலனை யன் றேவிக் கராங்கொண்ட — பாலன்
மரணந் தவிர்த்ததுவு மற்ற வர்க்கு நந்தங்
கரணம் போலல்லாமை காண்'. [திருக்களிற்றுப்படியார்]

என்பதாலறிக. அந் நூல்களின் ஆசிரியன்மாரிடம் பதிந்து விளங்கிய சிவசத்தி அந் நூல்களிடத்தும் பதிந்து தன்னெளி வீசுவ தாயிற்று. அவ்வொளியைத் தமிழ் மொழிக் குரிய தெனல் யாங்ஙனம்? ஆகலின் திருமுறைகளின் ஆற்றலைக் காட்டி 'இந்தத் தமிழ்மொழியில் அர்ச்சனை செய்வது தவரு?' என்று வினவுவதிற் பயனில்லை.

அத்திருமுறைகளையாவது ஓதி அவ் வர்ச்சனையைச் செய்தா லென்ன? இப்படி நவீனர் வினவக் கூடும்? திருமுறைகளில் திருக் கடைக் காப்பு உள்ள பதிகங்களும் இல்லாத பதிகங்களும் பல. அக் காப்பாவது பதிகங் களை யோதுவதாலாம் பயன் கூறல். ஒரு பதிகத்தை யோதினால் அதன் காப்பிற் கண்ட பயன் கிடைக்கும். ஆனால் அக் காப்பில்லாப் பதிகங்களுக்குப் பய னென்னை? அவை [1]'கூடு மன்பினிற் கும்பிடல்' செய்வார் ஓதற் குரியன போலும். அல்லது கூறப்பட்ட காப்புக்களிற் கண்ட பயன்களே அக் காப்புக்களில்லாத பதிகங்களுக்கு மாகும். ஆனால் இன்ன பயனை இன்ன பதிகந் தரக் கூடுமெனக் கண்டு அப் பயனை உத்தேசித்து அப் பதிகத்தை யோத வேண்டு மெனவுங் கொள்ளலாம். அந்த நியமத்தை விட்டு அப்பதிகங்களின் ஆற்றலையே கருதி எப் பதிகத்தையும் ஓதி எப் பயனையும் பெறலா மெனக் கொண் டால் கதவைத் திறந்த பதிகம் அடைக்குமா? அடைத்த பதிகம் பெண்ணாக்குமா? ஆக்கிய பதிகம் இடியை வீழ்த்துமா? வீழ்த்திய பதிகம் சுரந் தீர்க்குமா? தீர்த்த பதிகம் குலை யீனுவிக்குமா? ஈனுவித்த பதிகம் காசு நல்குமா? அத்தனைக்கும் ஆமென விடை கூறின், அவ் வாசிரியர் ஒவ்வோ ரற்புதத்துக்கும் தனித் தனிப் பதிகம் பாடியிருக்க வேண்டாம். முதலில் நிகழ்ந்த அற்புதத்துக்குப் பாடிய பதிகத்தையே பின் நிகழ்ந்த அற்புதங்களுக்கும் பாடியிருப்பர். அஃதில்லை. அவ் விடையுஞ் சரியன்று. ஆகவே நியமந் தவறி யோதல் விரும்பிய பலனைத் தராது. நாமும் பயனை விரும்பி அப்பதிகங்களை யோது கிறோம். ஆனால் அவ்வப் பலனைக் கூட்டி வைப்பதற் கேற்ற பதிகங் களையே யோத வேண்டும். இன்றேல் கருதிய பலன் சித்தியாது. அதனால் திருமுறைகளின் ஆற்றலிற் சந்தேகம் பிறக்கும். அது திருமுறை நிந்தைக்கு ஏதுவாகும். அவ்வாற்றலிற் சிறிதுங் குறை வில்லை. பலன் சித்தியாமற் போவதற்கு நம் நியமத் தவறே காரணம். அத் தினத் தந்தி யர்ச்சனையில் திருமுறைகளை யோதுவதும் நியமத் தவறே. ஏன்? அவ் வோதல் திருக் கடைக் காப்புக்களில் விதிக்கப் பட வில்லை. ஆன்றோராசாரத்திலுங் கிடையாது.

**திருமுறைகளை ஓதி அர்ச்சனை செய்தாலென்ன?**

ஆனால் அத்திரு முறைகளை எப்படித்தான் ஓத வேண்டும்? அவ் வாசிரியன்மாரின் ஒழுகலாறே அதைக் காட்டி யுள்ளது.

---

1 'கேடு மாக்கமுங் கெட்ட திருவினா
ரோடுஞ் செம்பொனு மொக்கவே நோக்குவார்
கூடு மன்பினிற் கும்பி டலேயன்றி
வீடும் வேண்டா விறலின் விளங்கினார்'
[பெரிய புராணம் — திருக்கூட்டச் சிறப்பு 8]

'புக்கெதிர் தாழ்ந்து விழுந்தெ ழுந்துபூம்புக லூர்மன்னு புண்ணியரை
நெக்குரு குஞ்சிந்தை யன்பு பொங்க நிறை மலர் கண்ணி ரருவி செய்ய
மிக்க தமிழ்த் தொடை மாலை சாத்தி மேவிய வேழிசைப் பாடிப் போந்து
திக்கு நிறைசீர் முருகர் முன்பு செல்ல வவர் மடஞ் சென்று புக்கார்'

[பெரிய புராணம் — திருஞான சம்பந்தர்]

என்றது காண்க. அவரே அப்படித் தான் ஓதினர். ஆனால் எந்த ஆலயத்திலும் தாம் பாடிய எந்தப் பதிகத்தைக் கொண்டும் அத்தினத் தந்தி யர்ச்சனையை அவர் செய்தனரா? இல்லை. அவர் சரித்திரத்தைப் படித்தறிக. நாமும் நம்மளவில் அப் பதிகங்களைப் பாடியாடிப் பக்தியைப் பெருக்கிக் கொள்ள வேண்டும். அவ்வாசிரியன்மார் தந்த அனுமதி அவ்வளவிற் றாணிருக்கிறது. [1]'ஞான சம்பந்தன் சொன்ன கொண்டினிதா விசை பாடி யாடிக் கூடுமவர் உடையார்கள் வானே', [2]'இவை பத்து மிசைவல்லார் — கேதத்தினை யில்லார்சிவ கெதியைப் பெறுவாரே', [3]'ஞான சம்பந்தன் தமிழ் பத்தும், யாழினிசை வல்லார் சொலக் கேட்டார வரெல்லாம் — ஊழின்மலி வினை போயிட வுயர்வா னடை வாரே', [4]'இசையோ டிவை பத்தும் பகரும் அடியார்கட் கிடர் பாவம் அடையாவே', என்பவற்றால் அது விளங்கும். ஆகையால் திருமுறைகளை யோதிப் பக்தியைப் பெருக்கிக்கொள்ளலாம்; ஆனால் அவ் வர்ச்சனையிற் பிரயோகித்தல் தவறே யாம்.

---

1 எண்டிசையாரும் வணங்கி யேத்துமெம் பெருமானை யெழில் கொளாவூர்ப்
பண்டுரியார் சிலர் தொண்டர்போற்றும் பசுபதியீச்சரத்தாதி தன்மேற்
கண்டல்கண் மிண்டியகானற்காழிக்கவுணியன்ஞானசம்பந்தன்சொன்ன
கொண்டினி தாவிசை பாடியாடிக் கூடுமவருடையார்கள் வானே.

[திருஞானசம்பந்தர் — க-ம் திருமுறை திரு ஆவூர்ப்பசுபதீச்சரம்]

2 வேதத்தொலியானும் மிகு வேணு புரந்தன்னைப்
பாதத்தினின் மனம்வைத்தெழு பந்தன்றன பாடல்
ஏதத்தினை யில்லாவிவை பத்தும் மிசைவல்லார்
கேதத்தினை யில்லார் சிவகெதியைப் பெறுவாரே.

[திருஞானசம்பந்தர் — க-ம் திருமுறை. வேணுபுரம்]

3 வீழிம்மிழலை மேவிய விகிர்தன்றனை விரைசேர்
காழிந்நகர்க்கலை ஞானசம்பந்தன் றமிழ் பத்தும்
யாழின்னிசை வல்லார் சொலக்கேட்டாரவ ரெல்லாம்
ஊழின்மலி வினை போயிடவுயர் வானடைவாரே.

[திருஞானசம்பந்தர் — க-ம் திருமுறை, திருவீழிமிழலை]

4 முகில்சேர்தரு முதுகுன்றுடை யானைமிகு தொல்சீர்ப்
புகலிந்நகர் மறை ஞானசம்பந்தனுரை செய்த
நிகரில்லன தமிழ்மாலைகளிசையோடிவை பத்தும்
பகரும் மடியவர்கட்கிடர் பாவம் மடையாவே.

[திருஞானசம்பந்தர் — க-ம் திருமுறை - திருமுதுகுன்றம்]

'உமாபதி சிவாச்சாரியார் கொடிக் கவி பாடிச் சிதம்பரத்தில் தானகக் கொடியேற வில்லையா?' (16—6—55 தமிழ்நாடு)

என்கிறார் நவீனர். திருமுறைகள் போற் கொடிக்கவியும் நூலாற்ற லுடையதே. மேலும் சம்ஸ்கிருத மந்திரங்கள் பலவற்றை அது போற்றியுள்ளது. அதனையும் ஓர்க. அவ் வாசாரியார் பாடினர். அக்கொடி யேறியது. அதுவும் ஓரற்புதம். அது ஒரு முறை தான் நடந்தது. அதற்குப் பிறகு பல ஆண்டுகள் அவர் வாழ்ந்திருக்கிறார். அக் காலங்களிலுங் கொடி யேற்றங்கள் நடந்திருக்கின்றன. அப்போ தெல்லாம் அவர் அக் கவியைப் பாடினரா? அக் கொடி ஏறினதா? அக் கொடிக் கவி நூல் இன்றும் இருந்து வருகிறது. தீக்ஷிதர் அதைப் பாடி வருகின்றனரா? கொடி ஏறி வருகின்றதா? இல்லை. அக் கவியால் கொடி ஏறியது ஒரே முறை தான். நவீனர் அப் பாட்டைப் பாடக் கொடி ஏறுவதாயிருந்தால் இன்றும் பாடி ஏறச் செய்யலாம். அதைத் தடுப்பார் யாருமிலர். இன்னென்று, அச் சிதம்பரத்திலே திருப்பல்லாண்டு பாடத் தேரோடியது. அதுவுமொரு முறை தான் நிகழ்ந்தது. முடியுமானல் இப்போதும் அவர் அப் பாட்டைப் பாடி அத்தேரை ஓடச் செய்க. அதில் இலெளகீக நலனும் அதிகமுண்டு. அற்புத நிகழ்ச்சியாகிய கொடி யேற்றத்துக்கு முன்னும் பின்னும் நாளிது வரை சிவாகம விதிப்படி தான் அத்தலத்திற் கொடி யேற்றப் பட்டு வருகிறது. சுரந் தீர்த்த பதிகம், முயலகனை நீக்கிய பதிகம் முதலியவற்றை எடுத்துக் காட்டி மருத்து நூல், சௌக்கிய நூல் விதிகளை உதறித் தள்ளுக வென்றால் யார் தான் தள்ளுவர். அப்படியே கொடிக் கவியைக் காட்டிச் சிவாகம விதிகளை உதறித் தள்ளுக என்றால் சைவ மக்கள் யாருந் தள்ள மாட்டார். ஏன்? அற்புதங்கள் எப்போதும் நிகழ்வன வல்ல.

**கொடி யேறியதும் தேரோடியதும் தமிழ் மொழியின் ஆற்றலா?**

'எந்த மொழியிலும் வழிபாடு நடக்கட்டும்' (16—6—55 தமிழ்நாடு)

என்கிறார் நவீனர். தாராளமான அனுமதிதான் அது. அவ்வனுமதி கொடுக்க அவருக்கு அதிகாரம் எங்கிருந்து கிடைத்ததோ? எந்த மொழியிலும் என்பது எல்லாப் பிரதேச மொழிகளிலும் என்பதாம். எல்லா மொழிகளிலும் சம நோக்கு அவருக்கு இருக்கிறது. அது மெச்சற் பாலதே. ஆனல் தமிழர்ச்சனைக்காகத் தமிழை அவர் வானளாவப் புகழ்ந்தார். அது வேண்டுமா?

## 4

'ஆகமத்தில் அர்ச்சனை வட மொழியிற் கிடையாது'
(8—6—55 தினமணி)

'அருச்சனை யென்பது தோத்திர மொழிகள் தான். 200 ஆண்டுகளுக்கு முன்னர் ஒரு சிலரால் தொகுக்கப் பட்டது. இது சம்ஸ்கிருதம் காசுக்காகச் செய்வது அருச்சனை' (16—6—55 தமிழ் நாடு)

என்கிறார் நவீனர்.

**அர்ச்சனை ஆகமங்களில் சம்ஸ்கிருதத்தில் உண்டா? அல்லது 200 ஆண்டுகளுக்கு முன் சிலரால் தொகுக்கப்பட்டதா?**

அவ்வர்ச்சனை நாமங்கள் புராணங்களிலிருந்து எடுத்து கோக்கப் பட்டனவே; புராணங்களைவிடத் திருமுறைகள் தாழ்ந் தனவா?; அர்ச்சனையில் அத் திருமுறைகளை ஓதினாலென்ன? என்றும் அவர் வினவுகிறார். [1]'பேராயிரம் பரவி வானோ ரேத்தும்', [2]'எண்ணு நீரவ ளுயிர நாமமே', [3]'பேரோராயிரமு முடையான்', [4]'ஆயிரந் திருநாமம் பாடி' என்றது திரு முறை. அவ்வாயிரம் பேர் தான் சகஸ்ர நாமம். அதனை யோதி யர்ச்சிப்பது தான் சகஸ்ர நாமார்ச்சனை. [5]'பூவனூர்ப் புனிதன் திரு நாமந்தான் — நாவில் நூறு நூறாயிர நண்ணினான்' என்பதும் அத்திருமுறை. நூறு — அஷ்டோத்தர சதம். அதனைக் கொண்டர்ச்சிப்பது அஷ்டோத்தர சத நாமார்ச்சனை. நூறாயிரம் — லக்ஷம். சகஸ்ர நாமத்தால் நூறு முறை யர்ச்சிப்பது லக்ஷார்ச்சனை. ஆயிரம் பேர், நூறு பேர், நூறாயிரம் பேர் என்பன தொகைப்பெயர்கள்,அவையே முறையேசகஸ்ரநாமம்,அஷ்டோத்தரம்,

---

1 பேராயிரம்பரவி வானோ ரேத்தும்பெம்மானைப் பிரிவிலாவடி யார்க்கென்றும்
வாராதசெல்வம் வருவிப்பானை மந்திரமும் தந்திரமு மருந்துமாகித்
தீரா நோய்த் தீர்த்தருளவல்லான்றன்னைத் திரிபுரங்கடீயெழத்திண் சிலைகைக்கொண்ட
போரானைப் புள்ளிருக்குவேளூரானைப் போற்றாதேயாற்ற நாள் போக்கினேனே.
[திருநாவுக்கரசர் – 6ம் திருமுறை, திரு புள்ளிருக்குவேளூர் — திருத்தாண்டகம்]

2 வண்ணமாக முருக்கிய வாசிகை
திண்ணமாகத் திருத்தடைச் சேர்த்தியே
பண்ணுமாகவே பாடும் பழனத்தான்
எண்ணு நீரவனுயிர நாமமே
[திருநாவுக்கரசர் -5ந் திருமுறை- திருப்பழனம்- திருக்குறுந்தொகை 3]

(இதன் தொடர்ச்சியை 12-ம் பக்கம் பார்க்கவும்)

லக்ஷார்ச்சனைகளே யாகும். மூவேந்தர் நால் வேதம் முதலிய பேர்கள் போல்வன அவை. அவற்றிற்கு வேறு பொருள் கொள்வோர் தமிழ் வரம்பும், சைவ வரம்பும் அறியாதவரே. [1]'எண்ணாயிரங் கோடி பேரார்', [2]'எண்ணாயிர நூறு பெயராய்', [3]'பேர்க ளாயிர நூறாயிரம் பிதற்றும் பெற்றியோர்' என்பனவுந் திருமுறை யடிகளே. இம் மூன்றடிகளில் முதலிரண்டிலும் 'எண்' என வருகிறது. முன் காட்டிய 'எண்ணு நீ ரவ ணுயிர நாமமே' என்பதி லுள்ள 'எண்ணும்' என்பதற் கேற்ப இந்த 'எண்' என்பதற்கும் எண்ணத் தகுந்த எனப் பொருள் கொள்க. முதலடியிலுள்ள ஆயிரங் கோடியாவது ஆயிரம் முடிவு. அம் முடிவு 'நம' என்பது. ஆயிரம் 'நம'க் களையுடைய ஆயிரம் பேர்கள் என்பது கருத்து. இரண்டா மடியிலுள்ள ஆயிர நூறாவது லக்ஷம். ஆயிரம் நூறு எனப் பிரிந்து சகஸ்ரமும் சதமும் ஆகும். இரட்டுற மொழிதல் என்னும் உத்தியால் இவ்வாறு பொருள் கொள்ளப்படும். ஆகலின் லக்ஷார்ச்சனை, சகஸ்ர நாமார்ச்சனை, அஷ்டோத்தரார்ச்சனை யென்ற மூன்றையும் அவ்வடி குறிப்ப தாயிற்று.

---

1 கண்ணார்ந்த நெற்றியுடையார் போலுங் காமனையுங்
கண்ணழலாற் காய்ந்தார் போலும்
உண்ணவரு நஞ்சுண்டார் போலுமூழித் தீ யன்னவொளியார் போலும்
எண்ணாயிரங் கோடிப் பேரார் போலுமே றேறிச்செல்லு
மிறைவர் போலும்
அண்ணாவுமா ரூருமே யார்போலு மாக்கூரிற் றான் றோன்றியப்பனாரே
[திருநாவுக்கரசர்-6ம் திருமுறை-திருஆக்கூர் திருத்தாண்டகம் 8]

[2] [3] 13-ம் பக்கம் பார்க்கவும்

---

(11-ம் பக்கத் தொடர்ச்சி)

3 'பேரோராயிரமும் முடையானைப் பேசினாற்பெரிதும் மினியானை
நீரூர் வார்சடை நின்மலன் றன்னை நீடூர் நின்றுகந்திட்டபிரானை
ஆரூரன்னடி காண்பதற்கன்பா யாதரித்தழைத்திட்ட விம்மாலை
பாருரும்பரவித் தொழவல்லார் பத்தராய் முத்திதாம்பெறுவாரே.'
[சுந்தரர் — 7ம் திருமுறை – திருநீடூர்]

4 திருமாலும் பன்றியாய்ச் சென்றுணராத் திருவடியை
உருநாமறிய வோரந்தணனா யாண்டு கொண்டா
னொருநாம மோருருவ மொன்று மில்லாற் காயிரந்
திருநாமம் பாடி நாந் தெள்ளேணங் கொட்டாமோ!
[மாணிக்கவாசகர்–8-ம் திருமுறை-திருவாசகம்-திருத்தெள்ளேணம்]

5 பூவ னூர்ப் புனி தன்றிரு நாமந்தான்
நாவி னூற நூறாயிர நண்ணினார்
பாவ மாயின பாறிப் பறையவே
தேவர் கோவினுஞ் செல்வர்க ளாவரே.
[திருநாவுக்கரசர் 5-ம் திருமுறை-திருப்பூவனூர்]

மூன்றுமடி பேர்கள் ஆயிரம் நூறு ஆயிரம் என்கிறது. நூறு என்னும் எண்ணை முன்னுள்ள ஆயிரத் தோடாவது பின்னுள்ள ஆயிரத் தோடாவது இயைத்தால் லக்ஷம் வரும். அது லக்ஷார்ச்சனையைக் குறிப்பது. நூறு இயைந்த ஆயிரம் போக எஞ்சிய ஆயிரம் சகஸ்ர நாமார்ச்சனையைக் குறிக்கும். இப்படித் திருமுறை அம் மூன்று வகை சம்ஸ்கிருதார்ச்சனைகளேயும் பொன்னே போற் போற்றியுள்ளது. திருமுறை யாசிரியன்மார் காலத்துக்கு முற்பட்டே சைவாலயங்களில் அவ்வர்ச்சனைகள் இருந்து வருகின்றன வென்பது அதனுற் புலனுகும். அவை புராணத் தொடர்களே யாகுக. அவற்றைத் திருமுறை போற்றிய பின் மறுத்தோ பழித்தோ பேசப் பிறர்க்கு வாயேது? 'கொண்ட பிறகு குலம் பேசலாகா' தென்பது பழமொழி. அதைப் பெண்டிரு மறிவர். மேலும் புராணங்கள் மாத்திரம் சாமானியமா? அவற்றைப் [1]'பங்கமில் பதினெட்டு', [2]'வேத முதல்வ னெனுமெய்த் திருப்பாட் டினினே — ராதி யுலகோரிடர் நீங்கிட வேத்த வாடும் — பாத முதலாம் பதினெண் புராணங்க ளென்றே — யோதென்

---

1 எங்குமாகி நின்றானு மியல் பறியப்படா
மங்கை பாகங் கொண்டானு மதிசூடு மைந்தனும்
பங்கமில் பதினெட்டொடு நான்குக் குணர்வுமா
யங்கமாறுஞ் சொன்னனு மையாறுடை யையனே
[திருஞான சம்பந்தர் — திருமுறை 2. திருவையாறு 6]

2 பெரிய புராணம் — திருஞான சம்பந்தர் —

---

(12-ம் பக்கத் தொடர்ச்சி)

✤ போற்றிசைத்துன் னடிபரவ நின்றாய் போற்றி
புண்ணியனே நண்ண லரியாய் போற்றி
ஏற்றிசைக்கும் வான்மேல் இருந்தாய் போற்றி
"எண்ணு யிரநூறு பெயராய் போற்றி"
நாற்றி சைக்கும் விளக்காய நாதா போற்றி
நான்முகற்கும் மாற்கும் அரியாய் போற்றி
காற்றிசைக்குந் திசைக்கெல்லாம் வித்தே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி.
[போற்றித் திருத்தாண்டகம் திருக்கயிலாயம்]

ஃ ஏர்கொள்கற் பகமொத் திருசிலைப் புருவம்
பெருந்தடங் கண் கண் மூன் றுடையுன்
பேர்களா யிரநூ றாயிரம் பிதற்றும்
பெற்றியோர் பெரும்பற்றப் புலியூர்ச்
சீர்கொள்கொக் கிறகுங் கொன்றையுந் துன்று
சென்னிச்சிற் றம்பலக் கூத்த
நீர்கொள்செஞ் சடைவாழ் மதிபுது மத்த
நிகழ்ந்தவென் சிந்தையு ணிறைந்தே.
[திருமாளிகைத் தேவர் — திருவிசைப்பா 10]

றுரைசெய் தனர்யாவு மோதா துணர்ந்தோர்', [1]'இலிங்க புராணத் துளானை' என்றதுங் காண்க. திரு முறையில் இலிங்க புராண மென்றொரு பதிகமு முண்டு. இத்தகைய புராணங்களைக் குறை கூறுவது திருமுறைப் பக்தியா? சைவ நலமா? அன்று; சம்ஸ்கிருத துவேஷமும், தமிழ் வெறியுமே யாம்.

இனிச் சம்ஸ்கிருத சகஸ்ர நாமாதிகளின் சிறப்புத்தானென்னை? விநாயக புராணத்தில் 'சகத்திர நாமப்படலம்' என்றொரு படல மிருக்கிறது. அதில் விநாயகப் பெருமானுரின் சகஸ்ர நாமங் கூறப்பட்டது. அந்நாமங்க ளத்தனையும் சம்ஸ்கிருதம். அவற்றை 'எல்லாப் பயனு மெளிதளிக்கு மியல்பா னிந்தப் பெயர் தம்மை — நல்லாகமத்தின் வழிநடக்கு நலியாச் சைவரே யன்றி—யல்லாச் சவுரர் சாத்தர் வயிணவர்கள் முதலா மதத் தோருஞ் — சொல்லா நின்று பயன்பெறுவர் துதிக்கையானைத் துதியாரார்.' என்று பாடித் துதித்தது அப்புராணம்,

'ஓங்கார மான மகா கணபதியெம் பெருமாற் குரியசகத் திரநாம
மகாமனுவா மிவைக்கு
நீங்காத முனிவரன்ருன் கணேசமுனி தெய்வ நிசுரின் மகா
கணுதிபதி சந்தசுபல் விதமே
பாங்கான பீசமும் படுசத்தி துண்டம் பகர்தரு கீலகஞ்சு வாகா'

என்ற பாடலால் அவற்றின் வேத சம்பந்தம் புலப்படும். திருவிளையாடற் புராணத்தில் இறுதியா யுள்ளது அர்ச்சனைப் படலம் என்பது. அர்ச்சனை யென்பதற்கு ஆண்டும் சிவ பூசை யென்பதே பொருள். அப் படலம் சம்ஸ்கிருத சகஸ்ர நாமத்தைப் பற்றிச் சொல்லும் போது, 'நால்வேதஞ் சொன்ன -- மெய்ம் மனு நூற்றுப் பத்தான்............கடவுளை யுவப்பச் செய்து' என்கிறது. 'சுருதி யாயிர நாம மேத் தெடுப்ப' என்றது திருக்குற்றலத் தல புராணம். இன்ன பிரமாணங்கள் இன்னும் பல. சம்ஸ்கிருத அர்ச்சனை மந்திரங்களாகிய சகஸ்ர நாமாதிகள் வேதாக மோக்த மானவை யென்ற உண்மையை அந்தப் பிரமாணங்க ளெல்லாம் ஆதரிக்கின்றன.

---

1 அரிபிரமர் தொழுதேத்த மத்தன்றன்னை யந்த கனுக்கந்தகனை
யளக்கலாகா
எரிபுரியு மிலிகக புராணத் துளானை யெண்ணுகிப் பண்ணு
ரெழுத்தானுனைத்
திரிபுரஞ் செற்றொரு மூவர்க் கருள் செய்தானைச் சிலந்திக்கு
மரசளித்த செல்வன் றன்னை
நரிவிரவு காட்டகத்திலாடலானை நாரையூர் நன்னகரிற்
கண்டேனுனே
[திருநாவுக்கரசர் 6ம் திருமுறை — திருநாரையூர் திருத்தாண்டகம் 8]

அம்மட்டோ? [1]'பங்கய மாயிரம் பூவினிலோர் பூக் குறையத்— தங்க ணிடந்தரன் சேவடிமேற் சாத்தலுமே....' என்றது திருமுறை. ஒரு நாமத்துக்கு ஒரு பூவாக ஆயிர நாமஞ் சொல்லி ஆயிரம் பூச் சாத்த வேண்டும். அன்று ஒரு பூ மறைக்கப்பட்டது. இறுதி நாமத்துக்குப் பூவில்லை. திருமால் தம் கண்ணைப் பிடுங்கி அதுவாகப் பாவித்து அந் நாமத்தைச் சொல்லிச்சிவபிராற்குச் சாத்தினர். அத்திரு முறை யடிக்கு

"மாயிருங் கமலப்போது கைக் கொண்டு மாட்சி சான்ற
வாயிரந் திருநா மத்தா னித்தலு மருச்சித் தேத்தி
மேயினன் றிருமால்"

"நறைவாரு மிதழ்துறுத்த செழும்பொகுட்டு நளினமா யிரத்தி லொன்று
மறைவாகத் திருவுள்ளம் வைத்தருளக் கருவிமுகில் வாட்டு மேனி
யிறையோனும் பண்டுபோற் பவன்முதலா மாயிரம்பே ரெடுத்துக் கூறிக்
குறையாத பேரன்பிற் பதுமமலர் கொடுபூசை புரியு மேல்வை"

எனக் காஞ்சி புராணம் விளக்கங் கூறிற்று. 'பவன்முதலா மாயிரம்பேர்' என்றதிலுள்ள 'பவன்' என்ற நாமம் சம்ஸ்கிருதம். அதனாலும் அவ்வாயிரம் நாமங்களும் சம்ஸ்கிருதமேயென்ப தறிக. 'மாட்சி சான்ற ஆயிரந் திருநாமம்' என்பதிலுள்ள அடைகள் அச் சகஸ்ர நாமங்களின் பிரபாவத்தைப் புலப்படுத்தும். இராமனும் 'எண் ணூறு மிரு நூறு மாய திருப் பெயரியம்பி யருச்சித் தேத்தி'னன். இப் படிச் சைவப் பேராசிரியன்மாரால் போற்றப்பட்டன சம்ஸ்கிருத சகஸ்ர நாமாதிகள். அவையே சைவாலயங்களில் அர்ச்சனைக் காலங் களில் தொன்று தொட்டு நாளிதுவரை ஓதப்பட்டு வருகின்றன. அவை ஆகமங்களிலில்லை, சம்ஸ்கிருதத்திலில்லை, 200 ஆண்டுகளுக்கு முன் சிலரால் தொகுக்கப்பட்டன வென்பன வெல்லாம் பயனில் சொற்கள். மேற் காட்டிய பிரமாணங்களால் அதனையோர்க. சம்ஸ்கிருதத்திலுள்ள விஷ்ணு சகஸ்ர நாமத்திற்குச் சங்கராச்சாரியார் பாஷ்யம் எழுதியிருக் கிறர். அவர் 200 வருடங்களுக்குப் பின்னருதித்தவரா?

---

1 *பங்கய மாயிரம் பூவினிலோர் பூக்குறையத்*
*தங்கணிடந்தரன் சேவடிமேற்சாத்தலுமே*
*சங்கரனெம்பிரான் சக்கரமாற் கருளியவா*
*றெங்கும் பரவி நாந்தோணேக்கமாடாமோ*

(திருவாசகம் — திருத்தோணேக்கம் — 10)

சம்ஸ்கிருத அர்ச்சனை காசுக்காகச் செய்யப்படுவதாம்; நவீனர் சொல்லுகிறாரே. கொண்ட கொள்கையைச் சாதிப்பதற்குப்பேச்சிலுமா தரங் கெட வேண்டும்? அவ்வர்ச்சனை காசுக்காகச் செய்யப் படுவ தென்றால் அதை யொழிக்கவே அவர் முயல வேண்டும். அதை விட்டு அவ்வர்ச்சனையைத் தமிழிற் செய்க வென்கிறாரவர். அஃதேன்? அந்தக் காசு தமக்கோ தம்மவருக்கோ கிடைக் கட்டு மென்று அவர் ஆசைப் படுகின்றனர் போலும். ஆயின் அதை வெளிப்படையாக அவர் சொல்லி விடலாம்; பக்திப் போர்வையில் புகுந்து கொண்டு ஒன்று கிடக்க ஒன்று பேசித் திரிய வேண்டாம்.

**அர்ச்சனை காசுக்காகத் தானா?**

'தமிழில் வழிபாடு இருந்ததில்லை என்று கூறுவது சரியன்று, தவறுதலாகும்', '....திரு மடங்கள்...இடைக் காலத்தில்........ தவறிய காரணத்தால் தான் நாட்டில் தமிழ் மொழி வழிபாடு திருக் கோயில்களில் இல்லாது போய்விட்டது'

(8—7—55 தமிழ் நாடு.)

என்கிறார் நவீனர். எந்த விஷயமும் பிரமாண சகிதம் வெளிவர வேண்டும். இன்றேல் அது பற்றிய பேச்சு வெறும் வாயைச் சப்பும் சப்தமே யாம்.

## 5

தமிழகத்தில் 'இடையில் வந்த சமணம் பௌத்தம் முதலிய சமயங்களால் ஏற்பட்ட ஆபத்துக்களிலிருந்து சைவத்தைக் காப்பாற்றியது வடமொழி மந்திரங்களா? இல்லை, நாயன் மார்களின் தெய்வத் தமிழ்ப் பாட்டுக்களே'

(21—5—55 தமிழ் நாடு.) என்கிறார் நவீனர்.

சைவத்தை அப்பாட்டுக்கள் காத்தன வென்பது சரி. ஆனால் அவற்றை அர்ச்சனைக்கு உபயோகிக்கலாமென விதிக்கப்படவில்லை. விதிக்கப்படாததொன்றைத் தன்மாட்டுப் புதுவதாகப் புகுத்துவதற்கு எச்சமயமும் இடங்கொடாது. சைவ சமயமும் அப்படித்தான். அவர் அப் பாட்டுக்களின் தெய்வத் தன்மையைப் பிரசங்கிக்கும்போதே 'சைவத்தைக் காப்பாற்றியது வடமொழி மந்திரங்களா? என வினவி 'இல்லை' யென விடையுந் தந்தார். அப் பாட்டுக்கள் சம்ஸ் கிருத மந்திரங்களைத் தம்பாற்கொண்டு, அவற்றின் பொருளையும் ஆற்றலையும் விளக்கியுள்ளன.

**சைவசமயத்தைக் காப்பாற்றியது தமிழ்ப் பாட்டுக்களா வடமொழிப்பாட்டுக்களா**

[1]"கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினு — நற்றுணை யாவது நமச்சிவாயவே," [2]'பவனெனு நாமம் பிடித்துத் திரிந்து பன்னுளழைத்தால்...........எதிர்ப்படுமே,' [3]'ஓங்கார மெய்ப்பொருள்' என்பன காண்க. சிவாய நம, பவாய நம, ஓம் என்பன சம்ஸ்கிருத மந்திரங்கள். [4]'மறை கலந்த மந்திரமு நீருங் கொண்டு வழி பட்டார், [5]'மறையின் நாண்மலர் கொண்டடி வானவர்—முறையினல் முனிகள் வழிபாடுசெய் யிறைவன்' என்பனவும் அப்பாட்டுக்களே.

---

1 'சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கைதொழக்
கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமச்சி வாயவே'
[திருநாவுக்கரசர் - 4ம் திருமுறை - பொது - நமச்சிவாயத்திருப்பதிகம்

2 'சிவனெனு நாமந்தனக்கேயுடைய செம்மேனி யெம்மான்
அவனென்னை யாட்கொண்டளித்திடு மாகிலவன்றனை யான்
பவனெனுநாமம் பிடித்துத் திரிந்து பன்னுளழைத்தால்
இவனெனைப் பன்னுளழைப் பொழியானென் றெதிர்ப்படுமே.'
[திருநாவுக்கரசர் - 4ம் திருமுறை - பொது - தனித்திருவிருத்தம்]

3 உருமூன்றாயுணர்வின் கண்ணொன்றானை யோங்கார மெய்ப்பொருளை
யுடம்பினுள்ளாற்
கருவீன்ற வெங்களவை யறிவான்றன்னைக் காலனைத்தன்கழலடி
யாற்காய்ந்துமாணிக்,
கருளீன்ற வாரமுதையமரர் கோனையள்ளூறி யெம்பெருமானென்
பார்க்கென்றுந்,
திருவீன்றதென் பரம்பைக்குடியின் மேயதிருவாலம்
பொழிலானைச் சிந்திநெஞ்சே.
[திருநாவுக்கரசர் - 6ம் திருமுறை—திருவாலம்பொழில்-திருத்தாண்டகம்]

4 அறைகலந்தகுழன் மொந்தைவீணையாழு மந்திரத்திற் கந்தருவ
ரமரரேத்த,
மறைகலந்த மந்திரமு நீருங் கொண்டு வழிபட்டார் வானாளக்
கொடுத்தியன்றே,
கறைகலந்த பொழிற்கச்சிக்கம்பமேய கனவயிரதிரடேனே கலிசூழ்மாடம்,
மறைகலந்த மழபாடி வயிரத்தூணே யென்றென்றே நானரற்றி
நைகின்றேனே.
[திருநாவுக்கரசர் - 5ம் திருமுறை - திருமழபாடி -திருத்தாண்டகம் 21]

5 மறையினண் மலர் கொண்டடி வானவர்
முறையினன் முனிகள் வழிபாடுசெய்
இறைவனெம் பெருமானிடை மருதினில்
உறையுமீசனை யுள்குமென் னுள்ளமே.
[திருநாவுக்கரசர் - 5ம் திருமுறை - திருவிடைமருதூர்
திருக்குறுந்தொகை 2]

நாயன்மா ரனைவருக்கும் ஆன்ம பலமா யிருந்தவை அம்மந்திரங் களும், அவற்றின் பொருளும், அவை கொண்டு அவர் ஆற்றிய அர்ச்சனையுமே. செய்ந்நன்றி கொல்லாச் சைவமனம் அவ்வுண்மையை மறவாது.

தமிழகத்தில் சமண பௌத்தங்களைத் தொலைத்தல், சைவத் தைக் காத்தல், என்னு மிரண்டு காரியங்களைச் செய்தன திருமுறை கள். இச்சமண பௌத்தங்கள் வட பாரதத்திலும் பரவியிருந்தன. அவற்றை அங்குத் தொலைத்தது சம்ஸ்கிருதம். சிறந்த சம்ஸ்கிருத நூல்கள் பல தோன்றி அவற்றை யழித்தன. அந்நூல்கள் சிலவற் றிற்கு ஆசிரியன்மாராயிருந்தவர் தமிழகத்தினரே. அவருள் அப்பய தீக்ஷிதர், சிவாக்ர யோகிகள், ஹரதத்தர், உமாபதி சிவனார், சிவ லிங்க பூபதி யென்பார் சிலர். பாரத தேசத்தில் மாயா வாத வைணவ சமயங்களு முள. சைவ சமயத்துக்குச் சமண பௌத்தங்கள் போன் றனவே அச்சமயங்களும். [1] 'மிண்டிய மாயா வாத மென்னுஞ் — சண்ட மாருதம்,'

"நூறு கோடி பிரமர்கள் நொந்தினர்
ஆறு கோடி நாராயண ரங்ஙனே
ஏறு கங்கைமண லெண்ணி லிந்திரர்
ஈறி லாதவன் ஈச னொருவனே"

(அப்பரடிகள் 5-ம் திருமுறை ஆதிபுராணம் — 30)

"தாயினும் நல்ல சங்கர னுக்கன்பர்
ஆய வுள்ளத் தமுதருந் தப்பெறார்
பேயர் பேய்முலை யுண்டுயிர் போக்கிய
மாயன் மாயத்துப் பட்ட மனத்தரே"

(அப்பரடிகள் 5-ம் திருமுறை ஆதிபுராணம் — 9)

"நேச நீலக் குடியர னேயென
நீச ராய்நெடு மால்செய்த மாயத்தால்
ஈச னோர்சரம் எய்ய எரிந்துபோய்
நாச மானார் திரிபுர நாதரே"

(அப்பரடிகள் 5-ம் திருமுறை திருநீலக்குடி 5)

எனத் திருமுறைகளில் அச்சமயங்கள் கண்டிக்கப்பட்டன. ஆகவே அச்சமயங்களால் அவ்வப்போது நேர்ந்துவருகிற ஆபத்துக்களி

---

1 *சமய வாதிகள் தத்தம் மதங்களில்*
*அமைவ தாக அரற்றி மலைந்தனர்*
*மிண்டிய மாயா வாதம் என்னும்*
*சண்ட மாருதம் சுழித்தடித் தாஅர்த்து.*

(திருவாசகம் போற்றித் திருவகவல் 54-வது வரி)

லிருந்தும் சைவ சமயத்தைக் காப்பாற்றியாக வேண்டும். அப்பய தீக்ஷிதர் சிவதத்துவ விவேக முதலாக ஏறத் தாழ நூறு நூல்கள் இயற்றிச் சிவபரத்துவஞ் சாதித்தனர். சிவ பரத்துவ அங்கீகாரமே சைவத்தின் தலையாய கொள்கை. சிவாக்ர யோகிகள் சிவாகமப் பகுதியாயுள்ள சம்ஸ்கிருத சிவஞான போதத்துக்கு லகு வியாக் யானம், பாஷ்யம் முதலியன செய்து முப்பொருளுண்மை சாதித் தனர். ஹரதத்தரும், உமாபதி சிவனரும் பல அற்புதங்களை நிகழ்த்தி முறையே சுருதி சூக்திமாலை, ஹரிஹர தாரதம்மியம் முதலிய நூல் களையும், பௌஷ்கராகம விருத்தி என்னும் நூலையுமியற்றிச் சம்பந் தாதியரே யெனச் சைவ ஸ்தாபனஞ் செய்தனர். 'சிவலிங்க பூபதி யெனப் பெயரிய' [1]சோழ வேந்தர் சுருதி சூக்திமாலைக்கு வியத்தகு வியாக்கியை யொன்ருக்கிச் சைவம் பரிபாலித்தார். அச் சம்ஸ்கிருத நூல்களும் தமிழகத்தைப் பர சமயங்களாகிற சேற்றிலிருந்து தூக்கிச் சைவ சமயத்திற் பிரவேசிப்பித்துத் தூய்மை செய்தன. நவீனருக்கு அது தெரியாது. அவர் சைவரெனில் தெரிந்திருப்பர். அல்லாத் தமிழர் தானே அவர். ஆகவே தமிழகத்தில் பரசமய நிராகரணமும், சைவ சமய ஸ்தாபனமும் செய்தவை தமிழ்ப் பாட்டுக்களோ, சம்ஸ் கிருதப் பாட்டுக்களோ அல்ல; அவ்விரு மொழிகளிலு முள்ள சைவ சமயச் செய்யுட்களேயாமென்க.

## 6

"தித்திக்கும் திருவாசகத்திலுந், தேனூறும் தேவாரத்திலும் அர்ச்சனை செய்வது எனக்குப் பிடிக்காது, சமஸ்கிருதத்தில் தான் அர்ச்சனை செய்யவேண்டும்' என்ருல் அத்தகைய சிவ பெருமானை மூட்டைகட்டி அனுப்புவோம்."
(16—5—55 தினத் தந்தி) என வீரம் பேசுகிருர் நவீனர்.

**சிவபெருமான் தமிழில் அர்ச்சனை வேண்டாமென்று சொல்வாரா? சொன்னுல் அவரை மூட்டைகட்டி அனுப்பமுடியுமா?**

சிவபெருமான் ஆண்டவன். சம்பந்தாதியர் அவனுக்கடியார். அவ்வாண்டவனை அவ்வடியார் எதிரார், அவனுக்கடங்கியே செல்வர். அவன் ஸ்தானத்தில் அவர் இருக்க விரும்பார், ஆகலின் அவனேடு அவர் போட்டியிடார். 'வேத சிவாகமங்கள் அவன் வாக்கு. திருமுறையாதியன அவர் வாக்கு. அவனை அவர் வணங்கிச் செல்வது போல் அவன் வாக்கை அவர் வாக்கு வணங் கியே செல்லும். அவன் வாக்கின் ஸ்தானத் தில் அவர் வாக்கு இருக்க விரும்பாது. ஆக லின் அவன் வாக்கோடு அவர் வாக்குப் போட்டியிடாது. ஆனல் அவன் வாக்கு சம்ஸ் கிருதம். அவர் வாக்குத் தமிழ். சம்ஸ்கிருதமிருக்குமிடத்தில் தமி

1 பாண்டிவேந்தரெனப் பவிஷ்ய புராணத்திலிருப்பதாகத் தெரிகிறது

யிருந்தாலென்ன? அம் மொழிப்போட்டி மிச்சம். அஃதிருந்து வருகிறது. அதைத் தூண்டுகிறவர் யார்? அவனையும் அவரையும், அந் நூல்களையும் விசுவசித் தொழுகுகிற சைவ சமயிகளா? அல்லர். அச் சைவ மங்கலம் போய தமிழ் மொழியினரா? ஆம். அவரே அக் கிளர்ச்சிக்காரர்.

அவ் வீரப் பேச்சில் 'என்ருல்' என்ற பதத்தை அவர் வைத்தார். அப்போது தானே அவ்வீரம் பேசமுடியும். என்ருல் — என்று சொன்னுல். நமக்குத் திருவாசகந் தித்திக்கவோ, தேவாரம் தேனூறவோ வேண்டு மென்பது முக்கியமன்று. கோழை மிடறு, கவி கோளின்மை, கூடும் வகையே யிசை; இக்குறைபாடுடையாரே பலர். அவர் அந்நூல்களை அக்குறைபாடுகளோடு தான் பாடுவர். அப்போது அவை தித்தித்தலுந் தேனூறலுமில்லை. ஆனுல் சிவ பெருமானுக்கு அவை அவரளவில் தித்திப்பன; தேனூறுவன. ஆகலின் அவற்றை அக்குறை பாடுடையார் எப்படி யோதினுலும் அக் கடவுள் அக் குறைபாடுகளைக் கருதாமல் 'நமக்குத் தித்திக்கிற தேனூறுகிற நூல்களையே இவன் ஓதுகிருன்' என்ற ஒரே காரணத்தால் மகிழ்ந்து அவருக்கு அருள் செய்வார். மேலும் நோய்க்கு மருந்தாயிருப்பது தித்திக்கவே செய்யும், தேனூறவே செய்யு மெனக் கூறமுடியாது. கசக்கிற மருந்தும் நோய் நீக்கும். ஆகலின் நம் மளவில் அந் நூல்கள் எப்படி யிருந்தாலும் நாம் அவற்றை யோதியே யாக வேண்டும். ஆனுல் சிவபெருமானுக்குத் தித்தியாத தேனூருத நூல்கள் தமிழே யாயினும் அவற்றை நாம் ஓதவே கூடாது. அதுவே முக்கியம். அவற்றை ஓதினுல் அவர் அருள் சுரப்பதில்லை. அப்படியே அவ் வேத சிவாகமங்கள் நமக்குத் தித்திக்கவோ தேனூறவோ வேண்டு மென்பது முக்கியமன்று. அவை அவருக்குத் தித்தியா, தேனூரு என்று எவன் சொன்னுன்? அவையும் அவருக்குத் தித்திப்பனவே, தேனூறுவனவே. அச்சிறப்பைத் திருமுறை யாதியன எடுத்த குரலில் முழங்குகின்றன. ஆகலின் அவற்றையும் நாம் ஓதித் தானுக வேண்டும். ஓதினுல் அவர் அருள் சுரப்பதுந் திண்ணம். அம்மட்டோ? அவரொருவரே 'ஏன்றெடுத்த மொழி கல்வி எவற்றினுக்கு மிறை' யவராவர். அவருக்குத் தித்திப்பதுந் தேனூறு வதுமா யிருந்தால் எந்த மொழியிலுள்ள அத்தகைய நூலையும் அந்த மொழிக்குரியார் ஓதலாம். அம் மொழிப் பயிற்சியுடைய பிற மொழி யார் ஓதினுலும் பலனுண்டு. நான் இப்படிச் சொல்வது எல்லா மொழிகளிலும் அர்ச்சனை செய்யலாம் என்ற கொள்கைக்குச் சாதகம் போல் தோன்றக் கூடும். அதுதா னில்லை. ஏன்? சைவ சமயக் கொள்கைகளை நிர்ணயஞ் செய்கின்ற தலை சிறந்த நூல் சிவஞான போதம். அதன் முதற் சூத்திரம் உலகிற்கு கர்த்தாவொருவனுளன் என முதலில் நிர்ணயம் பண்ணி, அவ்வளவில் நில்லாமல்

அக்கர்த்தா சிவபெருமானே யென அடுத்தும் நிர்ணயம் பண்ணியது. முதல் நிர்ணயத்தை மாத்திரம் உடன்பட்டு இரண்டாம் நிர்ணயத்தை ஒதுக்குபவர் சைவராகார். அவர் தழுவுஞ் சமயமும் சைவமாகாது. உலகில் அச் சிவபெருமான் வாக்கென, அச் சம்ஸ்கிருத வேதசிவாகமங்கள் தவிர வேறு எம் மொழியிலுள்ள எந்நூலுங் கூறப்படவேயில்லை. ஆகையால் சைவாலயங்களில் அர்ச்சனைக்கு அந் நூல்களிற் கண்ட வாக்கியங்களையே ஓதவேண்டும். அந் நூல்கள் நியமித்த விதி அது. வேத சிவாகம விதியாவது சிவாஞ்ஞை. ஆன்றோ ராசாரமும் அதையொட்டியே யிருந்து வருகிறது. அவ் விதியைச் செயல் முறையாலும் சரித்திர பேதத்தாலும் எடுத்துக் காட்டி அதற் கடங்குக எனத் திருமுறைகளும் உபதேசிக்கின்றன. விதியை மதித்து நடப்பவன் மனிதன். விருப்பம் போல் நடப்பது விலங்கு. அஃதனையான் விதியை மதியான். விதி எதிர்கால சந்ததிகளையும் கட்டுப் படுத்தும். அச் சந்ததிகளையும் உத்தேசித்ததே அது. ஒருவனுடைய விருப்பமோ முக்குண வசத்தால் அடிக்கடி செத்துப் பிறக்கும். அவன் சாகும்போது அவனோடு செத்தே போம். அதன்படி நடப்பதற்காக விதியை மீறத் துணிவது அநாகரீகம். ஆகலின் அர்ச்சனைக்குவிருப்ப முறையை விட்டு வேதாகம நெறியையே கொள்க. தித்திக்குந் திருவாசகத்தையோ, தேனூறுந் தேவாரத்தையோ, பிற மொழிகளில் அத்தகைய நூல்களிருந்தால் அவற்றையோ தோத்திரமாகக்கொண்டு ஓதி யுருகலாம். அம் மரபை விட்டுத் திருவாசகந் தித்திக்கும், தேவாரந் தேனூறும் என்பது போன்ற பசப்பு வார்த்தைகளைக் கேட்டு மதியைப் பறிகொடுத்து அவ் விதியை அதிக்கிரமிக்கச் சைவ மானமுள்ள மக்கள் சம்மதியார்; சைவாலயங்களில் மனமார இடமுங் கொடார்.

நிற்கச் சிவபெருமான் ஒன்றைச் செய்வர், செய்யாமலிருப்பர், அதை விட்டு வேறொன்றைச் செய்வர். 'ஒத்தொவ் வாதன செய்துழல் வாரொரு பித்தர்' அவர். ஆகலின் தேவார திருவாசக அர்ச்சனை வேண்டாம், வேத சிவாகம அர்ச்சனையே வேண்டும் என அவர் கட்டளை யிட்டாரென்று வைத்துக் கொள்ளலாம். நவீனர் கொள்கை வெளிப்படை. அவருந் தம்மைச் சைவரென எப்போதாவது சொல்லிக் கொள்வர். அவர் சைவராயின் என்ன செய்யவேண்டும்? அவர் கொள்கைக்கு மாறுதான் அக் கட்டளை. ஆயினும் அவர் அக் கட்டளைப் படி அத் தேவார திருவாசக அர்ச்சனையை ஒதுக்கி அவ்வேதாகம அர்ச்சனையையே கொள்ள வேண்டும். அதுவே அவரடிமைத் திறத்துக்குப் பொருத்தம். கணவன் இடுங் கட்டளை மனைவிக்கு இஷ்டமில்லாததா யிருக்கலாம். ஆயினும் அக்கட்டளைப்படி நடப்பதே அவளுக்குக் கடன். அக் கடனை யாற்றினாற்றான் அவள் பதிவிரதை.

மனைவிக்கு இஷ்டமான தொன்றையே கணவன் தான் அவளுக்கிடுங் கட்டளையாகக் கொள்ளவேண்டும், இல்லாவிட்டால் அவனை மூட்டை கட்டி அனுப்பிவிடலாமென்பது பதிவிரதா தர்மமாகாது. அவனும் அவளும் 'சரிநிகர் சமானம்' என்பது சிலரின் பிதற்றுரை. சிவ பெருமானாகிய கணவனும், நவீனராகிய மனைவிமாரும் அங்ஙனமா? ஆமெனக் கொள்ளுமாறு நவீனரை அப் பிதற்றுரை தூண்டியது போலும். ஆகையாற்றான் அவரும் அப்பெருமானை மூட்டை கட்டி அனுப்பப் போவதாகப் பயமுறுத்துகின்றனர். அது பதிவிரதா தரும மாகாது. அவருக்குச் சைவத்தைப் போற்றும் பதிவிரதா தருமமாவது அப் பெருமானின் கட்டளைப்படி நடப்பதே. கீரன் தமிழைக் கற்றான்; ஆனால் சிவபெருமானின் அருளை விரவப் பெற்றானிலன்; அத்தமிழ்த் திமிரினால் அப்பெருமானை எதிர்த்தான்; அவரது நெற்றிக் கண்ணாற் சுடப்பட்டான். அத்தமிழ் அவனைக் காப்பாற்ற வில்லை. அவனால் எதிர்நின்ற அப்பெருமானை மூட்டைகட்டி அனுப்பமுடியாமற் போயிற்று. அவனே சூடு தாங்க மாட்டாமல் பொற்றாமரைக் குளத்தில் போய் வீழ்ந்தான். அத் திமிர் அடங்கிற்று. பிறகு அப் பெருமானை நோக்கிச் சிரமேற் கூப்பிய கையினனாய்த் துடி துடித்துத் [1] 'தவறு பெரிதுடைத்தே தவறு பெரிதுடைத்தே' எனத் தொடங்கி அலறினான். அப்பெருமா னருளும் அவனுக்குக் கிடைத்தது. பிறகு தான் அத் தமிழ்ச் சைவப் பெருமகனார் யாமெலாம் வணங்கும் நக்கீர தேவ நாயனாராய்த் திகழ்ந்தார். சிவபெருமானை மூட்டை கட்டி அனுப்புவோமெனச் சொல்விக்குமாறு தமிழைக் கற்றவர் அக் கீரன் கதையை யோர்க.

மேலும் தமிழால் தேவார திருவாசகங்கள் சிறப்பெய்துகின்றன, தேவார திருவாசகங்களால் சிவபெருமான் சிறப்பெய்துகின்றனர் என்பது நவீனர் கொள்ளும் வரிசை. அவ் வரிசை நியாயமானால் தம் சிறப்புக்குக் காரணமான அந்நூல்களால் அர்ச்சனை செய்வது தமக்குப் பிடிக்காது என அக்கடவுள் சொல்லக்கூடாது. சொன்னால் நவீனரும் அவரை மூட்டை கட்டி அனுப்பலாம். ஆனால் அவ்வரிசை பரம நாத்திகம். அதன் தோழமை யாற்றான் அவர் அக்கடவுளை 'என்றால்' என்ற பதத்தால் கீழ்த்தரத்திற் கொண்டுபோய் நிறுத்தி அவ்வீரம் பேசி மகிழ்ந்தனர். அம்மம்ம! அச்சிவ அபசாரத்தை யெண்ணும் போது நெஞ்சந் துடிக்கிறது. நடப்பன நடக்கட்டும். சைவ மக்கள் கொள்ளும் வரிசையோ அதுவன்று. சிவபெருமானால் தேவார திருவாசகங்களும், தேவார திருவாசகங்களால் தமிழும் சிறப்பெய்தின என்பதே அவர் கொள்வது. பிந்தியது முன் விளக்கப்

---

1 "தவறுபெரி துடைத்தே தவறு பெரி துடைத்தே"
[கோபப் பிரசாதம் - நக்கீர தேவ நாயனார் - 11ம் திருமுறை]

பட்டது. தேவார திருவாசகங்கள் உளவாதற்கருள்புரிந்தவர் அக் கடவுள். [1] 'அடியேன் றன்னைப் பன்னுள் பாமாலை பாடப் பயில்வித் தானை' என்றது திருமுறை. அவரே சர்வாதிகாரி. அவர் திருவுள்ளங் கொண்டால் அந்நூல்களை வேண்டாமென்னலாம். அவரால் அவற்றை மறைக்கவும் முடியும். அவரைத் தடுக்க நவீனர் வல்லரா? தமிழ் வல்லதா? அந்நூல்கள்தான் வல்லவா? தில்லையில் வைத்துச் செல்லுக் கிரையாக்கித் தம்பால் அவர் சேர்த்துக் கொண்ட திருமுறைப் பதிகங்கள் எத்தனை?

அவரை மூட்டை கட்டி யனுப்ப நவீனர் வல்லரே யாகுக. அப்படி யனுப்பிய பிறகு அக்கடவுளின் ஸ்தானத்தில் வேறு யாரை வைத்துக் கொண்டு அவர் வாழப் போகிருர்? ஒருவரையும் வைத்துக் கொண்டு வாழப் போவதில்லை யென்பாராயின், அவர் இந் நாட்டை வாழாப் பெண்டீர் (வாழா வாட்டிகள்) அதாவது நாத்திகர் நிறைந்த நாடாக்கவே திட்டமிட்டிருக்கிரு ரென்பது திண்ணம். வேருெருவரை வைத்துக் கொண்டு வாழப்போவதாக அவர் கூறலாம். அவர் பெயர் தானும் யாதோ? அப் புதுக் கடவுள் நவீனர் இஷ்டம் போல் நடக்கக் கூடியவராய்த்தா னிருப்பர். அப்படியானல் அக் கடவுளுக்கும் குரங்காட்டி கையிலகப்பட்ட குரங்குக்கும் வித்தியாச மிராது. சைவ மக்கள் தம் இஷ்டத்துக்கு முதன்மை கொடுத்துச் சிவபெருமான் அதற் கிணங்கா விடில் அவரை மூட்டை கட்டி அனுப்பி விட்டு, இணங்கக் கூடிய வேருெருவரை அவருக்குப் பதிலாக வைத்துக் கொள்ளப் போவதாக மறந்துங் கூருர். கூறுவாராயின்

... .... .... [2]'தங்கண்
முந்தையின் முதலைநீத்து முறையகன் ஞெழுகல்பெற்ற
தந்தையை விலக்கி வேறு தேடுவான் றன்மை யன்றே'

என்ற பாட்டிற்கு அவர் இலக்கியமாய் விடுவர்.

---

1 பத்திமையாற் பணிந்தடியேன் தன்னைப் பன்னுள் பாமாலை
பாடப் பயில்வித்தானை,
எத்தேவும் ஏத்தும் இறைவன் தன்னை எம்மானை என்
னுள்ளத்துள்ளே யூறும்,
அத்தேனை அமுதத்தை ஆவின்பாலை அண்ணிக்குந்
தீங்கரும்பை அரனை ஆதிப்,
புத்தேளைப் புள்ளிருக்கு வேளூரானைப் போற்ருதே
ஆற்றநாள் போக்கினேனே.
[அப்பரடிகள் - திருப்புள்ளிருக்குவேளூர் - 6 ம் திருமுறை]

2 அந்தணர்க்காதி யீசனேனை யோர்க்கரியே வேதா
விந்திரனென்று வேதமியம்பிய மறையோர் தங்கண்
முந்தையின் முதலைநீத்து முறையகன் ஞெழுகல்பெற்ற
தந்தையை விலக்கிவேறு தேடுவான் றன்மையன்றே.'
[கச்சியப்ப சிவாச்சாரியார் - கந்தபுராணம் தக்ஷகாண்டம் ததீசிப்படலம்]

சிவபெருமான் சம்ஸ்கிருத அர்ச்சனையே வேண்டுமென என்னிடத்திலாவது, தமிழர்ச்சனையோ பிறமொழிகளர்ச்சனையோ வேண்டுமென நவீனரிடத்திலோ நேரில் இது வரை சொன்னாரிலர்; இனியுஞ் சொல்லார். அங்ஙனமாக நவீனர் 'என்றால்' என வைத்துக் கொண்டு அவ்வீரம் பேசுவானேன்? 'அக்கடவுளோ காலாரி, காமாரி, புராரி. அவ்வுமையொருபாகன் சீறில் உகலுருவரத்தோர் யாரே? ஒருவரமும் பெருத நவீனர் அச்சிற்றத்துக்குத் தப்புவரோ? அக்கடவுளே நவீனர்உள்பட அனைவரையும் அவரவர்வினைகளாகிய மூட்டைமுடிச்சுகளுடன் அவ்வப்போது உலகத்தை விட்டே ஒழித்துக் கட்டி மீண்டும் உலகில் தள்ளி வருகிறார். அத்தகைய அவரை மூட்டை கட்டி அனுப்பக் கருதும் வீரம் சன்னி வயப்பட்டதேயாம். வாத விஷயம் சாஸ்திர சம்பந்தமானது. அதைச் சாஸ்திர வரம்புள் நின்று பேசி உண்மை காண்பதே மதிப்பிற் குரியது.

## 7

"வழிபாட்டை மொழிக்குள் — குறுகிய எல்லைக்குள் கட்டுப் படுத்துவது சரியன்று, கூடாத ஒன்றுமாகும்."
(8—7—55 தமிழ் நாடு) என்கிறார் நவீனர்.

**தெய்வ வழிபாட்டை மொழிக்குள், குறுகிய எல்லைக்குள் கட்டுப் படுத்துவது நியாயமா? அப்படிக் கட்டுப் படுத்துபவர் யார்?**

தமிழ் ஒரு பிரதேச மொழி. அப்பிரதேசத்தை 'வடவேங்கடந் தென் குமரி யாயிடைத் தமிழ் கூறு நல்லுலகம்' என எல்லைக்குட் படுத்தினர் பழம் பெருந் தமிழ்வாணர். அதிலும் இப்போது மேல்கரை மலையாள மொழிக்குரியதாய்ப் போனது. தமிழ்ப் பிரதேசத்துக்கு மேற்கெல்லை கடலென்பது மறைந்து மேற்குத் தொடர்ச்சி மலை யென்பதாயிற்று. வட வெல்லையும் வேங்கடம் போய்த் தணிகை ஆயிற்று. ஆனால் சம்ஸ்கிருதமோ பாரத தேசமெங்கும் வியாபகம். அப்படியே சைவ சமயமுமாம். ஆகலின் அச் சமய அர்ச்சனை வழிபாடு அம் மொழியிலேயேயிருந்து வர வேண்டும். அப்படி யிருந்தாற்றான் அது எல்லாப் பிரதேசங்களுக்கும் அப்பாற் பட்டதென்ற இலக்கண முடையதாகும். அங்ஙனமின்றித் தமிழ் முதலிய பிரதேச மொழிகளிற் கொண்டு வரப்பட்டால் அது அம் மொழிகளாற் துண்டிக்கப்பட்டு அவ்வப் பிரதேசத்தளவில் கட்டுப்படுத்தப்படும். ஆகலின் பிரதேச மொழி யர்ச்சனைக்காரராகிய நவீனரே அவ் வழிபாட்டை மொழிக்குள் — குறுகிய எல்லைக்குள் கட்டுப் படுத்துபவராவ ரென்க. அவர் கொள்கையிற்றான் பரந்த நோக்கில்லை. எல்லாப் பிரதேசங்களின் சைவமக்களும் வந்து

வழிபடற் குரிய தமிழகத்துச் சைவாலயங்களைத் தமிழர் வழிபடுங் கோயில்கள், தமிழர் வழிபாட்டிற்கே ஏற்பட்ட கோயில்கள் என அவர் பிரசங்கித்து வருவதைக் கொண்டு அவருடைய குறுகிய, சைவ சமயத்திலிருந்து மாறிய புத்தியை எவரும் எளிதில் தெரிந்து கொள்ளலாம். மொழி வெறியருக்குச் சமய நிலயங்களில் என்ன வேலை? அக்கோயில்களைத் தமிழர் கட்டினரா? சைவர் கட்டினரா? இப்படிக் கேட்கத்தானும் சைவ சமூகம் அஞ்சுகிறது. தமிழச் சைவர் தமிழ் பற்றித் தமிழ நாத்திகரை அணைத்துக் கொண்டால் சைவ சமயத்துக்குக் கேடரேயாவர்; சைவம் பற்றி பிறமொழிச் சைவரையும் அணைத்துக் கொள்வதே அவருக்கு யோக்கியமாகும்.

சிவஞான போதம் சைவசமய நூல். அது சம்ஸ்கிருதத்திலிருந்து தமிழிற் கொண்டு வரப்பட்டது. அவ்வுண்மையைச் சைவ நலம் நிரம்பிய பெரியோரெல்லாம் பாரம்பரியமாகச் சம்மதித்து வருகின்றனர். ஆனால் அது தமிழ் முதல் நூலே, பின்னர்த் தான் சம்ஸ்கிருதத்தில் பெயர்க்கப் பட்ட தென்பர் நவீனர். அவருக்குக் குரு சந்தானத்திற் பக்தி விசுவாசம் மரியாதை கிடையா. ஆகையால் ஆட்டத்தைப் பாராமல் ஆளைப் பார்ப்பவர் போல் அவர் ஆகிறார். அதனால் குருபரம்பரைக்கு விரோதமாகப் பெயர்ப்பு நூலை மூல நூலென்றும், மூலநூலைப் பெயர்ப்பு நூலென்றும் போராடுவதே அவருக்குப் பொழுது போக்காயிருந்து வருகிறது. தரமான தமிழ் மூல நூல்களுமுள. அவை பிற மொழிகளிற் பெயற்கப்பட்டால் அம் மொழிகளுக்கு உரியாரும் அவற்றைத் தம் மொழிகளின் மூல நூல்களே யெனச் சொல்லிச் சாதிக்கக் கூடும். சைவ சமயாபிமான மாத்திரம் இருந்து விட்டால் எந்த மொழியிலுள்ள சைவ நூலும் மதிக்கப்படும். எந்த மொழியும் பாதக மடையாது. தமிழ் உள்பட எல்லாப் பிரதேச மொழிகளும் நலக்க வளரும். ஆனால் தமிழ் வெறியோ தமிழிலுள்ள சைவ நூல்களையும் தமிழுக்காகவே ஏற்கும். அவற்றிலுள்ள சைவசமய வுண்மைகள், அதற்குத் துச்சமே. பிற மொழிகளிலுள்ள சைவ நூல்களை அது எப்படி ஏற்கும்? அவ்வெறியால் சைவ சமூகம் பாதகமுறுவது திண்ணம். ஆகையால் எந்தப் பிரதேச மொழியும் சமயத்தை மீறவே கூடாது, அதற் கடங்கவே வேண்டும். சமய நிலயங்களையும், நூல்களையும், ஆசார அனுட்டானங்களையும் சமயக் கண்ணே கொண்டு பார்ப்பர் நீதிமான்கள். அதை விட்டு மொழிக் கண்ணால் நோக்கின் மொழிச் சண்டைதான் கண்ட பலன். சமயமும் நழுவிப் போம். சமய மக்களும் சமய நலத்தை யிழந்து அதோகதியிற் செல்வர். சைவ சமயம் எல்லாப் பிரதேசங்களுக்கும் சமமாக வுரியது; அப்பிரதேசங்களிலுள்ள சைவ சமயிகள் தாம் பாரத தேசச் சைவரென கூறி மகிழுமாறு அவரை யெல்லாம் ஒன்று படுத்துவது. அவ்வைக்கிய லக்ஷியத்தில் மொழி வெறி மண் போடும். அந்த லக்ஷியத்திற்காகவும் அர்ச்சனை சம்ஸ்கிருதத்தில் உளதாயிற்று. அது வழிபாட்டை மொழிக்குட்படுத்துவதெப்படி? பிரதேச மொழிகள்தான் அக்கேடு செய்வன.

"போட்டி — பொருமை — தன்னலம் — மறுத்துப் பேசுவது போன்றவைகளை நீக்கிடத் துணை செய்ய வேண்டிய அறிவுத் துறை, இன்று அவைகளை வளர்த்து வருகிறது"
(30 — 8 — 55 தினமணி) என்கிருர் நவீனர்.

அஃதுண்மைதான். சம்ஸ்கிருதத்தோடு போட்டி, அம்மொழி மேற் பொருமை, சைவந் தமிழருக்கே யுரியதெனப் பேசி வருந் தன்னலம், சைவ சமயப் பிரமாண நூல்களிற் கண்ட சைவ சமய வுண்மைகளை மறுத்துப் பேசுவது முதலியன அவரிடமே காணப்படுகின்றன.

**அறிவுத்துறை, பக்திக்கோ, மொழிக்கோ, சமயத்துக்கோ செய்வது என்ன?**

சம்ஸ்கிருத அர்ச்சனையை நீக்க வேண்டாம், அதனேடு தமிழர்ச்சனையையுஞ் சேர்த்துக் கொள்க என்பதே தம் கொள்கை யென்பாரவர். அதற்கொரு காரணமும் அவர் சொல்வர். அர்ச்சனை விரும்புகிற வருக்காகவே செய்யப்படுகிறது; அவர் அதைத் தமிழில் வேண்டுமென விரும்பினுல் அர்ச்சகர் அப்படித்தானே செய்ய வேண்டும் என்பதே அக்காரணம். ஒரு தமிழன் தமிழர்ச்சனைக்காக ஆலயத்துக்கு வந்திருக்கிருன். அவ்வாலயத்தில் தமிழ் தெரியாதவராய் வெவ்வேறு மொழிகளுக்குரியவராய் அவற்றில் வல்லவராய் உள்ள ஏழெட்டுப் பேரும் வந்து சுவாமி முன் கூப்பிய கையினராய் நிற்கின்றனர். தமிழ் அர்ச்சனை நடக்கிறது. அர்ச்சகரும் தமிழில் ஏதேதோ ஓதித் தினத் தந்தி யர்ச்சனையைச் செய்கிருர். ஓரர்ச்சனை தொடங்கிப் பூர்த்தியாகக் குறைந்தது பத்து நிமிஷங்களாவது வேண்டும். அதற்குங் குறைந்தால் ஆன்மீகத் தொடர்பு உண்டாகுமா வென்பதை அறிஞர் யோசித்திடுக. அந்தப் பத்து நிமிஷ நேரமும் அங்கு நின்று கொண்டிருந்த மற்ற மொழிக்காரருக்கு அர்ச்சகர் ஓதுவதில் எதுவுமே விளங்கப் போவது மில்லை. அவ்வோதுகை அவருக்கு வெறுஞ் சலசலப்பாகவே யிருக்கும். இப்படிப் பத்தர்ச்சனைகள் தொடர்ந்து நடப்பதாயின் நூறு நிமிஷ நேரமும் அவ்வேற்று மொழிக்காரரின் காதுகள் பயனற்றுக் கிடக்கும். சிவ நாமம் ஒன்றையாவது அவராற் கேட்க முடியாது. [1]'செவிகாள் கேண்

---

1 செவிகாள் கேண்மின்களோ — சிவன்
எம்மிறை செம்பவள
எரிபோன் மேனிப் பிரான்திற மெப்போதும்
செவிகாள் கேண்மின்களோ.
[திருநாவுக்கரசர் - 4ம் திருமுறை - பொது - திருவங்கமாலை]

மின்களோ' என்றது திருமுறை. [1]'கண்காள் காண்மின்களோ' என்ற படி அவருக்குக் காணக் கிடைத்தார் அக்கடவுள். ஆனால் அக்கட வுளின் நாமத்தையுந் திறத்தையும் அவர் எப்படிக் கேட்பது? அத்தமிழ் தான் அவர் செவிகளில் ஏறுதே. அத்தமிழன் சைவாபிமானமுடைய வனாய் [2]'நான் பெற்ற வின்பம் பெறுகவிவ் வையகம் என்றபடி பரோப கார சிந்தையனாய் இருப்பானாகில் தனக்காகச் செய்யப் படுகிற அர்ச் சனையில் ஓதப்படும் நாமங்களை அவ்வேற்று மொழிக்காரரும் கேட்டுப் பயனடைக வென்றும் விரும்ப வேண்டும். அதுவன்றோ தெய்வபக்தி! பக்கத்தில் நிற்பவருக்கும் பக்தி யுண்டாகச் சிறிதும் வாய்ப்புக் கொடா மல் தான் மாத்திரம் அவ்வோதுகையைக் கேட்ப தென்பது தன்னலம். அது பக்தியை யுண்டாக்காது. அவனுக்கு அக் கடவுள் அருளவுஞ் செய்யார்.

அவ்வர்ச்சனை அங்குச் சேவிக்க வந்திருக்கிற ஏனைத் தமிழர் உள்பட அவ்வெல்லார்க்கும் பயன் தர வேண்டுமாயின் அவ் வெல் லார்க்கும் பொதுவான சம்ஸ்கிருதத்திலுள்ள நாமங்கள் ஓதப்பட வேண்டும். அவ்வகையில் பரஸ்பர சகாயம் அவசியம். அது தியாக மின்றி நடவாது. அத்தியாகமாவது யாது? மனிதனுக்கு வயது நூறென்பர். அவ்வளவு காலமும் அவன் இருக்கப் போவதாக நம்பியே இலௌகிக காரியங்கள் பலவற்றில் பிரவர்த்திக்கிறான். ஆனால் அவ்வர்ச்சனை நாமங்களை அர்த்தத்துடன் தெரிந்துகொள்ள அவன் அந்நூறு ஆண்டுகளில் ஒன்றிரண்டு மாதங்கள் செலவு செய்தால் போதும். அதுவே அத்தியாகம். தன் சமயத்துக்காகவும், அவ்வாலயங்களில் வழிபட வருகிற மற்றைப் பிரதேச மொழிகளுக் குரிய சைவ சமயிகள் உள்பட அனைவரின் நலனுக்காகவும் அக் குறுகிய காலத்தைத் தானும் செலவு செய்ய விரும்பாத அவன் சைவ மனிதனாதல் யாங்ஙனம்? நவீனர் அவன் பெயரைச் சொல்லிக்கொண்டு தமிழர்ச்சனை வேண்டுமென்பது நியாயமா? தமிழர்ச்சனை வேண்டு மென்பதற்கு சம்ஸ்கிருதம் புரியாதென்பது ஒரு காரணமாகாது.

---

1 *கண்காள் காண்மின்களோ — கடல்*
*நஞ்சுண்ட கண்டன்றனை*
*எண்டோள் வீசிநின்றாடும் பிரான்றன்னைக்*
*கண்காள் காண்மின்களோ.*

[திருநாவுக்கரசர் - 4ம் திருமுறை - பொது - திருவங்கமாலை]

2 *'நான் பெற்றஇன்பம் பெறுகஇவ் வையகம்*
*வான்பற்றி நின்ற மறைப்பொருள் சொல்லிடின்*
*ஊன்பற்றி நின்ற வுணர்வுறு மந்திரந்*
*தான்பற்றப் பற்றத் தலைப்படுந் தானே.'*

[திருமூலம் - திருமந்திரம் - சிறப்புப்பாயிரம் - திருமூலர் வரலாறு]

கடமையைச் செய்யாதவனுக்கு உரிமையில்லை யெனல் உலக விஷயங் களுக்கு மாத்திரந்தானு? சைவ மகன் சைவ சமயத்தை முன்னிட்டுச் சம்ஸ்கிருதத்திலுள்ள அர்ச்சனையையாவது அர்த்தத்துடன் தெரிந்து கொள்ளுதல் அவனுக்குக் கடன். அதில் அவன் தவறிவிட்டுத் தமிழர்ச் சனையை விரும்புகிருன். அவ்வுரிமை அவனுக் கேது? சோம்பல், பரா முகம், அசிரத்தை யாகிய வற்ருல் அவன் ஒரு பிராகிருதனே யாகிருன். நாய்வால் நிமிர்ந்தாலும் நிமிரும். அவன் எத்தனை வருடங்கள் இவ் வுலகிற் கிடந்தாலுஞ் சரி, அவனுள்ளம் பக்தியைத் திரும்பியும் பாராது. பக்தி சமயத் தொடர்புடையது. அதற்கும் மொழிக்கும் சம்பந்த மில்லை. ஆகலின் தமிழர்ச்சனை வேண்டு மென்பவ ரெவரும் பக்திப் பிரியரே யல்லர். தமிழ் வெறியரே யவர்.

## 8

> ‘தமிழில் தெய்வ வழிபாடு செய்ய வேண்டும் என்ற விருப்ப முடையவர்கள், அவ்விருப்பத்தைத் தெரிவித்தால் அவர் களுக்காகத் தேவார திருவாசக திருவாய் மொழி திருவருட்பா முதலிய தமிழ்ப் பாசுரங்களில் ஏதாவது ஒன்றிரண்டு ஓதி, அவர்களுக்கும் தெய்வத் திருவுருவத்திற்கும் விளக்கமான முறையில், உள்ள நெகிழ்ச்சி தரத் தக்க ஆன்மீகத் தொடர்பு ஏற்படுத்தக் கூடிய ஓதுவா மூர்த்திகளாக அர்ச்சகர்கள் இருக்க வேண்டும். இதுதான் இயக்கத்தின் அடிப்படை.
> (25—5—55 தமிழ் நாடு) என்கிருர் நவீனர்.

தமக்குச் சைவ சமயங் கிடைத்தது பெரும் பாக்கிய மென்ற உணர்ச்சியும், பெருமிதமும் ஏற்று நடையும் கொள்ளு மளவிற்காவது
சைவ சாத்திரப் பயிற்சி ஒருவர்க் கிருக்கு
பக்தர்கள், விரும்பிய மாறுல், அவர் சம்ஸ்கிருத சகஸ்ர, அஷ்டோத்
மொழியில் அர்ச்சனை தர நாமங்களை அர்த்தத்துடன் தெரிந்தே யிருப்
பர். சில தெரிந்து, சில தெரியாமல் இருப்பாரு
முளர். அவரும் அவற்றைச் சம்ஸ்கிருத மெனக் கூறிக் கழியார். அவர் வழிபடும் பரமசிவனுருக்குரிய நாமங்களல்லவா அவை? அக் கருத்தே அவருள்ளத்தில் மேலிட்டு நிற்கும். ஆகலின் அவர் அவற்றைப் போற்றவே செய்வர். அவர் விருப்பம் வரம்பை மீருது. ஆகலின் அவர் தமிழர்ச்சனையை விரும்பக் காரணமில்லை.

> இனிச் ‘சாதாரண மக்கள் தெய்வத் திருவுருவங்களோடு ஆன்மீகத் தொடர்பு கொள்வதற்காக அர்ச்சனைகள் ஏற் பட்டன.’ (25—5—55 தமிழ் நாடு) என்கிருர் நவீனர்.

சைவாலயங்களும், அவற்றில் நடந்து வருகிற சிவாகமக் கிரியைகளும், அத் தொடர்பை உண்டாக்கத்தான் ஏற்பட்டன. தினத்தந்தி யர்ச்சனை மாத்திரம் அதற்கென்று ஏற்பட்டதெனச் சொல்ல முடியாது. அவர் கூறும் சாதாரண மக்களென்பார் யார்? தமக் கென ஒன்றிலரே அவர் போலும். அவருக்குத் தாம் சைவ சமயிகள் என்ற நினைவு தானும் இருக்குமோ? என்னவோ? அவருக்குச் சம்ஸ் கிருதந் தெரியாதென்பது இருக்கட்டும். தமிழாவது தெரியுமா? ஒரு மொழிக்குச் சொந்தமானவரென்ற அளவில் அவருக்கு அம் மொழி யறிவு உண்டெனல் யாங்ஙனம்? ஆகலின் அவருக்கு எம் மொழியர்ச் சனையும் ஒன்றுதான். அவரிடமுந் தமிழர்ச்சனை விருப்பமிராது. இன்னொரு வகையினருமுளர். அவர் வெறுந் தமிழைக் கற்றவர். அத்தமிழ் அவருக்கு வெறியை யூட்டியது. அதனால் அவர் அம் மொழி யோடு வாழ்க்கை யொப்பந்தஞ் செய்து கொண்டார். தமிழர்ச்சனையை விரும்புகிறவர் அவர்தான்.

**தெய்வத் திருவுருவத் தோடு ஆன்மீகத் தொடர்பு கொள்வதற்கு மொழிதான் காரணமா?**

> 'தமிழன் பணத்தைக் கொண்டு, தமிழன் உழைப்பைக் கொண்டு, தமிழன் வழிபடுவதற்காகத் தமிழ் நாட்டிலே தமிழனால் கட்டப்பட்ட கோவில்களில் தமிழன் தமிழில் வழிபட விரும்பும் பொழுது, அதைக் கூடாது என்று தடுப்பது எவ்வளவு அறிவீனமாகும்.' (21—8—55 தமிழ்நாடு)

என்றுதான் அவர் பேசுவர். பக்தியை உண்டாக்கக் கூடிய பேச்சா அது? அன்று. அது தமிழ் வெறியையே ஊட்டுகிறது.

சைவாலயங்க ளெல்லாம் சைவ நிலயங்கள். அவர் அச்சமய வரம்புள் நின்று தக்க பிரமாணங் காட்டித் தம் கொள்கையை நிறுவுக. அதை விட்டு, வாயில் வந்தன பேசிப் பயன் என்ன? அது நியாயத்தின் முன் நில்லாது. அவர் அணியும் விபூதி ருத்ராக்ஷ முதலியன தமிழ் மொழிச் சின்னங்களல்ல, சைவ சமயச் சின்னங்களே. அவர் அணிந்து கொள்வது சைவ சமயத் தாலி, அணைத்துக் கொள்வது தமிழ் மொழி. அஃதடுக்குமா?

**ஆலயங்கள் முதலி யவை மொழிச் சின் னங்களா? அல்லது சமயச் சின்னங்களா?**

விரும்புகிறவரின் தரமே விருப்பத்திலு மிருக்கும். அவரனைவரும் ஒரே வகையினரா? தேவாரத்தை யோதி யர்ச்சிக்க விரும்புவார் சிலர். ஈசன்முன் 'பச்சைமாமலை'யையும் மாயன்முன் 'அரியானை' யையும், அல்லா, ஏசு.

**பாட்டு அர்ச்சனை யாகுமா? எந்தப்பாட்டு? தேவாரமா? கீர்த் தனையா? நொண்டிச் சிந்து முதலியவையா?**

அருகன், புத்தன், கண்ணன், ஈசுரன், என்பன வாதிய நாமங்களை ஒரே கடவுளுக்கேற்றி இக்காலை இயற்றப் பட்டுக் கிடக்கிற பாடல்களை எத் தெய்வத்தின் முன்னும் ஓதி அர்ச்சிக்க விரும்புவார் [1] ‘ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்’ என்ற அடிக்குத் தன்மனம் போன போக்கிற் பொருள் கூறித் திரியுஞ் சிலர். [2] ‘அர்ச்சனை பாட்டே யாகும்’ என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதிலுள்ள ஏகாரத்தாற் பிரிக்கப்படுவது உரை நடை. அதனால் உரை நடை யர்ச்சனை கூடா தென்பதொன்று. பாட்டென்பது பொதுச் சொல். அது தேவார திருவாசகப் பாட்டுக்களைத்தான் குறிக்கு மென்ப தென்னை? கீர்த்தனைகள், நொண்டிச் சிந்துகள், கும்மிகள், லாலிகள், வில்லுப் பாட்டுகள், ஸினிமாப் பாட்டுகள், சொந்தப் பாட்டுகள், கேளப்பா, கண்ணம்மா. அகப்பை, தமிழணங்கே, டடடா முதலிய பாட்டுக்கள் ஆகிய வெல்லாம் பாட்டுக்களே. ஆகையால் அக் கீர்த்தனைகள் முதலிய கொண்டு அர்ச்சிக்க விரும்புவார் சிலர். உயர்ந்த உரைநடை யர்ச்சனையை விரும்புவார் சிலர். கொச்சைத் தமிழர்ச்சனையை விரும்புவார் சிலர். அவரவர் விரும்புகிறபடி அர்ச்சனை நடந்தா லன்றி அவரவருள்ளத்தில் பக்தி யுண்டாகா தென்கிற நவீனருக்கு ஆலயங்களில் அத்தனை வகையர்ச்சனைகளும் நடந்தாற்றான் திருப்தி யாகும். ஆனால் அப்படி நடந்தால் ஆலயங்களோ அர்ச்சனைகளோ உருப்படுமா? அதை மற்றவரே சிந்திக்க வேண்டும். தேவார திருவாசகப் பாடல்களைக் கொண்டதே அர்ச்சனை, அதையே யாவரும் விரும்புக என நவீனர் விதி வகுத்தால் விரும்பியவருக்கு விரும்பியபடி யர்ச்சனை யென்ற அவருடைய கொள்கை எடுபட்டுப் போம். அன்றியும் அவ் விதி வகுக்கத் துணிகிற அவர் சம்ஸ்கிருத அர்ச்சனைக்கான விதியை எப்படி மீறலாம்? ஆகவே அவ்வாலயங்களிற் சேவிக்கச் செல்லுகிற எவரும் அவற்றை ஆட்சி புரிகிற வேதசிவாகமங்களின் விதிகளுக் கடங்கியே எதனையும் விரும்ப வேண்டும். அறியாமையும் அறிவு

---

1 *ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்*
*நன்றே நினைமின நமனில்லை நாணுமே*
*சென்றே புகுங்கதி யில்லைநுஞ் சித்தத்து*
*நின்றே நிலைபெற நீர்நினைந் துய்மினே.*

(திருமூலர் 10ம் திருமுறை 7-ம் தந்திரம் இதோபதேசம்)

2 *மற்றுநீ வன்மைபேசி வன்றொண்ட னென்னு நாமம்*
*பெற்றனை நமக்கு மன்பிற் பெருகிய சிறப்பின் மிக்க*
*வர்ச்சனை பாட்டேயாகு மாதலான் மண்மே னம்மைச்*
*சொற்றமிழ் பாடு கென்றார் தூமறை பாடும் வாயார்.*

(சேக்கிழார் — 12ம்திருமுறை — தடுத்தாட்கொண்ட புராணம்)

போல் அடர்ந்தெழும். அவ்விதிகளுக் கடங்கிய விருப்பம் அறிவால் எழுந்தது. ஏனைய விருப்பங்க ளெல்லாம் அடர்ந்தெழும் அறியாமை யால் உளவாவனவே. அவை பொல்லாதன. அவற்றை நசுக்கவே வேண்டும்.

இராமாயணம், பாரதம், சிவரகசியம் என இதிகாசங்கள் மூன்று. அவற்றுள் பாரதம் ஐந்தாம் வேதம் எனத் திகழ்வது. அதில் சிவ சகஸ்ர நாமங்கள் கூறப்பட்டன. சிவரகசியம் பரமேதி காசமென மதிக்கப்படும். அதில் சிவ அஷ்டோத்தர சதநாமங்களைப் பார்க்கலாம். அவ்விதிகாசங்களின் காலம் எது? அறிஞர் ஆராய்ந்து அதைத் தெரிந்து கொள்க. அதற்கு முன்னிருந்தே அவ் விருவகை நாமங்களும் பிறமொழிப் பிரதேச சைவாலயங்களிற் போலத் தமிழ்ப் பிரதேச சைவாலயங்களிலும் அர்ச்சனையில் ஓதப்பட்டு வருகின்றன. அப் பிரதேசங்களில் அவ்வர்ச்சனைக்கு எதிர்ப்பில்லை. பக்தி வளருகிற தென்பதற்கு அதுவு மொரு சான்று. இப் பிரதேசத்திலும் சமீப காலம் வரை அதனை எதிர்த்தா ரிலர். அக் காலத் துள்ளார் அதன் பொருளைத் தெரிந்தோ, தெரியாமலோ இருந்து அதைப் போற்றியே வந்திருக்கின்றனர். அவர் பக்தியிலுங் குறைந்தாரல்லர்.

**அஷ்டோத்திர சகஸ்ர நாம அர்ச்சனைகளின் காலம் எது?**

'வடமொழி மந்திரங்களைத் தமிழில் மொழி பெயர்த்து, மொழி பெயர்த்த சொற்களால் அருச்சனை செய்ய வேண்டு மென்பது தமிழருச்சனை இயக்கத்தின் நோக்கமே யல்ல'
(10—7—55 தமிழ்நாடு) என்கிறார் நவீனர்.

ஆகலின் மொழி பெயர்ப்பு விஷயத்தை விட்டு விடலாம். தமிழில் புது நாமங்களைச் சிருட்டித்துக் கொள்ளும் விருப்பமும் அவருக்கில்லை யென்பது

'வேறு மந்திரம் உண்டாக்கச் சொல்லவுமில்லை'
(8—6—55 தினமணி)

என அவர் சொல்வதால் தெரிகிறது. அதுவும் ஒழிக. 'தேவார திருவாசக திருவாய் மொழி திருவருட்பா முதலிய தமிழ்ப் பாசுரங்களில் ஏதாவது ஒன்றிரண்டு ஓதி' என்கிறார் அவர். முதலாவது தேவார திருவாசகங்களை எடுத்துக் கொள்ளலாம். தமிழர்ச்சனையில் தேவார திருவாசகப் பாடல்களை நாமம் நாமமாகப் பிரித்து வைத்துக் கொண்டு ஓத வேண்டுமா? பாடல்களாகவே பாடி ஓத வேண்டுமா? அர்ச்சனைக்கு நாமங்களை மாத்திரமே ஓத வேண்டும். அதற்காகவே சகஸ்ர, அஷ்டோத்தர

**தமிழ் அர்ச்சனைக்குத் தேவார திருவாசகப் பாடல்களை ஓதலாமா? அல்லது அவற்றிலிருந்து நாமங்களைப் பிரித்து ஓதலாமா?**

சதங்களாகிய வேதாக மோக்த சம்ஸ்கிருத நாமங்களின் வரிசையைச் சுலோக ரூபமாகிய அவ்விதிகாசங்கள் தம்பால் வைத்துக் காத்தன. ஆனாலும் அவ்விதிகாச காலத்துக்கு முன்னுள்ளபடி அந் நாமங்களே ஓதப்பட வேண்டும். இப்போதும் அவைதான் ஓதப்பட்டு வருகின் றன. ஆகையால் அச்சுலோகங்கள் முக்கியமல்ல, நாமங்களே முக்கியம் என்பது தெரிக. அப்படியே தமிழ்நாட்டுச் சைவாலயங் களில் முன் தமிழர்ச்சனை நடந்ததாக நவீனர் சொல்கிறார்.

'தமிழில் அருச்சனை இருந்ததை இல்லையென்றும் சொல்ல முடியாது.' (21—5—55 தமிழ்நாடு)

'தமிழில் வழிபாடு இருந்ததில்லை என்று கூறுவது சரியன்று தவறுதலாகும்' (8—7—55 தமிழ்நாடு)

'மூவேந்தர் ஆண்ட தமிழகத்தில் அவர்கள் காலத்தும், அவர்களுக்குப் பின்னும் இறை வழிபாடும் அருச்சனையும் தமிழில் தான் இருந்திருக்கு மென்பதில் சிறிதும் ஐயம் இல்லை.' (3—8—55 தமிழ்நாடு)

என்பன காண்க. அஃதுண்மையானால் அத்தமிழ் நாமங்கள் எந்தச் சைவ நூலிலாவது திரட்டி வைக்கப் பட்டிருக்கும். அத் திரட்டுத் திருமுறைகளிலுமில்லை, வேறு சைவத் தமிழ் நூல்களிலுங் கிடையாது. தமிழ் நூல்களிலுஞ் சூனியம். ஆனால் திருமுறைகளில் வேறுபல நாமங்களுள; அவற்றை ஆயிரமும், நூற்றெட்டுமாக இப்போது திரட்டி வைத்துக் கொண்டு அர்ச்சனையில் ஓதினாலென்னை என அவர் கேட்கலாம். அந் நாமங்களை யெடுத்தால் அப் பாடல்களும் அச்சுலோகங்கள் போல் முக்கியமல்ல என்பதாகும். அச் சுலோகங் கள் ஒரு பெட்டி போல்வன. அதனுள் வைக்கப்பட்ட இரத்தினங் களே அந் நாமங்கள். பயன் கருதி அப் பெட்டியிலிருந்து அவ் விரத்தினங்களை யெடுக்கலாம். அது குற்றமன்று. ஆனால் திரு முறைகளில் பாடல்களே இரத்தினங்கள். அவற்றிலுள்ள நாமங்கள் ஒளிக்கதிர்களாகும். ஆகலின் அவற்றைப் பிரிக்க முடியாது. பிரித் துத் திரட்டியன எனக் கூறப்படும் நாமங்கள் அப்பாடல்களிலிருந்து எடுத்த நாமங்களாகக் கருதப்படா.

ஒவ்வொரு நாமத்திலு முதலில் ஓங்காரமும், முடிவில் நமஸ் காரமும் வைத்தே சம்ஸ்கிருத நாமங்கள் ஓதப்படும். தேவாரத் திரு வாசகப் பாடல்களில் அம்முதலும் முடிவு முள்ள நாமங்கள் கிடையா. ஆகலின் அவற்றைப் பிரித் தெடுப்பது வீண். ஆனால் சில பாடல் களில் சில நாமங்கள் போற்றி யென முடியும். போற்றி யென்பது தமிழ்; அது தமிழர்க்கு விளங்கக் கூடியதுமாம், ஆகலின் அந்நாமங் களை யெடுத்துக் கொள்ளலா மென்பாரவர். போற்றி யென்பது தமிழ்தான். ஆனால் அதன் பொருள் சாமானியருக்கு விளங்காது.

கற்றவரோ மற்றவரோ ஒருவரை யொருவர் சந்திக்கும் பொழுது நமஸ்காரம் எனச் சொல்லிக் கை கூப்புவர். தமிழருள்ளும் இசுலாமியர் சலாம் என்பர். கிறிஸ்தவர் தோத்திரம் என்பர். ஆனால் சென்ற சில காலமாக அந் நமஸ்காரத்தில் மாத்திரம் அருவை கொண்டார் சிலர். அவரும் வணக்கம் என்றுதான் சொல்வார்; போற்றி எனச் சொல்லார். போத்தி யென்றே ருலக வழக்குண்டு. அது பாட்டன் என்ற பொருளில் வழங்கி வருகிறது. போற்றியும் அப்போத்தி தானே வென மயங்குவாரே பலர். ஆயினும் நம என்பதற்குப் பதிலாகப் போற்றி யென்பதை நவீனர் வைத்துக் கொள்க. முதலில் ஓம் என்பது வேண்டுமே. ஓம் சம்ஸ்கிருதம். நமவை வெறுப்பவர் ஓமையும் வெறுக்கவே வேண்டும். மேலும் சம்ஸ்கிருத வேத மந்திரங்கள் ஓம் எனச் சொல்லி ஆரம்பிக்கப் படும். [1] 'ஓமென்று மறை பயில்வர்' என்றது திருமுறை. [2] 'போற்றி யோ(ம்) நமச்சி வாய' என்றதுங் காண்க. நமச்சிவாய என்ற சம்ஸ்கிருத மந்திரம் அதில் ஓமென்று தொடங்கி உச்சரிக்கப் பட்டது. ஆனால் தேவார திருவாசகங்களைத் திருச்சிற்றம்பலம் சொல்லித்தான் ஆரம்பிக்க வேண்டும். போற்றித் திருத்தாண்டகத்தை யெடுத்துக் கொள்க. அதிலுள்ள நாமங்களை அர்ச்சனை நாமங்களாகப் பிரித்தெடுத்து ஓதுவதானால் [3] திருச்சிற்றம் பலம் கற்றவர்க ளுண்ணுங் கனியே போற்றி, திருச்சிற்றம்பலம்

---

1 தாமென்றும் மனந்தளராத் தகுதியராய் உலகத்துக்
காமென்று சரண்புகுந்தார் தமைக்காக்குங் கருணையினன்
ஓமென்று மறைபயில்வார் பிரமபுரத் துறைகின்ற
காமன்றன் உடலெரியக் கனல்சேர்ந்த கண்ணனே.

[திருஞானசம்பந்தர் — 2 ம் திருமுறை — திருப்பிரமபுரம்]

2 போற்றி யோ(ம்) நமச் சிவாய புயங்கனே மயங்கு கின்றேன்
போற்றி யோ(ம்) நமச் சிவாய புகலிடம் பிறிதொன் றில்லை
போற்றி யோ(ம்) நமச் சிவாய புறமெனைப் போக்கல்கண்டாய்
போற்றி யோ(ம்) நமச் சிவாய சய சய போற்றி போற்றி.

[திருவாசகம் — காருண்யத்திரங்கல்]

3 கற்றவர்க ளுண்ணுங் கனியே போற்றி,
கழலடைந்தார் செல்லும் கதியே போற்றி
அற்றவர்கட் காரமுதமானாய் போற்றி
அல்லலறுத்தடியேனை ஆண்டாய் போற்றி,
மற்றொருவ ரொப்பில்லா மைந்தா போற்றி
வானவர்கள் போற்றும் மருந்தே போற்றி,
செற்றவர்தம் புரமெரித்த சிவனே போற்றி
திருமூலட் டானனே போற்றி போற்றி.

—அப்பரடிகள். போற்றித் திருத்தாண்டகம் திருவாரூர்.
6 ம் திருமுறை

கழலடைந்தார் செல்லுங் கதியே போற்றி, திருச்சிற்றம்பலம்
"அற்றவர்கட் கார முதமானுய் போற்றி, திருச்சிற்றம்பலம்
"அல்லலறுத் தடியேனை யாண்டாய் போற்றி என்று தான் ஓத வேண்டும். அப்பதிகத்தில் வரும் போற்றிகள் 108 தான். அதுபோல் நாமங்களும் 108 இருத்தல் வேண்டும். ஆனுல் அதிலிருப்பன 70 நாமங்களே. அஃதெப்படி அஷ்டோத்தர சதமாகும்? அதில் சில நாமங்கள் திரும்பத் திரும்ப வருகின்றன. அவற்றிற்கு வேறு வேறு பொருளுமில்லை. அவற்றை யொரு நாம மெனவே கொள்ள வேண்டும். சங்கரன், சதாசிவன் முதலிய சம்ஸ்கிருத நாமங்களும் வந்துள்ளன. அவற்றை அவர் விலக்க வேண்டும். அப்படி யெல்லாம் அவர் செய்தால் அப்பதிகம் உருக்குலையும். முன் காட்டியபடி நாமந்தோறும் திருச்சிற்றம்பலம் சொல்லி அப்பதிக நாமங்களை யோதலாமெனின் அதுவுங் கூடாது. பதிகத்தின் முதலிலும் முடிவிலுமே திருச்சிற்றம்பலம் சொல்ல வேண்டும். அதுவே மரபு. அதற்கு விரோதம் அவ்வா ருேதுவது. ஆகவே திருமுறைப் பாடல்களை நாமங்களாகப் பிரித்தெடுத் தோதுதல் தவறுடைத் தென்க. இனி அப்பாடல்களைப் பாடல்களாக ஓதுவதுங் கூடாது. திருமுறைகளை யோதி அர்ச்சிப்பதற்கே அனுமதி யில்லை. அது முன் கூறப்பட்டது. அன்றியும் அவற்றைப் பாடி அர்ச்சித்தால் அவற்றிலுள்ள நாமங்களெல்லாம் முதலின்றி மொட்டையாகவே இருக்கும். அஃதர்ச்சனைக் காகாது.

சைவாலயங்களில் தேவார திருவாசகங்களுக்கே தொடர்புண்டு. திருவாய் மொழிக்குத் தொடர் பென்னை? அதையுமா ஓத வேண்டும்? ஒருக்கால் வைணவாலயங்களைக் கருதி அது சொல்லப் பட்டது போலும்.

இராமலிங்க ராக்கிய பாடல்களின் திரட்டை அவருள்படச் சிலர் திருவருட்பா வென்பர். அதை யெங்கு ஓத வேண்டும்? வடலூரிலா? அவ் விராமலிங்கரின் உருவம் வைக்கப்பட்டுள்ள பிற விடங்களிலா? ஆமெனின் அது சரி. சைவாலயங்களிலும் அதை யோதலாமெனின் அது தவறே. ஏன்? [1] 'சைவம், வைணவம் முதலிய சமயங்களிலும்....................லக்ஷியம் வைக்க வேண்டாம்....................நான் முதலில் சைவ சமயத்தில் லக்ஷியம் வைத்துக் கொண்டிருந்தது இவ்வளவென்று சொல்ல முடியாது. அது பட்டணத்துச் சுவாமிகளுக்கும் வேலாயுத முதலியாருக்கும் இன்னும் சிலருக்கும் தெரியும். அந்த இலக்ஷியம் இப்போது எப்படி போய் விட்டது? பார்த்தீர்களா? அப்படி லக்ஷியம்

திருவாய் மொழியும் வடலூர் இராமலிங்கர் பாடலும் கொண்டு அர்ச்சனை செய்வது சைவாலயங்களிலா? வைஷ்ணவ ஆலயங்களிலா?

---

1 1932 ல் சென்னை "உமாபதி" அச்சு நிலையத்தில் சமரச சுத்த சன்மார்க்க சங்க வெளியீடாக வந்த திருவருட்பாப் புத்தகத்தில் பாகம் 2 பக்கம் 573—574—575.

வைத்ததற்குச் சாக்ஷி வேறே வேண்டியதில்லே. நான் பாடியிருக்கிற திருவருட்பாவில் அடங்கியிருக்கின்ற பாடலேயும், மற்றவர்கள் பாடலே யும் சபைக்குக் கொண்டு வந்தால் அவைகளே சாக்ஷி சொல்லிவிடும். ஏன் அவ்வளவு அழுத்தம் எனக்கு அப்போதிருந்த தென்ருல், அப் போது எனக்கு அவ்வளவு கொஞ்சம் அற்ப அறிவாக இருந்தது. இப்போது ஆண்டவர் என்னே ஏருத நிலேமே லேற்றி யிருக்கின்ருர். இப்போது எல்லாவற்றையும் விட்டு விட்டதினுல் வந்த இலாபம் இது. ஆதலால் நீங்களும் விட்டு விட்டீர்களாஞல் என்னேப்போல் பெரிய லாபத்தைப் பெறுவீர்கள். இதுவரைக்கும் விடாமல் வைத்துக் கொண்டிருந்தவர்கள் ஏதாவது லாபத்தைப் பெற்றுக் கொண்டார் களா? பெற்றுக் கொள்ள வில்லே. நான் அப்படி அந்தச் சமயத்தில் வைத்திருந்த லக்ஷியமே என்னே இந்த நிலேயில் தூக்கிவிட்ட தென் ருலோ, அந்த லக்ஷியம் தூக்கி விடவில்லே'' என்று அவ் விராமலிங் கரே சொல்லி விட்டார். ஏருத எந்த நிலேயில் அவர் ஏறியிருந்தா லும் இருக்கட்டும். அதற்கு முன்னரே அவர் சைவ சமயத்தை விட்டு விலகிப் போனவர். அது மாத்திரமா? தாம் மதம் மாறியது போல எல்லாருமே சைவ சமயத்தை விட்டு மாறுக என்பதும் அவருபதேசம். அம்மட்டோ? தம்முடைய திருவருட்பாப் பாடல்களும் சிலவோ பலவோ தமக்கிருந்த அற்ப அறிவாற் பாடப்பட்டன என்பதையும் அவர் விளம்பிஞர். அப்படி யிருத்தலால் அவரியற்றிய பாடல்களின் திரட்டுச்சைவ சமயப் பார்வையில் திருவருட்பாவாதல் யாங்ஙனம்?

**வடலூர் ரமலிங்கர் பாடல்களும் நீதி மன்றமும்,**

நீதி மன்றத்தில் வழக்குத் தொடுத்து பிரபல பிரமாணங் காட்டித் தேவீராதி பன்னிரு திருமுறைகளே அருட்பாவாகும், இராமலிங்கரின் பாடற் ருெகுதி அருட் பாவன்று எனத் தீர்ப்புப் பெற்ற வெற்றி வீரர் நா. கதிரைவேற் பிள்ளே, அவருக்கு மாணுக்கர் திரு. வி. க. அத் திரு. வி. க.,

[1] "அருட்பா வென்பது ஆறிரு முறையே என்று
அரசமன்ற மேறிப் பசுமரத் தாணிபோல் நாட்டி" என்றும்,
...................................................................
"மன்னவர் நீதி மன்றினி லேறிப்
பன்னிரு முறையே உன்னருட் பாவென்
ருணி பசுமரத் தறைந்தா லென்னக்
காட்டிச் சாத்திரம் நாட்டின னெவனே
...................................................................
...................................................................

1 பெரிய புராணம் — குறிப்புரை by திரு. வி. க 1910-வது வருடப் பதிப்பு. (உரிமையுரை)

கதிரைவே லென்றொரு மதுரப் பெயருடைத்
தவன னெவனே வவனது ஞாபக
சின்னம தாகச் செய்தனம்
உரிமை யுலகமு முவந்திட வினிதே'

என்றுங் கூறி அக் கதிரைவேற் பிள்ளையை வந்திக்கிறார். அவ் விராமலிங்கரின் பாடல்களா தேவாராதிகட்குச் சமம்? அவற்றையா சைவாலயங்களில் ஓத வேண்டும்?

'தேவார................முதலிய தமிழ்ப் பாசுரங்களில் ஏதாவது ஒன்றிரண்டு ஓதி' என்கிறார் நவீனர். அர்ச்சனையில் ஆயிரம் பூத் தூவி ஆயிரம் நாமத்தையும் நூற்றெட்டுப் பூத் தூவி நூற்றெட்டு நாமத்தையும் ஓத வேண்டும். அது நடைமுறையிலுள்ளது. ஆனால் அவருக்கோ ஒன்றிரண்டு பூத் தூவி ஒன்றிரண்டு பாடல்கள் ஓதினாற் போதும். அவ் வர்ச்சனையால் அவ் வான்மீகத் தொடர்பு தமக்கு ஏற்பட்டு விடுமென அவர் சொல்லுகிறார். அப்படியானால் இராமலிங்கருடைய அருட்பாவில்

**இராமலிங்கர் பாடல்களால் அர்ச்சனையும் ஆன்மீகத் தொடர்பும்**

[1] 'மின்னைப் போலிடை மெல்லிய லாரென்ற விடத்தைப் போல்வரும் வெம்மனப் பேய்களைப்
பொன்னைப் போன்மிகப் போற்றி யிடைநடுப் புழையிலே விரல் போதப் [புகுத்தியித்
தன்னைப் போன்முடை நாற்றச் சலத்தையே சந்தனச் சலந்தானென்று கொள்கின்றே
னென்னைப் போல்வது நாய்க்குலந் தன்னினு மில்லை யல்ல தெவற்றினு மில்லையே'

என்பதொரு பாடல். நவீனர் தம் அதிகாரத்திலுள்ள ஆலயங்களில் அதை யோதித் தினத்தந்தி யர்ச்சனை செய்ய முன்வருக. ஆன்மீகத் தொடர்பு அவருக்குத் தப்பாது கிடைக்கும். அன்ன பாடல்கள் பலவுள. 'கருங்குழிப் பிள்ளை பாடல்கள் (ஆராய்ச்சி)" என்றொரு நூல் நான் செய்து வைத்திருக்கிறேன். அஃதச்சாகும். பிறகு அப் பாடல்களின் தரம் உலகிற்கு அதிகம் விளங்கும்.

'அவர்களுக்கும் தெய்வத் திருவுருவத்திற்கும் விளக்கமான முறையில், உள்ள நெகிழ்ச்சி தரத்தக்க ஆன்மீகத் தொடர்பு' என்கிறார் நவீனர். அத் தொடர்பு பக்தியைக் குறிக்கிறது, அப்பக்தி இப்போதில்லை, தமிழர்ச்சனையாற்றான் உண்டாகு மென்பது அவர் கொள்கை. தமிழகத்திற் சைவாலயங்கள் பல. அவை பன்னூறு வருடங்களாக இருந்து வருகின்றன. அவற்றில் நடந்து வரும் சம்ஸ்கிருதக் கிரியைகளும்

**ஆன்மீகத் தொடர்பு தமிழர்ச்சனைமூலம் தான் பெறமுடியும்?**

1 *இராமலிங்கர் — திருவருட்பா — 2ம் திருமுறை — தனித்திரு விருத்தம்* 11.

அநேகம். அக் கிரியைகள் ஆண்டுதோறும், மாதந்தோறும், தினந் தோறும் நடந்து வரும். நடந்த கிரியைகளே நடக்கும். அவற்றை யெல்லாம் யோசித்தால், அக் கிரியைகளனைத்தும் ஏதேனு மொரு விதி நூலில் வகுக்கப்பட்டு அந் நூலின்படிதான் நடந்து வருகின் றன வென்பதும், எக்கிரியையும் எக்காலத்திலும் எம்மனிதனாலும் தான்றோன்றித்தனமாகவோ, பொது ஜன சம்மதம் பெற்றோ புகுத்தப்பட்டதன் றென்பதும் புலனாகும். அவ் விதிநூல்தான் சிவாக மங்கள். இதுவரை இத் தமிழகத்தில் தோன்றி வாழ்ந்து மறைந்த மக்கள் எத்தனை பேர்? அவருக்கு அக்கிரியைகளால் பக்தி அரும்பா மலும், வளராமலும் போயிற்றா? போயிருந்தால் அவ் வாலயங்கள் அன்றே மறைந்திருக்கும். அக் கிரியைகளால் அப் பயன் உண்டாக வில்லையென நவீனராற் சொல்ல முடியுமா? சொன்னால் அவர் நெஞ்சாரப் பொய் சொன்னவரேயாவர். அவர் அப்படிச் சொல்ல வில்லை யென்னலாம். அங்ஙனமாயின் தமிழர்ச்சனைக் கொள்கையை அவர் விடுக. அதுதான் நியாயம். அக் கொள்கைக் கவசியமில்லை. சிவாகமங்கள் விதித்தபடி, சாதி காரணமாக ஆலயங்களுக்குள் ஒரு சாரார் செல்லாமலிருந்தனர். அதனால் நாட்டில் பக்தி குறைந்து விட்டதெனக் குறை கூறப்பட்டது. அரசுக்கோ சமயச் சார்பில்லை. ஆயினும் ஆலயப் பிரவேசச் சட்டம் உருவானது. அதன் நோக்கம் யாதோ? ஆனால் பக்தியை யுண்டாக்கவே அச்சட்டந் தோன்றிய தெனப் பிரசாரங்கள் நிகழ்ந்தன. அப் பிரவேசமு மாயிற்று. பக்தியும் உண்டாகித்தா னிருக்கும். ஆனால் அஃதுண்டாக வில்லை யென இப் போது நவீனர் குறை கூறுகின்றனர். அச்சட்டம் கருதிய பயனைத் தரவில்லை யென்பது அவர் கூற்றால் அனுமிக்கப்படும். ஆனால் அவரும் அப்பக்திப் பிரசங்கத்தையே முன்வைத்துத் தமிழர்ச்சனைக்குக் கூச்ச லிடுகின்றனர். அவ் வர்ச்சனை மாத்திரம் பக்தியை உண்டாக்கி விடுமா? ஆமெனின் அஃதெதனாற் புலப்படுகிறது? ஆலயப் பிரவேசந் தோல்வியில் முடிந்ததென அவர் சொல்லாமற் சொல் கின்றனர். தமிழர்ச்சனைப் பிரவேசம் சித்திக்குமானால் அது தோல்வி யிலேயே முடியுமென நான் நேராகவே சொல்கிறேன்.

## 9

'ஒலிக்குச் சக்தி உண்டு என்றால் அது தமிழ் ஒலிக்கும் உண்டு' (16—6—55 தமிழ் நாடு) என்கிறார் நவீனர்.

**தமிழ் ஒலிக்குச் சக்தி உண்டா? இல்லையா?**

ஒலிக்குச் சக்தி உண்டென்பது உண்மையாயின் அச் சக்தி தமிழொலிக்குமுண்டு, இல்லை யென்பது உண்மையாயின் அது தமி ழொலிக்கு மில்லை யெனக் கூறி அவ்வள வில் அவர் மகிழ்கிறார். ஆனால் ஒலிக்குச் சக்தி யுண்டு அல்லது இல்லையென்பது பற்றி

அவரே ஆராய்ந்து முடிவு கண்டதாகத் தெரியவில்லை. தமிழொலிக்குச் சக்தியுண்டென்பது முதலில் ஸ்திரமாக வேண்டும்; அது கொண்டு பொதுவாக ஒலிக்குச் சக்தி யுண்டென்பதைப் பிறகு தான் அவர் ஒத்துக் கொள்வர். நயம் என்பதெதுவுந் தமிழுக்குத்தா னுரியது, அம் மொழியிற் காணப்படாத நயம் வேறெம் மொழியிலுமே கிடையாது எனக் கூறுவது அவருக்கு வெகு திருப்தி. ஆகலின் தமிழொலிக்கும் சக்தி யுண்டென அவர் கூறத்தான் செய்வர்.

'நிறைமொழி மாந்தர்கள்........................கண்ட மந்திரங்கள்
ஒலியாற்றல் வடமொழிக்கு முண்டு. தமிழுக்கும் உண்டு'
(16—6—55 தமிழ் நாடு) என்றும் அவர் சொல்கிறார்.

**மந்திரங்களின் ஒலி யாற்றல் அவையல்லாத சப்தங்களுக்கு உண்டா? இல்லையா?**

அம்மாந்தரின் மந்திரங்களின் விஷயத்தை [1] என் புத்தகத்திற் காண்க. சக்தி யுண்டென மேலே சொன்ன வொலியும் மந்திரங்களின் ஒலிதான் போலும். அங்ஙனமாயின் மந்திரங்களின் ஒலியாற்றல் மந்திரங்களுக்கே யுண்டு; சம்ஸ்கிருதத்துக்குந் தமிழுக்கும் எப்படியுண்டு? அவற்றிற்கு முண்டெனின், தெலுங்கு, ஹிந்தி, ஆங்கிலம், இலத்தீன், ஹீப்ரு, கிரேக்கம் முதலிய மற்ற மொழிகளுக்கு முண்டா? இல்லையா? இல்லை யென்று சொல்ல அவரால் முடியாது. சொன்னால் அம் மொழிகளுக் குரியார் அவரைச் சும்மா விடார். உண்டென்று சொன்னால் அவ் வாற்றல் எல்லா மொழி

1 நினைப்பவரைக் கரை சேர்ப்பது மந்திரம். அப்பொருள் கொண்ட மந்திரங்கள் சம்ஸ்கிருத வேதத்திற்கு முள. தவமுடையார் நிற்கு முறையில் நிற்பர், அவற்றை ஓது முறையில் ஓதுவர், அதனால் தம்மை நிறைமொழி மாந்தராக்கிக் கொள்வர். அவரே நீத்தார். ஒவ்வொரு மந்திரத்தையும் ஒவ்வொரு தேவதை அதிட்டிக்கும். அவர் அம்மந்திரத்தைச் செபிக்கும் போது தம்மை அத் தேவதையாகப் பாவிப்பர். அதனால் அவரிடம் ஒரு சத்தி பிறக்கிறது. அதுதான் சாபானுக்கிரக சத்தி. அவர் தீயவரைச் சபிப்பர், நல்லவரை அனுக்கிரகிப்பர். அச்சாபானுக்கிரக வசனங்கள் மந்திரங்களென உபசரிக்கப்படும். செபிப்பவரை நிறைமொழி மாந்த ராக்குவது சம்ஸ்கிருத மந்திரம். தொல்காப்பியத்தில் தமிழ் மந்திரமென வொன்றுளது. அதுதான் அச்சாபானுக்கிரக வசனங்கள். அது செபிப்பதற்குரிய தன்று; செபிப்பவரை நிறைமொழி மாந்த ராக்கவுஞ் செய்யாது. அதனையே அந்நூல் மறைமொழி யென்றது. திருக்குறளிலுள்ள மறைமொழியும் அதுவே. திருமுறை சொன்ன 'மறைமொழி,' 'வேதமொழி' கள் சம்ஸ்கிருத வேத மந்திரம்.

களுக்கும் பொது வென்ருகும். அதனுல் தமிழுக்குத் தனிச் சிறப் பில்லே. அவ்வாற்றல் எல்லா மொழிகளுக்கும் உண்டென அவர் சொல்லியுமிருக்கிருர்.

'எழுகின்ற இதய பாவமே மந்திரமாகும்'

(16—6—55 தமிழ் நாடு) என்றது காண்க.

எழுவது இதயமோ, பாவமோ, எதுவேனுமாக. ஒவ்வொரு மொழிக்குரிய இதயங்கள் பல் கோடி. ஒவ்வோ ரிதயத்தின் பாவங் களும் அங்ஙனமே. அன்றியும் அவை யெல்லாம் மந்திரங்களா? என்னே, மந்திர லக்ஷணம்! அது கிடக்க. ஆற்றலுடையதெனச் சொல்லப் பட்டது மந்திரங்களின் ஒலியே. சம்ஸ்கிருதம், தமிழ் முதலிய வெல்லாம் பாஷைகள்; மந்திரங்கள் வேறு, அவையல்லாத மற்றைச் சம்ஸ்கிருதச் சொற்களின் ஒலியும், தமிழ் முதலிய பிற மொழிகளிலுள்ள எல்லாச் சொற்களின் ஒலியும் வேறு. ஆகலின் மந்திரங்களின் ஒலியாற்றல் மற்றைச் சொற்களில் இருக்க முடியாது. ஒன்றன் ஆற்றல் அதற்கேயுரியது. அஃதின் ஞென்றி லிருப்பதில்லே. அங்ஙனமாக, அவர் மந்திரங்களேயும் மற்றைச் சொற்களேயுங் குழப்பித் தமிழைச் சம்ஸ்கிருதத்தோடு ஒட்ட வைத்து அம்மந்திரங் களின் ஒலியாற்றல் தமிழுக்கு முண்டென இல்லது கூறி ஏழை மக்களே ஏய்க்கின்றனர். அவர் காட்டும் ஆதாரங்களோ வெறும் போலி களே. வரம்போ அழிந்தது. ஆயினும் எப்படியாவது வாழ வேண் டும். கைக்கு அகப்பட்டதொன்றைப் பற்றிக் கொண்டாற்ருன் அது கூடுமெனத் தோன்றுகிறது. அப் பற்றுக்கோடு அவ் வாழ்க்கைக்கு உதவி வருவது போல அவர் கொள்கைக்கு அவ்வாதாரங்களும் உதவி வருகின்றன. சிவாய நம என்ற மந்திர ராஜத்தின் முதலெழுத்தே தமிழ் ஒலியன்று. விசாரணேயாவது மொழிகளின் ஒலிக்கு ஆற்றல் உண்டா? இல்லேயா? என்பது அன்று. மந்திரங்களின் ஒலியாற்றல் அவையல்லாத சப்தங்களுக் குண்டா? இல்லேயா? என்பதே. இல்லே யென்பதே சித்தம்.

'வடமொழி மந்திரங்களிலுள்ள உச்சரிப்பு ஒலி தமிழிலில்லே மந்திரத்தின் சக்தி யெல்லாம் அந்த உச்சரிப்பு ஒலியில் தான் இருக்கிறது என்கின்றனர் சிலர். உச்சரிப்பு ஒலியில் தான் சக்தி யெல்லாம் இருக்கிறது என்ருல் நன்ருக உச் சரிப்பவர்களேக் கொண்டு பல்லாயிரக் கணக்கான இசைத் தட்டுகளேத் தயார் செய்து உலக மெல்லாம் மந்திரத்தின் சக்தியைப் பரப்பி விடுவது சுலபமல்லவா? இப்போது 100–க்கு 95 உச்சரிப்பே சரியாகத் தெரியாத அர்ச்சகர்களும் நமக்குத் தேவை இல்லேயல்லவா?

(21—8—55 தமிழ் நாடு) என்கிருர் நவீனர்.

இஃதொரு பரிகாசப் பேச்சு. மந்திரங்களின் ஒலியாற்றல் பற்றிய பேச்சிருக்கட்டும். அவற்றின் பொருளுக்குச் சக்தி யுண்டென் பதையாவது அவர் சம்மதிக்கிருரா? எந்தப் பதத்துக்கும் சப்தார்த்த சம்பந்தம் பேதா பேத மாகலின் அர்த்தம் தெளிவாக விளங்க வேண்டு மானுல் சப்தம் தெளிவாக உச்சரிக்கப் பட வேண்டும். முதலில் தமிழிலுள்ள சாமானிய பதங்களை யெடுத்துக் கொள்ளலாம். அவளை அவலென்றும், அவலை அவளென்றும், பழத் தைப் பயமென்றும், குழம்பைக் குளம்பென்றும் உச்சரிப்பவர்தாம் வேண்டுவதை விட்டு வேருென்றையே பெறுதற்குரியர். அவ் வுச்சரிப்புச் சொற் சோர்வாகும். 'சொற் சோர்வு படேல்' என்றது ஆத்திச்சூடி.

மந்திரங்களிலுள்ள உச்சரிப்பு ஒலிக்குத் தான் ஆற்றல் உண்டா? ஒலியின் பொருளுக் கும் ஆற்றலுண்டா?

'நித்தியத்து வங்கேட்பா னித்திரையென் றேமயக்கம்
துய்த்தனனுங் கும்பகன்னன் சோமேசா — வெத்திறத்தும்
ஆக்கமுங் கேடு மதனுன் வருதலாற்
காத்தோம்பல் சொல்லின்கட் சோர்வு'

என்ற [1] சோமேசர் முதுமொழி வெண்பாவையுங் காண்க ஆகலின் தவருக உச்சரிப்பவரைத் திருத்துவதே தமிழ்ப் பற்றுடை யார்க்குக் கடன். அதைவிட்டு, நல்ல வுச்சரிப்பை இசைத் தட்டின் மூலம் பரப்பினுல் தமிழொலியி னுற்றல் உலகில் விளங்கி விடும், தாறுமாருக உச்சரிப்பவரைத் தொலைத்து விடலாம் என நவீனரை, மாறினுல் அவர் என் செய்வர்? விழிப்பர். இனி, மந்திரங்களுக்கு வரலாம். மந்திரம் என்ற சொற் பொருளை என் புத்தகத்திற் காண்க. மந்திரங்கள் தெய்வத் தன்மை உடையன, உயிருக் குறுதியளிப்பன. சைவ சமயிகள் தம் உடம்பில் உயிரென வொன்றிருப்பதை உணர் வாராகலின், அவற்றினிடம் அளவிறந்த பயபக்தியுடனிருப்பர். அவை சிவபிரானுக்குத் திருமேனியுமாம். அவற்றைப் பழிப்பவர் அக் கடவுளையே பழிப்பவ ராவர். மேலும் அவற்றின் சப்தம் உமா சொரூபம் அர்த்தம் சிவ சொரூபம். அச் சப்தத்தைப் பழிப்பது உமாதேவியாரையே பழிப்பதாகும். அருளே அந்த அம்மையார். அப் பழிகாரர் அவ்வருளைப் பெறுதலு மிலர். அவர் சிவபிரானேடு எத்துணை உறவு கொண்டாடினுலும் உய்தி பெறர். அக் கடவுளுக்கு நெருங்கிய உறவி னன் தக்கன். அவன் தலையே துண்டித்து உருட்டப் பட்டது, அப் பழிகாரர் அதனை நினைக. அவருக்குப் புத்தி புகட்டவே 'அஞ்சுவ தஞ்சாமை பேதைமை யஞ்சுவ, தஞ்ச லறிவார் தொழில்' என்ற

1 மாதவச் சிவஞான முனிவர் இயற்றியது

குறளும் எழுந்தது. மந்திரங்களின் சப்தத்துக்கு ஆற்றல் உண்டென அவர் ஒத்துக் கொண்டதுங் காட்டப்பட்டது.

மந்திர அர்ச்சனேக்கு அர்ச்சகர் ஏன்? இசைத் தட்டு போதாதா?

தேவார திருவாசகப் பாடல்களை அவற்றின் ஆசிரியரின் திருவுள்ளப் படியே பாடவேண்டும். அத் திருவுள்ளத்தைத் திருக்கடைக் காப்புகளில் வந்தவிடத்துக் காண்க. அப்படி எத்தனைபேர் பாடுகின்றனர்? கூடுமாயின், பாடும் பழக்க முடையாருள் ஆயிரவருக்கு ஒருவரிருவர்தா னிருப்பரெனக் கொள்ளலாம். இசைத்தட்டை மந்திரங்களின் உச்சரிப்புக்குச் சிபாரிசு செய்கிற நவீனர் அப்படியே அவ் வொன்றிரண்டு பேரைக் கொண்டு அப்பாடல்களை இசைத்தட்டில் அமைத்து விட்டால் அவற்றின் ஆற்றலும் உலகமெல்லாம் விளங்கிவிடும். பிறகு ஓதுவா மூர்த்திகளுக்கு ஆலயங்களில் வேலையில்லை. அவரை யெல்லாந் துரத்தி விடலாம். ஆகவே அத் தட்டுக்கும் அவர் சிபார்சு செய்க. தமிழர்ச்சனைக்குக் கூட அத் தட்டைக்கொண்டு பாடுவிக்கலாம். அவ்வர்ச்சனைப் பக்தர் மிருதங்கம், சுதிப்பெட்டி, தாளம் முதலியவற்றைச் சுமந்து கொண்டு தெருத் தெருவாய்த் திரியவும், ஆலயங்களுக்குள்ளே புகுந்து இசைநயமின்றி இரைச்சல் போடவும் வேண்டாம். அத்தட்டுப் பாட்டர்ச்சனைக்கும் அவர் சிபார்சு செய்க, பூவை யெடுத்துச் சாமிமீது போடுமோ ரெந்திரத்தையும் அவர் தம் அகன்ற புத்தியால் விரைந்து காண வேண்டும். அதுவும் அவ்வர்ச்சனைக்குப் பயன்படும். அதனையும் அவர் சிபார்சு செய்க. அவ் வெந்திர மூல பக்தியால் அவர் வாழி. ஆனல் சைவ சமயம் என்ன சொல்கிறது? அதைச்

‘சொல்லும் பொருளுமே தூத்திரியு நெய்யுமாய்
நல்லிடிஞ்சி லென்னுடைய நாவாகச் சொல்லரிய
வெண்பா விளக்கா வியன் கயிலை மேலிருந்த
பெண்பாகர்க் கேற்றினேன் பெற்று.’

கைலை பாதி காளத்தி பாதி யந்தாதி —
நக்கீரதேவ நாயனர் 11ம் திருமுறை.

என்ற திருமுறையிற் காண்க. அதில் தூய சொல்லாகிய தூய திரியை என் நாவாகிய அகலில் இட்டு என்கிருர் ஆசிரியர். “வாயே வாழ்த்து” ‘நாவினுக் கருங்கலம் நமச்சி வாயவே’ எனவுந் திருமுறை சொல்லியது. ஆகவே நாக்கால் உச்சரிப்பவரே ஆக்கம் பெறுவர். மந்திரங்களைச் செவ்வையாக உச்சரிக்கத் தெரியா விட்டால் பழகிப் பழகி நன்ருக உச்சரிக்கக் கற்றுக் கொள்ள வேண்டும். அதை விட்டு ‘நடைக்குச் சோம்பிச் சிற்றப்பன் வீட்டிற் பெண் கேட்டான் என்ற பழமொழிக்குச் சைவ மக்கள் இலக்காக விரும்பார். நவீனருடைய தட்டு முறையினல் மந்திரங்களது உச்சரிப்பின் ஆற்றலை உலகம் விளங்கிக் கொள்ளு

வது பிறகு ஆகட்டும். முதலில் அவர் விளங்கிக் கொள்வாரா? ஆமெனின், அவரும் வாயினுல் உச்சரித்தே யாகவேண்டும். அர்ச்சகர் நமக்குத் தேவை யில்லை என்கிருரவர். அவருடைய அர்ச்சனைக் கொள்கை பக்தியை யுண்டாக்கவா வந்திருக்கிறது? இல்லவே யில்லை. அர்ச்சகரையும் சம்ஸ்கிருதத்தையும் ஆலயங்களிலிருந்து துரத்தவே அது தலையெடுத்திருக்கிறது.

**தமிழ் எழுத்துக்கள் மந்திரங்களைச் சொல்லும் ஆரிய எழுத்துக்களின் மாத்திரை பெற்றுள்ளனவா?**

'மந்திரங்களெல்லாம் ஆரியத்திலேயே நின்று நிலாவுகின்றன. தமிழில் மந்திர நூலுங் கிடையாது, தமிழ் எழுத்துக்கள் மந்திரங்களைச் சொல்லும் ஆரிய எழுத்துக்களது மாத்திரை பெற்றுமில' என்றது [1] திருநான்மறை விளக்க ஆராய்ச்சி. அதற்காதாரம் தொல்காப்பியம்,

'எல்லா வெழுத்தும் வெளிப்படக் கிளந்து
சொல்லிய பள்ளி யெழுதரு வளியிற்
பிறப்பொடு விடுவழி யுறழ்ச்சி வாரத்
தகத்தெழு வளியிசை யரிறப நாடி
யளபிற் கோட லந்தணர் மறைத்தே
யஃதிவ ணுவலா தெழுந்துபுறத் திசைக்கு
மெய்தெரி வளியிசை யளவுநுவன் றிசினே'

என்ற தந்நூல். இசை இரண்டு வகைப்படும். அவற்றுள் ஒன்று அகத்தெழு வளியிசை யென்பது; அவ்வோசையானது அந்தணர் ஓதும் வேதத்திலுள்ளது, தமிழி லில்லை; ஆகலின் அதன் கூறுபாட்டை நான் இந்நூலிற் சொல்ல வில்லை; இன்னென்று புறத்திசை மெய்தெரி வளியிசை யென்பது; அதுதான் தமிழுக் குரியது; ஆகலின் அவ்வோசைகளின் மாத்திரைகளை நான் இந்நூலிற் கூறுகின்றேன் என்று அவ்வாசிரியர் சொல்லுகின்ருர். நவீனர் அந்தப் பிரமாணத்தை ஏற்பரா? மாட்டார். ஏன்? அவருக்கு அவரே பிரமாண புருஷர். ஆகலின் தம் கொள்கையோடு மாறுபடு மிடங்களில் அவருக்கு எந்நூலும் ஒரு துரும்பே. தொல்காப்பிய மாத்திரம் தப்புவ தெப்படி? ஆனுல் 'எழுத்தறியார் கல்விப் பெருக்க மனைத்தும், எழுத்தறிவார்க் காணி னிலையாம்' என்றது நன்னெறி. ஆகலின் 'நவீனரின் பாண்டித்திய மெல்லாம், பாமர ரஞ்சிதமே. அதற்கு ஆயுளும் அற்பந்தான். அதை அவர் மறவற்க. வேதசிவாகம மோக்த மந்திரங்கள் முதலிய சைவ சமய வுண்மைகளை வாயில் வந்தபடி நிந்தித்தும் பரிகசித்தும் திரிபவரைக் 'கண்டால் அம்ம நாம் அஞ்சுமாறே'.

1 திரு கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் M.A.M.L செந்தமிழ்ச் செல்வி என்னும் பத்திரிகை வாயிலாக வெளியிட்ட "திருநான்மறை விளக்கம்" என்னும் வியாசத்தில் காணப்படும் திரிபுணர்ச்சியை நீக்குமாறு, திரிசிரபுரம் திரு. மா. சாம்பசிவன் பிள்ளை (பென்ஷன் மேஜிஸ்டிரேட்) அவர்கள்இயற்றி 1926ல், வெளியிட்ட நூலின் பெயர் "திருநான்மறை விளக்க ஆராய்ச்சி" என்பது.

## 10

'கோயில்களில் தமிழில் அர்ச்சனை செய்ய ஒரு போராட்டத்தை நான் ஆரம்பித்தால் அதற்கு ஆதரவு கொடுப்பதாக தி-க, தி-மு-க வைச் சேர்ந்தவர்கள் சொல்லுகிறார்கள். அவர்களுக்கு...............கடவுள் வழிபாட்டில் கடவுளிடத்து நம்பிக்கை வந்தது குறித்து மகிழ்ச்சி ஏற்பட்டுள்ளது'

(16—5—55 தினத் தந்தி) என்கிறார் நவீனர்.

**தமிழ் அர்ச்சனைக்கு நாஸ்திகர் ஆதரவு தருவது ஏன்?**

அத் தி-க, தி-மு-கக் கூட்டத்தினர் எதனால் நாஸ்திகராயினர்? ஆலயங்களில் தமிழர்ச்சனை யில்லாமையினாலா? ஆமெனின் நவீனரும் நாஸ்திகராய் விட்டனரா? அவர் ஆகவில்லை யென்றால், அக் கூட்டத்தினர் மாத்திரம் எப்படியாவர்? ஆகலின் அவர் நாஸ்திகரானதற்கு அவ்வில்லாமை காரணமன்று. அக் காரணம் வேறு. அது கிடக்க. நவீனர் அப் போராட்டத்தை ஆரம்பித்தால் அந் நாஸ்திகர் ஆதரவு தாத்தான் செய்வர். அதனால் தமிழர்ச்சனையும் புகுத்தப் படலாம். ஆனால் அதற்குப் பின்னரும் ஒரு விளைவுண்டு. அது நிச்சயம். என்னை?

'கோவில் பக்தி என்றால் இப்படி இப்படி இருக்க வேண்டுமென்று கட்டுப்பாடுகளைச் சொல்லி விட்டுக் கோயில்களையே பூட்டி விடுகிறார்கள்'

(2—6—55 தமிழ் நாடு) என்கிறார் நவீனர்.

ஆலயங்களுக்குச் சென்று பக்தி செய்வது சிவாலய தரிசனம் எனப்படும். அதற்கு விதியு (கட்டுப்பாடு) ண் டென்பது நிசம். அச் சிவாலய தரிசன விதிக் கடங்கினால் ஆலயங்கள் பூட்டப் பட்டனவாய்ப் போகுமோ? சைவ நிலயங்களின் கட்டுப் பாட்டைக் குலைத்து அச்சமய சமூக நாகரீகத்துக்கு உலை வைக்கப் பார்க்கிறாரவர். அக் கட்டுப் பாட்டைக் குலைக்கவே தமிழர்ச்சனைக் கொள்கையுங் கிளம்பியது. அதற்கு ஆதரவு தருவதாகச் சொல்லுகிற அந்நாஸ்திகருக்கும் சில விருப்பங்களுள. அவற்றை நவீனரும் அறிவர். அவைதான் யாவை? ஆலயங்களில் சாமிகளுக்குப் பூணூல் வேண்டாம்; ஆண் சாமி, பெண் சாமி, பிள்ளைச் சாமி யென்ற குடும்ப முறை வேண்டாம்; திருக்கலியாண விழாக்களில் பெண்சாமிகளுக்கு ஆண்சாமிகள் போன்று ஆண் சாமிகளுக்குப் பெண்சாமிகளுந் தாலி கட்ட வேண்டும்; ஆண் சாமிகளை ஆடவரும், பெண்சாமிகளைப் பெண்டிருமாக எல்லாச் சாமிகளையும் எல்லாச் சாதியினருந் தொட்டுப் பூசிக்க வேண்டும்; வழிபடுவோருக்கும் சாமிகளுக்கும் இடையில் தரகர் வேண்டாம்;

சாமிகளுக்குக் கள்ளும் ஊனும் நிவேதிக்க வேண்டும்; போலி விழாக் களும், புரியாத விழாக்களும் வேண்டாம்; சாமிகளுக்குச் சப்பைக்கால், தொப்பை வயிறு, மிருகமுகம், மூன்று கண், நான்கு கை, ஆறு தலை முதலிய விகாரமான, இயற்கைக்கு மாறுன உறுப்பமைப்புக்கள் வேண்டாம்; சாமிகளெல்லாம் ஸினிமா நக்ஷத்திரங்கள் போல் காட்சி யளிக்குமாறு அமைக்கப்பட வேண்டும் என்பனவும், அன்ன பிறவுமே அவை. அவை யனைத்துந் திருத்தி யமைக்கப் பட்டாற்றுன் பக்தி ஓங்கி வளரும்; ஆலயங்களுக்கு மக்கள் அதிகமாக வருவர் என அந் நாத்திகருஞ் சொல்வர். தமிழர்ச்சனை விருப்பத்துக்கும், அவ்விருப்பங் களுக்கும் வித்தியாச மில்லை. அது போன்று அவையுந் தமிழ்ப் பொது மக்களின் உள்ளங்களிலிருந்தே யெழுந்தன. பக்தி பெருகுதல், ஆல யங்களிற் கூட்டம் வருதல் என்னும் நோக்கங்களும் அவ்விரண்டற் கும் ஒன்றே. ஆகலின் ஆலயங்களில் அவ்விருப்பங்களையும் நிறை வேற்றுமாறு அவர் நவீனரை ஆஞ்ஞாபிப்பர். அதை நவீனரால் மறுத் துரைக்க முடியாது, ஏன்? கொடுத்தவருக்கு வாங்கினவர் கொத் தடிமையே. ஆகலின் மறுத்துரைத்தால் தமிழர்ச்சனைக்கு ஆதரவு கொடுத்த அந்நாஸ்திகர் சீறுவர், அவ்வாதரவை வாங்கின நவீனர் நடுங்குவர். செய்ந்நன்றி கொன்ற பாவமும் அவரைச் சாரும். அவர் கொள்கையுஞ் சோர விடப் பட்டதாகும். ஆலய சம்பந்தமான விதி களைக் கொண்ட பிரமாண நூலென ஏதேனுமொன் றிருந்து, அது மதிக்கப்பட்டா லொழிய அவ்விருப்பங்களுள் இது தகும், இது தகாது என எந்த விருப்பத்தையும் நிச்சயிக்க முடியாது. நவீனருக்கு அத்த கைய தொரு பிரமாண நூலென எதுவு மில்லை. ஆகலின் பொதுமக் களிட மிருந்து கிளம்பின தெனக் கூறிக் கொண்டு அவ்வொரே கார ணத்தால் எந்த விருப்பத்தையும் அவர் செயற் படுத்துவர். மேலும் அவருக்கு அந் நாஸ்திகருடைய விருப்பங்களத்தனையும் உடம்பாடே, அவற்றுள் எதனையும் அவர் எதிர்க்க முற்படார். ஆனல் அவர் நாஸ்தி திகத்தை தூஷிப்பது முண்டு, அது 'நான் அடிக்கிற மாதிரி அடிக்கி றேன் நீ அழுகிற மாதிரி அழு;' என்ற படியாகும், இந் நிலையில் அவர் தமிழர்ச்சனைப் போராட்டம் ஆரம்பிக்கவும், அதற்கு அந்நாஸ் திகர் ஆதரவு நல்கவும் நேர்ந்தால் ஆலயங்கள் என்னவாகும்? தோட் டக் காரனுங் கள்ளனுஞ் சேர்ந்தால் தோட்டம் ஆவது போல் அவை யுமாகும். உண்மையில், நவீனருக்கு அந் நாஸ்திகர் ஆதரவு கொடுக் கவில்லை. நவீனரே சைவ வேடத்துள் மறைந்து நின்று அவருக்கு ஆதரவு தந்து கொண்டிருக்கின்றனர். அந்நாஸ்திகரின் விருப்பங்கள் செயற்படுதற்குச் செய்யப்படும் ஆரம்ப முயற்சியே நவீனரின் தமிழர்ச் சனைப் பிரசாரம். அதனைச் சைவ சமூகம் அறிக.

தி. க, தி. மு. க. க் கூட்டத்தினருக்குக் கடவுளிடத்து நம்பிக்கை வந்தது குறித்து தமக்கு மகிழ்ச்சி ஏற்பட்டதாக நவீனர் சொல்கிறார்.

**கடவுளை எங்கே காணமுடியும்?**

ஆனால் நவீனருக்குக் கடவுள் நம்பிக்கை எவ்வளவிருக்கிறது? முதலில் அதைப் பார்க்கலாம். ஈசுரபக்தி யென்ப தொன்று. மோக்ஷ மென்ப தொன்று. அவற்றுள் தெள்ளறிஞர் ஈசுர பக்தியையே விரும்புவர்; மோக்ஷத்தை விரும்பார். ஏன்? ஈசுர பக்தியே மோக்ஷத்துக்கு வித்து. ஆனால் அம்மோக்ஷத்தை யருள்பவன் ஈசுரன். அஃதவனது கடன். ஆகலின் அப்பக்தியே எல்லா வுயிர்களுக்கும் அவசியம். அதனை யுடைத்தாதலே அத்தெள்ளறிஞரா வார் தமக்குக் கடனாகக் கொள்ள வேண்டும். அக்கடனை வற்புறுத்தவே

1 'கூடு மன்பினிற் கும்பிட லேயன்றி
வீடும் வேண்டா விறலின் விளங்கினார்'

எனத் திருமுறை அவ்விரண்டையும் ஒப்பு நோக்கிப் பக்தியை விசேடித்தது. அது மோக்ஷத்தைத் தாழ்த்திக் கூறியதாகாது. ஆனால் ஈசுரன், பக்தி, மோக்ஷம் என்பன ஒன்று. சமூக சேவை யென்பது ஒன்று. அப்படி வைத்துக்கொண்டு அவ்விரண்டையும் ஒப்பு நோக்கினர் நவீனர். அவரும் நானும் போன்றார் கடவுளைக் காணாதவர். கடவுளொருவ ருளரென்பதை அவர் எப்படி ஏற்பர்? அவருள் மற்றவர் ஏற்பது எப்படியோ? கடவுள் ஒருவருளர், அவர் சிவபெருமானே என்ற உண்மையை உத்தேச லக்ஷண பரிக்ஷை என்ற முறையால் நிச்சயம் பண்ணின சைவ சமய நூல்கள். சைவர் அம் முறை பற்றி அவ் வுண்மையை ஏற்று வருகின்றனர். ஈசுரனை நேரிற் காண்பதற்கு முதன் முதல் வேண்டப்படுவது அந் நிச்சய புத்தியே. நவீனருக்கு அம் முறையும், அம் முறையில் உளனென நிச்சயிக்கப்பட்ட ஈசுரனும் வேண்டாம். அவர்

'வேத சாத்திரங்களை — புராணங்களைப் படிப்பதனால் கடவுளைக் காண முடியாது. இயற்கையிலேதான் கடவுளைக் காணமுடியும் என்று கூறுகிறார் வால்டேர்'

(2—6—55 தமிழ் நாடு) — என்கிறார்.

வேத சாத்திர புராணங்களைப் படிப்பதனால் கடவுளைக் காண முடியாதென்று வால்டேர் சொன்னதை ஏற்றுக் கொண்டதனால் திருக்குறள் திருவாசக முதலியவற்றைப் படிப்பதனாலும் கடவுளைக் காண முடியாதென்று அவர் சொன்னவரானார். அவர்

'தமிழக வாழ்க்கையில் அறத்துறையில் திருக்குறளும், அருளியல் துறையில் திருவாசகமும் தலையாய நிலையில் இருக்கிறது' (26—8—55 தினமணி)

1 இப்புத்தகத்தில் 8-ம் பக்கம் பார்க்க

என்று பிரசங்கிப்பதெல்லாம் அலங்காரப் பேச்சே. ஈசுரன் கற்றவர் விழுங்குங் கற்பகக் கனி; கல்லா நெஞ்சில் நில்லான். திருக்குற ளுக்கு உரைகண்ட பரிமேலழகர் வேத சாத்திர புராணப் பயிற்சியால் வளர்ந்த அறிவை "ஆகம அறிவு" என்றும், அதற்குப் பயன் 'அவன் றுளைத் தொழுது பிறவியறுத்தல்' என்றுங் கூறினர்.

'தத்த மாற்றங்க ணிறுவிய சமயிகள் பலருங்
கத்து புன்சொலை வினவின ரவன்செயல் காணுர்
சுத்த வாதுள முதலிய தந்திரத் தொகுதி
யுய்த்து ணர்ந்திடு நீரரே யொருசிறி துணர்வார்'

என்றது கந்தபுராணமும். வால்டேர் கருத்து அதற்கு மாரு? ஆயின் அது கண்டனத்துக்கேயுரியது. ஆனுல் நவீனர் அதைத் தமக்குச் சாதகமாக எடுத்துக் காட்டினர். இவ்வுலகையே துன்பஞ் சிறிதுங் கல வாத இன்ப நிலய மாக்க வேண்டும்; மக்கள் அதனை ஆரத் துய்க்க வேண்டும்; அந்நாள் விரைவில் வருமாறு உழைப்பதே மக்களின் முன் னேற்றத்துக்கு உழைப்பதாகும் என்பது அவருக்கு ஆசையான பேச்சு.

'பக்தியின் மூலம் —அன்பின் மூலம் — தொண்டின் மூலம் ஏற்றத் தாழ்வற்ற ஏழ்மை இல்லாத — துன்பமே அணுகாத ஒரு சமுதாயத்தைக் காண்பது நமது கடமையாகும். அந்த லட்சிய உலகைக் காண்கின்றவரை ஓயாது — அயராது உழைத்தல் வேண்டும். துன்பம் இருக்கும்வரை — வறுமை சூழ்ந்துள்ள போது பட்டினி பாதிக்கும் பொழுது கடவுளை மறுத்துப் பேசுகின்ற சூழ்நிலை தான் வரும். ஆகையால் நாம் அருள் நெறியைப் பரப்பும் முன் அவர்களின் அவதியைப் போக்குதல் வேண்டும். நம்மைச் சுற்றியுள்ளவர்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துதல் வேண்டும் உண்ண உண வும் உடுத்த உடையும் அனைவருக்கும் கிடைக்கும்படி செய் தல் வேண்டும். அதுதான் நிர்மாணப் பணியாகும்'

(30—8—55 தினமணி)

என்ற அவரது பேச்சுக் காண்க. வேதோக்தமான ஈசுர நிச்சயம் அந்த லக்ஷிய வுலகைக் கனவென்று சொல்லும். ஆகலின் அவ்வீசுரனை ஒதுக்கிவிட்டு, இயற்கையிலேயே தான் காண முடியு, வால்டேராற் கூறப்பட்ட கடவுளைக் கொண்டாரவர். அக்கடவுளை வால்டேராவது கண்டாரா? பிறர் கண்டனராயின் அவருள் இரண்டொருவர் பெயரை யாவது சொன்னுரா? நவீனரும் எடுத்துக்காட்டினரிலர். அப்படி யொரு கடவுளிருந்தாலன்றே அவரைக் கண்டவரு மிருப்பர், அவர் பெயரும் வெளிவரும். நவீனர் அக் கடவுளையே கடவுளெனக் கொண் டிருப்பதால் உண்மையான ஈசுரனுக்கு அவருள்ளத்தில் இடமில்லா மற் போயிற்று.

இனிப் பக்தி யென்பதற்கு அவர் தரும் விளக்கம் யாது?

'பக்தி என்பது கடவுளுக்கு வழிபாடு செய்வதல்ல; பிரார்த்தனை செய்வதல்ல, ஏழைகளை காப்பாற்றுவதுதான் பக்தி. இதுதான் தமிழ் நாட்டின் மதம்'

(21—7—55 தமிழ் நாடு) — என்கிருரவர்.

**பக்தி, மோட்சம் வரும் வழிகள் எவை?** அதிலுள்ள இரண்டு 'தான்'களும் அவ் விளக்கத்தை வலியுறுத்துகின்றன. ஈசுரனோடு ஈசுர பக்தியும் அவருக்குப் போயிற்றென்பதை அவ்வாக்கியத்தாலறிக. ஏழைகளைக் காப்பாற்றும் விஷயம் பின்னர் ஆராயப்படும். இறுதியாக மோக்ஷத்தைப்பற்றி அவர் சொல்வதென்ன?

'மோட்சத்தைப்பற்றி இப்போது நாம் கவலைப்படவேண்டியதில்லை. மோட்சமும் பக்தியும் தானுகவே வரும்.'

(2—6—55 தமிழ் நாடு) — என்கிருரவர்.

அறியாமையிலிருந்து விடுபடுவதே மோக்ஷம். அந்த மோக்ஷங் கிடைக்கவில்லை யென்ற கவலை வேண்டாமா? என்ன அநியாயம் அறியாமையிற் கிடந்துழல வேண்டும் போலும். அதற்கேற்ற காலந் தானே இது? மோக்ஷம் பற்றிய கவலை இப்போது வேண்டாமென்ருல் பின்னை எப்போது வேண்டும்? மோக்ஷமும் பக்தியும் தாமாக வருமென்ரு ரவர். அங்ஙனமாயின் அவை அவருக்கும் எனக்கும் ஏன் வரவில்லை? உள்ளம் பண்படவில்லை யெனலாம். அதனைப் பண்படுத்துவது எமது முயற்சி. பண்பட்ட பின் அவை வந்தால் எமது முயற்சியால் அவை வந்தன என்றே சொல்லப்படும். அன்றியும்

'தமிழன் மோட்சத்திற்குச் செல்வதையே விரும்பாதவன். தமிழன் மீண்டும் மீண்டும் மானிலத்திலே பிறந்து சேவை செய்ய விரும்புகிறவன். தமிழனுடைய மதத்தின் வழியே வேறு. அவனுடைய நெறி அருள்நெறி...வாழ்வு நெறி...'

(21—7—55 தமிழ் நாடு) — என்கிருரவர்.

அதிலுள்ள 'செல்வதையே' 'வழியே' என்பவற்றின் ஏகாரத்தைக் கவனிக்க. விரும்பப்படாத பொருள் மோக்ஷமே யாகுக: அது தானுக வந்தாலும் உதைத்துத் தள்ளப்படும். பக்தியும் அப்படித் தான். 'வலிய வந்தவள் கிழவி' என்பது பழமொழி. தமிழன் மோக்ஷத்தை விரும்பானென்ருல் தமிழனுடைய மதத்தில் மோக்ஷமென்பது இல்லையென்பதுதான் முடிவு. 'மனித்தப் பிறவியும் வேண்டுவதே யிந்த மானிலத்தே' என்ருர் சைவாசிரியர். எதற்காக என்பதை அப் பாட்டிற் காண்க. அதற்காக அவர் புழுவாய்ப் பிறக்கவுஞ் சித்தம். ஆனல் நவீனராகிய தமிழர் அதற்காகப் பிறக்க விரும்பவில்லை, சேவை செய்வதற்காகப் பிறக்க விரும்புகிருர். அங்ஙனம் பிறப்பதற்கே தொழிலாகி இறக்கின்ற அவருக்கு ஐயோ! அன்றியும் அவர்,

> 'அருள் நெறி மோட்ச உலகிற்கு மனிதர்களை அழைத்துச் செல்ல ஆசைப்படவில்லை. அவ்வாறு கூறவுமில்லை. ஆனால் மனிதர்களிடம் ........ மோட்ச உலகைக் கொணரப் பாடுபடுகின்றது?
>
> (30—8—55 தினமணி) — என்கிறார்.

ஒரூரிலிருந்து இன்னோரூருக்கோ, ஒரு நாட்டிலிருந்து இன்னொரு நாட்டுக்கோ மனிதரைத்தான் அழைத்துச்செல்லமுடியும். மனிதரிடத்துக்கு ஒரூரையோ, ஒரு நாட்டையோ எப்படிக் கொணரமுடியும்? ஆகலின் நவீனரால் மோக்ஷவுலகைத் தமிழரிடங் கொணர முடியாதென்க. மேலும் மனிதரை மோக்ஷ வுலகிற்கு அழைத்துச் சென்றாலும், மோக்ஷ வுலகை மனிதரிடம் கொணர முடியாதென்க. மேலும் மனிதரை மோக்ஷவுலகிற்கு அழைத்துச் சென்றாலும் மோக்ஷ வுலகை மனிதரிடங் கொணர்ந்தாலும் மனிதருக்கு மோக்ஷங் கிடைத்ததென்பதே முடிவு. மோக்ஷத்துக்குச் செல்வதையே விரும்பாமல் சேவை செய்வதற்கே மீண்டும் மீண்டும் பிறக்க விரும்புகிற தமிழருக்கு மோக்ஷத்தைக் கொணர்ந்து கொடுத்தால் அவர் சேவை உருப்படுமா? மோக்ஷம் அவருடைய சேவையுள்ளத்தைக் கெடுத்துவிடுமே. ஆகலின் நவீனர் மோக்ஷத்தைத் தமிழரிடம் கொணராமலிருப்பதே உத்தமம். ஆனால் அவர் தமிழரை மோக்ஷத்துக்கு அழைத்துச் செல்லவோ, மோக்ஷத்தை அவரிடங் கொணரவோ மாட்டார். ஏன்? தமிழருடைய மதத்தின் வழியே வேறென்றாரவர். அவ் வழி தமிழரையும் மோக்ஷத்தையும் இயைப்பதில்லை. அது அவரை எந்தவுலகிற்கு அழைத்துச் செல்லுமோ? அல்லது அவரிடம் எந்த வுலகைக் கொணருமோ? ஆனால் அவருடைய மதத்தில் மோக்ஷமென்பதில்லையென்பது மாத்திரம் உறுதி. ஆகவே ஈசுரன், ஈசுரபக்தி, மோக்ஷம் ஆகிய மூன்று மில்லாதவர் நவீனர் என்பது சித்தித்தது. ஆகலின் அவரும் நாஸ்திகரே. நாத்திகம் அவரிடம் அந்தரங்கத்திலும் தி-க, தி-மு-கக் கூட்டத்தினரிடம் அந்தரங்கத்தோடு பகிரங்கத்திலும் இருந்து வருகிறது. வித்தியாசம் அவ்வளவே. ஆனால் கடவுளை வழிபடுக என நவீனர் பிரசங்கிக்கின்றனரே யென்ற சந்தேகம் நிகழலாம்.

> 'சிவபெருமான் செய்த தொழில் அத்தனையும் தமிழ் மொழியும் செய்திருக்கிறது.' (28—2—54 தினமணி) — என்கிறாரவர்.

சிவபெருமானை விடு, தமிழ் மொழியைக் கொள் என்று சொல்வதே அது. ஆகலின் அவர் கூறுங் கடவுள் தமிழ் மொழியே. தமிழ் மொழிக் கடவுள் பற்றிய விசாரம் பின்னர்ச் செய்யப்படும். தி-க, தி-மு-கக் கூட்டத்தினருக்கும் அம் மொழியே கடவுள். அக் கடவுள் வழிபாட்டில் அவருக்கு நம்பிக்கை வந்தது குறித்து நவீனர் மகிழ்வதில் வியப்பில்லை. 'Birds of the same feather flock together' என்ற ஆங்கில வசனத்தை அவர் மெய்ப்பிக்கின்றனர்.

'இன்றைக்கு எல்லா இளைஞர்களிடமும் தாய்மொழிப் பற்றும், நாட்டுப் பற்றும் வளர்ந்து வருகிறது. அவர்கள் கோவிலுக்கு வருவதில்லை. தமிழிலும் மந்திரம் சொன்னால் அவர்கள் கோவிலுக்கு வருவார்கள் என்று எண்ணித்தான் அப்படிச் சொன்னேன்.' (15—6—55 தினத்தந்தி)

என்கிறாரவர். சமயப்பற்று அவ்வரிசையிலில்லை. அதனால் இளைஞரிடம் சமயப்பற்று வளர்ந்து வரவில்லை யென்பது தெரிகிறது. அப்பற்றுக்கள் பிறப்பே பற்றி உளவாவன வாயினும் அறிவாராய்ச்சியோடு கூடினாற்றான் கனம் பெறும். அவ்விளைஞருள் சைவ சமயத்தைப் பிறப்புரிமையாகக் கொண்டவரு மிருப்பர். அவ்வுரிமை பற்றித்தானும் அவருக்கு அச்சமயத்திற் பற்றில்லை. பிறகு அது அச்சமய சாத்திர அறிவாராய்ச்சியோடு கூடுதலும், மதிப்புப் பெறுதலும் யாங்ஙனம்? ஆகலின் இக்காலம் நவீனருக்கு மிகவும் சாதகமானதுதான்.

**சமய நிலயங்களில் மொழிப்போராட்டம் நியாயமா?**

'தமிழ் வழிபாடு குறித்து எவ்வித எதிர்ப்பு இருந்தாலும் அஞ்சாது இறுதிவரை போராடுவேன்' (5—8—55 தமிழ்நாடு)

என்கிறாரவர். அப்போராட்டம் சாத்திர வரம்புக்குள் நின்று உண்மை காண வேண்டுமென்ற கௌரவ புத்தியோடு செய்யப்படுகிற வாதப் பிரதிவாதமான போராட்டமா? சில பல முருடரைத் துணை சேர்த்துக் கொண்டு செய்யப்படுகிற அடிதடிப் போராட்டமா? முதல்வகைதான் மனித தரங் கெடாத போராட்டம். சமய ஞானமும் சமயமானமுமுள்ள சைவமக்கள் அப்போராட்டத்தில் எதிர் நிற்க எப்போதுஞ் சித்தமாயிருக்கின்றனர். இப்போதும் அவர் புத்தக வடிவத்திலும், பத்திரிகை வாயிலாகவும், பிரசார மூலமாகவும் அத்தமிழ் வழிபாட்டை எதிர்த்து வருவது பிரத்தியக்ஷம். வென்றியும் அவர்க்கே யாம்.

'தமிழ் மொழி வழிபாட்டை எதிர்ப்பதனால் என்ன விபரீதம் உண்டாகப் போகிறது என்று கூறுவதற்கில்லை.......தாய் மொழிக்கு — கோயில்களில் — இடமில்லை என்று கூறுவது, மறுத்துப் பேசுவது ஆத்திரத்தைத் தான் தருகின்றது' (8—7—55 தமிழ் நாடு)

என்கிறார் நவீனர். அறிவாராய்ச்சியில் பலஹீன மிருந்தாலன்றி ஆத்திர முண்டாகாது. ஆத்திரக்காரர் தமக்கும் விபரீத விளைவை யுண்டாக்கிக் கொள்வர். ஆகலின் பிரசினைகளைத் தீர்க்கும் வகையில் நிதானமே வேண்டற் பாலது. அவ்வாத்திர வயப்பட்டே அவர் எதிர்ப்பவரை அச்சுறுத்துகின்றனர். ஒருக்கால் மனித தரத்தை விட்டுக் கீழிறங்க அவர் உத்தேசித்திருக்கின்றனரா? அவரோ தமிழ் மதத்தினர். ஆலயங்களோ சைவ சமய நிலயங்கள். ஒரு சமயத்தைச் சார்ந்தவர் இன்னொரு சமயத்தைச் சார்ந்த நிலயங்களில் ஆதிக்கஞ் செலுத்த

முயல்வது நியாயமா? தமக்கென எழுத்து மூலமான உரிமைச் சாசனம் ஒன்று மில்லாமலிருக்கும் போது முருட்டுப் பேர்வழிகளைச் சேர்த்துக் கொண்டு அவராதரவால் ஒருவருடைமையைப் பறிமுதல் செய்பவர் எத்தகையினராவர்? நவீனர் அத்தகையினரைப் பின்பற்றப் பார்க்கிருர். அடிதடிப் போராட்ட மென்பது அதுவே. லக்ஷியமும் உயரியதா யிருக்க வேண்டும். அதனை எய்துவிக்கும் நெறியும் நேரியதாயிருக்கவேண்டும் என்ருர் காந்தியார். நவீனரின் லக்ஷியமே உயரியதா? அன்ரு? என்பது இன்னும் விசாரத்திலிருக்கிறது. அதற்குள் நவீனர் அதை யடைவதற்கு அவ்விரண்டாம் வகைப் போராட்டத்திலிறங்கிக் கச்சைகட்டுவதும், எதிர்ப்பவரை என்ன விபரீதம் உண்டாகப் போகிறதோ எனக் கூறி அச்சுறுத்துவதும் என்ன தரம்? நவீனர் அப்போராட்டத்தில் வெற்றி பெற்ருல் சைவ சமய ஆலயங்கள் தமிழ் மதத்தினர் கைப்படும். அவ்வளவுதானே. சைவமக்களுக்குச் சைவ ஞானமில்லை, சைவ மானமில்லை, சைவபரிபாலன சாமர்த்திய மில்லை யென்ருல் அந்நிலயங்கள் அயலார் கைக்குப் போய்த்தான் தீரும். அவருக்கவை யில்லையென எண்ணித்தான் போலும்

'தமிழ் அரசியல் முதல் ஆலயம் வரை முழங்கத்தான் போகிறது' (5—8—55 தமிழ் நாடு)

என்று கூறித் தம் திடமான நம்பிக்கையை வெளியிடுகிருர் நவீனர். கூன்பாண்டியர் காலத்தில் அவ்வாலயங்களின் அவலநிலை சாமானியமா? ஆனல் சைவசமயத்துக்கு அதனல் சிறிது நஷ்டமுமில்லை. அச்சமயம் சநாதனமானது, சத்தியமானது, நிரந்தரமானது. முன்னைப் பிறப்புக்களில் தீவினை செய்த வுயிர்கள் அதன் பயனை நுகர வருங்கால் இன்பப் பொருள்கள் சிவபெருமானல் திரோபவிக்கப்படும். அம்முறையில் அச்சமயம் சிறிது காலம் மறைந்து நிற்கும். அன்று ஒரு சம்பந்தர் தோன்றி அச்சமயத்தை மீண்டும் பிரகாசிப்பித்தார். அக்காலைச் சமண மதத்தினர் போல் இக்காலைத் தமிழ் மதத்தினரும் சைவாலயங்களில் எது வேண்டுமானலுஞ் செய்க. ஆனல் மற்ரெரு சம்பந்தர் உதயமாவதற்கு அவ ராதிக்கம் ஒரு நிமித்தமாகும். அச்சம்பந்தர் விஜயமும் பெருமகிழ்ச்சிக்குரியது. வைகைக் கரையோ எப்போது மிருப்பதாயிற்று. அச்சமயம் மறுபடியும் பிரகாசிப்பதிற் சந்தேக மில்லை.

## 11

'தமிழ் மொழி வழிபாட்டை யாராலும் எக்காரணத்தைக் கொண்டும் எப்பொழுதும் தடை செய்யவே முடியாது. நாம் தமிழ் மொழியிலும் செய்யவேண்டுமென்று கூறுவதனலும் நாம் இரு சாராருக்கும் ஒற்றுமையை வளர்க்கப் பாடு படுகிரேம்' (8—7—55 தமிழ் நாடு)

என்கிருர் நவீனர். 'யாராலும்,' 'எப்பொழுதும்' என்பன அவர் கொண்டுள்ள தந்நம்பிக்கையைக் காட்டுகின்றன. அது கிடக்க. 'எக்காரணத்தைக்கொண்டும்' என்றும் அவர் சொன்னுர். அவ் வழிபாட்டை மறுக்குங் காரணம் அறிவுக்குப் பொருந்துவதாயிருந்தாலும் என்பது அதற்கருத்தம். அதனுல் அவருடைய பிடிவாத குணம் வெளியாகிறது. நியாயத்தை அவர் வெறுக்கிரு ரென்பதும் வெளி. அவரை ஈசுரன்ருன் திருத்த வேண்டும். என் முயற்சி பிறரையே பெரிதும் உத்தேசித்தது. ஆகலின் அது தொடர்ந்து நிகழும்.

**சம்ஸ்கிருதம், எந்த நாட்டுக்கு, எந்த மக்களுக்குச் சொந்தமான பாஷை?**

இனி அவ்விரு சாராருள் ஒரு சாரார் தமிழ ரெனத் தெரிகிறது. மற்ரெரு சாரார் யார்? ஒரு கூட்டத்தார் சம்ஸ்கிருதத்துக்குரியா ரெனச் சிலராற் சொல்லப்படுகின்றனர். அக்கூட்டத்தினர்தான் அச் சாராரா யிருக்கவேண்டும். அவர் ஆதி காலத்தில் மத்திய ஆசியாவில் வாழ்ந்தனர். அவருக்குச் சம்ஸ்கிருதம் சொந்த மொழி; பிறகு அவர் பாரதத்துட் புகுந்து அத்தேச மெங்கும் பரவினர்; அவரோடு அம் மொழியும் பரவலாயிற்று என்பது ஒரு வரலாறு. ஆங்கிலேயருக்கு ஆங்கிலம் சொந்த மொழி. உலக மெங்கும் அவர் பரவினர். அவரோடு அம்மொழியும் பரந்தது. ஆயினும் அம் மொழிக்குச் சொந்த நாடு இங்கிலாந்து. அதில் அம்மொழி இன்றும் இருந்து வருகிறது. சொந்த நாட்டை முழுக்கக் காலி செய்து விட்டு உலகிற் பிறவிடங்களி லெல்லாம் அது பரவவில்லே. ஆனுல் சம்ஸ்கிருதத்தின் ஆதி ஸ்தானமென்று சொல்லப்படுகிற மத்திப ஆசியாவில் சம்ஸ்கிருத வாசனைதானும் என்றுங் கிடையாது. அந்நிலம் அம் மொழிக்கு ஆதிஸ்தான மென்ற லெப்படி?

அக்கூட்டத்தினர் பாரதத்திற்போல மேலே நாடுகளிலுஞ் சென்று தங்கினரென்பதும் அவ்வரலாறு. ஆனுல் அந்நாடுகளிற் சம்ஸ்கிருதம் என்றுமே யிருந்ததில்லே. அம்மொழியை இங்கு வந்தவர் காப்பாற்றினர், அங்குச் சென்றவர் கை விட்டனர் என்ருல் அதற்குக் காரண மென்னே? அஃதில்லே, அதனுலும் மத்திய ஆசியா அம் மொழிக்கு ஆதி ஸ்தான மென்றல் தவறு.

அவ்விடத்தில் அக்கூட்டத்தினருள் ஒருவராவது தங்காமல் அனைத்து மக்களும் வெளியேறின ரென்பதும் அவ்வரலாறு. அதுவும் வெறும் பேச்சு. அங்கு இப்போதும் மக்கள் வாழ்ந்து வருகின்றனர். அவர் அப்பிரதேசத்துக்கு வந்தேறிகளுமல்லர். அவரிடம் சம்ஸ்கிருதமுமில்லே. அதனுலும் அம்மொழிக்கு அது ஆதிஸ்தானமென்ற லடாது.

பாரத தேசத்தில் மாத்திரம் அம்மொழியிருந்து வருகிறது. ஆயினும் அங்கு அதற்கென ஒரு மாகாணமுங் கிடையாது. எக்காலத்திலும் எக்கூட்டத்தினரும் அதைச் சொந்த மொழியெனக் கொண்டு தம் வீடுகளில் பேசினதில்லை; அதற்கும் சாமானிய மக்களுக்கும் வெகு தூரம். ஆனால் அவருள்பட எல்லா மக்களும் அவரவருடைய பிரதேச மொழிகளிலேயே என்றும் பேசி வருகின்றனர். அவையே அவருக்குச் சொந்தமான பேச்சு மொழிகள். பாண்டித்திய முடையவரே அவசியம் நேர்ந்த போது சம்ஸ்கிருதத்திற் பேசிக் கொள்வர். அவ்வுண்மையை

> 'ஆடவரில் உயர்ந்தவர், அரசர், புரோகிதர், தேவர்கள் சம்ஸ்கிருத மொழி பேசினர்கள். ஆடவரில் கீழ்வகுப்பினரும் பெண்கள் அனைவரும் பிராகிருதம் என்ற வட நாட்டு மக்களின் அக்காலத் தாய்மொழிகளில் பேசினர்கள்'
>
> (5—11—55 தென்றல்)

எனக் கூறி அப்பத்திரிகைக் கொள்கையினராகிய பன்மொழிப் புலவர் கா. அப்பாதுரை எம். ஏ., எல். டி. ஆமோதித்தார். ஆகவே சம்ஸ்கிருதம் பாரத தேசத்துக்குச் சொந்த மொழியே யெனவும், வந்த மொழியன் றெனவும் அறிக. [1]என் புத்தகத்திலும் அவ்விளக்கமுண்டு.

ஆனால் அம்மொழியும் அக்கூட்டத்தினரும் இத்தேசத்துக்கு வந்தேறிகளென மேலை நாட்டினர் சிலர் முதன்முதலாகச் சரித்திரம் எழுதினர். பின்வந்த அவரினத்தா ரெழுதியதும் அதுவே. இத்தேசத்தினரைப் பிரித்தாள வேண்டு மென்பதே அவர் நோக்கம். இத்தேசத்தவராகிய சரித்திரக் காரருங்கூட [2]கெதானு கெதிக நியாயமே பற்றி அவர் பின் சென்றனர். 'முதற் கோணல் முற்றுங் கோணல்' என்பது பழமொழி. வரலாற்று நூல்களெல்லாம் அப்படியே முடிந்தன. ஆகலினன்றே

'And what your European Pandits say about the Aryans swooping down from some foreign land snatching away the lands of the aborigines, and settling in India by exterminating them, are all pure nonsense, foolish talk! Strange, that our Indian scholars, too say amen to them; and all these monstrous lies are being taught to our boys! This is very bad indeed. In what Veda,

---

1 நான் எழுதிய "ஆலயங்களில் சம்ஸ்கிருத மந்திரங்களே வேண்டும்" என்னும் புத்தகத்தில்

2 கெதானு கெதிக நியாயம் = மீமாம்ஸா சாத்திரத்தில் கூறப்படுவது — (நியாயம் என்றால் திருஷ்டாந்தம்). ஒன்றையும் விசாரியாமலே ஒருவர் சென்ற வழியே மற்றொருவர் செல்லல் போன்ற ஓர் செறி.

in what Suktah do you find that the Aryans came to India from a foreign country? Where do you get the idea that they slaughtered the wild aborigines? What do you gain by talking such nonsense?'

என இடித்துக் கூறி அச் சரித்திரக் காரரின் யோக்கியதையை அம்பலப் படுத்தினர் விவேகானந்தர். ஆயினும் சரித்திரத் துறையை அவர் வெறுத்தாரெனச் சொல்ல முடியாது. துவேஷ புத்தியுடையார் கையில் அத்துறை மிகுதியும் அகப்பட்டது. அவர் அப்புத்தியைப் பரப்பு வதற்கு அதைப் பெருஞ் சாதகமாக்கிக் கொண்டனர். நாட்டை உருக் குலைப்பன அவரெழுதிக் குவிக்கும் அபத்த சரித்திரப் புத்தகங்களே. அவற்றைத் தொலைக்க வேண்டுவது தெள்ளறிஞரின் கடன். விவேகானந்தர் அக்கடனை யாற்றினர். மேலும் அச்சரித்திரப் புத்த கங்களோ டியைந்த சாத்திரப் பகுதிகளே உண்மை, மற்றப் பகுதி களெல்லாம் பொய் யென அத்துவேஷிகள் பிரசங்கிக்கவுந் துணிந்து விட்டனர். அது 'ராட்டு வருகிறது, தேரை விலக்கு' என்பது போலி ருக்கிறது. சம்ஸ்கிருதத்தின் வரலாற்றையும் தரத்தையுஞ் சாத்திரம் அன்றே அளந்து நிச்சயித்துப் போற்றியுள்ளது. நிரந்தரமான உண் மையைக் கூறுவதே சாத்திரத்தின் இலக்கணம். ஆகலின் அதனோடு இயைந்துள்ள வரலாற்றுப் பகுதியே கொள்ளத் தக்கது. பிறவெல் லாந் துச்சமெனத் தள்ளவே படும்.

தமிழ் மொழியே திராவிட பாஷை யெனப்படும். திராவிட மாபாடியம், திராவிடப் பிரகாசிகை யென்ற நூற் பெயர்கள் காண்க.

'எவ்வினையு மோப்புதலாற் றிராவிட மென் றியல் பாடை' என்றது காஞ்சிப்புராணம். சம்ஸ்கிருதமோ ஆரிய மெனப்படும்.

'ஆரியமும் தமிழும்'

என்றது திருமுறை. தமிழரும் அவ்விரு மொழிகளுக்கும் உரியராகலின் திராவிடரும் ஆரியரும் ஆவர். ஆனால் தமிழ் மன்னர் ஆரியப்படையை வென்றாரெனச் சங்க நூல்களில் அங்கங்கே வரும். அவ்வாரியப் படை யாவது யாது? அதிலுள்ள ஆரியரென்பது தமிழ்ச் சொல். தீயவ ரென்பது அதற் கருத்தம். [1] ஆர்ய: என்பது சம்ஸ்கிருதம். நல்லவ ரென்பது அதற்குப் பொருள். தீயவ ரென்ற பொருளும் அதற்குண்டென அம்மொழி கூறவில்லை. ஆனால் தமிழ் நிகண்டு அவ்விரு சொல்லையும் ஒன்றாக்கி அதற்கு அவ்விரண்டு பொரு ளையுங் கூறி விட்டது. ஆரியப்படை யென்பது தமிழர் கூறிய தொடர். யாருமே தம் பகைவர் தம்மவரே யாயினும் அவரைத் தீயவரென்ப

**ஆரியர் என்ற பதத்தின் பொருள்**

1 ஆர்ய:— ஆர்யஹ என்று உச்சரிக்க வேண்டும்.

தியல்பு. அப்படியே தமிழர் தம் பகைவரின் படையை ஆரியப்படை யென்றனர். ஆகலின் ஆரியப்படை யென்பதிலுள்ள ஆரியர் என்ற தமிழ்ச் சொல்லும், ஆரிய பாஷை யென்பதிலுள்ள ஆரிய : என்ற சம்ஸ்கிருதச் சொல்லும் வெவ்வேருத லறிக.

**தொல்காப்பியரும் சம்ஸ்கிருதமும்**

தொல்காப்பியம் இரண்டாயிரம் வருடங்களுக்கு முந்திய தென்பது ஒரு முடிவு. அது எத்தனை யாயிர வருடங்களுக்கு முந்திய தாயினு மாகுக; அதற்கு முந்தியே தமிழகத்திற் சம்ஸ்கிருதமுண்டு. அது தமிழகத்திற்கு வந்த மொழியென அந்நூல் சொல்லவில்லை. அம்மொழிச் சொற்களைத் தமிழ் நூல்களில் வழங்குவதற்கு அதுவே விதி யும் வகுத்தது. அச்சொற்களைத் திசைச்சொற் கூட்டத்திலும் அது சேர்த்திலது. அம்மொழி வேதமும் அந்நூலில் இடம் பெற்றது. அங்ஙனமாகப் பின்வந்த சங்க நூல்களும் அம்மொழி யின் சம்பந்தத்தையும், சகாயத்தையும் பெற்றனவே யென்பதிற் சந்தேகமில்லை.

தொல்காப்பியம் என்ற சொல்லுக்கு இலக்கணங் கூற வந்த ஆசி ரியர் அதனைக் கூறியதோ டமையாது ஐந்திர முதலிய வடசொற் போல வந்த தென்றுங் கூறி விளக்கினர். சங்கப் புலவர் தாம் ஆக்கிய நூல்களின் பொருளை விளக்குவதற்குத் தமிழ்ச் சொற்களே போது மானவையா யிருந்தன. ஆகலின் அந்நூல்களில் சம்ஸ்கிருதச் சொற் கள் அதிகங் காணப்பட்டில. அச்சொற்களைப் புகுத்தியே நூல்களியற்ற வேண்டு மென விதியு மில்லை. ஆனல் அவசியம் நேர்ந்த போது தொல்காப்பியரும் அச்சொற்களை யாண்டார். எழுத்ததிகாரம், சொல் லதிகாரம், பொருளதிகாரம் என்பவற்றிலுள்ள அதிகார மென்பது சம்ஸ்கிருதம். ஆகவே சங்க நூல்களில் அச்சொற்கள் குறைந்திருப் பது கொண்டு அம்மொழி வந்த மொழி யென்பது பொருந்தாது.

**மக்கள் வாழ்வில் நூல்களின் இயைபு**

நாத்திகம் முதற் சைவசித்தாந்தம் வரையுள்ள சர்வ சமயங்களுக் கும் ஆகரமாயிருப்பது சம்ஸ்கிருத மொன்றே. தொல்காப்பியர் முத லிய முற்காலப் புலவரும், சற்றுப் பின்வந்த புலவரும் அம்மொழியில் விற்பன்னராகி அதன் வாயிலாய்ச் சைவசமய ஞானமும் ஆசார அனுட்டானங்களும் உடை யவராய்த் திகழ்ந்தனர். அவரை மதித்து அவர் வழியிற் சென்றவரே தமிழ் மாத்திரங் கற்றவ ரும், சாமானியரும். அதனல் அவரிடமும் அச்சமய ஆசார அனுட் டான அபிமானங்கள் உளவாயின. தமிழிலும் சைவ சமய நூல்கள் வேண்டு மென்ற அளவுக்குத் தமிழர் சம்ஸ்கிருதத்திலிருந்து விலகி நின்ற ரல்லர். அக்காலத்திற் சமயப் பிரவர்த்தக நூல்கள் எந்தப்

பிரதேச பாஷையிலுங் கிடையா. தமிழிலும் அப்படியே. அதை நவீனரும் அறிவர். ஆனல் அவர் அதற்குக் கூறும் சமாதானம் வெகு விந்தை.

'சங்க காலத்தில் சமயத்தையும், கடவுள் கொள்கையைப் பற்றியும் இலக்கியங்களில் கூறவில்லையே என்று கேட்கலாம். அன்று மக்கள் வாழ்வோடு வாழ்வாகக் கடவுள் கொள்கையும் சமய உணர்ச்சியும் வளர்ந்தது. சமயத்தைப் பற்றியும் கடவுள் கொள்கையைப் பற்றியும் எடுத்துக் கூற வேண்டிய அவசியமில்லை. அன்று சமுதாயம் தவருன பாதையில் போகவில்லை. அதற்காகச் சந்தர்ப்பம் வந்த இடங்களில் எல்லாம் சொல்லாமலும் விடவில்லை.' (28—2—54 தினமணி)

என்பது அச் சமாதானம். மக்களின் வாழ்வோடு வாழ்வாக இயைந்து வளராத விஷயங்கள்தான் நூல்களில் இடம் பெறு மென்பது என்ன நியாயம்? சங்க நூல்களில் காதலும் வீரமும் ஒழுக்கமுமே மிகுந்து இடம் பெற்றுள்ளன. அதனல் அக் காலத்தில் அவை மக்களின் வாழ்வோடு வாழ்வாக இயைந்து வளரவில்லை,

'அரேபியா சீர்கெட்டிருந்தது. நரபலி கொடுத்தல், குழந்தைகளைக் கொல்லுதல் பெண் பிறந்துவிட்டால் அதைக் கொல்லுதல், அவற்றின் மாமிசத்தைப் புசித்தல், மது உண்ணுதல் போன்ற அநாகரிகம் காட்டுமிராண்டித்தனம் தலை விரித்தாடியது. மக்கள் மிருக வாழ்க்கை நடத்தினர். கணவன் மனைவி என்ற நியதியே இல்லை. 360 கடவுள்களிருந்தன. அத்தகைய அநாகரிகம் சூழ்ந்திருந்த அந்த நேரத்தில்தான் நபி தோன்றினர்.' (10—11—55 தமிழ்நாடு)

என்று நவீனர் வர்ணித்துள்ள அரேபியாவைத் தமிழகம் ஏறத்தாழ ஒத்திருந்தது என்றுதானே கொள்ளவேண்டும். அம் முடிவுக்குக் கொண்டு செல்கிற அச் சமாதானம் சிறிதும் பொருந்தாது. மேலும் எச் சமயமும் அதற்குரிய பிரமாண நூல்களின் சகாயமின்றி மக்கள் வாழ்வில் இயையவேமாட்டாது. இயையு மென்பதற்கு ஒரு திருஷ்டாந்தமு மில்லை. அக்காலத் தமிழரின் வாழ்வில் சைவ சமயம் இயைந்து வளர்ந்தது உண்மை. அதை அச் சமாதானத்தில் நவீனரும் ஒத்துக்கொள்கிருர். ஆனல் அவ் வளர்ச்சிக்கு உறுதுணையாய்ச் சம்ஸ்கிருத வேத சிவாகமங்களே யிருந்துவந்தன. ஆனல் அதை உடன்பட அவர் மறுக்கின்றனர்.

'மிகப் பழமையானது சைவம். சாத்திரம் சமய சரித்திரம் சந்தர்ப்ப வாதங்கள் இவைகள் இடையே ஏற்பட்டன.
(16—6—55 தமிழ்நாடு)

என்கிருரவர். இங்கே சாத்திர மென்றது அவ் வேத சிவாகமங்களே. மிகப் பழமையானதென அவர் கூறுஞ் சைவத்துக்குத் தமிழிற் பழமையான பிரமாண நூல் கிடையாது. அவ் வேத சிவாகமங்களே இடையில் ஏற்பட்டனவெனக் கூறி விலக்குகிருரவர். அதனல் அச் சைவம் பிரமாண சாத்திர சூனியமான சமய மென்பது புலனுகிறது. அப்படிச் சாத்திரத்துக்கு முந்திய அதாவது சாத்திர மில்லாத சமயம் எங்குமே என்றுமே யிருக்க முடியாது. காட்டுமிராண்டிகள் காட்டு மிராண்டித் தெய்வங்களே வணங்குவார்களே, அதை அவர் எண்ணிக் கொண்டார் போலும். சைவம் எந்தக் காலத்திலும் அப்படி யிருந்ததில்லே. காட்டு மிராண்டி வணக்கமும் சாத்திரத்திற் கீழ்ப்படியாகக் கொள்ளப்பட் டிருப்பதை அவர் தெரிக. இனி, அவரே

'இடைக் காலத்தில் சமயம் மக்களின் வாழ்வோடு வாழ்வாகக் கலக்காத காரணத்தால்தான் சமய வளர்ச்சி மக்களிடம் குறைபட்டது. மீண்டும் அது புத்துணர்ச்சி பெற வேண்டுமானல் மக்களின் வாழ்வோடு வாழ்வாகக் கலக்க வேண்டும். அதற்காகத்தான் இலக்கியங்கள் உண்டாகின'
(28—2—54 தினமணி)

என்கிருர். சமயம் இடைக்காலத்து மக்களின் வாழ்வோடு வாழ்வாகக் கலத்தற்கு இலக்கியங்களின் துணே அவசியமென்ருல், சங்ககாலத்து மக்களின் வாழ்வோடு வாழ்வாகக் கலத்தற்கும் அத்துணே அவசியமே. அப்போது துணே புரிந்த இலக்கியங்கள்தான் அவ்வேத சிவாகமங்கள்.

**7-ம் நூற்ருண்டில் சைவ சமயத்தின் நிலே. சமய நூல்களின் அவசியம்**

இடைக்காலத்தில் தமிழ்ப் புலவருக்குச் சம்ஸ்கிருதப் பயிற்சி குறைந்தது. இல்லாமற் போயிற் றென்று கூடச் சொல்லிவிடலாம். அதனல் அம்மொழிச் செல்வமாகிய மந்திர தர்க்கங்களும், அவற்ருல் நிர்ணயிக்கப்பட்ட சைவ சமயமும் அவரிடமிருந்து விடைபெறலாயின; அவரும் ஏனேத் தமிழரும் சமயத் துறையில் எடுப்பார் கைப்பிள்ளேகளாயினர்; சமண பௌத்தங்கள் தமிழகத்தை விழுங்கிக் கொண்டன. அவ்வுண்மை வெகு சீக்கிரத்தில் ஜைன சமயம் மேம்பட்டு வருவதாயிற்று. அரசர்களாலும், மக்களாலும் பெரிதும் போற்றப்படும் நிலேயை எய்தியது. இதற்குரிய காரணங்கள் பல. இவர்கள் மந்திர சக்தியிலும் தர்க்கத்திலும் சிறந்து விளங்கினர்கள். ஆகவே மற்ற வைதீக மதத்தை எளிதில்

வெற்றிகொண்டனர். அரசர்களும்,.........இவர்கள் செய்துவந்த தர்க்கத்தைக் கண்டு பிரமித்து, இவர்கள் சமயமே உயர்ந்தது என்ற முடிவுக்கு வந்தனர். நாட்டு மக்களும் இவர்களுடைய ஒழுக்கத்தையும், செய்யுட்களையும் பார்த்து, இவர்கள் சமயம் சிறந்ததுதான் — என்று கண்டனர். கி. பி. 7–ம் நூற்றாண்டில் ஞான சம்பந்தரும் அப்பரும் விளங்கிவந்த காலத்தில் சமண சமயத்தின் நிலை இவ்வாறாக இருந்தது' எனத் தினமணிக் கதிரில் இலக்கிய மண்டபம் என்ற கட்டுரையில், 'பண்டைத் தமிழ்நாடும் சமயமும்' என்ற தலைப்பில் எஸ். வையாபுரிப் பிள்ளை கூறுவதாலும் அறியப்படும். சைனத்துக்குக் கூறியது பௌத்தத்துக்கும் ஆம். இந்த நிலையில் தமிழிலும் பிரபல சைவ நூல்கள் உளவாதல் அவசியமாயிற்று. தேவார திருவாசகாதிகளுங் கிடைத்தன. இக் கருத்தைச்

'சங்ககாலத்திற்குப் பிறகுதான் சமயம் மக்களிடம் தளர்ச்சி கண்டது. எது குறைவு கண்டதோ அதனை நிறைவேற்ற வேண்டிய அவுசியமேற்பட்டது. மக்களிடம் குறைந்து கிடந்த சமய உணர்ச்சியை சரிப்படுத்துவதற்காகத்தான் இடைக்காலத்தில் அதிகமான சமய நூல்கள் உண்டாகத் தொடங்கின' (28—2—54 தினமணி)

எனக் கூறி ஏற்கிறார் நவீனரும். பாரத தேசம் முழுவதற்கும் சம்ஸ்கிருதம்போற் சைவமும் பொதுவானது. புலத்துறைகளில் பரிபாஷைகள் (Technical Terms) இருப்ப தியல்பு. சமயத்துக்கு அது விலக்கன்று. ஆனால் சைவ சமய பரிபாஷைகள் அனைத்தும் சம்ஸ்கிருதம். ஆயினும் எந்தப் பிரதேச மொழியிலுள்ள சைவ நூல்களிலும் அச் சொற்களோ, தொடர்களோ, எடுத்தாளப் படுவது தள்ளப்படாததொன்று. ஆகலின் தமிழ்ச் சைவ நூல்களிலும் அவை எடுத்தாளப்பட்டன. அவற்றை நிராகரித்தால் தமிழ்ச் சைவர் நஷ்டமடைவர். அவற்றைத் தமிழிற் பெயர்த்துக் கொள்ளலாமெனின், அது போதாது. அவற்றிற் பயிற்சியிருக்கு மளவிற்கு வேத சிவாகமங்களின் நறுமணத்தையாவது ஏற்கமுடியும். சைவ நூல்களை நுணுகி யாராய்வார் அவ் விலாபத்தை யுணர்வர். தமிழ் இசுலாமியரும் சமய விஷயத்தில் அரபு மொழிக் குரானிலுள்ள பல பரிபாஷைகளிற் பயின்று மேம்படுவதை இன்றுங் காணலாம். மேலும் சிவபிரானுக்குரிய நாமங்களிற் பல சம்ஸ்கிருதம். சம்ஸ்கிருதம் என்ற காரணத்தால் அவற்றை விட்டுவிடுவது சைவப் புத்தியன்று. ஆனால் நவீனர் அக் கலப்பால் தமிழ் கெட்டுவிட்டதென்கிறார். அவரிடம் சைவப் பற்றில்லை. அதுதான் அவர் அப்படிச் சொல்லக் காரணம்.

தமிழுக்குச் சைவாசிரியன்மார் செய்த வுபகாரம் அளப்பரிது. தனித் தமிழ் விருப்பினராகிய நவீனர் அவ்வுபகாரத்தில் இம்மியளவு தானும் அம்மொழிக்குச் செய்யவில்லை, செய்யவுமாட்டார். அன்றி அவரெழுத்திலும் பேச்சிலுமுள்ள தனித் தமிழ் தமிழுக்குக் கேடாகவு முடியும். எப்படி? தனித் தமிழ் நூல்களே பெருகித் தமிழகம் அவற்றையே பயின்று அவற்றிலேயே பற்றுக் கொள்ள வேண்டு மென்பது அவருக் காசை. எதிர்காலத்தில் அது நிறைவேறுமென வைத்துக் கொள்ள லாம். இன்று வரை வந்துள்ள பல தமிழ் நூல்களில் பல சம்ஸ்கிருதச் சொற்கள் கிடக்கின்றன. அவற்றிற்கு எதிர்காலத்தில் பொருள் தெரிய முடியாது. அவை யிறந்து படும். படவே, அந் நூல்களின் கதி என்னும்? திருக்குறளை யெடுத்துக்கொள்க. அதில் ஆதிபகவன், உலகு, மனம், குணம், அமிழ்தம், பூசனை, தானம், தவம், கணம், தெய்வம், மங்கலம், சமன், சோகாப்பர், பாவி, வித்தகர், ஆசை, காரணம், கோடி, காமுறுதல், நாமம், கருமம், அதி, தேயம், ஆசாரம் மணி, பாக்கியம், யாமம், முகம் முதலாகப் பல சம்ஸ்கிருதச் சொற்கள் வருகின்றன. எதிர்காலத்தில் அத்தனையும் வழக்கிழக்கு மாதலால் அந்நூல் சீவிக்குமா? மாட்டாது. அப்படி அழிந்து படும் நூல்கள் பலவாத லறிக. இன்னும் பல கேடுகள் உள. மற்றென்று விரித்தல் என்னுங் குற்றம் வருமே யென் றஞ்சி அவற்றை யிங்கே விடுகிறேன். ஆகவே தனித் தமிழ் விருப்பம் தமிழுக்கு ஆக்கமே யளியா தென்பது திண்ணம். தமிழ்ப் பெருநூல்களைக் கொன்றொழிப்பதற்கே அவ்விருப் பம் புறப்பட்டிருக்கிறது. அதனாற் பெரிதும் பாதிக்கப்படுவன சைவத் தமிழ் நூல்களே. சைவ சமூகம் அதை உணருமா?

**தமிழ் நூல்களில் சம்ஸ்கிருதக் கலப்பு அவசியமா?**

மேலும் அவ்விருப்பினர்,

> 'ஒரு மொழி பேசும் மக்களிடம் வேற்று மொழியாளர் செல்வாக்குடன் தங்கி வாழும்பொழுது அவர்தம் சொற் களும் இலக்கிய இலக்கண வழக்காறுகளும் பிறவும் அவர்கள் தங்கியுள்ள நாட்டில் கலத்தல் இயல்பு'
>
> (14—8—55 தமிழ்நாடு)

என்கிறார். அக் கலப்பு இயல்பாயின் அதை யாராலுந் தடுக்க முடி யாது. அச் செல்வாக்குப் போனபிறகும் அக்கலப்பு எளிதிற் போகாது. எந்தப் பேச்சு மொழியிலும் அஃதப்படித்தான். ஆயினும் அதைப் போக்க வேண்டு மென்பது நியாயமாகலாம். ஆனல் ஒரு மொழியிலுள்ள சில பல கருத்துக் கள் பிற மொழிகளுக்குக்கொண்டுவரவும்படும். அக் கருத்துக்களோடு அவற்றுக்குரிய அம் மொழிச் சொற்களுந் தொடர்களுஞ் சேர்ந்து வரும். அவற்றைச் செல்வாக்கினல் வந்தனவென்று சொல்லமுயாது.

**தமிழ்ச் சைவ நூல்களில் சம்ஸ்கிருதக் கலப்பை அனுமதிக்கலாமா?**

அக்கருத்துக்களைத் தம் சொந்த மொழிகளிலாக்கிக்கொண்டு அவற்றின் மூலச் சொற்றொடர்களைத் தள்ளிவிடவேண்டு மென்பாரவர். சொந்த மொழிகளில் ஆக்கிக் கொள்வது தவறன்று. அச் சொற்றொடர்களைத் தள்ளிவிட வேண்டுமென்பதுதான் தகாது. ஏன்? ஒருவருடைமையைத் தம்மதாக்குதற்குப் பொய்ப்பத்திரங்களைச் சிருட்டித்தல், உள்ள பத்திரங்களுக்குத் தப்பருத்தங் கூறுதல், அவ்வுள்ள பத்திரங்களையே பொய் யென்றல், கைக்கூலி கொடுத்துக் கள்ளச் சாட்சிகளைத் தயார் செய்தல், சொல்வன்மை மிக்க வக்கீல்களைத் தமக்கு வழக்காட நியமித்துக்கொள்ளுதல் முதலிய தீங்குகளைச் செய்யும் வன்கண்ணர் பலர். அதேமாதிரி அயல் மொழியிலிருந்து வந்த அக்கருத்துக்களின் வரலாறு காலக்கிரமத்தில் மறையக்கூடும். பிறகு அவை தத்தம் மொழிகளுக்கே உரியவென அவ்வம் மொழிகளில் வெறி கொண்டார் கூறிச் சாதிப்பர். அம்மட்டோ? அவை எந்த மொழியிலிருந்து வந்தனவோ அந்த மொழிக்கே தத்தம் மொழிகளிலிருந்துதான் போயினவென்று கூறி வாதிக்கவுஞ் சாதிக்கவுந் துணிவாரவர். அவர் மற்றொரு வகை வன்கண்ணர். தமிழ் வெறியே நவீனரை அன்னராக்கிற்று. வரலாற்று நூல்களிற் பல அம்முறையிற்றான் எழுதப்பட்டுக் கிடக்கின்றன. நாட்டில் தரங்கெட்டு மனஸ்தாபம் பெருகுவதற்கு ஏதுவாவன அவையே. அவ் வேதுவைத் தடைசெய்ய வேண்டும். அதற்காக அம்மூலச் சொற்றொடர்களையும் எடுத்தாளல் அவசியமாயிற்று. அம் முகத்தால் அக் கருத்துக்கள் அவற்றுக்குரிய மொழியிலிருந்து கொள்ளப்பட்டனவென்பதைச் சம்மதித்தபடியாம். அதற்காகவே தொல்காப்பியர் தம் நூலில் வட சொற்களுக்கு விதி வகுத்து அவ்விதியினூறே அவற்றைத் தமிழ் நூல்களில் வழங்க அனுமதி தந்திருக்கிறுர். தமிழ் நூல்களில் திசைச் சொற்களும் வந்துள்ளன. அதற்குத் திசைகளிலுள்ளாரின் செல்வாக்குக் காரணமன்று. வாணிகம், சமீபம் முதலியவற்றின் தொடர்பால் அவை தமிழகத்தில் வந்து வழங்கும்; தமிழ் நூல்களிலும் இடம் பெறலாம். அப்போது அதற்கும் விதிவேண்டும். ஆகலின் அவற்றின் வழங்கற் பாட்டிற்கும் அவர் விதி கூறிவைத்தார். அவர் அகத்திய முனிவரின் சீடர், அதனல் சைவசமய ஞான சீலராய் விளங்கினர். அச் சைவ மகரிஷி அவ்வனுமதி தந்ததன் அவசியமும் அருமையும் தெள்ளறிஞர்க்கே புலனுகும்.

அவ் விருப்பினர்

'வடவர் ஆதிக்கமும் வடமொழி யாதிக்கமும் தமிழருடைய சமயத்துறையிலும் சமுதாயத் துறையிலும் இலக்கியத் துறையிலும் பல நூற்றுண்டுகள் நுழைந்து நிலைத்த காரணத்தால் பழந்தமிழ்ச் சொற்கள் பல பேச்சு வழக்கிலும்

நூல் வழக்கிலும் பயன்படுத்துவார் இன்றி இறந்துபட்டன. இங்ஙனம் இறந்துபட்ட சொற்கள் கணக்கில. இன்று தமிழன் பேசும் ஒவ்வொரு அயற் சொல்லும் ஒரு பழந்தமிழ்ச் சொல்லை வழக்கொழியச் செய்துவிட்டது."

14—8—55 தமிழ்நாடு

என்கிறார். ஆதிக்கம் பற்றிய பகுதி முன் விசாரிக்கப்பட்டு விட்டது. தொல்காப்பியரே தமிழுக்கு முதற் பெருங் காவலர், தலையாய பொறுப்புணர்ச்சி யுடையவர். அயற் சொற்கள் தமிழிற் கலந்து தமிழ்ச் சொற்களை வழக்கிழக்கச் செய்யு மென்பது உண்மை யானால் அக் கலப்புக்கு மேற்கூறியபடி அவர் விதி வகுத்திருக்க மாட்டார். ஆகையால் அக் கலப்பு எச்சொல்லையும் வழக்கிழக்கச் செய்யா தென்பது திண்ணம். அதற்கு மாருக அயற் சொற்கள் தம் கருத்துக்களையுந் தமிழிற் சேர்த்து அம் மொழியை வளப்படுத்து மென்க. சில தமிழ்ச் சொற்கள் வழக்கிழந்தன வாயின் அதற்குக் காரணம் வேறு. அயற் சொற்களால் அவை வழக்கிழந்தன வென்ற அவர், ஒன்றிரண்டு சொற்களையாவது எடுத்து ஆராய்க. பிறகு நானும் அவைபற்றி விசாரிப்பேன்.

**வடமொழிக் கலப்பால் பழந்தமிழ்ச் சொற்கள் இறந்துபட்டன. சரியா? தப்பா?**

அவர் இந்தி நுழைவை யெதிர்ப்பவர். அதற்கவர் கூறுங் காரணங்கள் இரண்டு.

"ஒரு மொழி நுழைவால் அவன் (தமிழன்) மொழி பாதியளவு அழிந்துவிட்டது. அவனது பழைய பண்பாடும் இலக்கியச் சிறப்பும் மாசுண்டன. இவ் விரண்டு காரணங்களால்தான் தமிழன் இந்தி நுழைவை எதிர்க்கிறான்" 14—8—55 தமிழ்நாடு

என்றது காண்க. அவர் கூறிய ஒரு மொழியாவது சம்ஸ்கிருதம். அது செத்த மொழி யென்பது அவர் கொள்கை. அது தமிழைப் பாதியளவுதானும் எப்படிச் சாகடிக்கும்? செத்த பாதி போகச் சாவாத பாதித் தமிழுக்குத்தான் தொல்காப்பியர் இலக்கணம் செய்தனரோ? பாதி செத்துப் பாதி சாவாத தமிழைச் செத்த மொழி யென்பதா? சாவாத மொழி என்பதா? செத்த பாதி இது சாவாத பாதி இது என்பதை எப்படிக் காண்பது? இப்போது பத்தாயிரந் தனித் தமிழ்ச் சொற்களே சாவாம லிருக்கின்றன என்று வைத்துக்கொண்டால் செத்துப்போன தனித் தமிழ்ச் சொற்களும் சற றேறத் தாழ அவ்வளவுதானே இருக்கவேண்டும்? அவற்றிற்கு அவரால் ஜாபிதாக் கொடுக்கமுடியுமா? முடியா தெனின் சாவாத சொற்

**இந்தி நுழைவை எதிர்ப்பதன் காரணம் என்ன?**

களைப் பாதியளவென அவர் எப்படிக் கண்டனர்? தமிழுக்கு அயலான கருத்துக்களுக்குத் தமிழிற் புதுச் சொற்களைச் சிருட்டிக்கும் முயற்சி நடந்துவருகிறது. கட்டிய சொற்க ளென்பன அவையே. அவற்றைக் "கட்டிய சொல்லாமாயிற் செய்யுள் வழக்காமா றில்லை" எனச் சேனு வரையர் கூறிக் கடிந்தார். ஆகலின் செத்த தமிழ்ச் சொற்களின் இடத்தை அவை நிரப்பமாட்டா வென்க. அவ் விருப்பினர்தானே

"இருநூறு ஆண்டுகளாக இருந்துவரும் ஆங்கிலத்தை இந்திக்குப் பதிலாக இருக்கச் செய்தலே அறிவுக்குப் பொருத்தமாகும்" 14—8—55 தமிழ்நாடு

"நாம் செய்த நல்வினைப் பயனுல் உலக அறிவு வளரத்தக்க ஆங்கில ஆட்சி ஏற்பட்டது, ஆங்கிலம் கற்ற பலபேர் உல கத்தையுந் தன்னையும் அறியலாயினர்" 13—11—55 தமிழ்நாடு

எனக் கூறி ஆங்கிலத்தையும், பாரத தேசத்தில் அது புரிந்த ஆட்சி யையும் தூமலர் தூவித் தோத்தரிக்கிறுர். சம்ஸ்கிருதத்தைச் செத்த மொழி யெனச் சொல்லிக்கொண்டு அதனுல் தமிழ் பாதியளவு செத்து விட்ட தென்றும் இந்தி நுழைவால் மற்றப் பாதி யளவும் செத்துப்போ குமே யென்றுந் துயரப் படுகிற அவரது ஆங்கில மோகத்தின் அளவு தான் என்னே! சாவாத பாதித் தமிழும் அவ் வாங்கிலத்தால் மட்டுஞ் சாவாதோ? தமிழுக்கு ஆங்கிலம் சம்பந்தியா? பாரதியார் "ஆங்கி லப் பயிற்சி" என்ற தலைப்பின் கீழ் ஒன்பது பாடல்கள் பாடியிருக்கி றுர். ஆங்கிலத்தாலும் அதனுட்சியாலும் பாரத தேச மடைந்த அதி சோக நிலையின் வருணனையே அவை. தமிழகமும் அந் நிலைக்குத் தப்பவில்லை. அக் கவிஞர் கண்ட உண்மை எங்கே? இத் தனித்தமிழ் விருப்பினர் கொண்ட மயக்கம் எங்கே? உலகமே இன்ப நிலயம், உடம்பே உயிர் எனக் கொண்ட பிராகிருதருக்கு ஆங்கிலம் உதவக் கூடும். ஆனுல் உடம்புக்கு வேருய் உடம்பினுள் உயிரென ஒன்றுண்டு. உலகையும் உடம்பையும் படைத்த முழுமுதற் கடவுளாகிய சிவபிரானது திருவடி யின்பத்தைத் துய்த்தற்கே யுரியது அது என்னுந் தெள்ளறி வைத் தருவது சம்ஸ்கிருதமே. அத் தமிழ் விருப்பினரின் மயக்கம் அவ் வளவில் நிற்கவில்லை.

"வடமொழியின் உதவி யில்லாமல் தெலுங்கு கன்னடம் முதலிய மொழியாளர்களுக்கு வடமொழிச் சார்புடைய இந்தி யைக் கற்றல் எளிதாக இருக்கலாம். ஆனுல் வடமொழிச் சார் பற்ற தமிழனுக்கு அது பொறுக்க முடியாத பெருஞ் சுமையாக இருக்கிறது" 14—8—55 தமிழ்நாடு

என்கிறு ரவர். தமிழனுக்கு சம்ஸ்கிருதச் சார்பில்லாமையால் இந்தி யைக் கற்றல் பெருஞ் சுமையெனின், ஆங்கிலத்தை எளிதிற் கற்றற்கு

ஏதேனு மொரு சார்பு வேண்டும். அஃதெது? எதுவுமில்லை. ஆகலின் ஆங்கிலங் கற்றலும் அவனுக்குப் பெருஞ் சுமைதான். தமிழன் சம்ஸ்கிருதச் சார்பற்றவனல்லன். அச்சார்பிலிருந்து அவன் இடையில் விலகினான். அதனாலேயே தமிழ் நூல்களில் சம்ஸ்கிருதச் சொற்கள் அவ் விருப்பினர் கலங்குமளவிற்குக் கலக்கலாயின.

**சம்ஸ்கிருதத்திற்கு வடமொழி யெனப் பெயரிட்டவர் யார்? ஏன்? சம்ஸ்கிருதத்திற்கு என்று தனிச்சாரார் உளர்?**

சம்ஸ்கிருதம் வடமொழி யெனப்பட்டது. வடமொழி யென்பது தமிழரிட்ட பெயர். ஏனிட்டனர்? பாரதத்தில் தமிழகம் தென்கோடியிலுள்ள மிகச் சிறிய பகுதி. வடக்கிலுள்ள மற்றப் பகுதி மிகப் பரந்தது. அதனால் தமிழர் மிகச் சிறு தொகையினரும், அப் பகுதியினர் மிகப்பெருந் தொகையினருமாவர். தமிழ ரத்தனை பேருமே சம்ஸ்கிருதங் கற்றிருந்தாலும் அக் கல்வியுடையார் மிகச் சிலரென்ற அளவிற்றான் அடங்குவர். மற்றப் பகுதியில் சனத்தொகை அதிகமாகலின் அதற்குத்தக அக் கல்வியுடையாரும் அதிக மிருக்க முடியும். அவ்வதிகம் பற்றி அம்மொழி பண்டைத் தமிழரால் வடமொழி யெனப் பட்டது. அஃதெது போலும்? சம்ஸ்கிருதத்தை மண்ணுலகத்து மக்களும் பயில்வர், விண்ணுலகத்துத் தேவரும் பயில்வர். ஆயினும் அதற்கு தேவ பாஷை யென்றே மற்றொரு பெயரு முண்டாயிற்று. அம் மொழி பயில்வாருள் மக்களைக் காட்டிலும் தேவரே பெருந்தொகையினர். அவ் வதிகம் பற்றி அம்மொழி தேவ பாஷை யெனப்பட்டது. அது போலுமாம். ஆகவே வடமொழி, தேவபாஷை யென்பன அம் மொழிப் பயிற்சி யுடையாரின் மிகுதி பற்றி உளவாய பெயர்களே யென்க. அன்றியும் அம் மொழிக்குரிய லிபிகள் இரண்டு வகை. அவற்றுள் ஒன்று கிரந்த லிபி. மற்றொன்று நாகர லிபி. கிரந்த லிபியே ஓலையில் எழுதுதற்கு ஏற்றது. ஆகலின் அதுவே அம் மொழிக்குரிய புராதன எழுத்தென் றறியப்படும். அந்த லிபி தமிழெழுத்தோடு பெரிதும் ஒத்தது. அதுவே பாரதமெங்கும் சம்ஸ்கிருதத்துக்கு லிபியாயிருந்து வந்தது. வட பாரதத்தினர் அம் மொழியை விடவில்லை; ஆனால் இடைக்காலத்தில் அந்த லிபியை நீக்கி நாகர லிபியைக் கொண்டனர். கிரந்த லிபி மீண்டும் இத்தேச மெங்கும் பரவ வேண்டும். அதனைப் பரப்புதற் குரியார் தமிழரே. ஆனால் அவர் திறமை நவினரின் வஞ்சப் பிரசாரத்தாற் பறிக்கப்பட்டுப் போயிற்று. அவ் வெட்கக் கேட்டை அவர் உணர்ந்து போக்கிக் கொள்ள வேண்டும். அந்நாள் விரைந்து வருக. தமிழகம் கிரந்த லிபியை வைத்துக் கொண்டது; ஆனால் அம் மொழியையே விட்டு விட்டது. என்னே அவ்வகத்துப் பேதைமையின் உச்சம்! பண்டைத் தமிழர் அந்த லிபியில் அம் மொழியைப் பயின்று வந்தனர். அதனால்

அம் மொழியுந் தமிழகத்துக்கே சொந்தம் போலு மென்ற மயக்கம் உண்டாகலாம். அதைத் தவிர்க்க வேண்டாமா? அதற்காக அவர் அம் மொழியை வடமொழி யென்றனர். வடமொழியுமா மென்பது கருத்து. ஆனுல் அப் பெயருக்கு வடநாட்டு மொழி, அங்கிருந்து தமிழகத்துக்கு வந்த மொழி யெனப் பொருள் கூறி வருகிருர் நவீனர். அதற்குச் சாத்திரப் பிரமாணங் கிடையாது. இன்னும் அம் மொழிக்கு வடசொல் என்பது போல் வடதமிழ் என்றும் பெயருமுண்டு. வட சொல், வடதமிழ் என்ற இரண்டையும் எடுத்துக்காட்டி அவற்றிற்குக் கிரந்த மொழி யெனப் பொருள் கூறி யிருப்பதை யாழ்ப்பாணம் நா. கதிரைவேற் பிள்ளையவர்கள் தொகுத்துப் பி. சிதம்பர முதலியாரவர்கள் தமது வித்யா ரத்நாகர அச்சியந்திரச்சாலையில் 1899 ல் பதிப்பித்த 'தமிழ்ப் பேரகராதி' யிற் காண்க. பண்டைத் தமிழர் சம்ஸ்கிரு தத்தை வடதமிழ் எனக் கூறிப் பாராட்டியதை நவீனர் உணர வல்லரா? பாரத தேசீய மொழிகளெனப் பல மொழிகளுள. அவற்றுள் ஒன் றிரண்டை விடுக. மற்ற மொழிகளிலுள்ள எழுத்துக்க ளெல்லாம் உயிர், மெய், உயிர்மெய், குறில், நெடில், வல்லினம், மெல்லினம், இடையினம் முதலியவாகவே பெரும்பாலும் பாகுபடுத்தப் பட்டுள்ளன. அன்றியும் அவ் வெழுத்துக்களின் வரிசையும் அ, ஆ, இ, ஈ ஆகவும், க, ங, ச, ஞ ஆகவு முள. சம்ஸ்கிருதமும் அப்படியே இருக்கிறது. அதுகொண்டும் அம் மொழி இத் தேசத்துக்கே யுரியது என்பதும் உண்மை.

இதுகாறுங் கூறியவாற்ருல் தமிழ்ச்சாராரே உளர், சம்ஸ்கிரு தத்துக்கெனத் தனிப்பட்ட சாரார் எவருமிலர் என்பது ஓரளவு விளக் கப்பட்டது. படவே, 'இருசாராருக்கும்' என நவீனர் கூறியது பிழை யாதல் காண்க. சம்ஸ்கிருகம் பாரததேசத்தா ரனைவரையும் ஒரு சாராரா கவே தொன்று தொட்டு ஆக்கிவைத் திருக்கிறது. இரு சாராரென் பதை நவீனரே கற்பித்துப் பிளவை யுண்டாக்குகின்றனர். சம்ஸ்கிரு தத்துக் குரியாரென ஒரு கூட்டத்தாருக்குப் பட்டங் கட்டித் தமிழருக்கு 'அவர் அயலார்' பகைவர் எனக் காட்டித் தமிழரை அவர்மேற் பாய்ச்ச வேண்டு மென்பதே அப்பிளவை முயற்சியின் நோக்கம். அது கைகூ டினுல் தமிழரனைவரின் ஆதரவுந் தமக்குக் கிடைக்கும், அது கொண்டு தமிழர்ச்சனையை எளிதிற் புகுத்திவிடலாம் என அவர் நம்புகிருர். அந் நம்பிக்கை நிறைவேறினுலும் அதற்காக அவர் ஆசரிக்கும் அப்பிளவை வழி நேரிதன்றென்பது மாத்திரம் உறுதி.

## 12

**சைவ சமயத்திற்கு ஆபத்து எங்கிருந்து? எப்படி?**

'' தமிழ்மொழி, வடமொழி அவ்வளவு முக்கியமல்ல. சைவம் செத்துக் கொண்டிருக்கிறது...........சைவசமயம் காப்பாற்றப் படவேண்டும். கோவில்களுக்குப் பக்தர்கள் தேவை ........ அமெரிக்காவிலிருந்து மிஷனரிகள் இங்கு வருகிருர்கள் .......' (16—6—55 தமிழ் நாடு)

''தினம் 200 குழந்தைகள் மதம் மாற்றப்படுகின்றனர்'' (13—8—55 தமிழ் நாடு)

''தமிழில் அர்ச்சனை செய்யவேண்டு மென்று நான் சொல் வது .... பக்தியை வளர்ப்பதற்கே' (15—6—55 தினத்தந்தி)

என்கிருர் நவீனர். இரு மொழியையும் விடச் சைவம் முக்கிய மென்ரு ரவர். அதை அவர் உளமாரச் சொல்லவில்லை. என்னை?

''எங்களுக்கு வடமொழியின் மீதுள்ள பற்றுக் குறைந்து விட வில்லை. அதற்கு நாங்கள் என்றும் மதிப்புக் கொடுக்கத் தான் செய்கின்ருேம்' (8—7—55 தமிழ் நாடு)

''எனக்குச் சம்ஸ்கிருதத்தில் வெறுப்புக் கிடையாது. அதன் பேரில் தான் எனக்குப் பக்தி ........... வடமொழியில் அர்ச் சனை செய்யக்கூடாது என்று யாராவது சொன்னல் நான் அதை எதிர்ப்பேன்'' (15—6—55 தினத்தந்தி).

என்கிருரவர். அவருக்குச் சம்ஸ்கிருதத்தோடு தக்க தொரு தொடர்பு வேண்டும். அப்போது தான் அம்மொழியிற் பற்றும், மதிப்பும், பக்தி யும் அம்மொழி யர்ச்சனையை எதிர்ப்பவரை எதிர்க்கும் ஆர்வமும் அவருக்கு இருக்கும். அத்தொடர்பு யாது? அஃதின்ன தென அவர் காட்ட வில்லை. அன்றியும்

''(தமிழர்ச்சனையைச்) சிலர் கட்டாயமாகச் செய்யும்படி செய் தல் வேண்டு மென்று கூறுகின்ருர்கள். .................. வழிபாட்டில் கட்டாயம் என்பது கூடாத ஒன்ருகும். தமிழில் தான் அர்ச்சனை நடக்கவேண்டும் என்று எல்லோரும் ஒரு முகமாக விரும்பிவிட்டால் நாம் விரும்பாத ஒன்று நாளடை வில் தானுக மக்கள் அரங்கிலிருந்து விலகிவிடும். ............... தமிழகத்தில் ஒவ்வொரு அண்ணனும் தம்பியும் தமிழில்தான் வழிபாடு நடைபெறுதல் வேண்டு மென்று எண்ணுதல் வேண்டும்'' 28—2—54 தினமணி

என்கிறார் அவர். 'நாம் விரும்பாத ஒன்று' என்பது இங்குச் சம்ஸ்கிருத அர்ச்சனை. அவ்வர்ச்சனை விலக வேண்டுமாயின் ஒவ்வொரு தமிழ அண்ணனுந் தம்பியும் தமிழர்ச்சனையே நடைபெற வேண்டுமென ஒருமுகமாக எண்ணுக என்பதவ ருபதேசம். அவ் வாக்கியத்தில் 'தமிழில்தான்' என இருமுறை வருகிறது. அத் 'தான்' களின் வேகத் தையுங் கருதுக. அவ்வுபதேசியாராகிய நவீனருக்குச் சம்ஸ்கிருதத் திற் பக்தியோ, சம்ஸ்கிருத அர்ச்சனையை எதிர்க்க வல்ல ஆர்வமோ இருக்க முடியுமா? சம்ஸ்கிருதம் தமிழகத்தை விட்டு விரைவில் ஒழிய வேண்டும்: அப்படி ஏங்குகிறார் அவர். அவருக்கு அம்மொழி முக்கிய மன்றுதான்.

தமிழும் முக்கியமல்ல என்றார் அவர். அதிலும் அவருள்ளங் கலக்கவில்லை. ஏன்? அதற்கு விடை பிறகு சொல்கிறேன். 'சைவஞ் சிவத்தொடு சம்பந்த மென்றிருள் சைவம் வளர்க்குஞ் சம்பந்தமூர்த்தி.' ஆகலின் அச்சமயமும் நித்தியமே. நவீனரும்

> 'கால வெள்ளத்தையுங் கடந்து நின்று விளங்குவது சைவம்'
> (13—8—55 தமிழ்நாடு)

எனக் கூறி அதை ஆமோதிக்கிறார். ஆனால்

> 'சைவம் செத்துக் கொண்டிருக்கிறது,' 'நடமாடுங் கோவில் களுக்கு ஈயாவிட்டால் சைவம் கால வெள்ளத்தில் அழிந்து விடும்'
> (13—8—55 தமிழ்நாடு)

என்பதும் அவர் பேச்சு. சைவம் கால வெள்ளத்தைக் கடந்த தென் பதை அவர் சத்தியமாகச் சம்மதிக்கிறாரா? ஆயின் நடமாடுங் கோவில் களுக்கு ஈயாவிட்டாலும் அஃதழியவே மாட்டாது. கால வெள்ளத் தைக் கடந்து நிற்பது கால வெள்ளத்தில் எப்படி அழியும்? கால வெள்ளத்துக் குட்பட்டதே அவ்வெள்ளத்தில் அழியும். ஆனால் சைவ சமூகத்திலிருந்து அச்சமயத்துக்கு விலக்காய்ப் போனாரும், போவாரும் உளர். அவரே அச் சமயத்துக்குச் செத்துக் கொண்டிருப்பவர். அதற்குக் காரணம் நடமாடுங் கோவில்களுக்கு ஈயாமை யன்று. அவரை அங்ஙனஞ் சாகடிப்பவர் நவீனரே. அச்செயலில் நா இன் புற நக்கிக் கொல்லுங் கவயமாப் போல்வா ரவர். எப்படி?

> 'சைவசமயம் தழைத்தோங்க அடிப்படை உண்மையை அறியவேண்டும். இதை மக்களுக்கு எடுத்துரைக்கவேண்டும்'
> (11—8—55 தமிழ்நாடு)

என்கிறார் அவர்.

அச்சமயத்தின் அடிப்படையாவது யாது? அதனை யறியாமல் அடிப்படை என்ற தொடரை மாத்திரம் வழங்குவதிற் பயனில்லை. அச் சமயமுந் தழைத்தோங்காது. கடவுளொருவ னிருக்கிறு னென்பது மாத்திரம் அடிப்படை யாமா? ஆயின் சமயங்கள் பலவாயின தேன்?

**சைவ சமயத்தின் அடிப்படை, உயிர்நாடி.**

பர மத நிராகரணஞ் செய்யாமல் சுவமத தாபன மொன்றே செய்து போந்த சமயம் எதுவுமில்லை. அந்நிராகரண தாபனஞ் செய்தவர் சாமானி யரு மல்லர். அவ்வச் சமயத்தின் தலைவரே அவற்றைச் செய்துவைத்தார். அதனுல் சமய தாபகரென்ற கௌர வம் அவருக் குளதாயிற்று. கடவுளுண்மையை மாத்திரம் அடிப்படை யென அவர் கொண்டிலர். நாம் அப்படிக் கோடற்கும் அவரநுமதி கிடையாது; கொண்டால் அவரை அவமதித்தவ ராவோம். அந் நிரா கரண தாபனங்களின் பொருந்துமாற்றை மனிதன் ஆராய்ந்தறிய வேண்டும். அஃதறிவுக்கு விருந்துமாம். அவனை மேல் நிலையிற் சேர்க்க வல்லதும் அதுவே. ஒரு சமயத்தின் கடவுளுண்மையோடு தம் சமயத்துக்கே யுரியவென அங்ஙனந் தாபித்த மற்ற வுண்மை களுஞ் சேர்ந்த திரட்சியே அவரது சமயத்தின் அடிப்படை. சமயங் கள் பலவாயினமைக்கு அவ்வடிப்படை தான் காரணம். அதை விட்ட வன் அச்சமயத்தவ னுகான். அவனே அச் சமயத்துக்குச் செத்தவன். கடவுளுண்மை பல சமயங்களுக்குப் பொது. அதனுல் மாத்திரம் வரக்கூடிய இலாபத்தை ஆராயுஞ் சிரத்தை அவனுக்கிராது. ஆகவே அந் நிராகரண தாபன முறையில் சைவ சமயத்துக்கே யுரியவெனச் சித்தாந்தஞ் செய்யப்பட்டுள்ள கொள்கைகளின் திரட்சியே அச் சம யத்துக்கு அடிப்படை, உயிர்நாடி யென்க. அதையே மக்களுக்கு எடுத்துரைக்க வேண்டும். ஆனுல்,

"'அன்பேசிவம்' என்பதே சைவசமயத்தின் உயிர்நாடி, எல்லா மக்களிடத்தும் பிற உயிர்களிடத்தும் அன்பாக நடந்து கொள்பவனே சைவன்" (2—12—55 தமிழ்நாடு)

என்கிருர் நவீனர். அன்பு சிவமாவது போல் எகோவாவுமாம், அல்லாவுமாம், ஆகாதென்று சொல்ல முடியுமா? அவரே நபியைப்பற்றி

'அவர் சிறுகச் சிறுக 360 கடவுள்களையும் ஒழித்து இணை யற்றவன் ஒருவனே என்று ஆக்கினுர். விக்கிரக ஆராதனை பிணக்குகள் பலியிடுதல் மது உண்ணல் முதலிய பல்வேறு சீர்கேடுகளைக் களைந்து ஒரே குடும்பம் போல் பல இனங் களும் வாழ வழி வகுத்தார். 1300 ஆண்டுகளுக்கு முன்பே

அரசன் முதல் ஆண்டி வரை வித்தியாச மின்றி ஆண்ட வனை வழிபட வழி வகுத்தார். ஏழைகளுக்கு வேலை கொடு என்றார். ஏழைக்குக் குறைந்த கூலி ரூ 2-8-0 ஆக்கினர். இச்சம்பளம் வேறு எம்மதத்திலும் வரையறுக்கப்பட வில்லை'
(10—11—55 தமிழ்நாடு)

என்றெல்லாம் அளக்கிறார். அத்தனையும் இசுலாத்தின் உயிர் நாடி, அதற்கும் அவர் சொன்ன சைவசமய உயிர் நாடிக்கும் வித்தியாச மில்லை. இசுலாமிய உயிர்நாடி சிறந்த தென்று கூடச் சொல்லலாம், அங்ஙனமாக அவர் 'எல்லா மக்களிடத்தும் — அன்பாக நடந்து கொள்பவனே சைவன்' என்றது ஏன்? அப்படி நடந்து கொள்பவனே இசுலாமியன், கிறிஸ்தவன் என்று சொன்ன லென்ன? நன்றாகச் சொல்லலாம். அன்புடைமை எச்சமயத்துக்கும் பொது. அன்றியும்

'மற்ற மதங்களில் கூறப்படும் கொள்கைகள் மிகச் சாதாரண மானவை. பொய் சொல்லாதே, அன்புடன் இரு என்பவை போன்ற அந்தப் போதனைகள் நமது மதத்தினருக்கு அரிச் சுவடிப் பாடம் போன்றது. சாதாரண மனித வாழ்விற்குத் தேவையானவற்றையே அவைகள் போதிக்கின்றன. அதற் கும் உயர்ந்த தன்மையுள்ள கடவுளுக்கும் நமக்கும் உள்ள தொடர்பைப் பற்றி அவை சிந்திக்கக்கூட இல்லை. நமது ஹிந்து மதத்தின் ஆரம்பமே கடவுளை மனிதன் அடைவ தெப்படி யென்ற ஆரம்பத்துடன் இருக்கிறது'
(10—9—55 தினமணி)

என்கிறார் மதுரை ஸ்ரீ மீனாட்சிசுந்தரேசுரர் தேவஸ்தானத்தில் அப் போது நிர்வாக அதிகாரியா யிருந்த மேனன், நவீன ரனைவருமே சைவமேடைகளில் சைவத்தின் உயிர்நாடியெனப் பெருமுழக்க மிட்டுப் பேசுவது அவ்வரிச்சுவடிப் பாடமேயாம், அது சைவத்தின் உயிர்நாடி யாத லில்லை.

அவர் மற்றச் சமயங்களின் உயிர்நாடியை யெடுத்துக் காட்டு வர். அதில் அவர் கூடியவரை யோக்கியமான நடையினர்தான்.

'முசுலீம்கள் கூறும் அல்லா என்ற சொல் ஆண்டவரைக் குறிக்கும். அல்லா ஒருவரைத் தவிர வேறு தெய்வம் இல்லை; முகம்மதுதான் அவருடைய தீர்க்க தரிசி என்பது இசுலாமிய சமயத்தின் அடிப்படை' (29—10—55 தமிழ்நாடு)

என்கிறு ரவர். அவ்வடிப்படை இசுலாத்துக்கே யுரிய தென்பதை யாராலும் மறுக்க முடியாது. அத்தகையதோ ரடிப்படை சைவ சமயத் துக்கு முண்டு. அதை அவர் எடுத்துக் காட்டவேண்டும். அப்போது

தான் அவரது சைவப் பிரசாரம் நாணயமுடையதாகும். சைவசமயிகள் கூறும் சிவன் என்ற சொல் முழுமுதற் கடவுளைக் குறிக்கும். அச்சொல்லுக்குப் பொருள் மங்கலத்தைத் தருபவன் என்பது. எல்லாவுயிர்களுக்கும் இன்பந் தருபவனுகலின் அவனையே வழிபடுமாறு மக்களுக்கு உபதேசிக்கும் சமயந்தான் சைவம். அச்சிவனை யல்லால் வேறு தெய்வ மில்லை. இருக்காதி காமிகாதி வேத சிவாகமங்களே அவன் வாக்கு. அவை கூறுவன சரியையாதி பாதங்கள். அவற்றில் நின்றெழுகுவதே தவம். அத்தவமில்லார்க்கு அவனின்பங் கிடைப்பதில்லை. சம்பந்தாதியோரும், மெய்கண்டார் முதலியோரும், சிவஞான முனிவரும் அச் சமயத்தை விளக்கிக் காட்ட வந்த ஆசாரிய புருஷர். அவ் வேதாகமங்கள் ஞானநூல்கள். அவை கூறும் உண்மையை அவ் வாசிரியன்மார் தம் தவ முதிர்ச்சியால் அனுபவத்திற் கண்டனர். ஆகலின் அவராக்கிய தேவாராதிகள் அனுபவ நூல்கள். அந்த ஞான நூல்களும், அவற்றின் வழிவந்த அவ்வநுபவ நூல்களுமே அச்சமயப் பிரமாண நூல்கள். மேற்சொன்ன அத்தனையும் சைவ சமயத்துக்கு அடிப்படை, உயிர்நாடி. அதை அங்கீகரித்து வாழ்பவனே சைவன். சைவத்துக்கு இவ்வடிப்படை சொல்வதுதான் நவீனர் இசுலாத்துக்கு அடிப்படை சொன்னது போலாகும். பதி பசு பாசவுண்மை, சிவபரத்வம், சிவதீக்ஷையின் முக்கியத்துவம், வேதாகமப் பிராமாணியம், மும்மலவியல், சரியை யாதி மார்க்க ஆசரணம், சுத்தாத்துவித விளக்கம், சிவசின்ன மகிமை, சைவாசிரியன்மாரின் ஒப்புயர்வின்மை, அவரருளிய நூல்களிற் பரந்து நாறுஞ் சிவகந்தம், சிவாலய தரிசன விதி, ஆலயங்களிலுள்ள மூர்த்தி பேதங்களின் விஷயம், உத்ஸவ விரதாதிகளின் உட்கிடை, சிவபூசை, சைவசமயத்தின் வரம்பைப் பாதுகாத்தலின் அவசியம் முதலியன பற்றிப் பிரமாண ரீதியாகச் செய்யப்படும் பிரசாரங்களே அவ்வுயிர் நாடியோ டியைந்தனவாம். நவீனரின் சைவத்துக்கு அவ்வுயிர் (நாடி) இல்லை. மேனன் கூறிய அரிச்சுவடிப் பாடமே அதற்குயிர். அதன் துடிப்பு அறுபட்ட வால் துடிக்குங் கால அளவினதே.

> 'சமணமும் பௌத்தமும் இந் நாட்டில் செல்வாக்குப் பெறலாயின. இவ்விரு சமயத்தவரும் பொதுமக்களுக்குக் கல்வியும் மருத்துவமும் உதவினர். எல்லா மக்களையும் ஒரு தாயின்ற பிள்ளைகளாகக் கருதினர். தமிழ்ச் சமுதாயத்தில் சாதி வேறுபாடுகளால் அல்லலுற்ற மக்கள் பலர், இச் சமயத்தவர் புரிந்த கல்வி மருத்துவ உதவிகளைப் பாராட்டி இச் சமயங்களைத் தழுவினர். இத்தழுவலால், சைவமும் வைணவமும் வலிமையும் செல்வாக்கும் குறைந்து காணப்பட்டன'
>
> (28—6—55 தமிழ்நாடு)

என்கிருர் நவீனர். சமணமும் பௌத்தமும் நாத்திகங்கள். அவை பொதுமக்களுக்குச் சேவை செய்தனவா? சரி. சைவத்தை விட்ட திருநாவுக்கரசர் சமணரே யானுர், பௌத்த ராக வில்லே. ஏன்? அம் மட்டோ? அவர் பௌத்தரை வாதில் வெல்ல சமண, பௌத்த மதத் வுஞ் செய்தார். அது வேண்டுமா? அவ் வாதில் தினர் சமூக சேவையும் அவர் தாபித்த சமணப் பகுதி எது? நிராகரித்த மக்கள் பெற்ற பயனும் பௌத்தப் பகுதி எது? அவ்விரண்டுமே அவ்வச் சமயங்களின் அடிப்படை யென்பதை நவீன ரறிக. சமூக சேவை அவ் வாத விஷயங்களில் சேராது. அது எல்லாச் சமயங்களுக்கும் பொது; தமிழகத்தில் தொன்று தொட்டு எல்லாச் சமயத்தாருஞ் செய்து வருவது. ஒன்றிரண்டு சமயங்களே அதைத் தம் தருமமாகக் கொண்டிருந்தன வெனக் கூறுவது அறியாமை. திருநாவுக்கரசர் மாபெருஞ் செல்வர். பெரியபுராணம் 'மாசின் மன', 'கா வளர்த்தும்' எனத் தொடங்கும் பாடல்களால் அவர் செய்த நலன் களைப் புகழ்ந்தது. அப்போது அவர் சமண் சமயம் புக வில்லே. ஆக லின் சமணர் செய்த சமூக சேவையில் மதி மயங்கி அச் சமயத்துக்கு அவ்வரசர் போனுரென்பது பொய். நம்பர் அருளாமையினுல் அச் சமயத்தின் அடிப்படையே மேலானதெனக் கண்டு அச்சமயத்திற் சென்ரு ரவர். அப்படிச் செல்பவரே அச் சமயத்தின் மெய்ப் பயனைப் பெறுவார்,

> 'சமயத்துறையின் அடிப்படை உண்மைகளை நன்கு கற்று, உணர்ந்து, செயற்படுத்திஞல் தான் அந்நிலையை அடைய முடியும்' ( 29—10—55 தமிழ் நாடு )

என்கிருர் நவீனரும். அதனை விட்டுச் சோறு, துணி, மருந்து, கல்வி, வாழ்க்கை யொப்பந்தம் (கலியாண மன்று) முதலிய உடற் சுகத்துக் காசைப்பட்டுச் சமயம் மாறுவது மானங்கெட்ட செயல். உயிர் நலங் கருதுபவன் தன்னுயிர் போவதாயினும் அது செய்ய மாட்டான். ஒவ் வொரு சமயத்து மக்களுள்ளும் பிச்சைக்காரர், அங்கஹீனர், பிணியர், மூடர் முதலியோர் பல்லாயிரவ ருளர். நவீனர் கூறும் சமூகசேவை இலௌகீகம். அதைச் செய்து, ஒரு சமயத்தார் இன்னெரு சமயத் தவரைத் தம் சமயத்துக் கிழுக்கவும், அவ்வந்நிய சமயத்தார் தம் சமயத்தவரை அச் சமயத்துக்குப் போகாதபடி தடுத்து நிறுத்தவும் முற் படுதல் வெட்கக் கேடான காரியம். அம்முறையை மெச்சுபவரும் வெட்கங் கெட்டவரே. அது சேவையன்று, இலஞ்ச மாகும். அவ் விருதிறச் சமயத்தவரும் அச் சேவையால் பிறிதொரு நோக்கத்தைச் சாதித்துக் கொள்ள விரும்புகின்றனர். அவர் நேர்மையான சேவக ரல்லர்; கள்ள வுள்ளத்தினரே. சைவசமயம் அப்படி வளர விநம்ப வில்லே. அதன் அடிப்படைக் கொள்கைகள் பற்றிய பிரசாரங்களே

அதன் வளர்ச்சிக்குரிய நேரிய வாயில். சம்பந்தரும், வாகீசரும், வாசகரும் சைவத்தைப் பாடசாலை, மருத்துவ நிலயம், பிரசவ விடுதி, அநாதை யாசிரமம் முதலியன அமைத்துச் சமூக சேவை செய்து மீட்க வில்லை, அந்நேரிய வாயி லொன்றுனே மீட்டனர். சமூக சேவையால் வளர்ந்தன என்னப்பட்ட சமண பௌத்தங்கள் தொலைந்தன.

**சமூக சேவையும், சைவ சமயமும், ஈசுர சேவையும்.**

சமூக சேவை தனிப்பட்ட கௌரவ முடையது. பணம், படிப்பு, பட்டம், பதவி முதலியன பெற்றுப் பாக்கியவான்களாயினர் பலர். அவற்ருல் அவர் நெஞ்சு இறுகக் கூடும். அந் நெஞ்சு இளகிக் குழைய வேண்டும். இன்றேல் அவருயிர் உய்தி பெறுது. அது குழைந்தால் அவர்தம் பாக்கியத்தைக் கொண்டு சமூக சேவை செய்வர். சமூக சேவை செய்து செய்து பழகிஞல் அவர் நெஞ்சு குழையும், ஆகவே அச்சேவை அவரது நலத்திற்காகவே உளதாயிற் றென்க. ஏழைகளுக்காக என்பது அடுத்த படிதான். அச்சேவையைச் செய்பவருள்ளும் ஏற்பவருள்ளும் சாதி சமய பேதம் பாராட்டற் கவசியமில்லை. கள்ள வுள்ளத்தோடு செய்யப்படுஞ் சேவை தன் லட்சியத்தை யிழக்கும். உலக வாழ்க்கைக்கு அவசியமான சாதனங்களை ஒருவர்க் கொருவர் செய்து கொடுப்பதே சமூக சேவை யென்பாரு முளர். அதுவுஞ் சரி. ஒருவர் சகாய மின்றி இன்னெருவர் வாழ முடியாது தான். ஆனுல் அச் சேவையை நாத்திகருஞ் செய்வர், ஆத்திகருஞ் செய்வர். நாத்திகருக்கோ உடம்பே உயிர், உடம்புக்கு வேருகியதோ ருயிர் தம் முடம்பி லிருப்பதாக அவர் கொள்ளார். ஆகலின் உடற் சுகமே அவர் சேவையின் குறிக்கோள். அச் சேவையால் மக்கள் பசி தீர உண்பர், ஆசை தீர உறங்குவர். உறங்கல் ஈண்டு இடக்கரடக்கல். மக்கள் மாக்களாவர். மக்களுக்குச் செய்யுஞ் சேவையே கடவுளுக்குச் செய்யும் சேவையாகு மென்பது நாத்திக வசனம். ஆத்திகர் ஈசுர சேவையைச் சிறிது சிறிதாக மறந்து நாத்திகக் குழியில் வந்து விழவேண்டும்; அதற்காகவே அவ்வசனம் நாத்திகர் வாயிலிருந்து வெளியாயிற்று. நவீனர் அதை யெடுத்துக் கொண்டு விலா வொடியக் கூவுகின்றனர்.

'மக்களுக்குச் செய்யுந் தொண்டே கடவுளுக்குச் செய்யும் தொண்டு என்று உணர்ந்து நடக்கும் சீரியோர் அனைவரும் சமய வாழ்வில் வாழ்பவ ராவர்'. (23—7—55 தமிழ்நாடு)

'நரன் சேவையே நாரணன் பூஜையாகும்'

(16—6—55 தமிழ்நாடு)

என்பன அக்கூவல். மக்கள் கடவுளா? ஆயின் மக்கட் சேவையுங் கடவுள் சேவைதான். ஆனால் மக்கள் கடவு ளல்லர். ஆகலின் மக்கட் சேவையுங் கடவுட் சேவை யாகாது. மக்கட் சேவையே கடவுட் சேவை யென்ற அளவிற் கூறி மகிழ்பவரே கடவுளை ஏய்த்துப் பிழைப்பவர். மேலும் ஒன்றைப் பிறிதொன்றாகக் கொள்வது மதியீனம். சனசேவையும் அறம். ஈசுரசேவையும் அறம். ஆனாற் சன சேவை பசுவறம். ஈசுர சேவை பதியறம். சன சேவை இருள்சேர் இருவினையுள் அடங்கி அச் சேவகரைப் பிறவிப் பெருங்கடலுள் வீழ்த்தும். ஈசுர சேவை அதனுள் அடங்காமல் அச் சேவகரை அக் கடலின் கரையிற் சேர்ப்பிக்கும். அவ் வேற்றுமை பெரிது.

**உபசாரம், உபகாரம் இரண்டும் ஒன்றாகுமா?**

பாரத தேசமே பாரதமாதா, பாரததேவி. அவள் வயிற்றிற் பிறந்தவரே அத்தேச மக்கள். மாதாவை வந்தித்தல் மைந்தர்க்குக் கடன். அதனால் [1] 'வந்தேமாதர மென்போம் எங்கள் மாநிலத்தாயை வணங்குது மென்போம்' என்ற பாட்டு உண்டாயிற்று. அதுவே அம் மாதாவுக்குச் செய்யுஞ் சேவை. தமிழ் மொழியே தமிழணங்கு. அவள் வயிற்றிற் பிறந்தவரே அம்மொழி மக்கள். அவர் அவளை வணங்கவேண்டும். அதனால் [2] 'தமிழணங்கே.......... உன்திறம்.........வியந்து செயன்.மறந்து வாழ்த்துதுமே' என்றது இன்னொரு பாட்டு. அதுவே அவ்வணங்குக்குச் செய்யுஞ் சேவை. உண்டு உறங்கிச் சுகமாய் வாழத் தமக்குட் செய்துகொள்வதாகிய சனசேவையே அச் சேவைகளென்றல் மாதுருத் துரோகமும். அணங்குத் துரோகமும். தமிழை [2] 'அழிந்தொழிந்து சிதையாவுன் சீரிளமைத் திறம்' எனக் கூறி வியந்தார் ஒரு தமிழர். அந்நிலை தேசத்துக்குமாம். ஆனால் மக்கள் அப்படியா? ஆகலின் தேசமும் மொழியும் மக்களல்ல என்க. ஆனால் அவை பறிபோனால் அவரும் பறிபோவர். அவர் பறிபோனால் அவை பறிபோகா. அவருள் நாள்தோறும் எத்தனையோ பேர் செத்தொழிகின்றனர். அதனால் அவை இம்மியும் பறிபோகவில்லை

---

1 தேசியகவி பாரதியார்.

2 பல்லுயிரும் பலவுலகும் படைத்தளித்துத் துடைக்கினுமோர்
எல்லையறு பரம்பொருள் முன் இருந்தபடி இருப்பதுபோல்
கன்னடமும் களிதெலுங்கும் கவின்மலையா ளமுந்துளுவும்
உன்னுதரத் துதித்தெழுந்தே ஒன்றுபல ஆயிடினும்
ஆரியம்போல் உலகவழக் கழிந்தொழிந்து சிதையாவுன்
சீரிளமைத் திறம்வியந்து செயல்மறந்து வாழ்த்துதுமே.

[மனோன்மணீயம் தமிழ்த்தெய்வ வணக்கம் – திரு. பெ. சுந்தரம் பிள்ளை]

அப்படியே ஈசுரன் தந்தை. உயிர்களனைத்தும் அவனுக்கு மைந்தர். மைந்தர் சனசேவை மூலம் உலகில் உல்லாச வாழ்வு வாழ்ந்துவிட்டால் தந்தையைச் சேவித்தவராய் விடுவரோ? தந்தைக்குப் பிரத்தியேகச் சேவை செய்யுங் கடன் மைந்தர்க்குக் கிடையாதா? அக்கடனை விட்டவர் பித்ருத் துரோகிகளே யாவர்.

நாம் செய்யுஞ் சேவை இருவகையது. ஒன்று நம்மைவிடப் பெரியோர்க்குச் செய்வது. அது உபசார மெனப்படும். ஈசுரனுக்கும் அவனடியாருக்கும் செய்யும் பூஜை அது. இன்னொன்று நம்மோடொத்தவருக்கும் நம்மை விடத் தாழ்ந்தவருக்குஞ் செய்வது. அது உபகார மெனப்படும். நவீனர் கூறுஞ் சமூக சேவை அது. உபசாரமும், உபகாரமும் ஒன்றாகா. சைவமக்கள் தம் உடலுக்கு வேறு யதோருயிர் தம் முடம்பிலுண் டென்பதை அங்கீகரிப்பவர். உயிருக்கு உறுதி தருபவன் சிவனொருவனே. அவனை வணங்காமல் அவ்வுறுதி கூடாது. ஆகலின் அவருக்கு ஈசுரோபசாரமே, சைவசேவையே, சிவபூசையே முக்கியம். உடற்சேவை அடுத்த படிதான். ஆகவே ஈசுரசேவை முற்பட்டும் சனசேவை அதனைத் தொடர்ந்தும் நிகழவேண்டும். தம் உயிரை விட்டவர்க்கே நாத்திகரோ நவீனரோ கூறுஞ் சனசேவை உவப்புடையதாகும். [1] 'எங்கெழி லென் ஞாயி றெமக்கு', [2] 'வானந் துளங்கிலென்................ஒருவனுக்காட்பட்ட வுத்தமர்க்கே' என்றது திருமுறை. அத் திருமுறை யாசிரியன்மார் சனோபகாரிக ளல்லரோ? மக்கள் தம் ஆக்கைக்கே இரை கொட்டிப் பிறகு அவ் வாக்கையைக் காக்கைக்கு இரையாகுமாறு விடுத்து மீண்டும் பிறப்பதற்கே தொழிலாகிப் போகும்படி அவருக்கு உபதேசிக்கவும் உபகரிக்கவும் அவ்வுத்தமர் விரும்பார்.

---

1 *உங்கையிற் பிள்ளை உனக்கே அடைக்கலமென்(று)*
*அங்(கு)அப் பழஞ்சொற் புதுக்குமெம் அச்சத்தால்*
*எங்கள் பெருமான் உனக்கொன் றுரைப்போங்கேள்*
*எங்கொங்கை நின்னன்பரல்லார்தோள் சேரற்க*
*எங்கை உனக்கல்லா தெப்பணியுஞ் செய்யற்க*
*கங்குல் பகலெங்கண் மற்றொன்றுங் காணற்க*
*இங்(கு)இப் பரிசே எமக்கெங்கோன் நல்குதியேல்*
*எங்கெழிலென் ஞாயி றெமக்கேலோர் எம்பாவாய்.*

[திருவெம்பாவை — 19]

2 *வானந் துளங்கிலென் மண்கம்ப மாகிலென் மால்வரையும்*
*தானந் துளங்கித் தலைதடு மாறிலென் தண்கடலும்*
*மீனம் படிலென் விரிசுடர் வீழிலென் வேலைநஞ்சுண்(டு)*
*ஊனமொன் றில்லா ஒருவனுக் காட்பட்ட உத்தமர்க்கே.*

[அப்பரடிகள் - பொது - தனித்திருவிருத்தம் 8. — 4ம் திருமுறை]

**சமூக சேவைக்கு முன் வேண்டப்படுவது என்ன?**

'பக்தி என்பது கடவுளுக்கு வழிபாடு செய்வதல்ல, பிரார்த்தனை செய்வதல்ல, ஏழைகளைக் காப்பாற்றுவதுதான் பக்தி. இதுதான் தமிழ்நாட்டின் மதம்' என்று நவீனர் கூறியது முன் காட்டப்பட்டது. இதை விட நாத்திக முண்டா? அந்நாத்திகம் தமிழ் நாட்டு மதமாம், தமிழ் நாட்டு நாத்திக மானாற் குற்றமில்லை போலும். கடவுளை வழிபடுவதும், பிரார்த்திப்பதும் பக்தியல்ல என்ற அவர்

'சமயநெறி — மதத்தின் கொள்கைகளை நாம் கடைப்பிடித்து வாழ்ந்தால்தான் பிறர்க்கென வாழும் தலைமையைப் பெற முடியும். தன்னலம் இல்லாது பிறர்க்கென வாழும் வாழ்க்கையை வேறு எங்கும் பெறமுடியாது' (26—8—55 தமிழ் நாடு)

'சேவை...... ........இன்று சமுதாயத்திடம் சொல்லப் படுவ தெல்லாம் நம் மதம் கொடுத்த பிச்சை தான்'
(12—9—55 தினமணி)

என்றும் சொல்கிறார். ஏழைகளைக் காப்பாற்றுவதுதான் பக்தி என்பதும், சமயத்தால் தான் தன்னலமற்று வாழமுடியும், சமயங் கொடுத்த பிச்சையே சமூகசேவை என்பதும் எவ்வளவு முரண்! பொறுப்பற்ற வாயிற்றான் முரண்கள் வரும். சமயங் கொடுத்த பிச்சையே சமூக சேவை யென்றால் சமயாபிமானம், சமயாசாரசீலம், ஈசுரபக்தி, முதலியவே சமூக சேவைக்கு முன் வேண்டப்படுவது என்பது சித்திக்கிறது.

'ஈசனுக்கன் பில்லா ரடியவர்க்கன் பில்லா
ரெவ்வுயிர்க்குமன் பில்லார் தமக்கு மன்பில்லார்'

என்றது சித்தியார்.

'சமயத்தைப் பற்றியோ, சித்தாந்த சாத்திரங்களைப் பற்றியோ பெரு முழக்க மிட்டுப் பேசுவோர் பலரும் மக்களுக்குப் புரியும் வழியில் – சமயம் என்றால் என்ன, சமயத்திற்கும் வாழ்க்கைக்கும் என்ன தொடர்பு, மனிதன் எவ்வாறு சமயவாழ்வு வாழ்தல் வேண்டும் என்பனவற்றைத் தெளிவாகப் பேசாமல், சமயக் கட்டுக்கதைகளைப் பேசி மக்கள் அறிவைப் பாழாக்குகின்றனர்...............இக் கேடுகளை வைத்துக்கொண்டு சமயம் வளரவில்லை...............என்று...............அனைவரும் ஓலமிடுகின்றனர்' (28—6—55 தமிழ்நாடு)

என்கிறார் நவீனர். பெருமுழக்கமிட்டுப் பேசும் அவர் சமயத்தைப் பற்றித் தெளிவாகப் பேசாமலிருக்கலாம், சமயக் கட்டுக்கதைகளையே பேசலாம். அதனால் மக்களறிவு பாழாவது உண்மையானால் அப்பாழ்.

ஒரு மடங்குதான். ஆனால் நவீனர் அச்சமயத்தைப் பற்றி விபரீத பிரசாரமே செய்வர். அது மக்களுக்குப் புரியும் வழியிலு மிருக்கும். உலக நூலெனக் கழிக்கப் பட்ட வரலாற்று நூற் பகுதி யொன்று. அதி லுள்ள கதைகளையும் அவர் பேசுவர். அதனால் மக்களறிவு பாழாவது நிச்சயம். அப்பாழ் நூறு மடங்காகும். அதை அவ ரறிக. அவர் அவ்வாக்கியத்தில் என்ன, என்ன, எவ்வாறு என்ற சொற்களை வழங்கியுள்ளார். அது சித்தாந்த சாத்திரங்களைப் பற்றிப் பெருமுழக்கமிட்டுப் பேசுவோரைப் பரிகசிக்கவேயாம். அது கிடக்க. அச் சொற்கள் வந்துள்ள மூன்று தொடர்களையும் மூன்று வினாக்களா கக் கொள்ளலாம். அந் நவீனர் எழுதிய எழுத்துக்களில் நான் படித்த அளவில் அவ் வினாக்களுக்கு அவரே சரியான விடை கூறியதாகத் தெரியவில்லை. 'எல்லப்ப செட்டிலங்க ஏகலக்க' என்பது தெலுங்குப் பழமொழி. சைவத்தை வளர்க்கும் வகையில் அவரை நோக்கி எவர் எவ்வினாக் கேட்டாலும் அப்பழ மொழிப்படி அவர் கூறும் விடை ஒன்றே. அது மேனன் கூறி முன் காட்டப்பட்ட அரிச்சுவடிப் பாடம். ஆனால் சைவ சித்தாந்திகளை யிகழ்வதற்கு அப்புத்திசாலி முந்திக் கொள்கிறார். சித்தாந்த சாத்திரம் வல்லார் அவ்வினாக்களுக்கு விடை தருவது தப்பாது. எப்படி?

**சைவம் வளராமைக்குக் காரணம்**

[1] ஓதுசம யங்கள்பொரு ளுணரு நூல்க
ளொன்றோடொன் றொவ்வாமலுளபலவு மிவற்றுள்
யாதுசம யம்பொருணூல் யாதிங் கென்னி
னிதுவாகு மதுவல்ல தெனும்பிணக்க தின்றி
நீதியினா லிவையெல்லா மோரிடத்தே காண
நின்றதியா தொருசமய மதுசமயம் பொருணூல்'

என்பது முதல் வினாவுக்கு விடை. [2] 'வாழ்வாவது மாயம் இது மண் ணாவது திண்ணம்' என்றது திருமுறை. அவ் 'வாழ்நாள் வழியடைக் குங் கல்'லே அச்சமயம். அது அவ்வாழ்க்கைக்கு முற்றுப்புள்ளி வைக்கவே அவ் வாழ்க்கையோடு தொடர்பு கொண்டது. இது இரண்

---

1 சிவஞான சித்தியார் சு 8 — 13

2 வாழ்வாவது மாயம்மிது மண்ணாவது திண்ணம்
பாழ்போவது பிறவிக்கடல் பசிநோய் செய்த பறிதான்
தாழாதறஞ் செய்மின்தடங் கண்ணான்மல ரோனும்
கீழ்மேலுற நின்றான்திருக் கேதாரமெ னீரே.

(சுந்தரர் 7ம் திருமுறை திருக்கேதாரம்)

டாவது வினவுக்கு விடை. [1] 'நின்ருலு மிருந்தாலும்' என்று தொடங்குந் திருமுறைப் பாடல் மூன்ருவதற்கு விடை. அவற்றை விளங்கத் தெரிந்த அவர் விளக்கிச் சொல்லவும் வல்லவராய்த்தா னிருப்பர். மக்களும் புரிந்து கொள்ளக் கூடியவரே, ஆனல் நவீனரின் போலி வேடமும் விபரீதப் பிரசாரமுமே குறுக்கிடுகின்றன. மக்களைத் திகைப்பிப்பன அவைதான். இனிக் கல்வித் துறைகள் பல. ஒவ்வொரு துறை பற்றியுங் கட்டுக் கதைகளும் பல. அவை அவ்வத் துறையிலுள்ள உண்மைகளை விளக்கும். அதற்காகவே அவற்றை அவ்வத் துறை மேதையர் கட்டினர். ஆகலின் அந்நவீனரின் நிந்தைகளை அவை சிறிதும் பொருட் படுத்தா; அவை என்று மிருக்கும். அவற்ருல் உலகிற்கு வருவது நலனே; அப்படியே சமய வுண்மைகளை விளக்குவன சமயக் கதைகள்; அவையுங் கட்டுக் கதைக்ள் தானெனக் கொண்டாலும் சமயத் துறை வல்லாரே அவற்றைக் கட்டினுராதல் வேண்டும். அவை மக்களின் சமய அறிவை விளக்குவன அன்றிப் பாழாக்கா; உலக வரலாற்றின் வழி வந்த கதைகளோ ஆசிரியருக் காசிரியர், காலத்துக்குக் காலம், இடத்துக்கிடம் முரணிக் கிடத்தலே பெரும்பான்மை. சமயக் கொள்கைகளுட் சிலவற்றையாவது அவற்ருல் விளக்க முடியுமா? திருவள்ளுவர் திருக்குறளில் சமயக் கட்டுக் கதைகளை எடுத்துக் காட்டியே ஆங்காங்குச் சில வுண்மைகளை விளக்கினர். தேச சரித்திரக் கதைகளுள் ஒன்ருவது அந்நூலில் இல்லை. அன்றியும் சிவாஜி காந்திஜி முதலியோரைச் சமயக் கட்டுக் கதைகளே உருப்படுத்தின. அங்ஙனமாக அவற்றைத் தூஷிக்கும் அந்நவீனரை என்னென்பது? அன்ன தூஷணைகளே சைவம் வள்ராமைக்கு அடிப்படைக் காரணமென்க.

'புதிய தமிழகத்தில் மதம் காரணமாக ............ மக்களிடையே
வேற்றுமை காணப்படுதல் கூடாது'
(26—1—56 தமிழ்நாடு)

என்கிருர் நவீனர். அதன் கருத்தென்ன? சமயங்களின் பன்மையே கூடாது என்பதா? பல சமயங்க்ளிருக்கலாம், அவை பற்றிய பூசல் கூடாது என்பதா? முதலாவ தெனின்,

'நான் சைவன்' (21—1—56 தமிழ்நாடு)

---

1 நின்ருலு மிருந்தாலுங் கிடந்தாலு நடந்தாலு
மென்ருலுந் துயின்ருலும் விழித்தாலும் மிமைத்தாலு
மன்ருடு மலர்ப்பாத மொருகாலு மறவாமை
குன்ருத வுணர்வுடையார் தொண்டராங் குணமிக்கார்.

(பெரிய புராணம் — பத்தராய்ப் பணிவார்)

என்று தம்மை விளம்பரஞ் செய்து கொண்ட அவர் பல சமயங்கள் வேண்டா மென்றாலும் சைவசமய மிருக்க வேண்டுமென விரும்புதல் அவர்க்குக் கடன். சைவமுந் தொலைக என அவர் விரும்பினால் அவர் செய்து கொண்ட விளம்பரம் எதற்காம்? அறிவுள்ள சைவர் அதனால் ஏமாற மாட்டார்: இரண்டாவதெனின் அக்கூற்றில் புதுமையில்லை. எல்லாருஞ் சொல்வதைத்தான் அவர் சொல்கிறார். சமயங்கள் பலவாயின் பூசல் நேருமோ? அதற்கஞ்சி அப்பன்மையைத் தான் நீக்கி விட முடியுமா? சமயங்களில் அரசியல் முதலிய உலக விவகாரங்கள் புகுந்தால் மாத்திரம் பூசல் நேரக் கூடும். அவ்வுண்மையை அவர் மதிக்கும் வரலாற்று நூல்களிலேயே காண்க. அவை புகுதாதபடி அரசே நேரிய சட்டம் வகுத்துக் கொள்வது நலம், கொண்டால் அவ்வப்போது நேரக்கூடிய பூசலை அவ்வவ்வச் சமனப்படுத்தி விடும்.

**மக்களிடையே வேற்றுமைக்கு மதம் காரணமா?**

[1] 'தத்தஞ் சமயத் தகுதிநில் லாதாரை
அத்தன் சிவன்சொன்ன ஆகம நூல்நெறி
எத்தண்டமுஞ் செய்யு மம்மையிலிம்மைக்கே
மெய்த்தண்டஞ் செய்வதவ் வேந்தன் கடனே'

என்றது திருமுறை. அவ்வடிப் படை கொண்ட அரசுக்கு அது எளிதில் முடியும். புதிய தமிழகம் அந்நவீனர் கூறுகிறபடி அமைவதாயின் நாத்திகத் தமிழகமாய்த்தா னிருக்கும், அல்லது இப்போதுள்ள தமிழகமாய்த்தான் நீளும்.

'...............சமய....ம் பொது வாழ்வில் தனியிடம் பெறுதல் கூடாது' (26—1—56 தமிழ்நாடு)

என்கிறா ரவர். பொது வாழ்வு என்பதும், தனியிடம் என்பதும் எவையோ? சைவம் வளர அவரும் ஆவன செய்வதாகச் சொல்கிறார்; அதற்கு அவ்வாக்கியக் கருத்து எப்படித் துணை புரியும்?

'மனிதனிடம் பகுத்தறிவு இருக்கிறது. அவற்றைச் சரியாய்ப் பயன் படுத்துவது கிடையாது? (24—11—55 தமிழ்நாடு)

என்கிறார் ஈ–வே–ரா. அப்படிப் படுத்தாமற் கோட்டை விட்டவருள் அவரும் ஒருவர்.

'திராவிட நாடு பிரிய வேண்டு மென்று ஆந்திர, மலையாள, கன்னட மக்கள் கவலைப்படவில்லை. வடமொழித் தொடர்பு அவர்கள் மொழியில் இருப்பதால் அவர்கள் வடமொழி ஆதிக்கத்தை எதிர்க்க மனநிலை இல்லாதவர்களாய் உள்ளனர்' (18—7—55 தமிழ்நாடு)

---

1 திருமந்திரம் முதல் தந்திரம் இராசதோடம் 10

என்கிருரவர். திராவிட நாட்டுப் பிரிவுக்கு அவர் பல வருடங்கள் உழைத்தார். அவ் வுழைப்புக்கு மூலமான தம் பகுத்தறிவை அவர் சரியாகப் பயன்படுத்த வில்லே. அவ்வுழைப்பு வீணுயிற்று. அவர் சலித்து விட்டார். பிறகுதான் அவர் மூளேயில் புதியதோர் பகுத்தறிவு உதித்தது. அதுவே அவ் வாக்கியம்.

பகுத்தறிவைப் பயன்படுத்தும் முறை

'அந்த மூன்று போராட்டங்களிலும் நாம் தோல்வியைத் தான் அடைந்தோம்' (19—8—55 தமிழ்நாடு)

என்பது அவரது மற்ருேரமுகை.

'மதம் அழிந்ததால் அதன் மூலம் இதுவரை கட்டுப்படுத்தி வந்த பெரிய சாதனம் அழிந்தே விட்டதெனக் கூறலாம். எப்படி கடவுளே மதிக்காததால் மனிதன் மனதில் தோன்றும் குற்றமற்ற உள்ளுணர்வு மறைந்து விட்டதோ அதேபோல அரசன் மறைந்ததுடன் அரசாங்கத்தின் சட்ட திட்டங் களுக்கு மக்கள் வைத்திருந்த மதிப்பு பயம் போய்விட்டதென் பதை ஒப்புக்கொள்ள வேண்டியதுதான்'

(24—11—55 தினமணி)

என்பது அவரது பிறிதோரமுகை. பல தமிழர் நாத்திகராகி அவர் கூறியது போலு மாயினர். அங்ஙனம் ஆக்கியவர் அந்த ராவே. அத் தீங்கை அவர் இப்போது உணர்கிருர். ஆகவே முட்டின பிறகு குனி வதுதான் அவரது பகுத்தறி வென்க. அந்த ராவைத்

'தமிழ் நாட்டிலே சிந்திக்கும் ஆற்றல், எதையும் பகுத்துக் கூறும் பண்பு, அறிவுத் திறமை முதலியவை ஒரு சிலர்களுக் காவது ஏற்பட்டிருக்கிற தென்ருல் அதற்குத் தமிழ்நாட்டின் ருசோ ஈ. வே. ரா...............தான் காரணம்'

(21—1—56 தமிழ்நாடு)

என்கிருர் அந் நவீனர். Milton's Paradise Lost என்பது ஓர் ஆங் கிலக் காவியம். அதில் கடவுளுக்கு விரோதியாகிய சாத்தான் வர்ணிக்கப்படுகிருன். அவனுடைய பகுத்தறிவு, பிரசாரம், அவற்றில் மயங்கி அவனது சுயமரியாதை யியக்கத்தில் உறுப்பினராய்ச் சேர்ந்த தேவதைகளின் பரிதாபகரமான வீழ்ச்சி ஆகியவை அக் காவியத்தைப் படித்தார் அதிசயிக்கும்படி அபரிமிதமாய்ப் பேசப்பட்டுள்ளன. ஆயிரம் ருசோக்களும் வால்டேர்களுமே அவனுக்கு ஈடாகார். அவனது பகுத் தறிவின் விளேவாகிய அவ்வியக்கம் அவனுக்கும் அவனுக்குத் தோழமை பூண்ட தேவதைகளுக்கும் என்ன பயனேத் தந்தது? அதை அக் காவியத்திற் காண்க. ஈ. வே. ரா. அவ்வியக்கத்தையே தமிழகத்தில்

ஆரம்பித்துப் பல வருடங்களாக நடத்திவருகிருர். அதன் பலனென்ன? இற்றை வரைக் கிடைத்த பலனே மேலே காட்டிய அவர் வாக்கியங் களே புலப்படுத்துகின்றன. நாளேப் பலனே நாளே யுள்ளார் காண்பர்.

இப்போது அவர் பச்சாத்தாபப் படுபவர்போலுந் தெரிகிறது.

'அறிவு என்பது நெருப்பைப் போன்றது. அதனுல் நன்மை யும் பெறலாம் தீமையும் பெறலாம்' (1—9—55 தமிழ்நாடு

என்கிருர் இரா. நெடுஞ்செழியன். அறிவின் விளேவைக் கொண்டு தான் அறிவின் தரத்தை மதிக்கவேண்டும். ஈ. வே. ராவுக்கும் அவர் தோழன்மாருக்கும் சைவ நிந்தை பாற்சோறு. அத் தீமையைத்தான் அவர் பெற்ருர். பிரசங் கித்தார். அவருக்கு நல்ல புத்தி வேண்டும். அதை ஊட்டுந் திறமை அவ்விளம்பர சைவருக்கில்லே. அவ்விராவை ருசோவென்று அச் சைவர் புகழ்ந்து விட்டார். அவரறிவுத் திறமை அதற்கே உதவுகிறது.

**அறிவும் சமயமும்**

சம்பந்தராதியரே சைவத் தலேவர், அவர் கீர்த்தியே கீர்த்தி. அதையெடுத்துப் பேசுவதே அச்சமய வளர்ச்சியில் ஆர்வமுடையார்க் குக் கடன், அழகுமாம். அந்நிய தேச, சமயத்தவருள்ளங்களிலும் புக்கழுந்துமாறு அது பேசப்பட வேண்டும். அவ்வகையில் இல்லது கூறற் கவசிய மில்லே. அத்தலேவன்மாரின் பொருள் சேர் புகழே மட்டுக்கு மிஞ்சியது. அதைக் கண்டு கூறுந் திறமையிருப்பது போதும். அப்பிரசாரமே சைவத்தை வளர்க்கும். ஆனுல் அவ்விளம்பர சைவர்

'நாயகத்தைப் போல ஒருவர் உலகில் தோன்றியதே கிடை யாது' (10—11—55 தமிழ்நாடு)

எனக் கூறி நபியைப் புகழ்கிருர். நபியைப் பற்றி அவ்வளவு தெரிந்த வர் இசுலாமிய சமய நூல்களில் தேர்ந்த ஆராய்ச்சியுடையவராகத்தா னிருப்பர். அவர் அச்சமயத்திற் புக வேறும் ஆராய்ச்சி வேண்டாம். அங்ஙனமாக அவர் இன்னும் இசுலாமிய ராகாமறரு னிருக்கிருர். அதன் காரணத்தை இசுலாமியரே அவர்பாற் கேட்டு வெளியிடல் நலமாகும்.

'சமய மேடைகளில் பிறர் பாராட்டுக்காகப் பொய்ப் பிரசாரம் அறவே கூடாது' (11—8—55 தமிழ்நாடு)

என்கிருர் அச்சைவர். அச்சமயத்திற் சேரும் வரை அவர் செய்கிற சைவப் பிரசாரமெல்லாம் அத்தகைய பொய்ப் பிரசாரமேயாம்.

'தமிழர்களும் பிறமதத்தினரும் இசுலாம் மார்க்கத்தை நன்கு கற்றல் வேண்டும்.' (7—11—55 தமிழ்நாடு)

என்றதும் அவருபதேசமே. இப்படிச் சைவத் தலைவரை விட்டு அந்நிய சமயத் தலைவரைப் புகழ்வதும், சைவ சமயத்தை விட்டு அந்நிய சமயங்களை யாதரிப்பதுமே அவர் பிரசாரமா யிருந்து வருகிறது. அவரா சைவத்தை வளர்க்குஞ் சைவர்? சைவஞ் செத்துக் கொண்டிருக்கிற தென அவர் துயரப்படுவது மாமி செத்தால் மருமகள் கண்ணீர் வடிப்பதும், ஒப்பாரி வைப்பதும் போன்றதே.

**சிறப்பு, பெயருக்கா? பெயரின் பொருளுக்கா?**

சத்தெல்லாம் பொருளில்தா னிருக்கிறது, பெயரிலில்லை. பெயர் எப்படி மாறினும் பொருள் கெடாது என்ற கருத்துள்ளது ஓர் ஆங்கில வசனம். பெயருக்கும் முக்கியத்துவமுண்டு என்பவரை நவீனர் அவ்வாங்கில வசனத்தைக் காட்டிக் கண்டிப்பர். ஆனால் சமீபத்தில் அவருக்கோ ராசை பிறந்தது. சென்னை ராஜ்யத்துக்குத் தமிழ்நாடு எனப் பெயரிட வேண்டு மென்பது அது. அதனால்

'பெயரில்தான் பண்பும், வலிமையும், சிறப்பும் ஒருங்கே பொதிந்துள்ளன என்பதற்கு வரலாறு பல சான்றுகளைக் காட்டுகின்றது' (11—10—55 தமிழ்நாடு)

என்கிறு ரவர். பொருள் போல் பெயரும் முக்கியம் என்பது இப்போது அவரறிவிற் பட்டது. அன்றியும் அவர்

'இசுலாம் என்ற அராபிச் சொல் சாந்தி அல்லது அமைதி என்ற பொருள் கொண்டது.' (29—10—55 தமிழ்நாடு)

எனக் கூறினராயினும் அச்சமயத்தை அப்பொருள் பற்றிச் சாந்தி சமயம், அமைதிச் சமயம் எனப் பெயரிட்டழையாமல் அவ்வரபுப் பெயர் பற்றி இசுலாம் சமயம் என்ற பெயர் கொண்டே விவகரித்தார்.

'அல்லா என்ற சொல் ஆண்டவரைக் குறிக்கும்.' (29—10—55 தமிழ்நாடு)

என்று பொருள் கூறிய அவர் அப்பொருள் பற்றி அல்லா என்பதற்குப் பதிலாக ஆண்டவர் என்ற பெயரிட்டு ஆண்டவர் ஒருவரைத் தவிர வேறு தெய்வம் இல்லை யென்னமல் அல்லா ஒருவரைத் தவிர வேறு தெய்வம் இல்லை என அல்லா என்கிற அரபுப் பெயரையே சொன்னர். அந்நிய சமயங்களின் மேல் அவர் கொண்ட மோகமும், அந்நிய சமயத்தார்களிடம் நல்ல பிள்ளைகளாய் நடந்து கொள்ளவேண்டுமென அவர்

கொண்ட ஜாக்கிரதையும் அளப்பரியன. ஆனல் சைவசமய விஷயத்திலும் சிவபிரான் விஷயத்திலும் அவருக்கு நாம வரம்பே கிடையாது. அவருக்கு வாயில் வந்தன வெல்லாம் சைவத்தின் பெயர்கள், சிவபிரானின் பெயர்கள். அப்படிக் கொள்வது வரம்பழிப்ப தாகுமென நான் சொன்னல், அவ்வாங்கில வசனத்தை உடனே எடுத்துக் காட்டுவா ரவர். என்னே அவர் தம் ஓரப்புத்தி! உண்மையில் அவர் சைவத்தை வளர்க்க வில்லை, எதையோ வளர்க்கிருர், அதற்கு என்னென்னவோ பெயர்கள் சூட்டுகிருர்; சிவனை வணங்கவில்லை, எவனையோ வணங்குகிருர்; அவனுக்கு என்னென்னவோ பெயர்களிடுகிருர். [1]'சிவனெனு நாமந் தனக்கேயுடைய செம்மேனி யெம்மான்', [2] 'சிவனெனு மோசை யல்ல தறையோ' என்றது திருமுறை. உபாசகர் பொருட்டுச் சிவனெனு நாமியே சிவனெனு நாமமாய் விளங்குகிரு னென்பது அதனற் போதரும், அந்நாம நாமிகளைப் பேதப் படுத்திப் பேசுவது பாதகம்.

> '(இராமலிங்கர்) சாதிகளையும் மதங்களையும் சாத்திரக் குப்பைகளையும் வன்மையாக ........................... கண்டித்துப் பாடியுள்ளார்' (18—9—55 தமிழ்நாடு)

---

1 சிவனெனும் நாமந் தனக்கேயுடையசெம் மேனிஎம்மான்
அவனெனை யாட்கொண் டளித்திடு மாகில் அவன்றனையான்
பவனெனும் நாமம் பிடித்துத் திரிந்துபண் ணுளழைத்தால்
இவனெனைப் பன்னுள் அழைப்பொழி யானென் றெதிர்ப்படுமே.

2 சிவனெனும் ஓசை யல்ல தறையோ வுலகில் திருநின்ற செம்மையுளதே,
அவனுமோரைய முண்ணி யதளாடை யாவததன் மோலா ராடலரவம்,
கவணள வுள்ள வுன்கு கரிகாடு கோயில் கலனுவ தோடு கருதில்,
அவனது பெற்றி கண்டு மவன்நீர்மை கண்டு மகனேர்வர் தேவரவரே.

[அப்பரடிகள் தேவாரம்]

என்கிருர் நவீனர். [1] ‘சாதி விடாத குணங்கள்’, [2] ‘கற்றல் கேட்டலுடையார் பெரியார்’, [3] ‘முனிவரு மன்னரு முன்னுவ பொன்னுன் முடியும்’, [4] ‘உடம்பை வளர்த்தே னுயிர் வளர்த்தேனே’ என்றது திருமுறை. சாதி நலம், கல்விப் பெருக்கம், பொருள் வளம், தேக சுகம், ஆகிய நான்கும் வேண்டு மென்பது கருத்து. அத்திருமுறைதானே [5] ‘சாதி குலம் பிறப் பென்னுஞ் சுழி,’ [6] ‘கல்வி யென்னும் பல்கடற் பிழைத்தும்’, [7] ‘வேண்டேன் செல்வம்’,

**சாதி, குலம், பிறப்பு, மதம் அவசியமா?**

1 சங்குதிரண்டு முரன் றெழு மோசை தழைப்பனவாகாதே
சாதிவிடாத குணங்கணம்மோடு சலித்திடு மாகாதே
[திருவாசகம்— திருப்படையாட்சி. 8]

2 முற்றலாமையிள நாகமோடேன் முளைக்கொம்பவை பூண்டு
வற்றலோடுகல னுப்பலிதேர்ந்தென துள்ளங்கவர் கள்வன்
கற்றல்கேட்டலுடை யார்பெரியார்கழல் கையால் தொழுதேத்தப்
பெற்றம் ஊர்ந்தபிர மாபுரம்மேவிய பெம்மானிவ னன்றே
[சம்பந்தர்— 1ம் திருமுறை திருப்பிரமபுரம். 2]

3 முனிவரும் மன்னரும் முன்னுவ பொன்னுன் முடியுமெனப்
பனிவருங் கண்பர மன்திருச் சிற்றம் பலமனையாய்
துனிவரு நீர்மையி தென்னென்று தூநீர் தெளித்தளிப்ப
கனிவரும் நாளிது வோவென்று வந்திக்கும் நன்னுதலே
[திருக்கோவையார்— 332.]

4 உடம்பார் அழியில் உயிரார் அழிவர்
திடம்பட மெய்ஞ்ஞானஞ் சேரவு மாட்டார்
உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே
[திருமந்திரம் 3 ம் தந்திரம்—சரீரசித்தி உபாயம். 1]

5 சாதிகுலம் பிறப்பென்னுஞ் சுழிப்பட்டுத் தடுமாறும்
ஆதமிலி நாயேனை அல்லலுறத் தாட்கொண்டு
பேதைகுணம் பிறருருவம் யானெனதென் னுரை மாய்த்துக்
கோதிலமு தானானைக் குலாவுதில்லை கண்டேனே
[திருவாசகம்— கண்டப்பத்து. 5]

6 கல்வி யென்னும் பல்கடற் பிழைத்தும்
[திருவாசகம்— போற்றித் திருவகவல்—வரி 38]

7 வேண்டேன் புகழ் வேண்டேன் செல்வம் வேண்டேன் மண்ணும் விண்ணும்
வேண்டேன் பிறப் பிறப்புச்சிவம் வேண்டார் தமை நாளும்
தீண்டேன் சென்று சேர்ந்தேன் மன்னு திருப்பெருந்துறை இறைதாள்
பூண்டேன்புறம் போகேன் இனிப் புறம்போகவொட்டேனே
[திருவாசகம்—உயிருண்ணிப் பத்து—7]

[1] 'பழியுடை யாக்கை' என்றுஞ் சொல்லிற்று. அந் நான்கும் வேண்டா மென்பது கருத்து. அவ்வேண்டு மென்பதும், வேண்டா மென்பதும் முரண். அப்படி அஃதேன் சொன்னது? சர்வான்மாக்களும் சைவ சமயத்தைச் சார்ந்து சிவோபாசனை செய்தே முத்தி பெறுதற் குரியன. அதற்காக அச்சமயம் இவ்வுலகில் நின்று நிலவுதல் இன்றியமையாத தாயிற்று. அந்நிலவுதலை இத்தமிழ்நாட்டில் செய்து வைத்தவர் அத் திருமுறை யாசிரியன்மாரே. அவரது பேரருட் டிறம் அதனுற் கண்டு கொள்ளப்படும். முத்தி தரவல்ல முழுமுதற் கடவுளாவார் சிவபிரானொருவரே. ஆனுல் அவ்வுண்மையை மறுத்துப் பேசுபவரும் மறந்து திரிபவரும் மலிந்தனர். அவர் பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரும் மருண் மேலிட்டுச் சாதிநல முதலிய அந்நான்கையும் சாசுவித மெனக் கொண்டு செருக்கினர். அச் செருக்கை வீழ்த்த வேண்டும். அதற்காக அந்நான்கின் நிலையாமை முதலியவற்றை அவ் வாசிரியன் மார் விளக்கினர். அவ் விளக்கமே அவை பற்றிய பழிப்புரை. ஆனுற் பூர்வபுண்ணிய முடையார் அவற்றைச் சிவோபாசனைக்குச் சாதகமாக்கி மகிழ்வர். அங்ஙனம் ஆக்குவோர்க்கு அவை போற்றப்பட வேண்டு மென உணர்த்து முகத்தால் அவ் வாசிரியன்மாரால் மதித்துப் பேசப் பட்டன. ஆகலின் அவை பழிக்கப்படும் போதும், மதிக்கப்படும் போதும் சமமாகவே வைக்கப்படும். எனவே அம் முரணுக் கிடமில்லாமை காண்க.

[2] 'பிறப்புடையர் கற்ருேர் பெருஞ்செல்வர் மற்றுஞ்
சிறப்புடைய ரானுலுஞ் சீசீ — இறப்பில்
கடியார் நறுஞ்சோலைக் காளத்தி யாள்வா
ரடியாரைப் பேணு தவர்'

என்றது திருமுறை அவ்வாசிரியன்மார் வகை கெட்டு அந்நான்கையும் ஒழிக்கச் சொல்லவில்லை. அவரது, திருவுள்ளத்தைக் கண்டறிய மாட்டாதவருக்கு அவ்வுண்மை புலப்படாது. நவீனர் அவ்வாசிரியன் மாரைப் பின்பற்றி யொழுகுகிற சைவரா யிருந்தால் ஒழிக்கும் விஷயத் திலும், போற்றும் விஷயத்திலும் அந்நான்கிலும் சமநோக்குடைய ராதல் வேண்டும். ஆனுல் அவர் உலக சுகத்திற் சொக்கிக் கிடக்க விரும்புகிருர். அதற்குச் சாதிகளிருப்பது பிரதிகூலம்; மற்ற மூன்று

---

1 *பழியுடை யாக்கை தன்னிற் பாழுக்கே நீரிறைத்து*
*வழியிடை வாழமாட்டேன் மாயமுந் தெளியகில்லேன்*
*அழிவுடைத்தாய வாழ்க்கை ஐவரால் அலைக்கப் பட்டுக்*
*கழியிடைத்தோணி போன்றேன் கடவூர்வீரட்ட னீரே.*
[அப்பாடிகள்—4-ம் திருமுறை திருக்கடவூர்—6]

2 *கயிலை பாதி காளத்தி பாதி அந்தாதி*—10
[நக்கீரதேவ நாயனர் 11-ம் திருமுறை]

மிருப்பது அநுகூலம். ஆகலின் அவரும் சாதிகளை மாத்திரம் சீ சீ யென வெறுத்தார். அவ்வாசிரியன்மார் சீ சீ யென்ற மற்ற மூன்றையும் அவர் வெறுக்கவில்லை, தேவாமுத மெனக் கொண்டார். இராமலிங்கர் சாதிப்பழிப்புப் பாடல்களைப் பாடி வையாமற் போனலும் கூட அந்நவீனர் அப்பழிப்புப் பிரசாரத்தை விடார். அவரே அன்னபாடல்களை யாக்கிக்கொள்வர். ஆனல் அவர் பிரசாரத்தில் திருக்குறள் குறுக்கிடும். அதையும் உதறிவிடுவா ரவர். திருவள்ளுவர் [1] 'பார்ப்பான் பிறப்பு' எனக் கூறிப் பார்ப்பனச் சாதி யுண்மையை அங்கீகரித்து மதித்தார். அதனல் மக்களுட் பிற சாதிகளும் உள, அவையும் வரிசையில் வைத்துக் காக்கப்படவேண்டும் என்பது அவர்க்குக் கொள்கை யாதல் போதரும். அந்தரங்க பகிரங்க விபசாரப் பெண்டிர் வயிற்றிலுதித்தாரெனும் பொருள்படக் [2] 'குலத்தின்கணையப் படும்' எனக் கூறி குலநலமில்லாமை யுண்டென்பதை அவர் காட்டியது மற்றென்று. [3] 'இழிந்த பிறப்பாய் விடும்' எனக் கூறிப் பிறப்பில் இழிவுண்டென்பதையும் அவர் காட்டினர். இப் பின்னிரண்டடிகளி லிருந்து உண்டானது இந்நாட்டுச் சாமானியர் தம்முட் சண்டையிடுங் காலத்தில் வழங்குகிற வைதல்வாசகமென்பதை யறிக. அத்திருவள்ளுவருக்கு மாறான இராமலிங்கர் நவீனருக்குப் பிரமாண புருஷராயினர், திருவள்ளுவர் எங்கோ போயினர்! [4] 'பிறப்பொக்கு மெல்லா வுயிர்க்கும்' என்ற அடிக்குச் சரியான பொருளை நவீனர் அறியார். ஆயினும் 'ஒன்றே குலம்' என்பதற்கு அவ்வடியைக் கொண்டு அவர் சப்பை கட்டுவர். அவர் கருதுகிறபடி குலம் ஒன்றே யென்பது மெய்யானல் பெண்டிர்க்குக் கற்புடைமை அவசியமா என்ற வினு எழவே செய்யும். அது பற்றி மேலும் சங்கித்தற்கிடனுண்டாகாத விதத்தில் அவர் அதற்கு விடை கூறிவிட்டுத் தம் கொள்கையைப் பிரசங்கிப்பாராக. சாதியைப் பழிக்கும் பிரசார மாவது சைவாலயங்களில் ஆதிசைவரே அர்ச்சனை யாதிகள் செய்யவேண்டுமென்ற சிவாகம விதியை அதிக்கிரமிப்பதற்குச் செய்யப்படுகிற முன்னேற்பாடே யாகும்.

---

1 மறப்பினும் ஒத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்புஒழுக்கம் குன்றக் கெடும்
[திருக்குறள்—ஒழுக்கமுடைமை—4]

2 நலத்தின்கண் நார்இன்மை தோன்றின் அவனைக்
குலத்தின்கண் ஐயப் படும்
[திருக்குறள்—குடிமை—8]

3 ஒழுக்கம் உடைமை குடிமை இழுக்கம்
இழிந்த பிறப்பாய் விடும்
[திருக்குறள்—ஒழுக்கமுடைமை—3]

4 பிறப்புஒக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்புஒவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்
[திருக்குறள்—பெருமை—2]

**இராமலிங்கர் திருவருட்பா சாத்திரக் குப்பைதானே?**

இராமலிங்கர் சமயங்களைக் கண்டித்துப் பாடினார். பொய்ச் சமயங்களைக் கண்டிப்பது பொருந்தும். ஆனால் இது பொய்ச்சமயம், இது மெய்ச்சமயம் என்ற வியவஸ்தையின்றி எல்லாச் சமயங்களையுமே அவர் நிந்தித்தார். [1] 'எச் சமயங்களும் பொய்ச்சமய மென்றி ரிச்சமய மிங்கு வாரீர், மெய்ச்சமயந் தந்தீர் வாரீர்' என்ற அவர் பாட்டுக் காண்க. உலகில் எச்சமயங்களு மிருக்கக் கூடா தென்பதுதான் அவரது விருப்பம். ஆனால் ஆரிய சமாசம், பிரம சமாசம், ஸாயிசமாசம், பிரமஞான சபை, அருள்நெறித் திருக்கூட்டம் முதலியனபோல் அவராலும் ஒரு சங்கம் சிருட்டிக்கப்பட்டது. அதுதான் சமரச சுத்த சன்மார்க்க சங்கம் என்பது. அச் சமாசம், சபை, கூட்டம் என்ற சொற்கள் சமயம் என்ற பொருளிற்றா னிருக்கின்றன. ஆகலின் அவையும் வெவ்வேறு சமயங்களே. அதுபோல் அச்சன்மார்க்க சங்கமும் ஒரு சமயந்தான். அதை அப்பாட்டில் 'மெய்ச் சமயம்' என அவர் சொல்லிப் புகழ்ந்துகொண்டார். சமயம் என்ற சொல்லில் வெறுப்புக் கொண்ட அவர் தம் சங்கத்தைச் சமயமெனச் சொல்ல வைத்தது அவரது ஊழேயா மென்க. அவர் நிந்தித்த சமயங்களுட் சைவமும் ஒன்றென்பது முன்னர்க் காட்டப்பட்டது. அவரோ, பிறரோ செய்கிற எத்தகைய நிந்தையாலும் எச்சமயத்தையும் அழிக்க முடியாது. அவரெல்லாம் சமாசம், சங்கம் முதலிய பெயர்களைச் சூட்டிப் புதுச் சமயங்களைக் கற்பிக்கலாம். புராதன சமயங்களோடு அவையுஞ் சேர்ந்து சமயங்களின் தொகை பெருகும். அதனால் மக்களுக்குட் பிளவுகளும் அதிகமாம்.

இராமலிங்கர் சாத்திரங்களைக் குப்பைகளென்றனர்.

[2] 'சாத்திரம் பல பேசுஞ் சழக்கர்காள்
கோத்திரமுங் குலமுங்கொண் டென் செய்வீர்
பாத்தி ரஞ்சிவ மென்று பணிதிரேல்
மாத்திரைக்கு ளருளுமாற் பேறரே'

என்றது திருமுறை. சாத்திரத்திற் கோத்திரம் வேண்டும், குலம் வேண்டும், பாத்திரஞ் சிவமென்று பணியுங் கொள்கை வேண்டும் என்பன சொல்லப்பட்டன. சிவபெருமானொருவரே சர்வான்ம சேவியரா யுள்ளவ ரென்ற பதிவிரதா தர்மபுத்தி யோடு அவரைப்

---

1 இராமலிங்கர்—திருவருட்பா—6-ம் திருமுறை வர்க்கமாலை யென்னுங் காலைப்பாட்டு – 68

2 அப்பரடிகள் 5-ம் திருமுறை. திருமாற்பேறு

பணியும் பாக்கியம் பாவகாரிகளுக்கிராது. பூர்வ புண்ணியப் பயனுகப் பொருள் வளம், கல்விப் பெருக்கம், தேக சுகம் முதலியவற்றைப் பெற்றவருள் சிலர்பலர் அவை பற்றித் தம்மை வியந்து புத்திகெட்டுச் சிவசேவையை மறந்து திரிவர். அப்படியே கோத்திர குலநலன்களைப் பெற்றவருள்ளும் அவைபற்றித் தம்மை வியந்தும், புத்திகெட்டும் பாத்திரஞ் சிவமென்று பணியாமல் திரிவாரு முளர். அவரைச் 'சழக்கர்காள்' என விளித்துக் கோத்திர குலநலன்கள் உள்ளனவே யாயினும் உடலோடு ஒட்டியனவே, உடல்போனல் அவையும் போம், அவை உயிரோடு செல்லா, சிவபிரானைப் பணிவதே தலையாய கடன், அதனை யாற்றுங்கள், அப்புண்ணியமே உங்களுயிரோடு சென்று அதற்குப் பேரின்பத்தை நல்கும் எனக் கருணை மேலிட்டு அவருக்கு உபதேசிக்கிருர் அத்திருமுறை ஆசிரியர். அது சாத்திர நிந்தையாகாது. சாத்திரோக்தமான ஆசரணை யில்லாதவரே சழக்க ரெனப் பட்டார். இராமலிங்கரால் அப்பாடலின் உட்கிடையைக் காண முடியவில்லை. அதனுல் சாத்திரங்களையே குப்பை யென அவர் பழித்தார். ஆனுல் பிறிதோரிடத்தில் [1] 'சாத்திரங்களிற் சிறந்தது திருமூலர் திருமந்திரம்' என்ற அவர் வாக்கியங் காணப்படுகிறது. குப்பைகளிற் சிறந்தது திருமந்திரம் என்பது அவர் கருத்தா? அன்ருயின் காரணங் கூறுக. இன்னும் அவர் பாடற்றிரட்டுச் சாஸ்திரமா? அசாஸ்திரமா? சாஸ்திரமாயின், அவர் பார்வையிற் குப்பையே. அம்முறையில் நானும் அப்படிக் கொண்டு ஒதுக்கவேண்டியவனே. அசாஸ்திரமாயின், அசாஸ்திரமெல்லாங் குப்பைதான். இன்னும் அவர் போற்றுஞ் சமரசவேத மென்ப தொன்று. அது குப்பையா? அன்ரு? அன்றென் ருல் ஆதாரம் வேண்டும். சைவசமய ஆலய கிரியைகளுக்குச் சிவாகமங்கள் விதிநூலா யிருந்துவரும் மரபைக் குலேக்கவே அவர் சாத்திர நிந்தையி லிறங்கினுர்.

'எம்மதமும் சம்மதமே என்ற வள்ளலாரின் கொள்கை .... .... ....'
(28—12--55 தமிழ்நாடு)

என்கிருர் நவீனர். இராமலிங்கர் அப்படியுஞ் சொல்லித் தானிருக்

---

1 திருமந்திரமும், திருவாசகமும்: சாத்திரங்களிற் சிறந்தது திருமூலர் திருமந்திரம, இது மொத்தம் எண்ணுயிரம் — தோத்திரஙகளிற் சிறந்தது திருவாசகம், இவற்றை ஊன்றிப்பார்க்கவும்—

திருவருட்பா [சமரச சுத்த சன்மார்க்க சங்க வெளியீடு, 6 வது திருமுறை-சமரச சுத்த சன்மார்க்கத் திருநெறிக் குறிப்புகள் — பக்கம் 68]

கிறார். எம்மதமும் தனக்குரிய சாத்திர மின்றி யில்லை. ஒரு மதத்துக் குரிய சாத்திரத்துக்குக் கட்டுப்படாத சமூகம் அம்மத சமூகமாகாது. அங்ஙனமாக எம்மத முஞ் சம்மதமே யென்ற அவருக்கு எச்சாத்திர முஞ் சம்மதம், எச்சாதியும் சம்மதம் என்பன வுங் கொள்கையாய்த்தா னிருக்க வேண்டும். ஆனால் மதம், சாத்திரம், சாதி ஆகியவற்றை அவர் சில பாடல்களில் நிந்திக்கிறார், சிலபாடல் களில் சம்மதிக்கிறார். அவருக்கு அவ்விரண்டும் ஒன்று போலும்.

**வள்ளலார் மதமும் தெய்வமும்**

'ஒருவனே தேவன் என்ற உலகப் பொது நெறியைப் போதித்'தார் இராமலிங்கர் (29—10—55 தமிழ்நாடு)

என்கிறார் நவீனர். இசுலாம், கிறிஸ்தவம், சுத்தசன்மார்க்க சங்கம் முதலிய சமயப் பெயர்களில் கடவுள் இருக்கிறார், அவர் ஒருவரே என்ற உண்மை புலனாக வில்லை. அப்பெயர்களைக் கேட்ட அளவில் அச் சமயங்கள் ஆத்திகமா? பல கடவுளரை வழிபடச் சொல்லுகின்றனவா? ஒரே தெய்வத்தை வழிபடச் சொல்லுகின்றனவா? என்ற சம்சயங்கள் எழுவது நிச்சயம். ஆகலின் தமக்கும் ஒரே தெய்வ வழிபாடுதான் உண்டெனை அவை அடிக்கடி தனிப்பட விளம்பரஞ் செய்தாக வேண் டும். ஆனால் சைவமென்ற சமயப் பெயரிலேயே சிவனொருவனே முழுமுதற் கடவுளென்ற பொருள் நன்கு தெரியக் கிடக்கிறது. [1] 'தருபவ னொருவன் வேண்டும்' என்பதால் ஒருவனே தேவ னென் பதையும், [2] 'அந்தம் ஆதி' என்பதால் அத்தேவன் சிவனே யென்பதையும் அளவை முகத்தால் நிர்ணயம் பண்ணியுள்ளது சைவம். அச்சமயம் பரவியிருக்கும் பிரதேசத்தில் வேற்றுச் சமயங்களின் ஏக தேவக் கொள்கையைக் கொண்டுவந்து விளம்பரஞ் செய்கிற நவீனர் கொல்லன் தெருவில் ஊசி விற்கிறவரே யாவர். ஒருவனே தேவனென்ற தொடரே திருமுறையிற் கண்டது. அதன் பொருளும் சிவனே பரம் என்பது தான்.

---

1 ஒருவனோ டொருத்தி யொன்றென் றுரைத்திடு முலகமெல்லாம்
வருமுறை வந்து நின்று போவது மாதலாலே
தருபவ னொருவன் வேண்டுந் தான்முத லீறுமாகி
மருவிடு மநாதி முத்த சித்துரு மன்னி நின்றே.

[சித்தியார் சூத்திரம் 1. செய்யுள் 1]

2 அவனவ ளதுவெனு மவைமூ வினைமையின்
தோற்றிய திதியே யொடுங்கிமலத் துளதாம்
அந்த மாதி யென்மனார் புலவர் —

[சிவஞானபோதம் 1 வது சூத்திரம்]

'சமயத் தலைவர்கள் .... .... .... இவ்வழியை .... ... .... காட்டு வதற்கு முற்பட்டார்கள். அவர்களுடைய முயற்சியே சமயம் என்ற பெயர் பெற்றது' 'இத்தகைய மெய்ஞ்ஞானப் பார வான்க .... .... .... .... ளுடைய கருத்துக்களே அவ்வச் சமயத் தின் கொள்கைகளாக வகுக்கப்பட்டன', 'வெவ்வேறு சமயத் தலைவர்களோடு தொடர்பு கொண்டவர்கள் வெவ்வேறு சமுகத்தினராகத் தனித் தியங்கி வாழத் தொடங்கினர்கள்'.

(28—12—55 தமிழ்நாடு)

**வேறுபட்ட கொள்கை யுடைய சமயங்களோ, அரசியல் கட்சிகளோ ஒன்றுபடுவதெப்படி? ஒன்று படுவதெக்காலம்?**

என்கிருர் நவீனர். அம்மூன்றும் சமயம் என்ருல் என்ன? சமயக் கொள்கைக ளென்பன எவை? ஒவ்வொரு சமயத் தலைவரோடுத் தொடர்பு கொண்டவர் எவ்வாறு வாழத் தொடங்கினர்? என்ற வினுக்க ளுக்கு விடைபோ லிருக்கின்றன. அச்சமூகப் பிரிவுகள் நவீனருக்குப் பிடிக்கவில்லை. அதனல்

'அவ்வச் சமயத்தின் கொள்கைகள் .... .... .... .... .... அடிப் படையில் உடன்பாடாயிருந்தும்' (28—12—55 தமிழ்நாடு)

ஒவ்வொரு சமயத்தினரும் வெவ்வேறு சமுகத்தினராய்த் தனித்தியங்கி வாழவேண்டுமா? என அவர் கேட்கிருர். சம்பந்தர் கொள்கையும், அப்பர் கொள்கையும் அடிப்படையில் உடன் பாடே. அதில் வேறுபாட்டுக் கொள்கையின் கலப்புச் சிறிது மில்லை. ஆகலின் சம்பந்தரோடு தொடர்பு கொண்டஅடியார்களும், அப்பரோடு தொடர்பு கொண்ட அடியார்களும் வேறு வேறு சமுகத்தினராய்த் தனித்தியங்க வில்லை. பேயாழ்வார் கொள்கையிலும், பூதத்தாழ்வார் கொள்கையிலும் அதுவே உண்மை. ஆனல் சம்பந்தர் கொள்கையும் பேயாழ்வார் கொள்கையும் அடிப்படையில் உடன்பாடா?ஆம்;ஆகலின் அவ்வடியார்கள் சைவராகவும், அவ்வாழ்வாரின் தாசர்கள் வைணவ ராகவும் வேறுவேறு சமுகத்தினராய்த் தனித்தியங்க வேண்டாம் என் கிருர் நவீனர். ஆனல் அவ் வடிப்படைக் கொள்கை சைவத்தில் வைணவத்திற்கு வேறுபட்ட கொள்கைகள் சிலவற்ருேடும், வைணவத் தில் சைவத்திற்கு வேறுபட்ட கொள்கைகள் சிலவற்ருேடுங் கலந்தே யிருக்கிறது. அவ்வேறுபட்ட கொள்கைகளை வகுத்தவரும் அவ்வச் சமயத் தலைவராகிய மெய்ஞ்ஞானப் பார வான்களே. இனி, அவ்வு டன்பாட்டுக் கொள்கை, வேறுபாட்டுக் கொள்கை யாய வற்றுள் வலி யுடையது எது? வேறுபாட்டுக் கொள்கையே யில்லையானல் மாத்திரம் உடன்பாட்டுக் கொள்கை வலியுடையதா யிருக்கும். வேறுபாட்டுக்

கொள்கையின் சம்பந்தம் இருந்திடு மானுல் உடன்பாட்டுக் கொள்கையின் வலி யடங்கியேவிடும். வேறுபாட்டுக் கொள்கையின் வலி மேம்பட்டு நிற்கும். அதை அதிக்கிரமிக்க உடன்பாட்டுக் கொள்கையால் முடியாது. வேறுபாட்டுக் கொள்கையை யநுசரித்தே உடன்பாட்டுக் கொள்கை பயன் தரவும் வல்லது. வேறுபாட்டுக் கொள்கை சார்ந்த உடன்பாட்டுக் கொள்கையை அவ்வேறுபாட்டுக் கொள்கையிலிருந்து பிரித்தெடுத்து அதைக்கொண்டு சமயங்களின் சமூகத்தினரை யொன்றுபடுத்த முயல்வது போதுபோக்கேயாம். பாரத தேசத்துக்கு நலஞ் செய்த லென்பது அரசியற் கட்சிகளனைத்திற்கும் உடன்பாட்டுக் கொள்கை. ஆனுல் காங்கிரஸ், கம்யூனிஸ்ட், ஜன சங்கம், முதலிய கட்சிகளுக்குத் தனித்தனிக் கொள்கைகளு முள. அவை கட்சிதோறும் வேறுபட்டன. அவ்வுடன்பாட்டுக் கொள்கை நிதரிசனமு மானது. அதைப் பிரித்தெடுத்துப் பிரசாரஞ் செய்து அக்கட்சிகளை யொன்றுபடுத்த அரசியல் மேதைகளால் முடிகிறதா? சமயத்துறையில் அவ்வுடன்பாட்டுக் கொள்கை கண்ணுக்குத் தெரியாதது. அதை யெடுத்துப் பிரசங்கித்துச் சமயங்களை யொன்ருக்குவது எப்படி முடியும்? 'தி—க, தி—மு—கவைச் சேர்ந்த வர்க — — — ளுக்கு — — — கடவுள் வழிபாட்டில், கடவுளிடத்து நம்பிக்கை வந்தது குறித்து மகிழ்ச்சி ஏற்பட்டுள்ளது' என நவீனர் சொன்னது முன் காட்டப்பட்டது. அந் நம்பிக்கை யுண்மையே யாகுக. அதுவே பற்றி அத் தி—க, தி—மு—கவை யாவது ஒன்ருக்குவது தானே. அக் கூட்டத்தினரோடு சைவர் அளவளாவ வேண்டுமாம். உடன்பாட்டுக் கொள்கையை மாத்திரம் பிரித்தெடுத்துப் பேசித் திரிவது ஒவ்வொரு சமயத்துச் சமூகமும் தன்சமயத்திற் கொண்ட பற்றைச் சிறிது சிறிதாக விடுத்து நாத்திகப் படுகுழியிற் போய் விழுமாறு செய்யு மென்பது நிச்சயம். ஆகலினன்ரே

> 'ஐக்கிய மடைவதற்காக மதங்களை யெல்லாம் ஒன்ருக்க முயல்வது வீணுகும். ஒரே மாதிரியான கடவுள்வழிபாட்டையும் மற்றப் புறச் செயல்களையும் கட்டாயப் படுத்துவதும் நல்லதல்ல' (14—6—55 தினமணி)

என நவீனருக்கு அறிவு கொளுத்துவது போலக் கூறினர் அரசியல் மேதை யெனப்படும் ராஜாஜி.

> 'சமயங்களிடையே யுள்ள வேறுபாடுகளை வற்புறுத்தாமல் அவற்றின் பொதுவான உண்மைகளை மட்டும் வலியுறுத்த வேண்டும் என்று அவர் (இராமலிங்கர்) கூறியிருக்கிருர்' (28—12—55 தமிழ்நாடு)

என்கிறார் நவீனர். வேறுபாட்டுக் கொள்கைகளின் இன்றியமையா மையையும், பயப்பாட்டையும்அவர் உணர்கிலர்.

சமயங்களிடையே யுள்ள வேறு பாடு களும் பொது உண்மை களும், இராமலிங்கரும்

இராமலிங்கரும் அன்னரே. பொதுவான உண்மைகள் என நவீனர் சொன்னவை தான் இராமலிங்கர் விரித்த கடைச் சரக்குப் போலும். ஆயின்

'கடையை விரித்தேன்; கொள்வாரில்லை; ஆகையால் கட்டி விட்டேன்' (28—12—55 தமிழ்நாடு)

என அவர் கூறி வருந்தியது சரி. அவரின் நேர் சீடரானோர்க்கு மேற் காட்டிய காரணங்களால் அச்சரக்கை ஏற்கச் சம்மத மிருந்திராது. மேலும் அச்சீடன்மார் தம் ஆசிரியரோடு நெருங்கிப் பழகியவராகலின் அவருடைய வாழ்வு வகைகளையும் தெரிந்தவராயிருப்பர். ஆகையாற்றான் அவர் அவ்வாசிரியரின் வழி யொழுகாமல்

'சீடர்கள் அவர்களைத் தமக்குத் துணையாகத் தான் கொண்டார்கள்' (29—10—55 தமிழ்நாடு)

என்று நவீனரே சொன்னபடி அவ்வாசிரியரைத் தம் இலௌகீக காரியசித்திக்குப் பயன்படுத்திக் கொண்டனரெனத் தெரிகிறது.

'இசுலாமியச் சமயத்திற்கும், இந்து மதக் கோட்பாடுகளுக்கும் பல துறைகளில் உடன்பாடு உண்டு'
(29—10—55 தமிழ்நாடு)

என ஆசையாற் சொல்லி நபியையும் இராமலிங்கரையுஞ் சமப்படுத்தப் பார்க்கிறார் நவீனர். நபியின் காலத்தில் அவருக்கு நேர் சீடரானார் பலர். அவருள் ஒருவராவது அந்நபிக்குச் சூது செய்தா ரென என்னாற் சொல்ல முடியவில்லை. செய்தா ரிருந்தாலும் மிகச் சிலராய்த்தா னிருப்பர். சம்பந்த ராதியோர் காலத்தில் அவ்வாசிரியன்மாருக்கு நேர் சீடராகி அவரோடு தல யாத்திரை செய்த அடியார் பல்லாயிரவர், அவருள் ஒருவராவது அவ்வாசிரியன்மாரை வஞ்சித்தொழுகினாரிலர். அவரனைவரும் அம்மெய்ஞ்ஞானப் பாரவான்களைத் தம் குல தெய்வமெனக் கொண்டு போற்றவே செய்தனர். ஆனால் இராமலிங்கருக்கு நேர் சீடரனைவருமே அவரிடம் உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசி யொழுகினர். அதனைத் [1] 'தீக்குணத்தார் யாவருமென் சீடரெனி னென்னுடைய, தீக்குணத்தி னெல்லை யெவர் தேர்கிற்பார் — ஊக்கமிகு, நல்லோர்க் களிக்கு நதிச்சடையோ யெற்கருளி, னெல்லோர்க்கு மையுறவா மே' என இராமலிங்கரே

1 திருட்வருட்பா, சிவநேச வெண்பா 73 முதல் திருமுறை.

பாடி யிரங்கினர். அதிலுள்ள 'யாவரும்' என்ற சொல்லே நோக்குக. நபிக்கும் அவருக்கும் உடன்பாடு எங்கிருக்கிறது? சம்பந் தாதியோர் பிரபாவமோ நிகரற்றது.

> 'பின்னர் உலகம் அவரை (இராமலிங்கரை)த் தெய்வமாகக் கொண்டாடத் தொடங்கிற்று', 'இரண்டு வாரங்களுக்கு முன் வடலூரில் அவர்களுடைய....................விழாவைக் கொண்டா டுவதற்கு இலட்சக்கணக்கான மக்கள் கூடினர்கள்'
>
> (29—10—55 தமிழ்நாடு)

என்கிருர் நவீனர். அவர் மகிழ்ச்சி அது. ஆனல் குமரகுருபர முனிவர் பாடிய [1] 'வேதமென்னும் பாதபம் வளர்த்தனே' எனத் தொடங்கும் பகுதியைத் தொடர்ந்து படித்த சைவசீலர் அக்கூட்டத்தை ஒரு பொருளாகக் கொள்ளார். மேலும், 'தீக்குணத்தார் யாவருமென் சீடர்' என்ற அடி என் சீடரெல்லாம் தீக்குணத்தாரா யிருக்கின்றனர் என்ற பொருளோடு, தீக்குணத்தா ரெல்லாருந்தான் எனக்குச் சீடராய் வந்து சேர்வர் என்ற பொருளேயுந் தரக்கூடியதா யிருக்கிறது. ஆகலின் அவ் விலட்சக் கணக்கான மக்களேயும் பற்றி இராமலிங்கரே கொண்டுள்ள தீர்ப்புப் புலனும்.

> 'வள்ளலாருக்கு முன்னே தோன்றிய நாயன்மார்களும் மற்றையோரும், தத்தம் சமயமே மற்றவற்றை விட உயர்ந் தது என்று இறுமாப்புடன் கூறினர். வள்ளலாரோ தம் சமயத்தை மட்டும் போற்றவில்லே. மற்றச் சமயங்களுக்கும் அவர் மதிப்புக் கொடுத்தார்....................'
>
> (16—10—55 தமிழ்நாடு)

என்கிருர் நவீனர். நாயன்மாரின் சமயம் வேறு இராமலிங்கரின்

---

1 குடிலேயென்னுந் தடவயனுப்ப
ணருள் வித்திட்டுக்கருணே நீர்ப்பாய்ச்சி
வேதமென்னும் பாதபம் வளர்த்தனே
பாதபமதனிற் படுபயன் பலவே

அவற்றுள்,

இலேகொண்டு வந்தனர் பலரேயிலே யொரீஇத்
தளிர்கொண்டு வந்தனர் பலரே தளிரொரீஇ
யரும்பொடு மலர்பிஞ் சருக்காயென்றிவை
விரும்பினர் கொண்டு கொண்டு வந்தனர் பலரே
யவ் வாறு றப்பு மிவ்வாறு பயப்ப
வோரும் வேதாந்த மென்றுச் சியிற்பழுத்த
வாராவின்ப வருங்கனி பிழிந்து
சாரங்கொண்ட சைவசித்தாந்தத்
தேனமு தருந்தினர் சிலரே

சமயம் வேறு என்பதை அவ்வசனத்தில் அவருஞ் சம்மதித்தார். இறுமாப்பு நாயன்மாரிட மிருந்தது, இராமலிங்கரிட மில்லை என்பதும் அவர் கொள்கை. சைவ சமூகம் சூடு சொரணை யற்ற தென அந் நவீனர் எண்ணியிருந்தாலொழிய நாயன்மார்க ளென விதந்து கூறி 'இறுமாப்புடன்' என்ற சொல்லைப் பிரயோகியார். சைவ சமூகமே! நீ அப்படிப்பட்டதுதானு? மேற்காட்டப்பட்ட [1] 'எச்சமயமும்...............' என்ற பாட்டை அவர் படித்திலரா? அல்லது அதற் கருத்தம் தெரிந்திலரா? அல்லது அதை மற்றவர் படித்திருக்க மாட்டாரென நினைத்தனரா? அதில் இராமலிங்கர் மற்றச் சமயங்களெல்லாம் பொய், தம் சுத்த சன்மார்க்க சங்கமாகிய சமயமே மெய் என்றனர். அது இறுமாப்புடன் கூடியதாகாதா? மேலும் அந் நவீனரே

**இராமலிங்கர் சமயங்களை மதித்தனரா? நிந்தித்தனரா?**

> 'புத்தர், நபி, ஏசு' முதலியோரை 'மகான்கள்' என்ருர். அவர் 'மற்றையோரும்' என்றதில் அம் மகான்களும் அடங்குவர். அவருந் தத்தஞ் சமயமே உயர்ந்ததெனச் சொன்னவர்தான். அது இறுமாப்பாகாதா? அங்ஙனமாக இராமலிங்கரும் அம் மகான்களோடு வையம் முழுமையும் நின்று நில' வ (16—10—55 தமிழ்நாடு)

வேண்டுமென்று அந் நவீனர் ஏன் ஆசைப்பட்டார். தாம் எழுதுவது இன்னதென்றே அவருக்கு விளங்க வில்லை. பாவம்.

இராமலிங்கர் எல்லாச் சமயங்களையும் மதித்துப் பாடினு ரென் ருர் அந் நவீனர், கண்டித்துப் பாடினு ரென்ருர் முன் காட்டப்பட்ட மற்ருெரு நவீனர். அவர் பாடல்களின் திரட்டு அவரைச் சார்ந்த வருக்குள்ளேயே அங்ஙனம் பிளந்த கருத்தை யுண்டாக்கிற்று. உண்மையில் அவர் சமயங்களை நிந்திக்கவே செய்தார். ஒவ்வொரு சமயத்திலும் வழிபடப்படுங் கடவுளையே வைதுதள்ளினு ரவர்.

---

1 84ம் பக்கம் பார்க்க.

[1] 'எச்சமயத் தேவரையு மினி மதிக்க மாட்டேன்,'
[2] 'நான்முகர் நல் லுருத்திரர்கள் நாரணரிந்திரர்கள் நவில ருகர் புத்தர்முதல் மதத்தலைவ ரெல்லாம்..........சிறுபிள்ளைக் கூட்டம்'

என அவர் பாடியது காண்க. 'இனி' என்பதற்கு முன்னுள்ள காலத்தில் அவர் பாடியன வெல்லாம் அவராலேயே ஒதுக்கப்பட்டன. காரணம் முன் கூறியாயிற்று. எம்மதமுஞ் சம்மதமென்ற கொள்கைப் பாடல்கள் அப்பகுதியைச் சேர்ந்தன. ஆகலின் அக் கொள்கை அவருக்குச் சம்மத மன்றென்பது தெரிக. பின்னுள்ள காலத்திற் பாடியனவே அவருள்ளத்தைப் பிரதிபலிப்பன. அவற்றில் சமயங்கள், சாதிகள், சாத்திரங்கள் பற்றிய நிந்தை யுண்டு. ஆகலின் அவர் எல்லாச் சமயங்களையும் நிந்தித்தவ ரென்பதே உண்மை.

[3] 'சேய்போ லுலகத்துயிரை யெல்லா மெண்ணிச் சேர்ந்துபெற்ற
தாய்போ லுரைப்பர் சன்மார்க்க சங்கத்தவர் சாற்று மெட்டிக்
காய்போற் பிறர்தமைக் கண்டாற் கசந்துட் கடுகடுத்தே
நாய்போற் குரைப்பர்துன் மார்க்க சங்கத்தவர் நானிலத்தே'

எனப்பாடித் தம் சுத்த சன்மார்க்க சங்கமாகிய சமயத்திற் சேராத பிற சமயிகளை நாயென்றும், அவர் பேசுவதை நாய் குரைப்ப தென்றும் பழிப்பது சமரசவாதி யெனப் போற்றப்படுவாருக்குத் தகுமா?

'உலகிலே — — — — எல்லா மதங்களின் சாரங்களையும் பிழிந்தெடுத்து மேலும் ஏடகத்தே எழுதாத மறைகளெல்லாம் வள்ளலார் உள்ளத்திலிருந்து பெருக்கெடுத்துத் திரு அருட்பாக்களாக வெளிவந்துள்ளது' (8—2—56 "தமிழ்நாடு)

என்கிறூர் நவீனர். எச்சமயத்துக்குஞ் சாரமாயிருப்பது அச்சமயத்தில்

---

1 இச்சையெலாம் வல்லதுரை யென்னைமணம் புரிந்தா
ரேடியெனக்கிணை யெவர்களென் றவதனலோ
வெச்சமயத் தேவரையு மினி மதிக்கமாட்டேனென்று
சொன்னேனிதனலோ வெதனலோவறியேன்,
கச்சுமரக்கனி போலே பாங்கிமனங் கசந்தாள் நயந்
தெடுத்து வளர்த்தவளும் கயந்தெடுப்புப் புகன்றாள்;
அச்சமிலாளி வளென்றேயவருரைத்தார் மடவா
ரண்ணல் நடராஜர் திருவெண்ணமறிந் திலனே.
திருவருட்பா—6-ம் திருமுறை — தலைவிவருந்தல்.5

2 திருவருட்பா—6-ம் திருமுறை — அருள்விளக்கமாலை — 89

3 திருவருட்பா—6-ம் திருமுறை — திருவருட்பேறு கலித்துறை தனிப்பாடல்

வழிபடப்படுந் தெய்வமே. அதுவே அச் சமயத்துக்கு உயிர். அதை மதியாதவருக்கு அச்சமயம் உயிர்போன உடல்தான். மற்றைச் சமயங்க ளெல்லாம் அவற்றின் தெய்வங்களை மதியாத இராமலிங்கருக்கு அத்தகைய உடலங்களே. அவற்றிலிருந்து பிழிந்தெடுக்கப்பட்ட சாரம் எப்படி ருசிக்குமோ? மணக்குமோ? சைவமும் ஒரு சமயந்தான். அதிலிருந்து அவர் பிழிந்தெடுத்த சாரம் எது? உதறித் தள்ளிய சக்கை எது? அவ் விரண்டையுஞ் சிறிது விவரமாயேனும் அந் நவீனர் காட்டுக. ஏடகத்தே எழுதாத மறைகள் அப் பாடற் றிரட்டினுள் எந்தப் பாடல்களிற் பிரசன்னமாகின்றன? அவற்றுள்ளுஞ் சிலவற்றையாவது அவர் எடுத்துக்காட்ட வேண்டும்.

இராமலிங்கர் பாடல் காதல் ரசமா? வசை மொழிகளா?

இராமலிங்கர் [1] 'நச்சரவ மாதிக் கொடியவுயி ரத்தனையும் போயொழிக' எனச் சபித்துப் பாடியது சீவகாருண்யப் பாடலா?

[2] 'ஒருமடந்தை வலிந்தணைந்து கலந்தகன்ற பின்னருளம் வெருவியென் செய்தோ மென்றயர்ந்த போது, பெருமடஞ் சேர் பிள்ளாயென் கெட்ட தொன்றுமிலை நம்பெருஞ் செயலென் றெனைத்தேற்றிப் பிடித்த பெருந்தகையே, திருமடந்தை மாரிருவ ரென்னெதிரே நடிக்கச் செய்தருளிச் சிறுமை யெல்லாந் தீர்த்த தனிச் சிவமே' என்ற அவர் பாடலிலுள்ள சம்பவம் அவருக்கு என்ன புகழைத் தந்தது.

இராமலிங்கர் தாயுமானுருக்குக் கூறிய ஜோஸ்யம்

சுத்தாத்துவித சித்தாந்த சைவத் திரு நெறியை நிலைநாட்டிய சிவஞானச் செல்வர்கள் பலருள், துறவுக் கோலத்துக்கோ ரெடுத்துக் காட்டாக விளங்கிய தாயுமான அடிகள் முன்னணியில் நிற்பவராவார்கள்; ——— திருவருள் ஞானப் பெருஞ் செல்வப் பிழம்பாகிய திரு மூல நாயனர் மரபிலே தோன்றிய மெய்கண்ட பரம்பரையில் ஞானேபதேசம் பெற்ற மௌனகுரு சுவாமிகளின் அருளுபதேசம் இவருக்குக் கிடைத்தது' என்கிறது செட்டி நாடு, மலர் 25, இதழ் 16 ஆசிரியப் பகுதி. அத்தகைய பெரு

---

1 அச்சந் தவிர்த்தே யருளிச் செலுத்துகின்ற
விச்சையரசே விளங்கிடுக — நச்சரவ
மாதிக் கொடிய வுயிரத்தனையும் போயொழிக
நீதிக் கொடி விளங்க நீண்டு.
[திருவருட்பா — 6 ம் திருவருட்பா — சமரசநிலை 4]

2 திருவருட்பா — 6 ம் திருமுறை — அருள்விளக்கமாலை 47.

மகனுரைப் பற்றி இராமலிங்கர் 'தாயுமான சுவாமிகள் ——— சுத்தப் பரப்பிரமத்தினிடத்தில் இரண்டறக் கலந்து விட்டதாக முறையிடுவது வாஸ்தவமா? அவாஸ்தவமா? என்ருல் அவாஸ்தவம் ——— தாயு மானவர் ——— மத சன்மார்க்கி என்று ஒருவாறு சொல்லலாம் ——— நாளைச் சுத்த சன்மார்க்கம் வழங்கும் போது இவர் ——— உயிர் பெற்று மீள வருவார் ——— முன்னிருந்த அளவைக் காட்டிலும் விசேஷ ஞானத்தோடு சுத்த சன்மார்க்கத்துக்குரியவர்களாய் வருவார் ——— சாத்தியராய் இரண்டறக் கலப்பார்? என்கிருர். இது அச்சிவ ஞானச் செல்வரைக் குறை கூறியபடியாம். தாயுமானுர் மீள வுயிர் பெற்று வரும்போது அவருக்குக் கிடைக்கப் போவதாக இராமலிங்கர் ஜோஸியங் கூறுகிற விசேஷ ஞானம் அத்தாயுமானுர் தாயுமானுரா யிருந்தபோது பெற்றிலராமே. இராமலிங்கர் அதை எங்ஙனங் கண் டார்? அதற்கான ஆதரவு சிறிதும் அவர் காட்டவில்லை.

அது மாத்திரமா? [1] 'வியாகரணம் — தொல்காப்பியம் — பாணினீயம் முதலியவைகளில் சொல்லியிருக்கிற இலக்கணங்கள் முழுவதும் குற்றமே. அவற்றில் குற்றமே சொல்லியிருக்கின்ருர்கள்' என்கிரு ரவர். சம்ஸ்கிருதத்துக்கு வரம்பா யிருப்பது பாணினீயம்' தமிழுக்கு வரம்பா யிருப்பது தொல்காப்பியம். அவற்றில் அவர் கண்ட குற்றமென்ன? செய்த திருத்தமென்ன? பிற பெரு மக்களையும், பிற பெரு நூல்களையும் காரணம் காட்டாமல் வாயில் வந்தபடி தூஷிப்பதில் அவரை யாராலும் வெல்ல முடியாது. நவீனருக்கு அவரது பாடற்றிரட் டைப் படித்து அவர்மேற் காதல் பிறக்கவில்லை. அவரது ஊழே அத னைப் பிறப்பித்தது. காதலுக்குக் கண்ணில்லை யென்பது பழமொழி. அதன்படி இராமலிங்கர் சொன்னவை யெல்லாம் நவீனருக்கு இனித்தன.

'தாயுமானவரும் இராமலிங்கரும் உண்மைச் சமய வாழ்வைக் கண்ட பெரியர்' (23—7—55 தமிழ்நாடு)

என்கிருர் நவீனர். மேலே காட்டியபடி தாயுமானவரை இராமலிங்கர் இகழ்ந்ததை அவர் படித்தறியார்.

[2] பெரிய புராணத்திற் குறித்த 63 நாயன்மார்களும் தத்துவங் களே ஒழிய வேறல்ல ——— கணபதி சுப்பிரமணிய சுவாமிகளும்

---

1 திருவருட்பா சமரச சுத்த சன்மார்க்க சங்க வெளியீடு 6ம் திருமுறை வசனபாகம் உபதேசம் பக்கம் 573

2 திருவருட்பா சமரச சுத்த சன்மார்க்க சங்க வெளியீடு 6ம் திருமுறை திருநெறிக்குறிப்புகள் பக்கம் 65

அறுபத்து மூன்று நாயன்மார்கள் இராமலிங்கரின் தூஷணை

தத்துவங்களே தவிர வேறல்ல. புராணங்களி னிருதயமெல்லாம் தத்துவ சம்மாரமே. இதன் உண்மை சுத்த சன்மார்க்கத்தில் விவரமாய் விளங்கும்' என்ருர் இராமலிங்கர். 63 நாயன் மார்களும் சிவமாந்தன்மைப் பெரு வாழ்வு பெற்ற ஆன்ம வர்க்கங்களல்லராம், சடப் பொருளாகிய தத்துவங்களாம். கணபதி சுப்பிரமணிய சுவாமிகள் தெய்வங்க ளல்லராம், சடப்பொருளாகிய தத்துவங்களாம். புராணங் களி னிருதயம் தத்துவ சம்மாரமாம். ஆகலின் அந்நாயன்மார்களையும்' அச்சுவாமிகளையும் சங்கரிக்க வேண்டும் போலும். அவர் சம்பந்தாதி யோரையும், மாணிக்கவாசகரையும், கணபதி சுப்பிரமணிய சுவாமி களையும் பிரமாதமாகத் துதித்துப் பாடினர். அத்துதிகளால் அவர் சடங்களையே வணங்கின ரென்பதாயிற்று. அந்நாயன்மார்களையும் அச்சுவாமிகளையும் அங்ஙனந் தூஷிப்பதைக் காட்டிலும் சைவ சமய தூஷணை வேறுமுண்டோ? அப்படித் தூஷித்தவரைச் சைவருள் எத் தனை பேர் சுற்றிச் சுற்றித் திரிகின்றனர். இம்மானங் கெட்ட செயல் வேறெச் சமயத்தாரிடமுமில்லையே. நிலைகெட்ட அச்சைவரை நினைக் கும் போது நெஞ்சு பொறுக்குதில்லை. [1] 'சுத்த சன்மார்க்கத்துக்கும் முக்கியத் தடையாகிய சமயம், மதம் முதலிய மார்க்கங்களை முற்றும் பற்றறக் கைவிட்டவர்களும் .... .... .... ஆகிய இவர்கள் தான் சுத்த சன்மார்க்கத்துக்கு உரியவர்கள் ஆவார்கள்' என்கிருர் இராமலிங்கர். அதன்படி அச்சைவர் சைவ சமயத்தைப் பற்றறக் கைவிட்டு அச்சுத்த சன்மார்க்கத்துக்குப் போய்த் தொலையலாமே. அப்படிக் கைவிட்டவர் தான் அச் சன்மார்க்க சங்கத்திற் சேர்தற்கு யோக்கியதை யுடையவ ரென இராமலிங்கரே சொல்லிவிட்டார். அங்ஙனமாகச், சைவரா யிருந்து கொண்டே அவரைச்சுற்றுபவர் அவரையும் ஏய்க்கிறவராவார். சைவ சமூகத்துக்கு Black sheep in the fold என்பவர் அவர்தான். இன்றேல் ஐயோ! சைவ சமூகத்துக்கு அவர் 'யாரோ அறியேன் பராபரமே'.

---

1 திருவருட்பா சமரச சுத்த சன்மார்க்க வெளியீடு
6ம் திருமுறை திருநெறிக் குறிப்புகள் பக்கம் 18

[1] 'சூரியனுக்குக் கலை 16............சந்திரனுக்குக் கலை 16............ அக்கினிக்குக் கலை 64............ஆகக் கலை 96. மேற்படி 96 கலையே 96 தத்துவமாய்ப் பிண்டவடிவமாயிற்று. அக்கினிக்கலை 64 ன் குணங்கள் சைவத்தில் 64 திருவிளையாடல்களாகவும் உண்மை அடியார்கள் 63, அதீதம் ஒன்று ஆகவும் வழங்குகின்றன. சந்திரக்கலை 12 வைஷ்ணவ பரத்தில் துவாதச ஆழ்வார்களாக வழங்குகின்றன. மற்ற 20 கலையும் 'கௌமாரம் பாசுபதம், மகாவிரதம், சாத்தேயம், காணுபத்தியம், காபாலம், சௌரம், மகம்மதீயம், பௌத்தம், கிறிஸ்துவம் முதலிய சமயங்களில் வழங்குகின்றன. இவற்றின் அனுபவங்களைக் குருமுகத்தில் அறிக' என்றார் இராமலிங்கர். சூரியனும், சந்திரனும், அக்கினியும் சடங்கள், ஆகலின் அவற்றின் கலைகளுஞ் சடங்களே, அக்கலைகளே திருவிளையாடல்கள், நாயன்மார்கள், ஆழ்வார்கள் என்றால் அதைக் கேட்ட பிறகு அவரைச் சுற்றிக் கொண்டிருக்கிற சைவர் சாபவயத்தராய்த்தானிருக்கவேண்டும். 20 கலைகளும் பாசுபத முதல் கிருஸ்துவம் வரையுள்ள சமயங்களில் 'வழங்குகின்றன' என்றால் எப்படி வழங்குகின்றன என்பது தெரியவில்லை, அதைத் தெரிவிக்கக் குருவேண்டாம். நவீனரே போதும், அவர் தெரிவிப்பாரா? தம்மையும் ஒரு கலையென இராமலிங்கர் சொல்லவில்லை. ஒரு கலையை அதீத மென்றாரவர். அது தான் அவரோ?

**தத்துவங்கள் — இராமலிங்கரின் நவீனக் கருத்து—**

இதுவரை இராமலிங்கரைப்பற்றி நான் மிகச் சுருக்கிச் சொன்னேன். அவரைச் சைவசமூகம் அறிந்திருக்க வேண்டும். அதற்கு அவ்வளவு போதுமென்பது என் கருத்து. சம்பந்தாதி சைவத் தலைவருக்கு மாலையிட்டு அவரருட் பாடல்களை வரம் பழியாமற் போற்றி வாழ்கிற அச்சமூகத்தின் முன் இராமலிங்கருஞ் சைவர்தான், அவர்பாடல்களுஞ் சைவப் பாடல்கள்தான் என நவீனர் சைவ வேடத்தில் மறைந்து கொண்டு பலமான பிரசாரஞ் செய்து எத்தனையோ சைவரை சைவ நெறியிற் பிறழ்ந்து நடக்குமாறு செய்து வருகின்றனர். அச்செயல் [2] 'நீங்கள் ........ ........ மற்றவர்களையும் நமது ஒழுக்கத்துக்கு வரும்படி எவ்வித தந்திரமாவது செய்து நம்மவர்களாக்கிக் கொள்ள வேண்டியது' என இராமலிங்கர் பிறப்பித்த ஆணை வழித்தாகும், மெய்யான சமயத்தை நேர்மையாகப் பிரசாரஞ் செய்பவர் தந்திரத்தைக் கையாளுவானேன்? தந்திரப் பிரயோகத்தோடு கூடிய சமயப்

**வரன்முறையற்ற தந்திரமுஞ் செய்து மதம் மாற்ற இராமலிங்கர் உத்தரவு**

1 திருவருட்பா சமரச சுத்த சன்மார்க்க வெளியீடு
6ம் திருமுறை திருநெறிக் குறிப்புகள் பக்கம் 86

பிரசாரத்தால் அச்சமயம் சத்துக் கெட்ட தென்றே துணியப்படும். 'தந்திரமாவது செய்து' என்று சொல்லாமல் 'எவ்வித தந்திரமாவது செய்து' என்று சொன்னூரே இராமலிங்கர். அதனுல் வரன்முறை யற்ற தந்திரத்துக்கும் அவரனுமதி யுண்டெனத் தெரிகிறது; வெட்கம். அவருக் காட்பட்டுப் பல சைவர் தம் சமயத்துக்கு உதவாமற் போகின் றனர். அப்படிப் போக்குவதில் பெரும் பங்கு நவீனருடையதே அவர் சைவத்தை வளர்க்கத் தோன்றி யிருக்கின்றனராம். விந்தை.

'சிறு தெய்வ வணக்கம்' (11, 18—12—55 தமிழ் நாடு)

என்றொரு கட்டுரை யெழுதி யிருக்கிருர் நவீனர்.

சிறு தெய்வங்கள் எவை?

தொல்காப்பியர் காலமுதலே தமிழர் பல சிறுதெய்வங்களே வணங்கி வந்தனர்; இடையில் அவ்வணக்கத்தின் மதிப்புக் குறைந் தது; இனியாயினும் அவ்வணக்கம் பழைய உயர் நிலேக்குக் கொண்டு வரப்பட வேண்டும் என்ற பிரசங்கம் அது. அதில் முருகன், திரு மால், இந்திரன், வருணன், துர்க்கை, காமன், சூரரமகளிர், ஐயனூர், வீரபத்திரன், மதுரை வீரன், முனியன், சங்கிலிக் கறுப்பன், பாவாடை ராயன், காளியாத்தாள், நடு வீதியம்மன், ஊரம்மன், அங்காளம்மன், அங்கம்மன், முத்யாலம்மன், என்ற தெய்வப் பெயர்கள் வருகின்றன. அத்தெய்வங்களுட் சிலவற்றிற்கு அவற்றின் பெயர்கள், உருவ அமைப்புக்கள், பாமர சிருட்டியாகிய கதைகள் முதலியவற்றை வைத்துச் சரித்திரக் குறிப்புக் கொடுக்கப் பட்டுள்ளது. சிலவற்றிற்கு அக்குறிப்புமில்லே.

'(அத் தெய்வங்களுள்) அகால மரணம் ஆனவர்........முதலி யோர்............தெய்வங்களாகப் பாமர மக்களால் வழிபடலாயினர். இவற்றை நீக்குதல் அறிவுக்குப் பொருத்தமாகும்.' என்கிருரவர். அது சரி. ஆனுல் எஞ்சியுள்ள தெய்வங்களே ஏன் வணங்கவேண்டும்? 'வீரர்—ஒழுக்கத்தில் உயர்ந்தோர்—பத்தினிப் பெண்டிர்—இவர் தம் கோயில்களே அப்படியே வைத்திருத்தலும், அத்தெய்வங்களின் உண்மை நிலேமையை மக்கட்கு உணர்த்தலும், அறிவுடையோர் செயல்களாகும்' என்கிருரவர். அவ்வெஞ்சியுள்ள தெய்வங்கள் இவ் வீரர் முதலியோர் தானு? ஆயின் அவற்றை வணங்கு முறையை விளக்கும் பிரமாண நூல் எது?

'வல்லவனுக்கு வல்லவன் வையகத்தி லுண்டு' என்பது பழமொழி. 'ஒருவன்பால் வெற்றி கொண்டோ ஞெருவன் பாற் றேல்வி கொள்ளும்.' என்றது தணிகைப் புராணம். ஆகலின் எந்த வீரனையுந் தெய்வ மெனக் கொண்டு வழிபடல் அறிவுடைமையன்றெனக. அக்கட்டுரைகார ராகிய நவீனர் ஒழுக்கமுடையாரா? அல்லரா? உடையார்தா னென்பர் சிலர். அல்லரென்பாரு மிருக்கக் கூடும். அந் நவீனர் காலத்துக்குப் பின் அவருக்குக் கோயில் கட்ட விரும்பலாம் அவர் சீடர். அன்று தெய்வமாகப் போகுமவர் இன்றுந் தெய்வமாய்த்தா னிருக்க வேண்டும். அப்படித் தானு? அத்தெய்வஞ் சாவானேன்? சாவதுந் தெய்வவியல் போலும்.

**வீரர், ஒழுக்கமுடையவர்—பத்தினிப் பெண்கள்—தெய்வங்களா?**

> 'கடவுள் என்பவர் பிறப்பு, இறப்பு, ஒன்றும் இல்லாதவர். ஆனல் ராமனே பிறந்து இறந்து இருக்கிருன். அப்படியானுல் அவன் எப்படி கடவுளாக முடியும்?'
>
> (23—6—56 தினத்தந்தி;

என்கிருர் ஈ—வெ—ரா. அவர் கூட தெய்வ வியல்பைத் தெரிந்திருக்கிருர். கொடுப்போருங் கொள்வோரு மாகிய இரு திறத்தாரின் சம்மதம் பெற்றுத் தன்னை யொருவன் விதிமணத்தாற் கைப்பிடித்த பிறகு தன் வாழ்வில் அவனெருவனுக்கே இன்பம் ஊட்டியும், ஒருக்கால் தான் இளமையிலேயே விதவையாய் விட்டால் சாங்காறுங் கைம்மை நோன்புழந்தும் வருகிருள் ஒருத்தி. அச்சம்மதம் பெருமலும், விதி மணமில்லாமலும் தான் ஒருவனேடு வாழ்க்கை யொப்பந்தஞ் செய்து கொண்டு அவனுக்கு இன்பம் ஊட்டி வருகிருள் மற்றெருத்தி. இன்னெருவனேடு வாழ்க்கை யொப்பந்தஞ் செய்து கொண்டு அவனுக்கு இன்பம் ஊட்டி வருகிருள் பின்னேரறுதலி. சட்ட மூலம் முந்திய கணவனிடமிருந்து விலக்குப் பெற்று வேறெருவனேடு வாழ்க்கை யொப்பந்தஞ் செய்து கொண்டு அவனுக்கு இன்பம் ஊட்டி வருகிருள் இன்னெருத்தி. இந்நால்வகையாருமே பத்தினிகள் தானு? அல்லது அவருள் எவளைப் பத்தினி யென்பது? பத்தினிக்குக் கோயில் கட்டுமுன் பதிவிரதா தருமமாவ திது வென அந்நவீனர் விளக்கியாகவேண்டும்.

இனி வீரரையும், ஒழுக்கமுடையவரையும், பத்தினிகளையும் மதிக்கக் கூடா தென்பது என் கருத்தன்று. அவரைத் தெய்வமெனக் கோடல் வேண்டுமா? அதுதான் பிரசினை, 'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' என்றுர் ஔவையார். அன்ன வாக்கியங்கள் பிறவுமுள. ஒவ்வொரு புதல்வனுந் தன் பெற்றேருக்குக் கோயில் கட்டி

வழிபாடு செய்ய வேண்டுமென்பதா அப்பாட்டியார் வாக்கியத்திற்குப் பொருள்? ஆமெனின் தமிழகத்தில் நடுகற்களே மலிந்து மக்கள் வாழ இடமில்லாமற் போம். அம்மக்களும் முழுமுதற் பொருளாகிய கடவுளின் உண்மையியலை அறிய மாட்டாமல் சுத்தக் காட்டுமிராண்டிகளே யாவர். அவ்வாக்கியத்தின் உண்மைக் கருத்தாவது ஒவ்வொரு புதல்வனுந் தன் பெற்றோரை மதித்தொழுகுக வென்பதே. அப்படியே வீரராதியோரையும் நன்கு மதிக்கலாம். அம்மட்டிற்றான் அது சரியாகும். நாத்திக நாடுகளிலுங் கூட அவரை மதித்து மரியாதை செய்வதுண்டு. ஆனால் அவரைத் தெய்வமெனக் கொண்டு கோயில் கட்டி வழிபட வேண்டுமென நவீனர் பிரசங்கிப்பது நாட்டைக் கெடுக்கவே செய்யும். சாஸ்திரோக்தமான உண்மைக் கடவுள் வணக்கமுறை மக்களுள்ளத்திற் புகாதபடி வழியடைக்குங் கல்லே அப்பிரசங்கம். அம்முறையை யோராமல் மனம் போனபடி அற்ப தெய்வங்களைக் கற்பித்து வணங்கிவரும் பாமரமக்கள் பாமரமக்களாகவே வாழ்ந்தொழியுமாறு செய்கிற மருளுரையே அப்பிரசங்கம்.

**சடமாகிய தேசம் — அற்ப அறிவுடைய சமுதாயம் — கடவுளாகுமா?**

ஒருவனுக்குச் சிறப்பு எந்த அளவிலிருக்கிறதோ அந்த அளவிற்றான் அவனை மதித்து மரியாதை செய்ய வேண்டும். அவனிடமில்லாத சிறப்பையும் தம் அறியாமையாலோ, தாம் அவன்மேல் வைத்த அபிமானத்தாலோ அவன்பால் ஆரோபித்துப் பிரசார பலத்தால் அவனை மிதமிஞ்சி மதித்துரைப்பவர் சாமானிய மக்களை வஞ்சிப்பவராவர். தெள்ளறிஞர் அதைக் கண்டிக்கவே வேண்டும். மக்களின் அறிவைத் தூய்மை செய்வதே மேலான சேவை. பதியியலை யறிந்து கொள்ளாத பிராகிருதர் எந்நாட்டிலும் எக்காலத்திலும் உளர். அவர் இலௌகீகத்தில் மேல்நிலை பெறுதலுங் கூடும், அவர் பதியைப் பசுவென்பார், பசுவைப் பதியென்பார். 'தேவர் மூவரும் வானில் வலம் வந்து செஞ்சொற் புலவனை அஞ்சலி செய்தனர்' என்பதொரு பாட்டு. அது இசைத்தட்டிலும் அமைத்து இராக தாளங்களோடு நாடெங்கும் பாடப்பட்டு வருகிறது. அதிலுள்ள தேவர் மூவராவார் பிரம விஷ்ணு ருத்ரர். செஞ்சொற் புலவனாவான் தேசிய கவியாகிய பாரதி. அம்முத்தேவரும் அப்பாரதியைக் கைகூப்பிப் பிரதக்கிணஞ் செய்து வணங்குகின்றனராம். எட்டயபுரத்திற் பாரதியின் ஞாபகார்த்தக் கட்டடத் திறப்பு விழா நடந்தபோது அந்நிகழ்ச்சிகள் வெளியான 'கல்கி'யின் முகப்பட்டையில் அவ்வர்ணப் படமுந் தீட்டப்பட்டுள்ளது.. இப்படிப் பிரும்மங்களும் பகவான்களும் ஆக்கப்பட்ட மக்கள் பலர். தமிழகம் உள்பட பாரத தேசத்துச் சமயத்தவரிடந்தான் இப்படியான தெய்வங்களும் உருவாயின.

[1] கண்ணப்ப னொப்பதோ ரன்பின்மை, என்றது போல் இத்தேசத்தில் வேத சிவாகமாதி மெய்ஞ்ஞான நூல்கள் பெருகிக் கிடக்குமளவுக்குத் தெய்வ வியல்பை யறிந் தொழுக மாட்டாத நிலையும் இருந்து வருகிறது. மேலிடத்தி லிருந்து கீழிடம் வரை பலரிடம் அதைப் பார்க்கலாம். சென்னை இராஜ்ய மந்திரிமாரா யிருப்பவருள் ஒருவர்.

'வழிபாட்டு உருவங்களை உடைப்பதைப்பற்றிக் கூட எனக்கு அவ்வளவு கவலையில்லை, ஆனால் தேசீயக் கொடியை எரிப்பதை நான் சகித்துக் கொண்டிருக்க முடியாது. ஏனெனில் உயிருள்ள தெய்வங்களாகிய இந்நாட்டு மக்களின் சின்னம் அது' (7—8—55 தமிழ்நாடு)

என்கிறார். வழிபாட் டுருவங்கள் உயிரில்லாத தெய்வங்களின் சின்னமா? உடைக்கப்பட்ட உருவம் விநாயகருடையது. அவர் உயிரற்ற தெய்வம் போலும். அம்மந்திரியின் சகாவாகிய மற்றொரு மந்திரி,

'தேசம், சமுதாயம், கடவுள் எல்லாம் ஒன்று என்ற அடிப்படையில்தான் இந்தப் பிரார்த்தனை அமைக்கப்பட்டுள்ளன' (31—1—56 சுதேசமித்திரன்)

என்கிறார். சென்னை அசெம்பிளியிற் கேட்கப்பட்ட தொரு கேள்விக்கு அவர் தந்த விடை அது. அவ்வசெம்பிளியிலுள்ள அங்கத்தினருள் எவருக்கும் அதைக் கண்டிக்கப் பொறுப்பும் அவசியமும் இல்லாமற் போய்விட்டன. தேசம் சிருட்டிக்கப்பட்ட தொரு சடப்பொருள். சமுதாயம் சிற்றறிவுடைய பசுக்களாகிய தொரு மக்களின் தொகுதி. கடவுள் அவ்வுலகைச் சிருட்டித்து அம்மக்களை அதிற் போக்கு வரவு புரிவித்து அவரறிவைப் பதப்படுத்தி முடிவில் அவர்க்குப் பேரின்பத்தைக் கொடுக்கிற பேராற்றல், பேரறிவு, பேரருள் முதலிய அனந்தகல்யாண குணங்களையுடைய முழுமுதற் பொருள். அறிவற்ற சடமாகிய தேசமும், அற்ப அறிவுடைய சமுதாயமும், சர்வஞ்ஞனாகிய கடவுளும் ஒன்றுகுமா? இம் மந்திரிகள் போன்றவர் அக்காலத்திலும் இருந்திருப்பர். நவீனர் சொல்வது உண்மையானல் நடுகற்கள் சிலவற்றைச் சிவன் கோவில்களாக்கியவர் அவர்கள்தான். சைவசமய விதிநூ லாகிய சிவாகமப்படி கட்டப்பட்டுள்ள சைவாலயங்கள் அவற்றிற்கு வேருகும். அவ்வேறுபாட்டைக் கண்டறிவதே பகுத்தறிவு. அதை விட்டுச் சைவாலயங்களும் நடுகற் கோயில்களே யெனப் பேசுவது அறிவுடைமை யன்று.

---

1 கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை கண்டபின்
என்னப்பன் என்னொப்பில் என்னையுமாட் கொண்டருளி
வண்ணப் பணித்தென்ன வாவென்ற வான்கருணைச்
சுண்ணப்பொன் நீற்றற்கே சென்றூதாய் கோத்தும்பீ
[திருவாசகம் — திருக்கோத்தும்பீ]

சிவன் சர்வ வியாபகர். அவரைக் குறித்து உருவ வணக்கஞ் செய்யப்படுவதால், கருத்தறிந்து முடிக்கவல்ல அப்பரமனுர் அப்படி வணங்குவோருக்கு அவ்வுருவங்களிலுந் தங்கி உபகரிக்கவே செய்வர்.

**சிறு தெய்வங்களை வணங்கலாமா?**

அவரடியாரையும் அவராகவே பாவித்து வணங்குக வென்பதே சைவ சமய விதி. அவ்வணக்கத்தையும் அவரே ஏன்று கொண்டு அருள் புரிவர். ஆனல் நவீனர் கூறும் அவ்வீரராதியோருக்கு உருவ வணக்கமும் கோயில்களும் ஏன்? அவர் செத்த பிறகு அவ்வுருவங்களில் வந்து தங்குவாரா? தம்மை வணங்குவார்க்கு அவர் அருள் புரிவாரா? அவ்வருள்தான் யாதோ? நாத்திக வீரரும், நாத்திக வொழுக்கமுடையவரும், நாத்திக பத்தினிகளும் தமக்கு உடம்பன்றி உயிரென வொன்றிருப்பதாகக் கொள்ளார். அவர் செத்தால் சர்வ சூனியராய் விடுவரென்பதே அவர் கருத்து. அவருக்குக் கல் நடுவது பித்தம். சிறுதெய்வ வணக்கம் மக்களறிவுக்கே கறைதான். தமிழகத்தி லாயினுஞ்சரி, தொல்காப்பியர் காலத்திலாயினுஞ்சரி, படித்தவர் கூட்டத்திலாயினுஞ்சரி அக்கறை கறையே. தமிழகந் தூய்மை பெறவேண்டுமாயின் அக்கறையைப் போக்கியே தீர வேண்டும். அக்கறையைப் போக்கித் தமிழகத்தைச் செம்மைப் படுத்தியது சைவசமயம் ஒன்றே. [1]'சென்று நாஞ் சிறு தெய்வஞ் சேர்வோமல்லோஞ் சிவபெருமான் திருவடியே சேரப் பெற்றேம்.' என்றது திருமுறை. அவ்வறிவுரை பிறந்த பிறகும் அநாகரிகமாகிய சிறு தெய்வ வணக்கத்தை நவீனர் ஆதரிக்கிருர். சைவத்தை அவர் தான் வளர்ப்பாரா? அவ்வணக்கந்தான் வளர்க்குமா?

> 'தமிழர் லிங்க வணக்கமும், வடவர் உருத்திர வணக்கமும்
> அவ்வாறே முல்லை நிலத்தார்க்குரிய திருமால் வணக்கமும்,
> வடவருடைய விஷ்ணு வணக்கமும் கலப்புற்ற காலம் முதல்....'
>
> (14—8—55 தமிழ் நாடு)

என்கிருரவர்.

---

1 என்றும்நாம் யாவர்க்கும் இடைவோ மல்லோம்
இருநிலத்தில் எமக்கெதிரா வாரு மில்லை,
சென்றுநாம் சிறுதெய்வம் சேர்வோமல்லோஞ்
சிவபெருமான் திருவடியே சேரப் பெற்ரேம்,
ஒன்றினுற் குறையுடையோ மல்லோ மன்றே
உறுபிணியார் செறலொழிந்திட்டோடிப் போனர்
பொன்றினர் தலைமாலை அணிந்த சென்னிப்
புண்ணியனை நண்ணிய புண்ணியத்து ளோமே.

(அப்பரடிகள் 6ம் திருமுறை
மறுமாற்றத் திருத்தாண்டகம்)

அக்காலம் எது? அதை அவர் சொல்லவில்லை. அது கிடக்க. அக்கலப்புண்மைக்குச் சைவ வைணவ சமயப் பிரமாண நூல்களில் எள்ளத்தனை யாதாரமுங் கிடையாது. அவர் சொல்வது உண்மையானால் தமிழர் அவ்வி லிங்கத்தை யமைத்துக் கொண்டது தம் மனம் போன படியா? ஏதேனு மொரு பிரமாண நூலின் படியா? மனம் போனபடி யெனின், அதை யமைத்துக் கொடுத்த முதற் றமிழன் எவன்? பிரமாண நூலின்படி யெனின் அந் நூல் எது? அவன் பெயரையும், அதன் பெயரையுங் கண்டு கூற முடியவில்லை யென்கிறா ரவர். அதனால் இலிங்க வணக்கந் தமிழரு டையதன் றென்பதே மெய்யாகும். தொல்காப்பியத்திலும், சங்க நூல்களிலும் லிங்கப் பிரஸ்தாபங் கிடையாது. லிங்க மென்ற பதமே சம்ஸ்கிருதம். ஆகலின் அக்காலத் தமிழர் இலிங்க மில்லாதவர், அவ்வணக்க மின்றியே யிருந்தனர் என்பது பெறப்படும்.

**சிவலிங்க வணக்கம்—வடவர் உருத்திர வணக்கம்—திருமால் வணக்கம்—கலப்புற்றதா? எக்காலத்தில்? யாரால்?**

உருத்திர வணக்கம் தமிழ் நாட்டுக்கு வந்தேறிய தொன் றென்றார் நவீனர். அப்படியானால் இலிங்கமும் வடநாட்டிலிருந்து வந்ததுதான். அந்நவீனருக்கு முன்னோடிகளுஞ் சிலருளர். அவர் சிவ வணக்கமும் வடக்கிலிருந்து வந்த தென்றே சொல்வர், எப்படி? மாணிக்கவாசகர் தோன்றி இற்றைக்கு ஓராயிரத்து எழுநூறு ஆண்டுகளாயின, அவர் காலத்துக்குமுன் இத்தென்றமிழ் நாட்டில் சிவனென்ற தெய்வப் பெயரோ, அதுபற்றிச் சைவமென்ற சமயப் பெயரோ கிடையாது; இப்போதுள்ள ஆங்கிலோ இந்தியரென்ற கலவை யினம்போல் அக்காலத்திருந்த திராவிட ஆரிய ரென்ற கலவையினத்தைச் சேர்ந்ததும், சைவப்பற்றுடையதும் ஆகிய தொரு குடும்பம் தன் பண்டை நாடாகிய வடுக நாட்டிலிருந்து இத்தமிழ் நாட்டிற் குடியேறியது; அக்குடும்பத்திற் பிறந்தவரே மாணிக்கவாசகர்; கலவைப் பிறவியினராகிய அவ் வடுக மாணிக்க வாசகர் தான் சிவ னென்னுஞ் சொல்லைத் தம் வடுக நாட்டிலிருந்து இத் தமிழ் நாட்டிற் கொணர்ந்து தாம் பாடிய திருவாசகந் திருக்கோவையார்களிற் புகுத் திப் பரப்பினர்; அவ்வடுகர் செய்த அவ்விரு நூல்களுமே இத் தமிழ் நாட்டுச் சைவத்துக்கு ஒப்புயர் வில்லாத தனித் தமிழ் மா மறைகள்; அவ் வடுகரே இத் தமிழ் நாட்டுச் சைவசமயத்துக்கு முதலாசிரியரு மாவார் என்பது மறைமலையடிகள் கண்ட சரித்திர வாராய்ச்சி முடிவு. அதனை அவர் எழுதிய 'தமிழர் மதம்' என்ற சுவடியிற் காண்க. அத னால் தமிழச் சைவரின் மானங் காப்பாற்றப்படுகிறதா? தமிழரின் மான மாவது காப்பாற்றப்படுகிறதா? அவர் எழுதிய சுவடிகளில் அன்ன அபத்தங்கள் பல. அவை கிடக்க. ஓராயிரத்து எழுநூறு ஆண்டு களுக்கு முன் இத் தமிழ் நாட்டில் சிவ நாமமே வழங்கப்பட வில்லை

யென்றால் சிவலிங்க வணக்கம் இல்லையென்பதே தீர்வு. இந்நாட்டில் உருத்திர வணக்கம் வந்தேறிய தொன்றோ, மற்றைப் பிரதேசங்களிற் போல் தொன்று தொட்டுள்ளதோ எங்ஙனமாயினும் லிங்கமாவது உருத்திர லிங்கமே அல்லது அதிற் சிறிதும் வேறல்லாத சிவலிங்கமே. அவ்வுருத்திர சிவநாமங்களில் ஏற்றத் தாழ்வு பேசுவது பேதைமையே. மேலும் தமிழகத்தில் அக்கலப்புக்கு முந்திய லிங்க வணக்கத்தாற் பேறெய்தியவர் யார்? ஒருவர் பெயரையாவது நவீனர் கூற வல்லரா? அன்றியும் அவர் கூறும் இலிங்க வணக்கந் தந்துகொண் டிருந்த நலனை அக் கலப்பு வணக்கம் அதிகப்படுத்தியதா? கெடுத்ததா? அதி கப்படுத்திய தெனின், உருத்திர வணக்கத்தைக் கொணர்ந்த வடவரை அந்நவீனர் போற்றவே வேண்டும். கெடுத்த தெனின் பின் வந்த சம்பந்தாதி சைவாசிரியன்மார் அக் கலப்பைக் கண்டு, அவ்வுருத்திர வணக்கத்தைப் பிரித்து அதன் நிழல்தானும் இல்லையாம்படி தொலைக் குந் திறனின்றி ஏமாறின ரென்றே நவீனர் சொன்னவராவார் அந் நவீனரைச் சைவ சமயத்துக்குப் புல்லுருவிக ளென்னுது வேறென் னென்பது? திருமாலும் விஷ்ணுவுங் கலந்தன ரென்பதும் அபத்தப் பிரசங்கமே. அதனையும் ஆராய்ந்தறிக. இத்தகைய சரித்திரச் சுவடி களை யெல்லாம் முதலிற் புடமிட வேண்டும். அதுவே சைவ சமயத் துக்குச் செய்யப்படும் ஆரம்ப சேவையாகும்.

> '(சிவன்) தேவாதி தேவனாய்த் திகழ்கிறான்....நான்முகனுக்கு நாதனாய் இருக்கிறான்........திருமாலினுள்ளும் திணிந்து நிற்கிறான். சிவன் வேறு விஷ்ணு வேறு என்று சைவர்கள் கருதுவதில்லை. இரு கடவுளரும் ஒன்றே என்று சைவ சித்தாந்தமும் முழங்குகின்றது'
> (20—11—55 தமிழ் நாடு)

என்கிறார் நவீனர்.

**சிவன் விஷ்ணு ஒன்று என்று சைவசித்தாந்தம் முழங்குகின்றதா?**

நாதனா யிருப்பவனே திணிந்தும் நிற்பான். திணிந்து நிற்ப வனே நாதனுமாவான். ஆகலின் சிவன் நான்முகனுள்ளுந் திணிந்து நிற்கிறான், திருமாலுக்கும் நாதனா யிருக்கிறான் என அவரே சொன்னவ ராகிறார். அங்ஙன மாகச் சிவனும் விஷ்ணுவும் ஆண்டானும் அடி யானுமாய் வேறு வேறாகாமல் ஒருவரேயாதல் யாங்ஙனம்? சிவனும் நான்முகனும் ஒருவரே யென அந்நவீனர் சொல்லாமற் போன தேனோ? அச்சிவன் அந்நவீனருள்ளுந் திணிந்து நின்று அவருக்கு நாதனாயிருக்கிறான். ஆகலின் அவனும் அவரும் ஒருவர் தானா? முன் சொன்னதற்குப் பின் சொன்னது முரணுவதை யுணரா மலே அவர் சாத்திர ஞானம் பேசுகிறார். சிவன், விஷ்ணு, பிரமன்,

காடன், மாடன், காட்டேறி முதலியோ ரெல்லாம் ஒருவரே யென்பது முழு மாயாவாத மென்பதை அவர றிக. 'கொள்ளேன் புரந்தரன் மாலயன் வாழ்வு குடி கெடினும்..........என்றது திருமுறை. சைவ சித்தாந்தமாவது அதுவே; அந் நவீனரின் பொய்த்துரை யன்று. பொய் யுரைப்பதால் வரும் ஊதியம் அருவருக்கத் தக்கது. சிவபிரான் ஒப்புயர் வற்ற முழு முதற் கடவுளே யென்பதை நிர்ணயிப்பதே 'அந்தமாதி' யென்னுஞ் சிவஞானபோதத் தொடர். அதற்கு மூலமாகிய 'ப்ரபுர் ஹர:' என்றதையும் அவர் ஓர்க.

> 'சைவத்துடன் நான் வைணவத்தையும் வளர்க்க வேண்டு மென வரவேற்பில் கூறப்பட்டிருந்தது. என்னைப் பொறுத்த வரையில் எவ்வித வித்தியாசமும் கிடையாது. எனவே தான் இந்த இயக்கத்திற்கு அருள்நெறி இயக்கம் என்ற பொதுப் பெயர் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. ஆகவே அருள் நெறிக் கூட்டத்தினர் வைணவத்தையும் வளர்ப்பார்கள், சைவம் வைணவத்திற்கு மட்டுமின்றி இந்நாட்டில் வந்த இதர மதத்தையும் வாரி யணைத்து இடங் கொடுக்கும் தன்மையதாக இயங்கிவருகிறது..............சர்வத்தையும் ஏற்கும் பரந்த மனப்பான்மை யுடையது சைவம்."
>
> (12—9—55 தினமணி)

என்கிருர் நவீனர்.

**அருள் நெறித் திருக் கூட்டம் சைவசமயச் சார்புடையதா?**

சைவரின் துணை யின்றியே வைணவர் தம் சமயத்தை வளர்த்துக்கொள்ளவல்லார். இன்றைய நிலையில் சைவ சமூகத்திலேயே வைணவ வாடையும் இதர சமயங்களின் வாடையும் வீசு மளவுக்குச் சைவ மணங் கமழவில்லை. அது மானக்கே டென்ற உணர்ச்சி அச் சமூகத்தை விட்டகன்றது. ஆயினும் அவ்வரவேற்பில் அந் நவீனரின் சகாயத்தை அவர் ஏன் நாடினர்? இன்னுங்கிடைத்தவரை இலாபந்தா னென்பது அவர் கருத்து. அந் நவீனரும் அதற் கிசைந்தார். சைவக் கற்பினராயின் அவர் இசைவாரா? மாட்டவே மாட்டார். ஆனல் களையையும் வளர்த்துப் பயிரை வளர்க்க முயலும் உழவரவர். தம்மைப் பொறுத்தவரை எவ்வித வித்தியாசமுங் கிடையா தென்ருர். அவரது சொந்த அபிப்பிராயம் யாருக்கு வேண்டும்? சமயப் பிரசாரத்தில் எவருடைய சொந்த அபிப்பிராயமும் மதிக்கப்படாது. சைவசமயப் பிரசாரகராயுள்ளவர் அச்சமயங் கொண்டுள்ள அபிப்பிராயத்துக்கே முக்கியத்துவங் கொடுத்துத் தம்மபிப்பிராயத்தை யடக்கிவைப்பதே நியாயம். ஆனல் அந் நவீனர் தம் சொந்த அபிப்பிராயத்தை அடிப்படையாகக் கொண்டுதான் தம் அருள் நெறி யியக்கத்தைத்

தொடங்கி நடத்துவதாகச் சொல்லுகிருர். அழிந்த பிறகு அண்ண ஞ்ஞலென்ன? தம்பியாஞ லென்ன? சைவத்தோடு வைணவத்தையும் வளர்க்க வந்த அவ்வியக்கம் கிறிஸ்தவ இசுலாமிய மாதியவற்றை மாத்திரம் வளர்ப்பதை விட்டுவிடுமோ? விட்டுவிடுவது நியாயமு மன்று. விட்டு விடுமென்து நம்பத்தக்கது மன்று. சைவம் இந்நாட்டில் வைணவத்தையும், இதரமதங்களையும் வாரியணைத்து இடங்கொடுக்குந் தன்மையதாயும் சர்வத்தையும் ஏற்கும் மனப் பான்மை உடையதாயும் இருக்கிறதாமே. அதனுற் சைவத்துக்கு வரும் இலாப மென்ன? கௌரவ மென்ன? அங்ஙன மில்லையாஞல் அச்சமயஞ் செத்து விடுமா? அவ்விதர சமயங்களாவது அவ்வணைப் பையும் ஏற்பையும் எதிர்பார்த்தா வாழ்கின்றன? 'தன்ஞயுதமுந் தன்கையிற் பொருளும் பிறன்கையிற் கொடுத்த பேதையும் பதரே' என்றது வெற்றிவேற்கை. அதுபோற் சைவமுந் தன்னிடத்தைப் பிற சமயங்களுக்குக்கொடுத்ததாயின் அதுவும் பதர்தான். இடங்கொடுத்தற் குக் காரணம் பரந்த மனப்பான்மை யன்று. சைவசமூகத்தின் ஏமாறிய புத்தியும், தொடை நடுக்கமும், சைவத்தைப் பலி கொடுத்தாயினுந் தமிழை வளர்ப்பதே மேலென்ற சைவப் பிரசாரகர் பலரின் தமிழ் வெறியும், சன சமூகத்தில் மதிப்படைய வேண்டும், அதனிடமிருந்து ஊதியம் பெறவேண்டும் என்ற அவராசையுமே காரணம். ஆகலின் சைவத்தைப்பற்றி அப்படி அவர் பேசியது அச்சமயத்தைப் புகழ்ந்த தாகாது. பின்னை என்னை? அச்சமயம் அவர் சொன்ன பொதுத் தன்மையை யுடையதாயிருந்தால் தம் கூட்டத்துக்குச் சைவ சமயத் திருக்கூட்டம் என்றே பெயரிட்டிருப்பர். அதுவே முழுக்கப்பொருந் தும். அதைவிட்டு அருள் நெறித் திருக் கூட்ட மென்ருரவர். அருள் நெறி யென்பதிற் காட்டிலும் சைவசமய மென்பதில் அப்பொதுத் தன்மைப் பொருள் குறைவென்பதே அவருட் கிடை. ஆகலின் ஆரிய சமாஜம், பிரம சமாஜம், ஸாயி சமாஜம், சமரச சுத்த சன்மார்க்க சங்கம் முதலியன போல் அவ்வருள் நெறித் திருக்கூட்டமும், சைவ சமயத்துக்குப் புறம்பானதொரு சமயமே யென்பதைச் சைவசமூகங் கண்டு அக்கூட்டத்தை விட்டு விலகுவதே தக்கதென்க. அக்கூட்டத் தாலும் சைவ சமூகத்துக்கு எதிர்காலத்திற் பெருங்கேடு வரவிருக் கிறது. அச் சமூகம் அக்கேட்டைக் கேடென்றுணராமல் நல்லதென் றேற்றுத் தமிழ் வெறி வயப்பட்டு நாத்திகப் படுகுழியில் வீழ்ந்தொழி வதற்காகவே சைவத்தைப் புகழ்வதுபோல் மேற்கண்டவாறு பிழை படப் பேசினர் நவீனர்.

'நாயன்மார்கள், ஆழ்வார்கள் ஆகியோரைப் போலவே அவரு(பாரதியினு)டைய கவிதைகளிலும் தமிழ்க் கலாசாரமும் பண்பாடும் மிளிர்வதை நாம் காணலாம். ஆகையால் நாயன்மார்கள் ஆழ்வார்கள் ஆகியோரின் வரிசையில் வைக்கவும் பாரதி தகுதியானவரே.' (12—9—55 தமிழ் நாடு)

என்கிருரவர்.

**நாயன்மார் ஆழ்வார் பாரதியார் வரிசையில் உள்ளவர்களா?**

கலேயும் ஆசாரமுஞ் சேர்ந்து கலாசாரமாயின. அக்கலசாரமாவது கலே வழித்தாகிய ஆசாரமோ? கலேயும் ஆசாரமுமோ? கலேயாகிய ஆசாரமோ? பிறவோ? நான், கலேயும் ஆசாரமு மெனவே கொள்கிறேன். அங்ஙனமாயின் கலே ஆசாரம் பண்பாடு ஆகிய மூன்றையுந் தமிழை முன்வைத்துப் பேசிஞரவர். எல்லா மொழிகளிலு மிருப்பது போலத் தமிழிலும் நாத்திக முதற் பலசமயங்களுள. ஆகலின் அம்மூன்றுஞ் சமயங்களே முன்னிட்டனவாய்த்தா னிருக்கமுடியும். சமயங்களெல்லாஞ் சோபானங்கள். அவைபற்றிய அம் மூன்ருலுந்தான் ஆன்மாக்கள் படிப்படியாகப் பக்குவமடைய முடியும். சைவ மொன்றே சித்தாந்தம். அதுபற்றிய அம்மூன்றுமே ஆன்மாக்களே அவற்றது வாழ்கையின் குறிக்கோளிற் கொண்டுபோய்ச் சேர்க்கும். சமயம் பற்றிய அம் மூன்றும் உளவென்பதை நவீனரும்

'சைவப் பண்பாடு, சமணப் பண்பாடுபோன்று இசுலாமியப் பண்பாடு என்று பிரிக்கலாமே தவிர தமிழ்ப் பண்பாடு இசுலாமியப் பண்பாடு என்று பிரிக்கக்கூடாது.
(7—2—56 தமிழ் நாடு)

என்று கூறிச் சம்மதிக்கிருர். கிறிஸ்தவ கலாசாரம், இசுலாமிய கலாசாரம் முதலிய வழக்குகளேயுங் காண்க. அவை சமயம்பற்றி அங்ஙனம் வேறு வேருய்ப் பிரிந்து போன பிறகு தமிழுக்கென எப்படியிருக்க முடியும்.? பாரதியார் வைணவப் பண்பாடும் கலேயும் ஆசாரமும் உடையராயின் ஆழ்வார்களின் வரிசையில் வைத்தற்குத் தகுதியானவர்தான்; சைவப் பண்பாடும் கலேயும் ஆசாரமும் உடையராயின் நாயன்மாரின் வரிசையில் வைத்தற்குத் தகுதியானவரே. ஆனுல் அவ்விரு சமயத்து மூன்றுமே உடையராவ ரென்ருல் அவ்விரு வரிசையிலுமிருத்தற்குரிய தகுதி அவருக்கில்லே யென்க. அவர் கவிதைகளில் தமிழ்க் கலாசாரமும் பண் பாடும் மிளிர்கின்றனவெனச் சொல்லி அவரை அவ்விருவரிசையிலும் வைக்க வேண்டுமென நவீனர் செய்யும் சிபார்சு ஒரு சாராரின் அபிமானத்தைப் பெறுவதற்கே யாகும். தமிழ்பற்றிய அம்மூன்ருல் ஆன்மாக்களுக்கு எவ்வித இலாபமும் வராது.

'பேரரசர்களாக விளங்கிய சோழவேந்தர்கள் இக்கலப்புத் தமிழை வளர்த்தனரே யன்றித் தூயதமிழை வளர்க்கவில்லை.'
(14—8—55 தமிழ் நாடு)

'அரசர்கள் போலிச் சைவத்தை வளர்த்தார்கள்.'
(11—8—55 தமிழ் நாடு)

என்கிருர் நவீனர்.

**சோழ வேந்தர்கள் கலப்புத் தமிழையும் போலிச்சைவத்தையும் வளர்த்ததுஉண்மைதானு?**

அத்தூய தமிழாவது பிறமொழிச் சொற்கள் வந்து கலவாத தனித்தமிழ். அது கலவையாற் கெட்ட தெனக் கூறி யிரங்குகிருரவர். அக்கலவைபற்றிய விசாரணை முன்னரே முடிந்தது. அவ்வேந்தர் வளர்த்தது தொல்காப்பிய வரம்புட்பட்ட தமிழே. அரசர் போலிச் சைவத்தை வளர்த்தனரென்பது அந்நவீனரின் ஒப்பாரியிலுள்ள மற்ருெரு கண்ணி, இருக்காதி வேதங்கள், காமிகாதி சிவாகமங்கள் திருமுறைகள், சித்தாந்த சாத்திரங்கள், சிவஞான போத திராவிட மாபாடியம் என்பவற்றை வரம்பாகக் கொண்டது சைவம். அச்சமயத்தைப் பிரகாசிப்பித்தவர் சம்பந்தாதியர். அக்காலையரசர் அதையே தம் அரசாங்க சமயமாகக் கொண்டு அதன் சொரூபங் கெடாமற் போற்றி வந்தனர். அதை விரும்பாத அரசரோ கூன்பாண்டியரே போல வேற்றுச் சமயங்களிற் புகுவரே யன்றி உள்ளிருந்து கொண்டே குட்டிச் சுவராக்கார். புகழ் பொருள் முதலியவற்றுக் காசைப்பட்டுத் தலைகால் தெரியாமற் போலிச் சைவப் பிரசாரங்கள் செய்பவர் நவீனரே. அவர் தம் குற்றத்தை அவ்வரசர்மேற் சுமத்துவது அக்கிரமம். அதனுல் அவர் பிரசாரம் உண்மைச் சைவமாய் விடாது. ஆமாயின் அதற்குத் தொன்று தொட்டு வரம்பா யிருந்து வரும் பிரமாண நூல் எது? அதை யாசரித்து முத்தி பெற்றவர் யார்? அம் முத்திக் கிலக்கணம் யாது? அன்ன வினுக்கள் பல எழும். அப்போது அவர் விடைதர மாட்டாமல் விழிப்பர். எந்தச் சமயமும் அதன் பிரமாணச் சாத்திர வரம்புக்குள் வைத்தே போற்றப்பட வேண்டும். அங்ஙனம் போற்றப்பட்டாலே அஃதுண்மைச் சமயமாகும். அவ்வரசரும் அம்முறையிற்ருன் சைவத்தைப் பாலித்தனர். வரம்பழிந்ததே போலிச் சமயம். அச்சமயப் பிரவர்த்தகர் நவீனர்தான். அவர்

'ஒரு மொழி சிதைக்கப் படுமானுல், நாடே சிதைக்கப்படும்'
(5—8—55 தமிழ் நாடு)

என்கிருர். ஒருமொழியைச் சிதைப்பதாவது அம்மொழியைத் திறம்படக் கல்லாமையும், ஆன்மலாபத்தைத் தடைசெய்யும் புத்தகங்களை அதில் தோன்ற விடுவதுமேயாம்.

'மதம் என்று சாகிறதோ, அன்று சமுதாயத்தைக். குழி தோண்டிப் புதை என்கிருன் இத்தாலிய நாட்டுச் சாணக்கியன்.'

(21—7—55 தமிழ் நாடு)

என அவர் கூறுவதுங் காண்க. அன்றியும் அதனல் இராசாங்கத் தமர்ந்த வைதிக சைவஞ் சாகுமானல் அன்று சனசமூகத்தையே குழிதோண்டிப் புதைக்க வேண்டியதுதா னென்பதும் யூகித்துக் கொள்ளப்படும். சைவஞ் சாகிறதென்பதும் அச்சமயத்தைத் திறம் படக் கல்லாமையே. நவீனர் அத்தகையினர். ஆகலின் அவர் கல்வியிற் புகுந்தனர். எப்படி?

'கருத்துலகுக் கலப்படத்தினல் உண்டாகும் தாழ்ச்சியை ஈடு செய்வது என்பது முடியாத காரியம். இது ஒரு சமுதாயத்தின் வாழ்வையே பாதிக்கும்.........இன்றைய சமுதாயம் நஞ்சான கருத்துக்களைத்தான் அதிகம் ஏற்றுக் கொள்கின்றது. காரணம் அவைகள் நஞ்சானவை என்று உணரத் திறன் இல்லாத காரணத்தால்தான்'

(2—9—55 தமிழ் நாடு)

என்கிருரவர். சமயங்களெல்லாம் கருத்துலகுக் குரியன. அவற்றைக் கலவை செய்வது மன்னிக்க முடியாத குற்றம். ஆனல் அவருக்கோ அவர் வாயில் வந்தன வெல்லாஞ் சைவந்தான்.

'ஆன்மா இறைவனது அம்சம்,' 'ஒவ்வொருவரும் பரம் பொருளின் அம்சம்'

(23—7—55 தமிழ் நாடு)

என்கிருரவர். பதி அமிசியும், பசு அமிசமுமா மென்பது சைவ சித்தாந்தமா?

'உலகம் ஆண்டவனுக்கு ஒரு திருமேனி. ஆண்டவன் மேனியாகிய உலகத்தில் ஏதாவது ஒரு பாகத்தில் ஒரு இன்னலோ....கஷ்டமோ....இருந்தால் அது ஆண்டவனின் திருமேனி முழுவதையுந்தானே பாதிக்கும். ஆண்டவன் பாதிக்கப்படுவதை நாம் அகற்றுவது ஆண்டவனுக்குச் செய்த சேவைதானே'

(12—9—55 தினமணி)

என்கிருரவர். உலகம் ஆண்டவனுக்குத் திருமேனி யென்பது சைவ சித்தாந்தமே. ஆனல் அதற்கு அவர்கொண்ட கருத்து அபத்தம். திருமேனியென அவர் சொல்வது சடத் தொகுதியா? உடம்போடு கூடிய உயிர்த் தொகுதியா? சடத்தொகுதியை அவர் சொல்லார். அது அவ்வுயிர்களுக்காகவே இருக்கிறது. அதை வெட்டலாம், சுடலாம் அன்னபிறவுஞ் செய்யலாம். ஆகலின் அவ்வுலகம் அவ்வுயிர்த்

தொகுதியாய்த்தா னிருக்கும். அதனை ஆண்டவனின் திருமேனி யென்பதும் அமிச மென்பதுஞ் சரியா? மேனியும் அமிசமும் ஒன்றாகா. அவ்வாக்கியத்திலுள்ள 'ஒருபாகம்' என்பது ஒருயிர் அல்லது சில வுயிர்கள். 'மேனி முழுதும்' என்பது எல்லா வுயிர்களும். உடம்பு பாதிக்கப்பட்டால் அதிலுள்ள உயிர் துன்புறுதற்கு அவ்வுடம்பில் அவ்வுயிர் தோய்ந்திருப்பதே காரணம். ஆனால் ஆண்டவன் எந்த வுயிரிலுந் தோயாமல் வியாபித்திருப்பவன். அதனால் எந்த வுயிர் பாதிக்கப்பட்டாலும் அவன் பாதக முறான். மேலும் பெரு மழை, மிகு வெள்ளம், நில நடுக்கம், இடி வீழ்ச்சி முதலியவற்றால் லக்ஷாப லக்ஷம் பேர்களைக் கொன்றுங் குற்றுயிராக்கியுங் குவிக்கிறானவன். தான் பாதகமுறுவது உண்மையானால் அக்கொடுமையை அவன் செய் யான். இன்னும் அவர் சொல்லுகிறபடி அவனுக்கு அவை திருமேனி யானால் அவற்றைப் பாதக முறாமல் காத்துக்கொள்ளும் பொறுப்பு அவனுக்கேயுண்டு. அவற்றால் பாதகத்திலிருந்து அவனை விடுவிக்க முடியாது. மற்றும் அவனை நோக்கி வரும் பாதகம் அவற்றிற்கேயாம், சொக்கர் பட்டதை நினைக. அவற்றை நோக்கிவரும் பாதகமும் அவற்றிற்கேயாம். நவீனர் தாம் நாள்தோறும் படுவதை ஓர்க. சைவத்தில் அவர் செய்யுங் கருத்துக்கலவை இப்படிப் பல வுண்டு. ஆகலின் போலிச் சைவத்தை வளர்ப்பவர் அவரே. மயிலைப் பழிக்கும் மண்கூகை போல் அக்காலை யரசரை அவர் பழித்து மகிழ்ந்தார்.

> 'சைவமும் வைணவமும் தமிழகத்திற்கு இரு கண்கள் போன்றவை. ஒன்றுக் கொன்று துணையாக இச்சமயங்கள் இருக்கின்றன.'
>
> (24—10—55 தமிழ் நாடு)

என்கிறாரவர். இம்முடிவு சைவத்திலோ வைணவத்திலோ கிடையாது.

சைவம் வைணவம் ஒன்றுக்கொன்றுதுணை என்பதிலும் கூட்டு மகா நாடு கூட்டுவதிலும் உட்கருத்தென்ன?

> 'சைவ சமயம் ஏறத்தாழ எட்டா யிரம் ஆண்டுகள் பழமையுடையது'
>
> (2—12—55 தமிழ் நாடு)

என்பது அவராராய்ச்சி முடிவு. அவ்வளவு பழமை வைணவத்துக்கு மிருந்ததாக அவர் சொல்லவில்லை.

> 'திருவள்ளுவரைச் சைவராகவோ வைணவராகவோ நாஸ் திகராகவோ இஸ்லாமாகவோ பொதுவுடைமை வாதியா கவோ பாராமல் திருவள்ளுவரைத் திருவள்ளுவர் கண் கொண்டு பார்க்க வேண்டும்'
>
> (12—8—55 தமிழ் நாடு)

என்று கட்டளையிட்டார் அவர்,

'வள்ளுவருக்கு ஒரு சமயநெறி இருந்திருக்க முடியும். அது குறுகிய நெறியல்ல. அது தமிழ்ப் பண்பாட்டிற்குரிய உயர்ந்த நெறி.'

(5—8—55 தமிழ் நாடு)

எனக் கூறி வள்ளுவரைத் தமிழ்ச் சமயி என்ற அளவுக்குக் கொண்டு வந்து,

'வள்ளுவரது காலத்தில் நமது நாட்டில் பிற மதஸ்தர்கள் இருந்ததே யில்லை. அவரது காலம் சங்க காலம். அவரது மொழி தமிழ் மொழி. ஆகவே அவர் காட்டும் சமய நெறியும் சைவநெறியாகத்தா னிருக்க வேண்டும்'

(2—9—55 தமிழ் நாடு)

எனக் கூறிச் சைவ சமயி யென முடித்தார்.

'பிற மதஸ்தர்கள் இருந்ததே யில்லை', 'சைவ நெறியாகத் தான்' என்றதால் வைணவமு மிருந்ததில்லை யென்ருகிறது. ஆகலின் வைணவமும் தமிழகத்துக்கு வந்தேறி மதந்தான். அதைத் தமிழகத் துக்குக் கண்ணென்பதும், சைவத்துக்குத் துணை யென்பதும் அந் நவீனரது சொந்தக் கற்பனையே. உண்மையாயின் சைவத்தை மாத்திரம் ஆசரிப்பவனும், வைணவத்தை மாத்திரம் ஆசரிப்பவனும், ஒற்றைக் கண் பொட்டையரே யாவர். அப்படித்தானு? 'அமுதருந்தப் பெருர்........மாயன் மாயத்துப் பட்ட மனத்தரே' என்ற சைவமும், 'சிறியார் சிவப்பட்டார்' என்ற வைணவமும் கண்களாதலும் துணை யாதலும் யாங்ஙனம்? ஏக காலத்தில் கிழக்கை யொன்றும், மேற்கை யொன்றுமாகப் பார்க்கிற இரண்டு கண்களிருப்பது ஆபத்து. அதை விட ஒருகண்ணிருப்பது மேல், அந்நவீனர் இரண்டு தோணியில் கால் வைக்கிருர், கரை சேர மாட்டார். மேலும் வெளிநாட்டு மதங்கள் வந்தால் அவற்றையும் வாரியணைக்கும் பரந்த மனப்பான்மை யுடை யது தமிழக மென்பா ரவர். அஃதாயின் கிறிஸ்தவ இசுலாமிய மாதிய வற்றையுந் தமிழகத்துக்குப் புதியவாய்க் கிடைத்த கண்களாக அவர் கொண்டா லென்னே? தமிழகம் இருகணி யாவதிலும் பலகணியாவது நல்லதுதானே. அத்தனை கண்களும் பரஸ்பரம் துணையாமெனக் கூறலே அவருக்கு நியாயம் சைவத்துக்கு வைணவந் துணையாகு மாயின் கிறிஸ்தவ இசுலாமிய மாதியவுந் துணையாகும். பின்னவை யாகா வெனின் முன்னது மாகாது. அது தமிழகத்ததாயினும் அதனைச் சைவம் அணைத்துக் கொள்ளாது. 'உடன் பிறந்தே கொல்லும் வியாதி' என்ருர் ஒளவையார்.

வைணவ மாயாவாத சமயங்களாற் சைவம் பெரிதும் பாதிக்கப் பட்டிருந்ததைத் கண்டு மனம் பொருமல் ஊரூராய்ச் சென்று நூற்றுக் கணக்கான பிரசாரங்கள் புரிந்தும், புத்தக பிரசுரங்க ளியற்றி வெளியிட்டும், நீதிமன்றங்களில் வழக்காடியும் சைவம் புரந்தனர் வைதிக சைவ சண்டமாருதம் ஸ்ரீலஸ்ரீ சூளை சோமசுந்தர நாயகர், யாழ்ப்பாணம் ஆறுமுக நாவலர், பாம்பன் சுவாமிகள், அம்பலவாண நாவலர், சபாபதி நாவலர், திரிசிரபுரம் மீனாட்சிசுந்தரம் பிள்ளை, காசி வாசி செந்திநாத ஐயர், வேங்கடரமண தாசர், மாயாவாத தும்ஸ கோளாரி நா. கதிரைவேற் பிள்ளை, சுவாமிநாத பண்டிதர், வி. சிதம்பர ராமலிங்க பிள்ளை, திரு. மா. சாம்பசிவம் பிள்ளை முதலிய விற்பன்னர் பலர். பயங்கரமான எதிர்ப்புகளுக்கிடையே அவர் அப்பணி செய்து ஜயசீலராய் விளங்கினர். அம்மம்ம! அறிஞர் மெச்சத்தக்கதா யிருந்தது அவரது பௌருஷம். ஆனால் அவர் விட்டுச் சென்ற பணியைத் தொடர்ந்து நடத்த இக்காலச் சைவ சமூகத்தில் நாதியில்லை. என்னே இவ்வளவு குறுகிய காலத்தில் இவ்வளவு பெரிய மாறுதல்! இப்போது திருப்பாவை திருவெம்பாவைக் கூட்டு மகா நாடுகள் ஆங்காங்கே நடந்து வருகின்றன. நவீனர் அக் கூட்டுட் சிக்கி அம் மகாநாடுகளால் நாத்திகம் வீழ்ந்தும், ஆத்திகம் வாழ்ந்தும் வருகின்றன வெனப் பேசுகிறார். நாத்திகமும் மாயாவாத மும் அண்ணன் தம்பிகளாகும். சோமசுந்தர நாயக ரியற்றிய 'ஆபாச ஞான நிரோதம்' என்னும் புத்தகத்தைப் படித்தவர் அவ்வுண்மை தெரிவர். அக்கூட்டு மகாநாட்டுத் தந்தை ஒரு மாயாவாத மதகுரு. அவர் ஆத்திகத்தைப் பரப்புவார் போல் தம்மைக் காட்டிச் சைவ சமூகத்தைத் தம் சமயப் படுகுழியில் வீழ்த்துதற்குச் செய்யும் சூழ்ச்சி யாகவே அக்கூட்டு மகாநாடுகளை நடத்தக் கட்டளை யிட்டார். நவீனர் அக்கட்டளையைச் சிரமேற் கொண்டனர். அம்மகாநாடுகளும் பரவு கின்றன. அதனால் திருமுறைகளின் ஒப்புயர்வின்மையில் நம்பிக்கை கெடுகிறது. 'அரியுஞ் சிவனும் ஒண்ணு, அறியாதவன் வாயில் மண்ணு' என்னும் பித்த வாசகம் பேர் பெறுகிறது. அம் மகாநாடு களில் அதற்கே முதலிடமுண்டு. சைவசமூகத்தை மிண்டிய மாயா வாதத்திற் புகுத்துவதற்குக் கற்பிக்கப்படும் முதற்பாடம் அதுதான். அம் மகாநாடுகளாற் சைவம் வளர்தலு முண்டோ?

'அரிசனங்களும்............தொடர்பு கொள்வர்'

(19—7—55 தமிழ் நாடு)

என்கிறார் நவீனர்.

அரிசன மென்பது பாரத தேசத்திலுள்ள ஒருசார் மக்களுக்கே சமீப காலத்திற் கொடுக்கப்பட்ட தொரு பெயர். அவர் சுமார் ஏழெட்டுக் கோடிக்கு மேலு முளர். அவருள் அரிவணக்கக்காரரு

மிருப்பர், அரவணக்கக்காரரு மிருப்பர். ஆயினும் அரவணக்கக்காரரே மிகப் பெரும் பாலா ரெனத் தெரிகிறது. தமிழகத்திலோ அவர் அனை வருமே அரவணக்கக்காரர்தா னெனத் துணிந்து கூறலாம். அங்ஙன மாகப் புதுப் பெயரிட்டழைக்க ஆசைப்பட்டவர் அவரை அரிசன மென்றோ, அரசன மென்றோ பெயரிடாமல் ஏதேனு மொரு பொதுப் பெயரிட் டழைத்திருக்கலாம். அதை விட்டு அரிசனமென் றழைத் தாரவர். உண்மையில் அம்மக்கள் அரசனமென்ற பெயருக்கே முற்றி லும் உரியவர். ஆனால் அரிசனமென்ற பெயரை அவரும் ஆக்ஷே பிக்கவில்லை. அரவணக்கக்காரராகிய ஏனைச் சைவமக்களும் ஆக்ஷே பிக்கவில்லை. பாரதத்தை ஆங்கிலேயர் ஆண்டபோது நான் 'சிவ நேசன்' பத்திரிகையில் ஆக்ஷேபித்தேன். ஏனைச் சைவ ரெல்லாம் இன்றுவரை என்ன வாயினரோ? தெரிய வில்லை. ஒரு சமயத்தின் தெய்வத்துக்குரிய சிறப்புப் பெயரை முன்வைத்து ஒரு சார் மக்களுக் குப் பெயரிடுவதாயின் அவர் அச்சமயத்தைச் சார்ந்தவரா யிருக்க வேண்டும். இப்போது அரிசன மென்று சொல்லப்படுபவர் வைண வரா? அல்லரே. ஆயினும் அவர் எதிர்காலத்தில் அச்சமயத்தைச் சார்வதற்கு ஏதுவாகும்படி அவருக்கு அப்பெயர் வைக்கப்பட்டிருக் கிறது. விளைவை நன்கு யோசித்தே எதிரிகள் அப்பெயரை யிட்டனர். நவீனரோ அதை யறியாமற் சம்மதித்தனர். மிக முயன்று அன்னிய சமயத்தவருள் ஒவ்வொருவராக அல்லது சிலர் சிலராகத் தம்பா லிழுத்துக் கொள்வதே கிறிஸ்தவமாதி சமயங்களிடங் காணப்படுகிறது. ஆனால் வைணவமோ அரவணக்கக் காரராகிய ஒருசார்ப் பல்கோடி மக்களுக்குத் தன் தெய்வத்துக்குரிய சிறப்புப் பெயரை முன்வைத்து அரிசன மெனப் பெயரிட்டு அதைச் சர்க்காரும் ஏற்குமாறு செய் துள்ளது. அத்தனை பேரையும் எதிர்காலத்தில் வைணவ ராக்குதற்குச் சிரமமற்ற அதிசாமர்த்தியமான மதமாற்றமுறையன்றோ அது? அதைக் கண்டு கவலச் சைவ சமூகத்துக்குக் கண்ணு மனமு மில்லையே. சிலநூறு வருடங்கள் போகட்டும். அப் பெயரின் விளைவு வெளிப்படும். நவீனர் அச் சமூகத்துக்கு வரும் அப் பேராபத்தை மறைத்து அவ் வைணவ ரோடு கூட்டு வாழ்க்கையும் நடத்தி வருகின்றனர். அவர் சைவத்தை வளர்க்கிறவராம். ஐயோ! ஹா ஹா.

'வைதிக சைவம் நாட்டில் தலையெடுத்த காரணத்தால் வேதங்களையே அறியாத தமிழர் வாழ்வில் வேத விதிகள் புகுந்து கொண்டன.'

(14—8—55 தமிழ் நாடு)

என்கிறாரவர். அதுவும் அவர் பிரலாபம். அப்பர், மெய்கண்டார், சிவஞான முனிவரர் முதலியோர் வேதங்களை யறிந்து வேத விதிப்படி யொழுகிய வைதிக சைவத் தமிழர். இவர் ஒரு வகையார். நவீனர்

சொல்லுகிறபடி, வேதங்களையே அறியாமலும், வேதவிதிகளை யாசரியா மலும் இருந்த அக்காலைத் தமிழர் இன்னொரு வகையார். அந்நவீனர் அவருள் எவ்வகையாரை அறிஞரென்பர்? எவ்வகையாரை மடவோ ரென்பர்? இரண்டாம் வகையினர்தான் மூடராய்க் காட்டு மிராண்டி களா யிருந்திருப்பரென நான் சொல்லுகிறேன். ஆனால் வேதங் களின் பிரஸ்தாபந் தொல்காப்பியத்திலே யுண்டு. ஆகலின் அக்காலைத் தமிழரும் வேதங்களை யறிந்து அவற்றின் வழி யொழுகிய வைதிக சைவரே யென்க. இக்காலை நவீனர் போன்று அக்காலத்திலும் அச் சைவரல்லாத் தமிழர் சில ரிருந்திருக்கலாம். அவ்வளவே. நவீனர் சிவாகமங்களையுந் தூற்றுவர். அவ்வாகமங்களைச் சைவ சமூகம் அறவே மறப்ப தென்றேவென அவர் ஏங்கி ஊசி மேல் நின்று தவங்கிடக்கிறார். இனித் திருமுறை, சித்தாந்த சாத்திரம், திராவிட மாபாடியங்களி லாவது அவருக்கு நல்லெண்ணமுண்டா? திருக்குறள் உயர்ந்த நூல் தான். அதைத் திருமுறையாதியவும் போற்றியுள்ளன. ஆயினும் அது திருமுறைக் கூட்டத்துட் சேர்க்கப்படவில்லை. அதற்குக் காரணங்கள் பல. அறம் பொருள் காமம் என்னும் உலக நடையை விரித்தோதி வீட்டைச் சூசகமாய்க் கூறிச் சென்றது அந்நூல். ஆக லின் அது சமயநூல் வரிசையில் இடம் பெற்றிலது என்பதொன்று. நவீனர் அதைப் பலபடப் பேசிவருவதன் நோக்கமே சைவப்பிரமாண நூல்களாகிய திருமுறை யாதியவற்றோடு சைவசமூகத்துக்கு இருந்து வந்த தொடர்பு அறுந்து போக வேண்டு மென்பதே. அவர் திரு வாசகத்தையும் புகழ்ந்துரைப்பர். அதுவும் மற்றத் திருமுறைகளை அச்சமூகம் மறக்கவேயாம். சித்தாந்த சாத்திர திராவிட மாபாடியங் களை அவர் நினைக்கவுஞ் செய்யார். தம்மைச் சைவரெனக் கூறிக் கொள்ளுகிற அவரது வாய் முன் காட்டிய

'தமிழர்களும் பிற மதத்தினரும் இசுலாம் மார்க்கத்தை நன்கு கற்றல் வேண்டும்' என்பதும்,

'கண்ணன் வாழ்க்கையில் எழுந்த புனித நூல் பகவத் கீதை. உண்மையான அன்புநூ லிது. எல்லோரும் இந் நூலைப் படிக்க வேண்டும். கீதை பாராயணம், அதைச் சொல்லிக் கொடுத்தல், அதன் கருத்துக்களைப் பரப்புதல் ஆகியவற்றைச் செய்ய முற்படவேண்டும்........கீதையின் மூலம் எவ்வளவு உண்மைகளைக் கண்ணன் அள்ளித் தந்திருக்கிறா னென்று பாருங்கள். கீதை சாந்தியை அளிக்கிறது. உலகாயத மயக்கத்திலிருந்து கீதை தெளிவு படுத்துகிறது. ஆகையால் கண்ணன் நாமத்தைப் பலகாலம் வாயால் வாழ்த்திக் கையால் சேவை செய்ய வேண்டும்'

(12—9—55 *தினமணி*)

என்பதும் போன்ற விளம்பரங்களையே சைவ சமூகத்தின் முன் பறை யடித்துக் கொண்டிருக்கும். அன்னிய சமயங்களையும், அன்னிய சமய நூல்களையும், புத்தர் பெருமான் ஏசு பெருமான் நபி பெருமான் என்றெல்லாம் புகழ்ந்து அன்னிய சமயத் தலைவர்களையும் சைவ சமூகத்துக்கு அறிமுகப்படுத்தப் பயின்றதே யன்றிச் சைவ சமயத்தை யும், அதைச் சார்ந்த அன்ன பிறவற்றையும் பிற சமயிகளுக்கு அறி முகப் படுத்தப் பயின்றிலதே அந்த வாய். அங்ஙனம் நவீனர் சைவ சமூகத்தை அன்னிய சமயிகளுக்குக் காட்டிக் கொடுத்து அடிமைப் படுத்த முயன்று அவரிடமிருந்து கமிஷனடிக்கிற ஏஜெண்டுகளா யிருந்து வருகின்றனர். வேதாகம மாதியவற்றை நிந்திப்பதால் அவருக்குக் கிடைக்கும் பிரயோசனம் அது.

‘இந்துக்களின் எண்ணிக்கை நாளுக்கு நாள் குறைகிறது. அதே நேரத்திலே கிறித்து மதம் வளர்ந்து கொண்டே வருகிறது’

(2—6—55 தமிழ் நாடு)

என்கிறாரவர். ஏன் வளர்ந்து கொண்டே வராது? சைவ சமய சாஸ்திர வேலியை மேற்காட்டியபடி அவர் தகர்த்து வருவதே அதற்குக் காரணம். அங்ஙனம் சைவப் பயிரைப் பிற சமயிகள் மேய விடுவதுதான் நவீனரின் சைவ வளர்ச்சிக் கைங்கரியம்.

‘செவிடு, ஊமை, அங்கஹீனர்பற்றி அவர்களது பூர்வஜன்ம வினையால் பெற்ற பிறவி யென மத வாதிகள் மழுப்பிக் கூறினாலும்........’

(7—5—54 தினமணி)

என்கிறார் நவீனர். மதவாதிகள் மழுப்பிக் கூறினாலும் என்பதைப் பிறகு பார்க்கலாம். செவிடு முதலிய கேடுகள் பூர்வ வினைப்பயனென் பது மெய்யா? பொய்யா?

‘முன்னைச் செய்வினை இம்மையில் வந்துமுடும்,’

‘முந்திச் செய்வினை யிம்மைக்கண் நலிய’

என்றது திருமுறை.

‘உயிருடம்பி னீக்கியா ரென்ப செயிருடம்பின்
செல்லாத்தீ வாழ்க்கை யவர்’

என்றது திருக்குறள். ஆகலின் அதைப் பொய்யென்றல் அசைவப் புத்தியே. ‘மதவாதிகள் மழுப்பிக் கூறினாலும்’ என அவர் கூறியது கருமமலம் உண்டெனக் கொண்ட சமயவாதிகளைப் பரிக சித்தபடியாம். அன்றியும் அவர் தம்மை அச் சமயவாதிக ளல்லாத நல்லறிஞ ரெனக் கூறி உலகிற்குப் பகிரங்கப் படுத்தியவரு மாவர். கருமமலத்துண்மையை யுடம்படாத சமயிகள் அச் செவிடு முதலிய துன்பங்களுக்குக் காரணங் கூறவறியார். எதையேனுங் கூறினால்,

அது தெள்ளறிஞரின் சிரிப்புக் கிடனுகும். உலுத்தராவார் எந்தக் கூட்டத்திலுமுளர். பிறர்க்கு உபகரித்தற்கு ஒருப்படாத தம் உலுத்த குணத்தை மறைக்க அவர் தம் கூட்டத்துப் பெற்ற பயிற்சிக்குத் தக்கபடி ஏதாவ தொன்றைச் சொல்லி மழுப்பத்தான் செய்வர். அது சகசம். நவீனருள்ளும் அன்னர் 'இச் செவிடராதியோர் உழைப்பாளி களுக்குச் சுமையே. இவராற் சமூகத்துக்குப் பயன் என்'? எனப் பேசுவர்; அல்லது வேறு பேசுவர். ஆனல் கரும மலத்துண்மையை நினைப்பூட்டுகிற அச் செவிட ராதியோரிடம் அவ்வுண்மையை உடம் பட்ட சமயவாதிகள் தம்மைக் காத்துக்கொள்ளும் பொருட்டாவது அனுதாபங் காட்டி உபகரிக்கவே செய்வர். நவீனர் அவரைப் பரி கசிப்பதன்மூலம் அம்மலத்துண்மையை நிராகரிக்கிருர். அதுவும் நாஸ்திகமே. அது சைவத்தை வளர்ப்ப தெப்படி?

'இந்துக்களின் எண்ணிக்கை.....................குறைகிறது' என நவீனர் கூறியது காட்டப்பட்டது.

'ஹிந்து மதத்தில்...........ஒவ்வொரு விஷயத்துக்கும் ருசுக் காட்டமுடியும்' (25—6—56 தினமணி)

என்பதும் அவர் கூற்று.

இந்துக்களின் தொகைக் குறைவைக் கண்டு ஓலமிடுகிற அவரிடம் சைவமக்களின் எண்ணிக்கை குறைகிறதா? இல்லையா? என்ற கவலை கிடையாது. அது கிடக்க.

**ஹிந்து என்ற பதத்தின் பொருள் என்ன? அது சமயச் சார்புள்ள பெயரா?**

இந்து என்ற சொல்லை அவர் அடிக்கடி வழங்கு கிருர். ஹிந்து என்பது இந்து வாயிற்று. நம் நாட்டுச் சமயங்களுக்கெல்லாம் சம்ஸ்கிருதத் திலேயே பெயர்க ளிருந்து வருகின்றன. ஹிந்து என்பது சம்ஸ்கிருதமா? அன்று. வேத சிவாகமங்களில் வந்துள்ள எச்சமயத்துக்கும் அப்பெய ரில்லை. தமிழகத்திலும் சைவ வைணவ மாதியவற்றுக்கு ஆசிரியன்மா ருளர். அவருந் தாமியற்றிய நூல்களில் தம் சமயங்களை அப் பெயரிட் டழைத்திலர். ஆரிய சமாஜ மென்பது தயானந்தர் தோற்றிய சமயம். அதனேடு நெருங்கிய தொடர்புடையது ஹிந்து மஹா சபை யென்பது. ஹிந்து என்னுஞ் சொற்குப் பொருள் என்னை? அச்சபையினரும் அப்பொருளை விளக்கினதாகத் தெரிய வில்லை. அச்சொல்லை வழங்குவார் பல்கோடி மக்கள். ஆனல் அப் பொருளைத் தெரிந்தார் எத்தனை பேர்? அப்படி மறைக்கப்பட்டுக் கிடக்கிறது அச் சொற்பொருள். அதைக் கண்டெடுத்துப் பகிரங்கப் படுத்தவேண்டும். அஃதவசியம். ஆகலின் அதனைச் சிறிதே விசாரிக்கலாம்.

இந்து என்ற சொல் வெளிநாட்டிலிருந்து பாரத தேசத்துக்கு வந்த தெனத் தெரிகிறது.

'இந்து மதம் என்று இக்காலத்தில் வழங்கும் பெயர் பல சமயங்களுக்கும் பொதுவானது. அப்படி ஒரு தனிச் சமயம் இல்லை. ஆனாலும் சைவம், வைணவம் முதலிய சமயங்கள் பலவற்றிற்குப் பொதுவாக அந்தப் பெயர் அயல் நாட்டவ ரால் வழங்கப் பெற்று, நாளடைவில் நாமும் வழங்கும்படி யாயிற்று'

என்றது 'உள்ளங் கவர் கள்வன்' என்ற சுவடியொன்று. 15—7—56 காங்கிரஸ்', ஜூன் வெளிவந்த 'பிலிம் இண்டியா'த் தமிழாக்கம்.

'ஆங்கிலச் சரித்திரப் பேராசிரியர்கள்தான் முகலாயர்கள் இந்தியருக்குக் கொடுத்து வந்த இந்து என்ற பெயரை எடுத்துக் கொண்டு மேலும் மேலும் அழுத்தமாக வற்புறுத்தி ........ பிரிவினையை ஏற்படுத்துவதற்குக் காரண கர்த்தாக்க ளாக இருந்தார்கள். முகலாயர்கள் இந்தியாவைப் படை யெடுப்பதற்கு முன்பு ஹிந்துக்கள் என்ற பெயரே கிடையாது?'

என்றது. முகலாயரே ஹிந்து என்ற பெயரை இந்தியருக்குக் கொடுத்தன ரென்பது அதனால் வெளி.

பிரமவித்தியா என்ற பத்திரிகை புத்தகம் 4–இலக்கம் 14–பக்கம் 201 இல்

'ஹிந்து என்னுஞ் சொல் புதியதே. இதைச் சில பாஷா கவிகள் உபயோகிக்கின்றனர். சில நவீனர் இது மகமதிய ரிட்ட பெய ரென்றும் மற்றவர் யவனர் ஸிந்து நதிக்கரையில் வசிப்பவராதலின் ஹிந்துக்க ளெனப் பெயரிட்டா ரென்றும், வேறு சாரினர் இஃதறிஞர் பெய ரென்றும், பிறர் ஓர் வகைச் சித்தாந்திகள் பெய ரென்றும், மற்றவர் ஒதுக்கப் பட்டவர் பெயரென்றும், சிலர் பிரஷ்டர் பெயரென்றும் பல வழி சொல்லுகிறார்கள்'

என வருகிறது. இவ்வர்த்த பேதம் எதனால் வந்தது? அப் பதம் பல பொரு ளொரு சொல்லா? அன்று. அஃதொரு புதிய சொல். பலரும் தாந் தாங் கருதும் பொருளை அதிற் புகுத்தப் பார்க்கின்றனர். அவ்வளவே. இன்னும்

'இச் சொல் மகமதியர் விசேஷமாய் நெடுங்காலமாய் வியவ கரிப்பதாய ஆரட்ட பாஷை (அதாவது அரபி பாஷை)அதில் ஹிந்து என்று (அஞ்ஞானி என்னும் பொருளில்) இருக்...

கின்றது. அவர்கள் இந்த இந்தியா தேசத்தின் ஆக்ஷியைக் கைக்கொண்ட பொழுது தம்மவர் ஞானிகளாகவும் மற்றவர் அஞ்ஞானிகளாகவும் எண்ணி இப்பெயரை இட்டார் என்பது'

என்றது 202ம் பக்கம். ஹிந்து என்ருல் அஞ்ஞானி யெனத் தெரிகிறது.

"ஹிந்தி என்ற வார்த்தையே இந்தியச் சொல் அல்ல என்று ராஜாஜி இங்கு தமிழர் அளித்த வரவேற்பில் பேசுகையில் கூறினர். பூர்வீக பாரசீகர் இந்தியாவுக்கு வந்தபோது இந்தியாவின் பூர்வீகக் குடிகள் பேசிய மொழிக்கு 'ஹிந்தி' என்று பெயரிட்டனர் என்று அவர் விளக்கினர்"

(10—3—58 தினமணி) என்பதொன்று. சென்னைக் கோகலே ஹாலில் 27—9—41 இல் நடந்த கூட்டமொன்றில் R. K. முகர்ஜி என்பவர்

'India and Hinduism are organically related like body and soul. The name Hinduism was given to them by Persians'

என்று பிரசங்கித்தார். ஆகவே ஹிந்து, ஹிந்தி, ஹிந்தியா (இந்தியா), ஹிந்துஸ்தானம் என்ற சொற்கள் மொகலாய ஆட்சிக்கு முன்னரே பாரசீகரால் இங்கு வழங்கப்பட்டனவென்பது தெரிக.

'கிறிஸ்து பிறந்த 1191-வது வருஷத்திலே சகாபுடீன் கோரி என்னப்பட்ட மகமதிய அரசன் டில்லி இராஜ்யத்தை ஜயித்து மகமதிய அரசை நிலைபெறச் செய்தபோது, இந் நாட்டவர்களாகிய ஆரியரை இந்துக்களென்று அழைக்கத் தொடங்கினர்........இதனை இத்தேச புராதன சரித்திரமாகிய 'பாரத் பாகி' என்னப்பட்ட நூலிற் காணலாம்'

என்று 'படுக்கை யறையில் பாசாங்கு செய்த பங்கஜவல்லி' என்னுங் கதையில் வந்துள்ளதும் அறியத்தக்கது.

ஆனல் 23—11—1947 'ஹிந்து'வில் Origin of the word Hindu' என்ற தலைப்பின் கீழ்

'Gandhiji then referred to a question that was sent by a member of the audience: What is a Hindu. What is the origin of the word? He said that these were pertinent questions and topical and added he was no historian and he laid claim to no learning. But he had read in some authentic book on Hinduism that the word Hindu did not occur in the Vedas, but when Alexander the great invaded India,

the inhabitants of the country to the east of the Sindhu, which is known to English-speaking Indians as Indus, were described as Hindus. The letter 's' had became 'h' in Greek. The religion of these inhabitants became Hinduism........' என வந்துளது.

இது காந்தி கூறியது. பிரமவித்யா என்ற பத்திரிகை புத்தகம் 4, இலக்கம் 14, பக்கம் 201, 202 இல்

'பார்ஸி பாஷையில் ஹ என்னும் எழுத்து ஸம்ஸ்கிருத பாஷையில் ஸ என்னு மெழுத்தாய் முடிகின்றது. ஆயின் ஸிந்து நதிக்கரையைச் சேர்ந்தவர்களை ஸிந்துக்களென.... சொல்லவேண்டியிருக்க அவர் பாஷையி னியல்பு மாறுது ஸ என்னு மெழுத்தை ஹ என மாற்றி ஹிந்து என்ருர்கள்'

என்றது. அவர் என்றது யவனரை. (கிரேக்கர்)

இதுவும் காந்தி சொன்னதும் ஓரளவு ஒத்திருக்கின்றன. அவர் அக் கருத்தை எப்புத்தகத்திற் படித்தாரோ? அப்புத்தகத்தின் பெயரைச் சொன்னுரிலர். ஸிந்து என்ற சொல் ஆங்கிலத்தில் இண்டஸ் என்று ஆனதைப் பின்னர் ஆராயலாம். ஸிந்து என்பதின் முதலெழுத் தாகிய 'ஸ்' என்பது கிரேக்கமொழியில் 'ஹ்' என்ருயிற் றென்கிருர் அவர். அம்மொழியில் 'ஸ்' என்ற சப்தம் இல்லாவிட்டால் அவர் சொன்னதைச் சம்மதிக்கலாம். ஸாக்ரடீஸ், ஆர்க்கமிடீஸ், அரிஸ் டாட்டில் முதலிய கிரேக்கச் சொற்களைக் காண்க. 'ஸ்' என்ற ஒலி அம்மொழியிலும் உண்டெனத் தெரிகிறது. அங்ஙனமாக 'ஸ்' என்ற ஒலி 'ஹ்' என்ற ஒலியாய் மாறுதற்கு அவசியமென்னை? ஆகவே அவர் பிரமாணமாகக் கொண்ட சுவடியும், அதுபற்றி அப்பதத்துக்கு அவர் கூறிய வரலாறும் ஆராய்ச்சி யறிவிற்கு ஒவ்வாதன என்பது சித்தம்.

இனி, அச்சொல்லின் உண்மை வரலாறும் பொருளுந்தா னென்னை? பழங்காலத்தில் பாரசீக வியாபாரிகள் கைபர்க்கணவாய் வழியாகப் பாரத தேசத்தோடு வியாபார சம்பந்தமாகப் போக்கு வரத்துச் செய்துவந்தனர். அவர் கொண்டுவந்த சரக்குகளைப் பாரதத்தின் வடமேற்கெல்லையிலுள்ள மலைவாசிகள் அடிக்கடி கொள்ளையிடுவதுண்டு. அதனுல் அப்பாரசீகர் அவரை ஹிந்துக்க ளென் றழைத்தனர். ஹிந்து என்பது பாரசீக பதம். அரபு அதற்கு மூலமாகலாம். கொள்ளைக்காரன், அடிமை, கறுப்பன் என்பன அதற் கருத்தம். அதனை விச்சூர் முத்துக்குமாரசாமி முதலியார் B. A. எழுதிய 'ரத்ன மாலிகா' என்ற சுவடியிற் காண்க. கபீர்தாஸ் அச்

சொல்லுக்குக் காப்பிரி (கடவுளை நம்பாதவன்) எனப் பொருள் கொண்டார். ஜெர்மன் கவியாகிய கதே யென்பவர் எழுதிய நூலில் அடிமை யென்ற பொருளில் அச்சொல் வழங்கப்பட்டுள்ளது.

'நம்மவர்கள் இந்நாட்டிற் குடியேறிய முகமதியர்களை அசுத்தர்என்னும் பொருள்தரத்தக்க மூலக்என்னும்பெயரால் அழைத்தமையால், அவர்கள் இவர்களை விசுவாச மில்லாத வர்கள் என்னும் பொருளைத் தரத்தக்க இந்துக்கள் என் னும் பெயரால் அழைத்தார்கள். மூலக் என்னப்பட்ட பெயர் மகமதியர்களுக்கு நெடுநாள் வரையில் வழங்கப்பட்டிருந்தது.

இந்தச் சவிஸ்தாரத்தை 'பாகவத்' என்னப்பட்ட இத்தேச சரித்திரத்திலே காணலாம்....' என்றது அப்பங்கஜவல்லி கதை. பிரம வித்தியாப் புத்தகம் 9. இலக்கம் 18. பக்கம் 272 இல்.

'இந்து என்ற நாமம் பாரசீக பாஷையில் கரியன், பொய்யன், அடிமை யென்று பொருளாம்'. என்றெழுந்ததோ ராசங்கைக்கு அந்நாமம் ஆராயப்படாமலே சமாதானம் வந்துளது. அந்த ஹிந்துக்கள் வசித்துவந்த ஸ்தானம் ஹிந்துஸ்தான மாயிற்று. ஹிந்துஸ்தானம் – கொள்ளைக்காரர் வாழுமிடம். ஹிந்துஸ்தான மென்பது நாளடைவில் பாரதம் முழுவதையும் பற்றி இந்தியாவு மானது. அயல் நாடாகிய சீன முதலியவற்றிலிருந்து இங்கு வந்த யாத்ரிகரும் அப்பெயரைவைத்தே இந் நாட்டுச் சரித்திரக்குறிப்புக்கள் எழுதினர். பின்னர் வந்து பன்னூருண்டுகள் இத்தேசத்தை யாண்ட மன்னர் இசுலாமியர். அவரும் இத்தேசத்தை இந்தியா வென்றும், இத்தேசத்தினரை இந்துக்களென்றுமே கொண்டனர். இப்போது அப்பெயர் அவரையும் பற்றியது. எல்லாருமே இந்திய ராயினர். இக்கால அரசியல் முழக்கம் 'ஜெய் பாரத்' என்பதன்று, 'ஜெய் ஹிந்த்' என்பதே. அவ்வயல் மொழி இந்நாட்டுச் சிலபல சமயங்களுக்கு ஒரு பொதுப் பெயராயும் அமைந்துவிட்டது. என்னே, அதன் ஆதிக்கம்!

சரித்திர ஆசிரியன்மார் சிலர் புறப்பட்டனர். அவருக்கு அச் சொல்லின் பொருள் அறிய வருமோ? வராதோ? அச்சொல்லிற் புதுப் பொரு ளொன்றைப் புகுத்தின ரவர். ஸிந்து நதி பாயப்பெற்ற பிரதேசத்தில் தோன்றிய மதம் அது, ஆகலின் அது ஸிந்துமதமாகிக் காலக்கிரமத்தில் அந்த ஸிந்து மத மென்பது ஹிந்து மத மென மரு விற்று என்பது அப்புதுப் பொருள். ஸிந்துமதமென்ற பெயர் எக் காலத்திலு மிருந்ததில்லை. இல்லாத அது ஹிந்துமதமென எப்படி மருவக்கூடும்? சில சொற்களின் மூலவடிவம் உச்சரிப்பதற்குச் சிறிது கடினமாயிருக்கும். சாமானிய மக்கள் அக்கடினத்தை நீக்கி

அவற்றைச் சுலபமாக வுச்சரிப்பர். அதனால் உளவாயினவே மரூஉக்கள். திருநெல்வேலி யென்பதைவிட நெல்லை யென்பதும், விக்கிரமசிங்கபுரம் என்பதைவிடச் சிங்கை யென்பதும், அருமருந்தன்ன என்பதைவிட அருமந்த என்பதும், பிறவும் சுலபமாக உச்சரிக்கப்படும். ஆனால் ஸிந்து என்பதைவிட ஹிந்து என்பது சுலப வுச்சரிப்பா? அன்று. ஸ் என்ற எழுத்தை விட ஹ் என்ற எழுத்துக் கடின வுச்சரிப்பே யுடையது. ஆகலின் அம்மரூஉ உளதாதற்கு நியாயமில்லை ஸிந்து என்ற நதி ஆங்கிலத்தில் Indus என்று சொல்லப்படும். Hindus என்று சொல்லப்படுவதில்லை. ஸி, ஹிக்களை விட 'இ' சுலப வுச்சரிப்புடையது. அதனால் இந்துவும் ஹிந்துவாக மாட்டாது ஸிந்து என்ற மாகாணத்துக்கு இன்றும் ஸிந்து என்பதுதான் பெயர். யவனபாஷையின்படி ஹிந்த் என்பது அதற்குப் பெயரானால் ஸிந்து என்ற பெயர் இன்றுவரை நிலைத்திருக்க முடியாது. மேலும் ஸிந்து என்பதற்கு Sind என்பது ஆங்கிலம். அது மாகாணப் பெயரா யிருந்துவருகிறது. அப்படியே ஸிந்து நதியையும் Sind என்றுதான் சொல்லவேண்டும். ஆயினும் அப்பெயரில் சிறிதேனும் வித்தியாச மிருப்பது நல்ல தன்றோ? அதற்காக அப்பெயரை Sindu என முழுக்கச் சொல்லி முதலிலுள்ள Sஐயெடுத்து அச்சொல்லின் இறுதியிற் சேர்த்து Indus என ஆங்கிலேயர் அந்நதிக்குப் பெயரிட்டிருக்கலாம். அப்படித்தா னிருக்கமுடியும். ஆகவே அப் புதுப் பொருள் அச்சரித்திர ஆசிரியன்மாரிடமுள்ள அறியாமையையே காட்டி நிற்கு மென்க. உலகிலுள்ள எந்த மதத்துக்கும் அதன் தெய்வம், ஆசிரியன், கொள்கை, பிரமாணநூல் ஆகியவற்றுள் ஏதேனும் ஒன்றுபற்றியே பெயரிருநதுவருகிறது. இடம்பற்றிய பெயர் எந்த மதத்துக் குண்டு? ஸிந்து என்ற இடம்பற்றிய பெயர் மாத்திரம் ஹிந்துவாகி மதப் பெயரானது விசித்திரந்தான்.

பாரதத்தைத் துண்டாட முயன்றனர் சில இசுலாமியர். அவருக்கு ஹிந்துஸ்தான் என்ற சொற்பொருள் நன்கு தெரியும். அதனாற்றான் தாம் முயன்று பெற்ற பாரதப் பகுதிக்குப் பாகிஸ்தான் என அவர் பெயரிட்டுக் கொண்டனர். பாகிஸ்தான் என்பதற்குப் பரிசுத்த ஸ்தானம் என்பது பொருள். ஹிந்துமதமென்பதன் பிறப்பிடமெனக் கூறப்படும் ஸிந்துவும் தன் அபரிசுத்தத்தை யுதறிவிட்டுப் பாகிஸ்தானத்திற் சேர்ந்துகொண்டதுங் கருதத்தக்கது.

ஹிந்து என்பதற்கு ஹிம்ஸித்தலை அல்லது ஹிம்ஸிப்பவனைத் துரத்துபவன் என்ற பொருளைக் கற்பிக்கின்றனர் சம்ஸ்திருதத்துக்குத் தாமே யுரிய ரெனச் சொல்லித் திரியும் ஒரு சாரார். அவர் அச்சொல்லைச் சம்ஸ்கிருதமெனக் கொண்டார். 'பிரமவித்தியா' 5. 17. 301, 302 இல்.

'உள்ளன்பு நிறைந்த ஸ்ரீநிவாச சாஸ்திரிகாள்!
நீவிர் ருக்வேதத்திய 'ஹிதி' என்னும் வினைமுற்றுப் பகுதியினின்ருதல், 'ட' கரம் 'த' கரமாய் மருவினவாறு 'ஹிடி' என்னும் பகுதியினின்ருதல், பகுத்துரை செய்யின் பிரமம் முதலிய பலபொருளை உணர்த்தும் 'ஹ்' 'இந்து' என்னுமிரு சொற்றெடராய் அதன் பொருளாய பரம் பொருளையண்டிய வாரியரை ஆகுபெயராய் நின்றுணர்த்துந் தன்மைய தென்ருதல் 'ஹிந்து' என்னுஞ்சொல்லை வடமொழியிற் பொருட்படுத்தியது இயலாக மாதி யளவைகளாலமைந்தது என எவ்வறிஞன் கூரு தொழிவன், இலக்கிய மனந்தமாதலின் அவைகளை அளந்து அதனுல் சொல்லுண்மை யறிதல் கூடாது. இனிச் சொல்லுண்மை யறிதல் இலக்கியத்தாற்ருன் என வாதியார் வாதிப்பினும் அவர் இக்காலத்து வழக்கும் ஓரிலக்கியமெனக் கொண்டொழிவாராக. முற்கூறிய பொருளமைந்த வடமொழிச்சொல் ஒன்று ஊழியன் எனப் பொருளுடைய மிலேச்சச் சொல் ஒன்று. இவற்றிற் பிந்தியது ஆரியருக்குப் பெயரெனல் ஆரியர் கூற்ருகாது' என்றும், 5. 19, 321, 322 இல்

'இருக்கு வேதத்தில் படிக்கப்பட்ட ஹிதி என்னும் வினைமுற்றுப் பகுதியினின்று உண்ணென்னும் விகுதி சேர்க்க ஹிந்து என்னும் சொல் வடமொழி இலக்கணவிதி வழுவாது நிருபிக்கப்பட்டது. அன்றி இதையே ஆசிரியர் பாணினியார் அவரியற்றிய வடமொழி இயற்றெடர்பில் வினைமுற்றுப் பகுதியில் 'ஹிடி' என மாறி ஓதினர் என்று கூறப்பட்டதென்றும், இலக்கணவழி சித்திக்கும் இலக்கியத்தை எவ்வாற்ருனும் வழக்கின்மை வழுவாகாதெனவும் கூறப்பட்டது. இஃதுண்மையே.........இலக்கியங் காணுவிடம் இலக்கணத்தாற்ருன் அச்சொற்களைத் துணிந்தோதல் உசிதம்......... தொண்டரைக் குறிக்கும் ஹிந்துவெனுஞ் சொல் பாரசீகமாகினு மாகுக. ஒரு சொல் ஓர் பாஷையில் ஓர் பொருளையுணர்த்தியதால் மற்ருேர் பாஷையில் மற்ருேர் பொருளையுணர்த்தா தென்பது யாதுபற்றி? இங்கு ஆரியர்களுக்கு நல்லறங்களை யுபதேசிக்க எழுந்த நன்னூல் பல்கோடிகளிலும் காணுப் புதுச்சொல்லாகிய இச்சொல் மற்ருேர் பொருளில் மற்ருேர் பாஷையில் பெருவழக்குப் பெற்றதென வாதித்தலும் பெருங்குற்றமாகாது என நம்புகிருேம்'

என்றும், 4. 15. 217 இல்

'இச்சொல்லை முன்னேர் விசேஷமாய் வழங்கவில்லை யென்பதுண்மை? (இச் சொல் - ஹிந்து) என்றும் வருகின்றன.

ஹிந்து வென்பது பாரசீகச் சொல், அது இழிந்த பொருளுடையது என்பது காணப்பட்டது. ஆரியரென்பார் முதலில் விவரந் தெரியாமல் அதைத் தமக்குப் பெயரெனக் கொண்டனர். பிறகு அவருக்கு மானம் போவதாயிற்று. ஆயினும் அப்பெயரிலிருந்து அவரால் விலகமுடியவில்லை. என் செய்வார்? பாவம். அதற்காக அவர் ஒரு தந்திரஞ் செய்தனர். ஹிந்து வென்பது பாரசீக பாஷையில் அப்பொருள் தரக்கூடியதா யிருக்கலாம். ஆனல் தமக்கு வழங்கிவரும் ஹிந்து வென்னும் பெயர் சம்ஸ்கிருதமே யென்றுரவர். புராதன சம்ஸ்கிருத நூலெதிலும் அச்சொல் வரவில்லை யென்பதையும் அவர் ஒத்துக்கொண்டனர். வராமைக்குக் காரணமும் சொல்லப்படவில்லை. ஆகலின் அச்சொல் சம்ஸ்கிருதமே யென வலிந்தாயினும் பொருள் கொள்ளவேண்டியது அவர்க்கு அவசிய மாயிற்று. அதனுப் மேற்காட்டிய வாக்கியங்களிலுள்ளபடி அவர் பொருள் புகுத்தித் தம் சாமர்த்தியத்தைக் காட்டினர். அதனல் அவர்க்குள் மகிழ்ச்சியும் உண்டாயிருக்கும். அவர் ஹிந்துக்களே யாதுக. சில சம்ஸ்கிருதச் சொற்களைத் தமிழெனக் கொண்டு அவற்றிற்குத் தமிழ்ப்போக்கிற் பதச்சேதம் பண்ணிப் பொருள் கூறிக் களிப்பர் தனித் தமிழ் வெறியர். அவர் போன்றுரே அவ்வாரிய ரென்பாரும். அவர் ஹிந்து வென்பதைச் சம்ஸ்கிருத மாக்கி வியா கரணங் காட்டிப் புதுப் பொருளைப் புகுத்தி வைத்தார். அவர் பட்ட சிரம மெல்லாம் மலை கல்லி எலி பிடித்த கதையாகவே முடிந்தது. என்னை? அப்போதும் ஹிந்து என்ற பதம் ஆரியர் என்ற பொருளைத்தான் சுமந்தொழிந்தது. ஏதாவதொரு சமயத்துக்கு அதைப் பெயரென அவராற் சாதிக்க முடியவில்லை.

ஆங்கிலேயர் தம் ஆட்சிக்காலத்தில் பாரத தேசத்திலுள்ள மொழிகளுக் கெல்லாம் வெர்னகுலர் (Vernacular) என்று பெயரிட் டிருந்தனர். பாரத தேசத்தவரும் அதை ஏற்று வழங்கினர். ஜவஹர்லால் நேரு அச்சொல்லை யாராய்ந்து அதற்கு அடிமைகளின் பாஷை யென்று பொருளிருப்பதைக் கண்டு விளம்பரப் படுத்தினர். உடனே அச்சொல் மறைந்தது. மூலக் என்ற சொல்லும் போன விடந் தெரியவில்லை. அக்கதியே ஹிந்து என்ற சொல்லுக்கும் வர வேண்டும். பாரத தேசம் சர்வமங்களையாவது அப்புறந்தான். நிற்க, ஒருக்கால் அச் சொல் சம்ஸ்கிருதமே, அப் பொருளுஞ் சரியானதே யெனக் கொண்டாலும் வேதத்தில் அச் சொல் வந்ததில்லை. காந்தியே அதை வெளிப்படுத்தினர். முன் காட்டிய அவரது ஆங்கில வசனங் காண்க. பூர்வ சமயங்களின் ஆசிரியன்மாரால் சமயப் பெய

ராக அது கொள்ளப்பட்டது மில்லே. 'காங்கிரஸ்' என்னும் பத்திரிகை யில் வந்துள்ளதும் முன் காட்டப்பட்டது. 'உள்ளங்கவர்கள்வ'னும் அதை சொல்லி யிருக்கிறது. சென்னே ராஜ்யத்தின் கவர்னரா யிருந்து வந்த வடவராகிய ஸ்ரீபிரகாசாவும்

> 'இந்து என்று கூறும் சொல் தவருனது என்றும் சனுதன தர்மம் என்றுதான் கூற வேண்டும் என்று பேசியிருக்கிருர்'
> (5—1—56 தமிழ் நாடு)

இந்து என்ற சொல்லே அவர் வெறுத்தது நியாயம். ஆனுல் சனு தன தர்மம் என்று தான் கூறவேண்டும் என்ற பகுதியில் அவருந் தவறினுர்.

> 'இது (சனுதன தர்மம்)....முன்னிருந்த காலத்து மதங்களேப் பற்றி இருட்டடிப்புச் செய்வதாகும்....சிவ மத(த்தினதும்).... ஆசிரியர்களி(னதும்) புகழை யெல்லாம் மறைப்பதாகும். சனுதனதர்மம் என்(ற)....இந்த வார்த்தை எந்த சம்கிருஸ்த அகராதியிலும் இல்லாத தொன்ருகும். அண்மையில் உரு வான சொல்லாகும் இது. எனவே பெருங்குழப்பம் மக்க ளிடையே உண்டாகியிருக்கிறது. மதுரை போன்ற இந்தச் சிவ மத்தைச் சேர்ந்த நாட்டவர்கள் இதை அகற்ற வேண்டியது அவசியமாகிறது' (5—1—56 தமிழ் நாடு)

என்கிருர் ஜான்ஸ் பியர்ஸ் என்பவர். இவர் பெங்களூர் கக்காலிபுரா வில் உள்ள நாராயண குருகுலத்தின் தலேவரும், 'வேல்யூஸ்' என்ற ஆங்கில மாத இதழின் ஆசிரியருமாவர். சனுதன தர்மம் என்பது போன்று சாதிபற்றி வந்த பிராமண மதம் (Bhraminism) என்பது முதலிய மிலேச்ச சிருட்டி நாமங்களும் புராதன சமயங்களே இருட்ட டிப்புச் செய்வனவே. மொழிபற்றி வந்தது தமிழ் மதம் (தமிழர் மதம்) என்பது. புராதன சமயங்களே இருட்டடிப்புச் செய்யவே அதுவுந் தோன்றிற்று. அங்ஙனமாக அவ்வச் சமயத்துக்கே தொன்று தொட்டு உரியதா யிருந்துவருகிற பெயரை விலக்கி, மானக்கேட்டைத் தரும் பொருளுடையதாய், அல்லது பொருள் இல்லாததாய், அல்லது பொருள் தெரியாததாய் உள்ளதொரு பதத்தை மதப்பெயராக்கித் தம் மனதில் தோன்றிய பொருள்களே யெல்லாம் அப்பெயருட் புகுத்தி சமயப் பிரசாரஞ் செய்து திரிகிற நாடோடி வாயாடிகள் இக்காலத்தில் மலிந்து விட்டனர். தாம் பிரசாரஞ் செய்யுஞ் சமயம் இதுதானென அவருக்கே தெரியாது. தெரிந்த வஞ்சப் பிரசாரகரும் உளர். அப் பிரசாரங்களேக் கேட்கும் மக்களி னறிவோ மருளுகிறது. நாடும் நாச மாகிறது. ஜான்ஸ்பியர்ஸ் சொன்னதைக் கேட்டு ஆய்ந்தாவது அப்ப தடிகள் திருந்துவாரா?

ஹிந்து என்னும் மதம் தனக்கெனத் தெய்வமோ, ஆசிரியரோ பிரமாண நூலோ, கொள்கையோ இல்லாதது. அதனாலன்றோ இந் நாட்டில் தோன்றிய பல மதங்களின் தொடர்புடையாருட் பலர் தம் தம் மதத்தையே அம்மத மென்கின்றனர். அஹம் பிரமவாதி தன் மதமே ஹிந்து மத மென்கிறான். வைணவன் தன் மதமே ஹிந்து மத மென்கிறான். சைவனுந் தன் சமயமே ஹிந்து சமய மென்கிறான். அப்படியே பிறருஞ் சொல்கின்றனர். இன்னொரு மடவோன் அவை யனைத்துமே ஹிந்து மதந்தான், அவற்றுட் பேதமில்லை யென்கிறான்.

ஹிந்து மதமும் பௌத்தமும்

அம்மட்டோ? பௌத்த மதம் ஆத்யந்தம் நாஸ்திகம். அது மாணிக்கவாசகர் முதலியோரால் அன்றே இந் நாட்டி லிருந்து துரத்தப்பட்டது. இன்று அதன் நாத்திகக் கொள்கையை மறைக்க முயல்கிறார் சிலர். (அவருள் சிலர் வைணவர்) அவரது சமயக் கடவுளாகிய விஷ்ணுவே புத்தாவதார மெடுத்தார். அவர்தான் ஆதி புத்தர்.

‘உலும்பிலி வனத்து ளொண்குழைத் தேவி
வலம் படு மருங்குல் வடுநோ யுரும
லான்றே எவ்வழித் தோன்றின னுதலி
னின்றே ளேழாநா ளின்னுயிர் வதைத்தான்.’

என்றது விம்பசார கதை.

‘முத்தராம் புத்தர் தோன்றித் தாய்ப்பழுவை முறித்தே விட்டார்
கொத்துவாழ் குழலா ளாகுங் குண்டல கேசி தானுங்
கத்திருவுங் கணவனைக் காடனையுங் கொன்றிட்டா
ரித்துணையா ரிருவரும் வந் தீங்ஙனே தவமுரைப்பர்’

என்றது புத்தர் சித்தாந்தத் தொகை.

‘இவன் பிறக்கின்ற காலத்து மாதாவினது வலமருங்குலாற் பிறந்தான். அவளும் ஆறு நாட் குற்றுயிரோடு கிடந்து ஏழாம் நாள் இறந்தாள். இது புத்த மாதாக்கள் யாவர்க்கும் ஒக்கும்’

என்றது நீலகேசித் தெருட்டு-குண்டலகேசி வாதச் சருக்கம்.

‘புத்தன்றாய் நண்டிப்பி வாழை புனமுங்கில்
கத்தும் வீரியன் கடுஞ்சிலந்தி — யித்தனையும்
வேலாலும் வாளாலு மன்றியே தாங்கொண்ட
சூலாலே தம்முயிர்க்குச் சோர்வு’

என்றது லோக வசனம் என்னும் நூல்.

அயோநிஜன் என்ற பட்டத்துக்கு ஆசைப்பட்ட அப்புத்தர் தாய் கருவுட் கிடந்தபோது அவளது யோனிவழி வர மறுத்துத் தாய்க்கொலை நேர்ந்தாலுங் குற்றமில்லை யெனக் கொண்டு அவளது விலாவைப்

பிளந்து வெளி வந்தாராம். அவளும் ஏழாம் நாள் இறந்தனளாம். மேலே காட்டப்பட்ட செய்யுட்களே அதற்குப் பிரமாணம். இது பௌத்த சமயத்திற் கண்ட அவரவதாரப் பிரபாவம். பிறந்தபோதே மாதாவைக் கொன்ற 'அஹிம்ஸா மூர்த்தி' அவர். 'விலாவில் வெடித்த குட்டியிது' என்று துஷ்டரை நோக்கி வழங்கி வரும் பழமொழி அப் புத்தரின் பிறப்பு முதற்றான் தோன்றியிருக்க வேண்டு மெனத் தெரிகிறது. தம் தரும பத்தினியும் மழலைமாருத ஏக புத்திர னும் பல்லாண்டுகள் தவிக்கும்படி நள்ளிரவில் அவரது அயர்ந்த நித்திரை வேளை பார்த்து அவரைவிட்டுக் கரந்தோடிய 'கருணாமூர்த்தி' அவர். அறிய வேண்டுவனவற்றைக் குருபதேசமின்றியே அறிந்தா ரெனக் கூறப்படும் 'ஞானமூர்த்தி' அவர். அத்தகைய அவர் திரி புரத் தசுரரிடஞ் சென்று முதன் முதலாகப் பௌத்த சமயத்தை யுப தேசித்து அவ்வசுரர்பா லிருந்து வந்த சைவசமய ஆசார அனுட்டா னங்களைக் கெடுத்தார். அதனால் அவ்வசுர ரெல்லாரும் பௌத்த ராயினர். அதன் முடிவென்ன? சிவபிரானது நெற்றிக் கண்ணால் அவர் கூண்டோடு கொளுத்தப்பட்டுப் பிடிசாம்ப ராயினர்.

'கள்ளவேடத்தைக் கொண்டுபோய்ப் புரம்புக்க வாறுங் கலந்தசுரரை
யுள்ளம் பேதஞ் செய்திட்டுயிருண்ட வுபாயங்களும்
வெள்ளநீர்ச் சடையானும் நின்னிடை வேறலாமை விளங்க நின்றதும்
உள்ள முள்குடைந் தென்னுயிரை யுருக்கி யுண்ணுமே'

என்ற நாலாயிரப் பிரபந்தத்திலும் அவ்வுண்மை காணப்படும். அச் சரித்திரத்தைச் சைவ சமூகம் உணரவேண்டும். தம் சமயக் கடவுள் ஆக்கிய தென்பதற்காகவே அவ்வைணவர் அம்மதத்தை யாதரிக்கிறார். அஃதறிவுடைமையாமா?

'கடவுள் இல்லை என்று புத்தர் ஒருபோதும் கூறியது கிடை யாது. அவர் கூறிய தெல்லாம் இதுதான்; நம்மைப் போன்ற சாதாரண மக்கள் கடவுள் இருக்கிறாரா இல்லையா என்ற விவாதத்தில் நாம் வாழ்நாளை வீணாக்க வேண்டாமென்றே அவர் கூறினார்.'

(11—6—56 தினமணி)

என்கிறாரவர். கடவுள் இல்லையென்று புத்தர் கூறாததனாலேயே கடவுள் உண்டென அவர் கூறியவராய்விடுவாரா? கடவுள் உண்டென்பதே அவர்க்குக் கொள்கையானால் அதை அவர் சாதாரண மக்களுக்கு உபதேசியாவிட்டாலும் அசாதாரண மக்களுக்காவது உபதேசித்திருக் கலாம். அஃதுண்டா? அவ்வசாதாரண மக்களுள் ஒருவர் பெயரை யாவது அவ் வைணவரால் சொல்ல முடியுமா? கடவுள் உண்டெனக் கூறப் புத்தருக்கு இஷ்டமில்லை, கடவுள் இல்லையெனக் கூறினால் அவரை ஆத்திகர் வன்மையாக எதிர்ப்பர், அவ்விரண்டுங் கெட்டான்

நிலையில் அப்புத்தர் மௌனஞ் சாதித்தாரென அவர் சொல்வாராயின் அவரிடம் சத்திய முண்டென்னலாம். கடவுளுண்டென்பது புத்தருக்குக் கொள்கையானால் அவரே விஸ்தாரமான வாதப் பிரதிவாதங்கள் செய்து அவ்வாத்திகத்தைச் சாதித்துப் போயிருப்பர். அப்படித்தான் ஆத்திக சமயத் தலைவரெல்லாஞ் சாதித்துப் போந்தனர், புத்தர் ஆத்திக விஷயத்திற் சாதித்தாரெனக் கருதப்படும் மௌனம் நியாயமென அவ் வைணவர் சொல்லுமுகத்தால் ஆத்திக சமயத் தலைவரையெல்லாம் பழிக்கிறவ ரானார். புத்தரும் அவ் வாத்திக சமயத் தலைவன்மாரை அனுசரித்துச் சென்றிருந்தால் சாதாரண மக்களாகிய நாம் அவ் விவாதத்தி லிறங்கி வாழ்நாளை வீணாக்கி யிருப்போமா? மாட்டவே மாட்டோம். இப்போது அப்படிச் செய்து வருகிறோம்: அதற்குக் காரணம் அப் புத்தர் ஆத்திக விஷயத்தில் அம் மௌனஞ் சாதித்துப் போனதேயாம். அப் பௌத்த நாத்திகமும் இப்போது ஹிந்துமதமாகி வரத் தொடங்கிவிட்டது — ஹிந்து மதத்தின் சீர்திருத்த நிலையாம் அது. அருமையான தீர்ப்பு! அடடா? நவீனருக்கு அந்த ஹிந்து மதமும் சொந்த மதம், வியவஸ்தை யில்லாத அவரால் சைவம் வாழ்வது முண்டோ? இன்றைன்று. ஹிந்து என்ற சொற்பொருள் தெரியாமல் அதைச் சுமந்து கொண்டலைகிற ரவர். அவர் சம்ஸ்கிருத அர்ச்சனைப் பொருள் தமக்குப் புரியவில்லையே யெனக் கண்ணீர் வடிக்கின்றனர். நிலத்தில் வசிக்கும் முதலைகள் போலும் அவர்.

'காதல்தான் தமிழருடைய உயிர். பரிபாடலைப் பார்த்தால் தெரியும். பெண்ணை வெறுத்தல் வடநாட்டு அறம். மனத்துக்கண் மாசிலனாதல் தமிழ்நாட்டு அறம்.

**தமிழுக்கு, உயிர், அறம், வீடு எவை?**

அறம் பொருள் இன்பம் இம் மூன்றுதான் உண்டு தமிழனுக்கு. இன்றைன்று 'வீடு' —தமிழனுக்குக் கிடையாது............இன்று வாழ்க்கை—இது தான் அறம் தமிழன் கருத்துப்படி. இது என் கொள்கை.—என் நண்பர் இராமசாமியார் கொள்கை....'

(20—9—47 போர்வாள்)

என்கிறார் நவீனர். தமிழன் கருத்துப்படி என்றாரே அவர். அத்தமிழன் மூடனா? அறிஞனா? மூடத்தமிழனுக்குத்தான் அக்கருத்திருக்க முடியும். திருவள்ளுவர் அறிவுடைத் தமிழர்.

'பிறவிப் பெருங்கட லீந்துவர் நீந்தா
ரிறைவனடி சேரா தார்',

'மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்க
லுற்றார்க் குடம்பு மிகை.',

'யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த வுலகம் புகும்.',
'ஓர்த்துள்ள முள்ள துணரி னொரு தலையாப்
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு.'

என்றெல்லாம் முழங்கி அறம் பொருள் இன்பம் வீடு என்பவற்றுள் வீடொன்றையே தமிழருள்பட எல்லா வுயிர்களும் அடைய முயல வேண்டுமென வற்புறுத்தியது அப் பெருமகனாரது திருக்குறள். அவ் வறிவுடைத் தமிழரின் வழி நிற்கும் நற்றமிழரது சகவாசத்தை அந் நவீனர் விரும்பாதவர். அந்நவீனர் சைவ மேடைகளில் ஏறி அண்ட கடாகமும் அதிரும்படி சைவப் பிரசாரங்களுஞ் செய்வர். ஏன்? சைவ சமூகத்தை ஏமாற்றிப் பிழைக்கவேயாம்.

சைவஞ் செத்துக் கொண்டிருக்கிறதென அவர் துயருற்றுக் கூறினாரே. அச்சாவு அவர் கண்ணிற் படுவது நிசமாயின் அச் சமயத்தைச் சாகடித்து வருபவர் அவரேதான். எனக்குப் புலப்படுவது அது. அதை இதுவரை ஓரளவு எடுத்துக் காட்டினேன். நான் அவர் காட்டுந் துயரத்தில் அவர் நெஞ்சு கலக்கவில்லை யென்பதை அந்த அளவு கொண்டே சைவ சமூகந் தெரிந்து கொள்ளலாம்.

இனித் தமிழும் முக்கியமல்ல என்றாரவர். அதுவும் நுனி நாப் பேச்சே. என்னை? சம்ஸ்கிருதம், தமிழ் உள்பட எல்லா மொழிகளும் மாயாகாரியம், சடம். இக்கொள்கை அவருக்கில்லை. அதனால்

'சிவபெருமான் செய்த தொழில் அத்தனையையும் தமிழ் மொழியும் செய்திருக்கிறது.' (28—2—54 தினமணி)

என்கிறாரவர்.

**பாஷையைக் கடவுள் எனலாமா?**

சிவபெருமான் செய்யுந் தொழில்களெல்லாம் ஐந்தாயடங்கும். அப்பஞ்ச கிருத்தியத்தைத் தமிழுஞ் செய்ததென்றால் அதைப்போன்ற சிவாபசாரம் வேறு முண்டோ? அக்கிருத்தியத்துக்குச் சிவனெனுங் கடவுளுந் தமிழெனுங் கடவுளுமாக இரண்டு கடவுளரிருப்பது மிகை யென்னுங் குற்றம். மேலும் சடகாரியமாகிய மொழியைக் கடவுளென்றல் நாத்திகமே. தமிழைக் கடவுளென ஓரிடத்திலும், தமிழ் முக்கியமல்லவென மற்றோரிடத்திலும் பேசுவது வெறும் பிதற்றலென்க. நவீனர் இப்பிதற்றல்களும், சமயக்கலவை, சாத்திரக் கலவை, ஆசாரியக் கலவை, கொள்கைக் கலவை முதலிய விபச்சாரப் பேச்சுக்களும் ஆகிய மருந்தைச் சைவ மக்களுள் ஏழையரா யுள்ளவருக்கு ஏற்றித் தம் சமயம் சைவந்தானென அறிந்து கொள்ளாதபடி அவரைத் தடுத்துக் கிறிஸ்தவமாதி சமயங்களுக்குப் பிடர் பிடித்துத் தள்ளுகின்றனர். அவ் வேழையரைக் கிறிஸ்தவ ராதியோர் இழுப்பதைக் காட்டிலும் அந் நவீனர் தள்ளுவதே கிறிஸ்தவமாதியன பெருகக் காரண மென்பதை ஆய்ந்து காண்க.

'அதன் (தமிழர்ச்சனையின்) எதிர்ப்பாளர்கள் ஆழ்ந்து சிந்திக்க வேண்டுமென்று விரும்புகின்றோம்.'

(17—7—56 தமிழ்நாடு)

என்கிறார் நவீனர். நானும் ஓரெதிர்ப்பாளன். அவ்வர்ச்சனைக் கொள்கையைப் பகுதி பகுதியா யெடுத்து இயன்றவரை நான் ஆழ்ந்து சிந்தித்து ஆராய்ந்தே கண்டிக்கிறேன். அக்கண்டனம் தவறுடையதாகலாம். ஆழ்ந்து சிந்தித்தல் என்பதாவது என்னிட மிருப்பது சத்தியம். என் முதற் புத்தகமும் அதன் அனுபந்தமாகிய இப்புத்தகமும் அதற்குச் சான்று. ஆனால் அவ்வர்ச்சனையை மறுத்து நிற்குங் காரணங்களுள் ஒன்றையாவது எடுத்துச் சிந்திக்கிறாரா அவர்? இல்லவே யில்லை. ஆழ்ந்து சிந்தித்துத்தீர்வு காண்பது என் தருமம். மறுப்புக்களை மறுக்கமாட்டாமல் மறைக்க முயன்று தாம் சொன்னதையே சொல்லிக் கொண்டிருப்பது அவர் தருமம். ஒரு சமயத்தில் ஒரு புதுமையை நுழைக்க விரும்பினால் அதற்கு அச் சமய சாத்திர ஆதாரம் அவசியம். அஃதிருந்தாற்றான் அப்புதுமை புகுத்தப்படலாம். நவீனருக்கு அஃதகப்படவில்லை. ஆகலின் அந்நிய தேச சரித்திர மொன்றை அவர் காட்டுகிறார். சைவ சாத்திரத்துக் கொவ்வாத சரித்திரப் பகுதி யெதுவுஞ் சான்றாகாது. அன்றி அவர் காட்டுஞ் சரித்திரம் அபத்தமுமாம். என்னை? கத்தோலிக்கக் கிறிஸ்தவமே ஆதிக் கிறிஸ்தவம். அதிலிருந்து நெகிழ்ந்துப்போன இடைக் கிறிஸ்தவம் புரோடஸ்டாண்டுக் கிறிஸ்தவம். அவ்விரண்டும் பெயரால் ஒன்று; ஆயினும் தம்முள் பல வித்தியாசங்களை யுடையன. அவ்வித்தியாசங்கள் சாமானியமல்ல. அவ்விரு கிறிஸ்தவங்களும் அரசியலிற் சம்பந்தித்துத் தம்முட்பகைத்து இரத்த வெள்ளம் பெருக்கெடுத்தோடு மளவுக்குப் போரிட்டு அல்லற்பட்டன. அவ்வாதிக் கிறிஸ்தவம் இலத்தீன் மொழியை விடவில்லை. அது அம்மொழியிலுள்ள தன் கடவுள் அல்லது அவருடைய பிரதிநிதியின் வாக்கு, அதிற் பொதிந்துள்ள அர்த்தம் என்னும் இரண்டையுஞ் சேர்த்தே மதிக்கிறது. அவ்விடைக் கிறிஸ்தவமோ அவ்வாக்கை மதியாமல் அவ்வர்த்தத்தை மாத்திரம் மதிக்கிறது. திருமுறைப் பாடல்களாகிய வாக்கை மதியாமல் அதன் அர்த்தத்தை மாத்திரம் மதிக்கிற புத்தி போன்றதே அந்தப் புத்தி. இங்கிலாந்தை மேரி, எலிசபெத் என்ற இரண்டரசிகள் ஆண்டனர். மேரி அவ்வாதிக் கிறிஸ்தவச்சி, எலிசபெத் அவ்விடைக் கிறிஸ்தவச்சி. மேரி இலத்தீனை மதித்து நாட்டை யாண்டவள், மக்களும் அவளை யனுசரித்து அம்மொழியை மதித்தனர். எலிசபெத் அம்மொழியை வெறுத்து நாட்டை யாண்டனள். மக்களும் அவள் வழிச் சென்று அம்மொழியை வெறுத்தனர். அவ்விடைக்கிறிஸ்தவமே

**கிறிஸ்தவம் லத்தீன் மொழியைக் கடவுள் வாக்கு எனக் கொள்கிறதா?**

நாளிது வரை அந்நாட்டு அரசாங்க சமயமா யிருந்து வருகிறது. கடவுள் வாக்கென அதில் எதுவு மில்லை. அவரது நூல் விவிலிய மென்பது. ஒவ்வொரு மொழியிலும் அதன் பெயர்ப்பு நூலே வழங்கும். எல்லாப் பெயர்ப்புக்களும் அவ்வம் மொழியில் வல்ல மனிதரின் வாக்கே. ஆகலின் 'இது கடவுள் வாக்கு' எனக் கூறி ஏதேனுமொரு பிரமாணங் காட்ட அக்கிறிஸ்தவருக்கு யோக்கியதை கிடையாது. அவர் அங்ஙனம் கடவுள் வாக்கைப் புறக்கணித்த காரணத்தால் அவ்விடைக் கிறிஸ்தவத்தினுள் பல பல பிளவைகளுளவாயின. ஆனால் கடவுளிடமிருந்து வெளியான வாக்கையும் அவ்வாதிக் கிறிஸ்தவர் மதித்து வருவதால், அக்கிறிஸ்தவத்துட் பிரிவுகள் கிடையா. உலகெங்குமுள்ள அக்கிறிஸ்தவரனைவருக்கும் போப் என்பவரே பரம்பரை ஆசாரியராயிருந்து வருகிறார். அக்கிறிஸ்தவரிடமுள்ள ஒற்றுமை கட்டுப்பாடு, ஆசாரியரின் ஆணைக் கடங்குதல் முதலிய நலன்கள் வியப்புக்குரியன. ஆகவே ஆங்கிலேயர் கடவுள் வாக்கை மதியாதொழுகுவதை எடுத்துக்காட்டிச் சைவ மக்களையும் அன்னபாதகத்துக்குள்ளாமாறு செய்ய முந்துகிறார் நவீனர். அது கொடிது.

'இம் (தாய் மொழி வழிபாட்டு) முறையையே, சென்ற........
300 ஆண்டுகளாக இங்கிலாந்து பின்பற்றி வருகிறது.'
(17—7—56 தமிழ்நாடு)

**தாய்மொழி வழிபாட்டால் கடவுள் பக்தி உண்டாகுமா?**

எனக் கூறிக் களிக்கிறா ரவர். அம்முறையாற்றான் பக்தி பெருகு மென்றும் அவர் சொன்னார். அதனுண்மையை யனுபவத்திற் காண்பதற்கு 300 வருஷகால அளவுபோதும்; அதிக மென்று கூடச் சொல்லலாம். இப்போது அந்நாடு எப்படி யிருக்கிறது? இவ்வினாவை அவரிடங் கேட்டால் உலகிலே இங்கிலாந்து தான் பக்திக்கே யெடுத்துக்காட்டா யுள்ளதொரு தேசமாகும். ஆங்கிலேயரனைவரும் பக்தகோடிகளாய்த் திகழ்கின்றனர். பக்தி பரவசத்தை அவரிடந்தான் பார்க்கலாம். அந்நாட்டில் அம்மதக் கோயில்களில் ஏசுநாதர் பிரத்தியக்ஷமாகிறார். அப்பக்த சிரேட்டர் இந்நாட்டை நூற்றைம்பது வருஷங்களாக ஆண்டனர். அவருக்கு அடிமையா யிருக்கப் பெற்றது இந்நாட்டின் பரம பாக்கியம். அதைக் கெடுத்தார் காந்தியார். மிகப் பொல்லாதவர். மீண்டும் அச்சிரேட்டருக்கு இந்நாடு அடிமையாக வேண்டும். அல்லது தாய்மொழி வழிபாட்டாற் பக்த கோடிகளைப் பெருக்கித் தள்ளிய அக் கிறிஸ்தவம் இங்கு வாயு வேகம் மனோ வேகத்திற் பரவ வேண்டும். அந்நாள் விரைந்து வருக.' என்றெல்லாம் விடை கூறித் தம் விருப்பத்தையும் வெளிப்படுப்பர். ஆனால் இன்றும் அந்நாட்டுநிலை அதுவன்று. பிராகிருதத்தில் தோய்ந்துகிடக்கும் நாடுகளுள்

அதுவு மொன்று. இன்னும் 300 வருஷங்கள் சென்ற பிறகும் அங்குப் பக்தி குதிரை முட்டைதான். தாய்மொழி வழிபாட்டாற் பக்தி சிறிதும் உண்டாகாது. அதனை அவ்விங்கிலாந்தே மெய்ப்பிக்கும் ஆதிக் கிறிஸ்தவத்தின்பாற் கொண்ட துவேஷத்தின் விளைவாக அவ் விடைக் கிறிஸ்தவந் தோன்றி அம் மாற்றத்தைச் செய்தது. தன் கடவுளின் வாக்கையும் அதிலுள்ள அர்த்தத்தோடு சேர்த்து மதித்து வருகிற ஆதிக் கிறிஸ்தவத்தில் பிரமசாரிப் பாதிரிகளும், கன்யாஸ்திரீ களும் லக்ஷக்கணக்காக இருக்கின்றனர். எல்லாப் பெருங்கேட்டுக்குங் காரணமாய காமத்தை வெல்வது சுலபமா? அவ் வெல்வி பக்திக்கனு கூலமன்றே? பரம்பரைச் சதாசாரமே அத்தனைக்கும் ஏதுவாதல் திண்ணம். ஆகலின் நவீனர் எடுத்துக் காட்டிய சரித்திரப் பகுதி பலமற்றதாயிற்றென்க.

> 'தமிழ் மொழி வழிபாடு மிகவும் அவசியமானதாகும். அதனால் மக்களிடத்து வழிபாட்டுணர்ச்சி பெருகுவதுடன், மக்களுக்கு வழிபாட்டில் உளம் கலக்கும்.'
> (17—7—56 தமிழ்நாடு)

என்கிறார் விநோபா. நவீனருக்கு அஃதோராதாரம். வந்தவருக் கெல்லாம் முன்றானை விரிப்பது உத்தம ஸ்திரீகளின் தருமமன்று.

**உண்மையான ஆஸ்திகர்கள் யார்?**

அதுபோல் சைவ சாத்திரங்களுக்குக் கட்டுப் பட்டு அச்சமய வரம்புள் நின்று சிவசேவை செய்கிற நெஞ்சுரம் படைத்த சைவமகன் அச் சாத்திர சமய விரோதமானதொன்றை விநோபாவென்ன அவர் தாத்தாவே வந்து சொன்னாலும் அவருக்காக ஏற்றுக்கொள்ளும் அறிகற்பினனாக மாட்டான். விநோபாவும் சந்தர்ப்ப வாதியாகத்தானிருக்கிறார். தமது பூமிதான இயக்கத்துக்கு அவையுந் துணைபுரியு மென அவர் கருதுகின்றனர்போலும்.

> 'எப்பொழுதும் ஆண்டவனின் பெயரையே சொல்லித் துதித் துக்கொண்டு அண்மையிலுள்ளவர்களை ஏமாற்றுகிறவர்கள் ஆஸ்திகர்களல்ல. ஆனால் ஆண்டவனின் பெயரைச் சொல்லித் துதிக்காமல் இதர மக்களிடம் அன்பும் இரக்கமும் காட்டுகிறவர்களே உண்மையான ஆஸ்திகர்கள் ஆவர். ஆண்டவனைக் காப்பாற்றுவதுபற்றி நாம் கவலைப்படாதிருப் போமாக. அவர் தம்மைப் பாதுகாத்துக்கொள்ள போதிய வல்லமை படைத்தவரே'
> (11—6—56 தினமணி)

என்கிறாரவர். ஆத்திகருள் உலுத்தராவார் தமக்கேற்றதொரு புகலைச் சொல்வதுபோல் நாத்திகராவாருந் தமக்கேற்றதொரு புகலைச் சொல்லி எளியவரைக் கைவிடுவதுண்டென்பது விநோபாவின் கருத்துமாம்.

'ஆஸ்திகர்கள் துன்பங்களை யெல்லாம் ஆண்டவன் துடைப்பார் என்கிருர்கள். நாஸ்திகர்களோ யார் துன்பப்படுகிருர்களோ அவர்களே சமாளித்துக் கொள்ளட்டும் என்று கூறுகிருர்கள். இவர்கள் இருவருமே தமக்குக் கொஞ்சம் பொறுப்பு இருக்கிற தென்பதை உணருவதில்லை'

(5—7—56 தினமணி)

என்ற அவர் கூற்றுக் காண்க. அவர் நியாயம் பேசுகிறவராயின் நாஸ்திகரின் உலுத்தத் தன்மையைப் போக்க ஏதேனு மொரு யோசனையை அவராற் கூற முடியுமானுல் அந்த யோசனையையே அவர் ஆஸ்திகருக்குங் கூறவேண்டும். ஆனுல் ஆண்டவனுடைய பெயரைக்கூடத் துதிக்கவேண்டாமென அவர் யோசனை கூறுவதேன்? அப்படிக் கூறுவதால் அவரெழுதிய கீதைப் பேருரை அவராலேயே கண்டிக்கப்பட்டதாகிறது. எப்படி? மனிதன் சேவை செய்க, ஆனுல் அதன் பலனைத் தெய்வார்ப்பணம் பண்ணிவிடுக என்பது அவ்வுரை முடிவு. கடவுளை நினையாமல் அவ்வர்ப்பணம் முடியாது. அவன் அர்ப்பியாமல் அக்கடவுளும் ஏற்றுக்கொள்ளார். மேலே காட்டிய வசனப்படி கடவுளை நினையாமல் துதியாமல் சேவைசெய்கிற ஒருவன் அச்சேவையின் பலனை யாருக்கு எப்படி அர்ப்பிப்பான்? சேவையே போதும், பலனின் அர்ப்பணம் வேண்டாம் என்னலாமா? ஆமெனின் அச் சேவை அதிர்ஷ்டமாகி அச் சேவகனையே பற்றும். அவன் பிறவிப் பெருங்கடல் நீந்தான். ஆகலின் அவனை அவ்வர்ப்பண மொன்றே கரை சேர்க்க வல்லது. அது தெய்வ விசுவாசமின்றி கூடாது. அவ் விசுவாசமுள்ளவன் தெய்வத்தைத் துதிக்கவே செய்வான், துதிக்கவும் வேண்டும். துதியாமல் விசுவாசத்தளவில் நிற்பவனும் நாஸ்திகனே. அவனுக்குத் தெய்வ மிருப்பதும் இல்லா தொழிவதும் ஒன்றே. விநோபா உண்மையை மறைத்து நாஸ்திகம் பேசுகிருர்.

எல்லாச் சீவராசிகளுமே தம் குட்டி குஞ்சுகளிடம் அன்பு காட்டுகின்றன. அந்த அன்பு பொது. ஆனுல் சில ஜீவராசிகள் தம் இனத்தின்பாலும் அன்பு செய்கின்றன. மற்றுஞ் சில ஜீவராசிகள் தம் இனத்தின்பால் அன்பும் வன்பும் இன்றிச் சிதறி வாழ்கின்றன. வேறு சில ஜீவராசிகள் தம் இனத்தின்பால் வன்பே காட்டுகின்றன. மனிதர் அம் மூன்று ராசிகளுள் எதைச் சேர்ந்தவர்? அவர் கூடி வாழ்கின்றனர். அஃதன்பின்றி யியலாது. அந்த அன்பு அவருக்கு இடையில் வந்ததன்று. ஆகலின் அவரது பிறப்பின் இயற்கையே அது. இன்றேல் அவர் அங்ஙனம் வாழார். அக்குணங் கெட்டவருஞ் சிலரோ பலரோ இருக்கலாம். அதனுல் அக்குணம் அப்பிறப்பின் இயற்கையன் றென்று சொல்லிவிட முடியாது. ஆகலின் நாஸ்திகருட் சிலரிடமும் அக்குணம் முனைத்து நிற்றல் கூடும். அதுகொண்டு

அவர் மதிக்கப்படார். தீச்சுடுவதாலும் நீர் குளிர்வதாலும் மதிப்பிற் குரிய வாகுமா? ஆகா. ஆகவே மனிதர் அன்பு கொண்டு சேவை செய்து பலனைச் சிவார்ப்பணம் பண்ணுகிறது முடிய அவருடைய ஒழுகலாறு இருக்கவேண்டும். தெய்வ நம்பிக்கையோடு கூடாத அன்பு ஈரமுடைமைகளால் மாத்திரம் மனிதராசி மேம்பட்டிடாது. ஆத்திகர் கடவுளுண்டென்று கொள்ளுமளவில் நில்லாமல் அவரை 'வணங்கித் துதிக்கவுஞ் செய்வர். நாத்திகர் கடவுளில்லை யெனச் சொல்லுவதோ டமையாமல் அவரையும் ஆஸ்திகரையும் இழித்துக் கூறி ஏசித் திரிவர். ஒருவன் மதித்துத் தொழுகிற கடவுளை இன்னொரு வன் ஏசித்திரிவானாயின் அது அவ் வணங்குபவனது மானத்தையே வாங்குவதாகும். நல்லவனாகிய மூத்த மகன் தாயைத் தொழுகிறான். அவன் தம்பி பரம துஷ்டன். தனக்குந் தாய்தான் அவள், அவ்வுரிமை பற்றி அவளிடந் தான் எப்படியும் நடந்து கொள்ளலாம், தன் நடை அவளுக்குப் பிடிக்கவில்லையானால் அவள் சாமர்த்தியத்தால் அவள் தான் தற்காப்புச் செய்து கொள்ள வேண்டும் என அவன் பிதற்றி அவளிடந் தகாத சேட்டைகள் புரிய முயல்கிறான். மூத்த மகன் அச் சேட்டைகளைத் தடைசெய்யாம லிருக்கலாமா? அவளுக்குத் தற்காப்புத் திறன் இருக்கிறதோ இல்லையோ? அது வேறு விஷயம். அச் சேட்டைகள் அவளைத் தொழுது வணங்குமவனது நெஞ்சைக் கத்தி கொண்டறுக்கும். அவன் தனது மானம் போவதாகவே கருதுவான்- அஃதுண்மையுமாம். அவன் மரக்கட்டையல்லன். ஆகலின் 'பொறையெனப் படுவ தாடவர் தமக்குப் பூணெனப் புகலினும் பொருந்தார், முறையறப் புரிந்தா லக்கணத்தவர்தம் முடித்தலை துணிப்பதே முழுப் பூண்' என்ற வில்லிவாக்கை அவன் அத்துஷ்டப் பயலிடம் செயற் படுத்தத்தான் நேரும். பாரத தேசியக் கொடியைத் தாம் எரிக்கப் போவதாகச் சொன்னார் ஈ-வே-ரா. அதைக் கேட்டு நேரு முதலியோர் சீறினர். ஏன்? அக் கொடிக்குத் தன்னைக் காத்துக் கொள்ளத் திறனில்லை யென்பதாலா? அன்று. அக்கொடி எரிக்கப் பட்டால் தேசத்தின் மானம் அதாவது தேசமக்களின் மானம் பாதிக் கப்படும். அம்மானத்தைக் காக்கவே வேண்டும். அதுவே அச் சீற்றத்துக்குக் காரணம். அதுபோல் ஆண்டவன் சாமர்த்தியம் ஆஸ்திகருக்குத் தெரியும். அவரது முயற்சி அவனைக் காப்பதற்கன்று. தமது மானத்தைக் காத்துக்கொள்ளவே யாம். விநோபா விவ காரத்தை மாற்றி விளம்பரஞ் செய்து ஆஸ்திகரின் ஊக்கத்தைச் சிதைக்கப் பார்க்கிறார். அச் செயல் நாத்திகருக்கு மறைமுகமாகத் துணைபோவதாகும். அத்தகைய விநோபாவுக்கு அர்ச்சனை விஷயமாக அபிப்பிராயஞ் சொல்லத் தகுதியில்லை. நவீனர் ஆற்று வெள்ளத்தில் அடியுண்டு போகிறார். கையில் துரும்பொன்று சிக்குகிறது. அது தெப்பமாகாதா, தப்பலாமே என்பது அவர் ஏக்கம். அது நடக்குமா? விநோபா சைவ சமயத்தைச் சாராதவ ரென்பதையும் அவர் தெரிக.

கோவில்களுக்குப் பக்தர்கள் தேவையென்றாரவர். கோவில் களுக்குப் பக்தர்கள் கணக்கின்றி வருகின்றனர். உத்ஸவ காலங் களில் அது பிரத்தியட்சம். ஆகலின் தமிழர்ச் சனை மிகையே, பக்தருக்குத்தான் கோயில்கள் தேவை. இப்போதுள்ள சைவாலயங்களைச் சிவாகம ரீதியில் போற்றுவதே அத்தேவை யைப் பூர்த்தி செய்வதாகும். ஆனால் நவீனர் அவ் வாலயங்களை அப்படிப் போற்றும் விருப் பினரல்லர். அவை மக்களின் உயிருக்கு உறுதியளிக்கவே உளவா யின. சைவ மடங்களும் அப்பொருட்டேயாம். நவீனர் அவ்வுயிரை மறந்து உடலங்களே உயிரென மயங்கினர். உடல் வளர்ச்சிக்கான சோறு கொடுப்பதே மேலான அறம், அதுவே மக்கட் சேவை, செய்யற்பாலதும் அதுவே என்பாரவர். அதற்கு வகையொன்று மில்லையானால் தகாதன செய்யவும் அவர் சித்தம்.

(கோவில்களுக்கு பக்தர்கள் வேண்டும் என்றால் வயிறு வளர்த்தால் போதுமா?)

'ஈன்றாள் பசிகாண் பாளாயினுஞ் செய்யற்க
சான்றோர் பழிக்கும் வினை'

என்ற குறளை அவர் எலார். அதனால்

'மடாலயங்களின் பேரில் இருக்கும் சொத்தையெல்லாம் ஏழை களின் துன்பத்தைத் துடைப்பதில் செலவழிக்கலாம். மடா லயத்தின் கடைசிக்கல்லைக்கூட விற்று ஏழைகளின் துன்பத் தைத் துடைப்பதில் குற்றமில்லை. அப்போதுதான் நாட்டில் உண்மையான தெய்வபக்தி நிலவும்'

(4—2—54 தினமணி)

என்கிறாரவர். மடங்களை யிடி, ஆலயங்களைத் தகர், அவற்றின் செல்வத்தைக் கொண்டு ஏழை மக்களின் வயிற்றை நிரப்பு. அப் போது தான் அவரிடந் தெய்வ பக்தி நிலவும் என்கிற அவர் தமிழர்ச்சனையாற் பக்தி பெருகு மென்றார். பக்தி நிலவுவதற்கு வயிறு முட்ட வேண்டு மென்பதும் தமிழர்ச்சனை வேண்டு மென்பதும் ஆபாச விவகாரமே.

## 13

'இதே (தமிழ் மொழியில்) வழிபாடு தேசீயமெங்கும் பரவு கின்ற காலத்தில் தமிழ்மொழி வழிபாடு என்ற முறையில் இராது, தாய்மொழி வழிபாடு என்ற பெயர் உண்டாகிவிடும்.........வேற்று நாட்டவர் களுக்கும் வழிபாடு முறை தெரியவேண் டும். அதற்காக அருச்சகர்கள் அனைத்திந் திய மொழிகளையும் தெரிந்துகொள்ளல் வேண்டும், அவர்கள் விரும்பினால் திருக்கோயில்களில் அம்

(பல மொழிகளில் அர்ச்சனை செய்வது சாத்தியமா?)

மொழிகளிலும் வழிபாடு நடைபெறச் செய்தல் வேண்டும்.... எந்த மொழியிலும் அருச்சனை செய்ய அருச்சகர்கள் தயாராக இருக்க வேண்டும்.'

(8—7—55 தமிழ்நாடு)

என்கிறார் நவீனர். 'எந்த மொழியிலும் வழிபாடு நடக்கட்டும்' என அவர் கூறியது முன்காட்டப்பட்டது. வழிபாடு என்ற பதத்தை அவர் அடிக்கடி வழங்குகிறார். வாத விஷயம் தினத்தந்தி யர்ச்சனை யொன்றே. ஆகலின் அப்பதம் அவர் வாயிலிருந்து வரும்போதெல்லாம் அவ்வர்ச்சனையையே குறிக்குமென்பதை இப்புத்தகத்தை வாசிப்பவர் மறந்துவிடக் கூடாது. தமிழ் மொழி வழிபாட்டிலிருந்து தாய்மொழி வழிபாட்டிற்குத் தாவினார் நவீனர். ஏன்? மற்றைப் பிரதேச மொழிக்காரருந் தம்மொடு சேர்வரென அவர் நம்பினார்போலும்—ஆந்திர முதலிய சில பிரதேசங்களைச் சேர்த்துத் திராவிட நாடெனப் பெயரிட்டு அந் நாடு வேண்டுமெனப் பல வருஷங்களாக மண்டை வெடிக்கக் கத்தினார் ஈ—வே-ரா. அக் கத்தல் தமிழகத்துக்குள்ளேதா னிருந்தது. ஆந்திர முதலிய பிரதேசத்தார் அதைச் சட்டை செய்யவில்லை. அவ் விராவுஞ் சலித்தார். அவருக்கே சப்பிட்டுப் போயிற்று அவர் கனாக்கண்ட திராவிட நாடு.

'திராவிட நாடு பிரிய வேண்டுமென்று ஆந்திர, மலையாள, கன்னட மக்கள் கவலைப்படவில்லை. வடமொழித் தொடர்பு அவர்கள் மொழியில் இருப்பதால் அவர்கள் வடவர் மொழி ஆதிக்கத்தை எதிர்க்க மனநிலை இல்லாதவர்களாய் உள்ளனர்'

(18—7—55 தமிழ்நாடு)

என அவரே கூறினர். அங்ஙனமே மற்றைப் பிரதேசத்தினருள் எவரும் தம் பிரதேச ஆலயங்களில் நடந்துவரும் சம்ஸ்கிருத அர்ச்சனையை விடார். தம் பிரதேசமொழி யர்ச்சனை நடக்க இடமுங் கொடார். ஆகலின் நவீனரும் அவ்விராப் போலவே கோட்டை விடுவர். அது நிச்சயம். அவர் அப்படித் தாவினதற்கு இன்னொரு காரணமு முண்டு. தமிழகத்திலேயே பிற மொழிகளைத் தாயெனக் கொண்டவரும் வாழ்ந்து வருகின்றனர். நவீனர் தமிழர்ச்சனை யென்றவுடன் அவரிடமிருந்து எதிர்ப்புமுறையில் ஆங்காங்கே தெலுங்கர்ச்சனை முதலியவும் புறப்பட்டு விட்டன. அது கிணறு வெட்டப் பூதம் புறப்பட்டதுபோ லாயிற்று. ஆரம்பத்தில் நவீனர் அதை எதிர்பார்க்கவில்லை. அவ் வெதிர்ப்பைக் கண்டதும் தம் கொள்கை செத்திடுமோ வென அவர் ஐயுற்று நடுங்கினர். செத்தால் அவரைச் சந்தி சிரிக்கும். ஆகலின் தம் கௌரவத்தைக் காத்துக்கோடல் அவருக் கவசியமாயிற்று. அதற்காக அவ் வெதிர்ப்பாளரைத் தம்மோடு சேர்த்

துக் கொள்ள விரும்பித் தமிழ்மொழி யர்ச்சனையை யுதைத்துத் தள்ளி விட்டுத் தாய்மொழியர்ச்சனைக்குத் தாவினரவ ரெனவுங் கொள்ளலாம். ஆனாலும்

'அருணகிரியார் முத்தமிழால் வைதாரை வாழவைக்கும் தமிழ் என்றார்'

(16—6—55 தமிழ்நாடு)

என்கிறார் நவீனர். தாம் தமிழ ரென்ற பெருமிதம் அவரை விட்டுப் போகவில்லை. அருணகிரியார் அப்படியா பாடினார்? முத்தமிழால் வைதாரையும் வாழவைக்கும் முருகன் என்ற கருத்துப்படவே அவர் பாடியுள்ளார். அதிலுள்ள உம்மையை நவீனர் விட்டனர். ஏனோ? அது கிடக்க.

'கோட்டானே நாயே குரங்கே யுனையொருத்தி
போட்டாளே வேலையற்றுப் போய்'

என்றார் காளமேகர். அதிலுள்ள வைதல் மொழிகளனைத்துந் தனித் தமிழ். நான் முருகனை அப்படி வைதால் அவன் என்னை வாழ வைப் பானோ? அஃதிருக்கட்டும். தனித்தமிழ் விருப்பினராகிய நவீனரையே நான் அப்படி வைகிறதாக வைத்துக் கொள்ளலாம். அவர் என்னை வாழ வைப்பாரா? ஐயோ! சும்மா விட்டாற் போதுமே. அவர் முருகனை மந்தைக் குற்றிக்கல்லென எண்ணிக் கொண்டனர் போலும். அப் பெருமானைத் தமிழ் முதலிய எந்த மொழியில் வைத நாக்குந் துண்டிக் கவே படும். சாத்திரச் செய்யுட்களைத் தப்புப் பாடமாக எழுதி அதற்குத் தவறான அர்த்தஞ் சொல்லி நாத்திகரை அவர் கை தூக்கி யாள்கிறார். நாத்திகர் பல்கிப் பெருகுமாறு அவரை அங்ஙனம் ஊட்டி வளர்த்தவர் அந் நவீனரன்றி வேறு யார்? இன்னுங் காண்க. முருகனை மற்ற மொழிகளால் வைதால் வைதவரை அவன் வாழ வைக்க மாட்டானா? அவனுக்கு வைதல் மொழிகளிலுள்ள பொருள்கள் முக்கியமன்று; அம் மொழிகள் தமிழாயிருந்தால் அதுவே போதும் போலும். ஆனால் அம் மொழிகள் தமிழல்லாதனவா யிருந்தால் அவனுக்குக் கோபம் வரு மென்பது அவர் கருத்து. அதனால் அவர் மொழிக்கு முக்கியத்துவங் கொடுத்துப் பொருளைப் புறக் கணித்தவராகிறார். அவர் கொள்கைக்கே அது பாதகமாகும். அங்ஙனமாக எந்த மொழியிலும் அர்ச்சனை நடக் கட்டும் என்றாரே அவர். அச்சமே அதற்குக் காரண மென்பதில் ஐயம் சிறிதும் இல்லை.

எந்த மொழியிலும் அர்ச்சனை செய்ய அர்ச்சகர் தெரிந்து கொள்ள வேண்டு மென்றா ரவர். ஆலயங்களில் பல மூர்த்திகள் எழுந்தருளியிருப்பர். அத்தனை மூர்த்திகளுக்குந் தனித்தனி அர்ச்சனை யுண்டு. அத்தனை அர்ச்சனைகளும் சம்ஸ்கிருதத்திலேயே நடந்து

வருகின்றன. ஓராலயத்தில் இருபது மூர்த்திகளிருக்கிருரெனக் கொள்க. அஷ்டோத்தரத்தை மாத்திரம் எடுத்துக் கொண்டால் அவ் விருபது மூர்த்திகளுக்கும் (20 × 108) 2160 நாமங்களாகின்றன. அர்ச்சகர் அந்த 2160 நாமங்களேயும் மனப்பாடம் பண்ணியாக வேண்டும். ஒரு மொழியானுலே நாமங்கள் அவ்வளவின.

'இந்தியத் தேசிய மொழிகளின் பட்டியலின்படி 14 மொழிகள் இந்தியாவின் தேசிய மொழிகளென்று சட்டம் கூறுகின்றது'
(8—7—55 தமிழ் நாடு)

என்கிருர் நவீனர். அவரே மேலும் 3 மொழிகளுக்குச் சிபார்சு செய்கிருர். அவையும் சட்டத்தரல் ஏற்கப்பட்டால்

'அப்போது இந்திய தேசிய மொழிகளின் எண்ணிக்கை 17 ஆகும்'
(8—7—55 தமிழ் நாடு)

என்பதும் அவர் கூற்று. அந்த 17 மொழிகளிலும் அஷ்டோத்ரம் நடப்பதாயின் (17 × 2160) 36720 நாமங்கள் வரும். ஒவ்வோ ரர்ச்சகரும் அத்தனே மொழிகளேயும் எழுதவும் படிக்கவுங் கற்று அத்தனே நாமங்களேயும் மனப்பாடஞ் செய்து கொள்ள வேண்டும். அல்லது வாசிக்கவாவது தெரிந்து கொள்ள வேண்டும். அது எந்த அர்ச்சகரால் முடியும்? வேறு எவருக்குத்தான் சாத்தியமாகும்? அர்ச்சகர் எந்த மொழியிலும் அர்ச்சனே செய்யக் கற்றுக் கொள்ள வேண்டுமெனக் கூறியவர் சென்னே ராஜ்ய மந்திரியா யிருந்தவர். அவருக்குத்தான் அது கை வருமா? மாதம் ஆயிரம் ரூபாவுக்கு மேல் சம்பளம் வாங்கி வந்த அவராலேயே அது முடியாதபோது ஐந்து ரூபாவும் பத்து ரூபாவும் சம்பளம் வாங்கிக் காலந்தள்ளுகிற அர்ச்சகருக்கு அவர் இடும் அக்கட்டளே இரக்கமற்றதாகும். மேலும் ஆலயங்களில் பலமொழிகட்குரியாரும் வந்திருப்பர். அர்ச்சகர் ஒரு மொழியில் அர்ச்சனே செய்யும் போது அவர் உளறுவதாகவே அங்கு சேவித்து நிற்கும் மற்ற மொழிக்காரர் நினேப்பர். ஆகலின் தாய்மொழி அர்ச்சனே அர்ச்சனேயாயிராது வெறுங் கர்ச்சனேயாகவே யிருக்கும். அர்ச்சனேயில் ஓதப்படுவன வெல்லாம் அவ்வத் தெய்வத்தின் நாமங்களே. அவை வேறு வேறு மொழிகளிற் பெயர்த்து ஓதப்படுமானுல் உளறல் என்ற கருத்துக்கன்றி வேறெதற் கிடனுகும்? ஆலய அர்ச்சனே, தெய்வ நாமங்கள் அந் நிலேக்கு வரலாமா? ஒவ்வொரு மொழிக்காரரும் மற்றெல்லா மொழிகளேயுங் கற்றுக்கொள்ள வேண்டுமென அம்மந்திரி கட்டளே யிடுவாரோ? அதுவும் முடவன் கொம்புத் தேனுக் காசைப்பட்ட கதையேயாகும். அதைவிட எல்லா மொழிகளின் சொந்தக்காரரும் தமக்கெல்லாம் பொதுமொழியாகிய ச்ம்ஸ்கிருத மொன்றையே கற்று அம் மொழியர்ச்சனேயைப் பொருளோடறிந்து கேட்டுச் சுகித்தல் சுலப மன்ருே? நலமன்ருே?

'தமிழ் விருப்பம் உடையவர்களுக்குத்தான் தமிழில் செய்து வைக்க வேண்டுமென்று சொல்லுகின்றேம்'

(21—5—55 தமிழ் நாடு)

'மக்களுக்கு விழிப்பு வந்து கேட்குங்கால் மறுக்கலாமா?........ மருந்து நோயாளிக்காகவே தவிர மருந்துக்காகவல்ல'

(16—6—55 தமிழ் நாடு)

என்கிருர் நவீனர்.

விருப்பம் விருப்பம் என்பது வெறும் பல்லவி. மக்கள் தம் மனம்போல் விரும்பலாகாது. விரும்பினுல் சைவ விற்பன்னர் தக்க சமாதானங் கூறி அவ்விருப்பத்தை மாற்றவே வேண்டும்.

**நோயாளியின் விருப்பத்திற்கேற்ற மருந்து-**

உண்மையில் அவ்விருப்பம் மக்களிடங் கிடையாது. அவர் பெயரைச் சொல்லி நாட்டை ஏமாற்றப் பார்க்கிருர் நவீனர். அவர் கூட்டத்தைச் சேர்ந்த பத்துப் பேர் கத்திஞல் அது மக்கள் குரலாய் விடுமா? அவரிடமிருப்பது விழிப்போ, உறக்கமோ; அவரை யெதிர்ப்பவர் தூங்கவில்லை. அறிவோடு கூடிய விழிப்போடிருந்துதான் தமிழர்ச்சனையை மறுக்கின்றனர். வழிபாடு மக்களுக்காகவேதானென்ருர் நவீனர். அது சரி. ஆனுல் வழிபாட்டு முறையை மக்களின் விருப்பம்போ லெல்லாம் மாற்றலாமா? ஆகாதென்பதற்கு அந் நோயாளித் திருட்டாந்தமே போதும். மருந்து நோயாளிக்காகவேதானிருக்கிறது. ஆனுல் அவன் விரும்பும் மருந்தைக் கொடுத்தால் நோய் நீங்காது, அவனுயிர்தான் நீங்கும். வைத்திய சாத்திரத்தில் வல்ல வைத்தியன் அச் சாத்திரத்தில் வகுத்த முறைப்படிதான் மருந்து கொடுக்க வேண்டும். அப்போது தான் நோய் நீங்கும். பொது மக்களைக் கலந்து அவரதபிப்பிராயப்படி சிகிச்சை செய்யப்பட்டாலும் நோயாளி தொலைந்தவனே. பொதுமக்களபிப்பிராயம் சர்வ சக்தியுடைய தெனக் கருதுவது மயக்கம்.

'வெளித்தோற்றத்திலும் பழக்கத்திலும் அடிமைப்பட்டு மலரும் மணமும் இல்லா மாலைகளைப் போடுகிறேம். இது ஒன்றே நமது பழக்கம். நமது மூதாதைகளினின்றும் எவ்வளவு தாழ்ந்து வந்துள்ளோம் என்பதைக் காட்டவில்லையா?'

(27—6—55 தமிழ் நாடு)

'தமிழகமெங்கனும் உள்ளங்கள் நஞ்சிற் கிரையாதலையே காண்கிறேம்........இலாபத்தை அடிப்படையாகக் கொண்டே இக்கால இலக்கியங்கள் எழுகின்றன....சிறந்த காவியங்கள் கூடத் தவருன விளக்கங்கட் குட்படுத்தப் பெறுகின்றன. இக்கால எழுத்தாளர்களும் பேச்சாளர்களும் நல்ல பெரும்

இலக்கியங்களை யெல்லாம் தள்ளி விடுகின்றனர். ஏளனம் செய்கின்றனர்........தற்காலத்தவர் இலக்கியங்களையே பழிக்க முற்பட்டுவிட்டது வருந்தத்தக்கதே. இதைக் காட்டிலும் வேறு கொடிய நிலை இருக்கமுடியாது........கலைகள் இக்காலத்தில் பொருள் சேர்க்கும் நோக்கம் கொண்டவர்கள் கையில் சிக்கி விட்ட(ன)........கலைஞன் கலை அளிக்கும் ஒளியை விடுத்து காலத்திற்கேற்ப நிலை குலைந்து அலைகிறுன்'

(11—7—55 தமிழ் நாடு)

'பாரியும் காரியும் தமிழ்நாட்டில் பிறந்தவர்கள்தான் என்று கூறக்கூட முடியாத அளவு தமிழனின் நிலை தாழ்ந்து விட்டது.......மனிதன் இந்தக் காலத்தில் சுய நலப் பாதையில் வாழத் தொடங்கி விட்டான்'

(13—8—55 தமிழ் நாடு)

'இதை (தமிழகத்தை) எந்த ஆசிரியனும் குறைத்து மதித்து விடவில்லை. ஆனல் நிகழ்காலத்தைப்பற்றிச் சிறிது தரம் குறைத்தே மதிப்பிடவேண்டிய திருக்கிறது'

(20—8—55 தமிழ் நாடு)

என்கிறுர் நவீனர். இவ் வாக்கியங்களால் இக் காலத்துத் தமிழரின் அறிவு நிலை இப்படிப்பட்டதெனக் காட்டப்பட்டது. விழிப்பு வந்து விட்டதாகச் சொல்லப்படும் மக்கள் அத்தமிழராய்த்தா னிருக்கமுடியும். அவரறிவே அங்ஙனமாயின் ஏனைச் சாமானியர் தரத்தை ஒருவர் சொல்லியா மற்றவர் தெரிய வேண்டும்? அங்ஙனமாக அன்னோரபிப்பிராயம் மதிப்புப் பெறுத லெப்படி? விஷயந் தெரியாதவன் விழிக்கிற விழிப்பும், அவருக்கு வந்து விட்டதாகக் கூறப்படும் விழிப்பும் ஒன்றே. ஆகவே நோயாளி வைத்திய சாத்திரத்துக்கும் வைத்தியனுக்கும் அடங்கி நடக்க வேண்டுவது போலச் சைவ மக்களும் சைவ சாத்திரத்துக்கும் சைவாசிரியருக்கும் அடங்கியே நடக்க வேண்டும். அடங்காப் பிடாரியான நோயாளிக்கு நோய் தீராது வளர்வது போல் அடாங்காப் பிடாரிகளான சைவ மக்களுக்கு ஆணவத்திமிர் தீராத தோடு மிகுவதுந் தப்பாது.

'தமிழ் மொழி வழிபாட்டை எதிர்ப்பவர்களும் மறுத்துப் பேசுபவர்களும் அதனை ஆதரிக்கவேண்டாம். வரவேற்றுப் பேச வேண்டாம். இதனை எதிர்த்துப் பேசாமல் இருந்தால் போதுமானது.'

(8—7—55 தமிழ் நாடு)

என்கிறுர் நவீனர்.

ஒருவன் சைவசாத்திரங்களிற் சிறிதே பயிற்சி பெறுக. தமிழர்ச்சனைக் கொள்கை சாத்திர விரோத மென்பது அவனுக்கு நிச்சயமாகப் புலப்படும். தான் நெஞ்சுரமில்
தாய் மொழி வழிபாடு லீத்வனுயின் அவனே நவீனரைக் கண்டதும்,
அடுக்களைக்கு ஓடி அடுக்குப் பானைகளுக் கிடையிற் போய்ப் பதுங்கிக் கொள்வான். அத்தடை அவனுக்கு மிகை. நெஞ்சுரம் படைத்த சைவாபிமானியையும் அத்தடை எதுவுஞ் செய்யாது. அவன் அதற் கடங்கான். தன் மனத்தில் தவறெனப் பட்ட தமிழர்ச்சனையை மக்கள்முன் அவன் எடுத்துக் கூறிக் கண்டிக் கவே செய்வான். நவீனர் அங்ஙனம் எதிர்ப்பாளருக்கு வாய்ப் பூட்டிட்டு விட்டுத்

'தமிழ் அருச்சனை இயக்கத்திற்கு ஆதரவு தமிழ் மக்க ளுடைய கருத்தில் மட்டும் இருந்தால் அது பயனில்லை......... தீர்மானத்தில் வெளிப்படுத்த வேண்டும். தமிழ் நாட்டி லுள்ள தமிழர்களுடைய சங்கங்களெல்லாம் தமிழ் அர்ச்சனை இயக்கத்தை ஆதரித்துப் பொதுக் கூட்டங்கள் கூட்டித் தீர்மானங்கள் நிறைவேற்றிப், பத்திரிகைகளுக்கும், அதிகாரி களுக்கும் தெரியப் படுத்தவேண்டும்.'

(10—5—55 தமிழ்நாடு)

என்று கூறித் தம்மவரைத் தாற்றுக்கோல் கொண் டிடித்தாற் போல் இடித்துத் தூண்டுவது நியாய வாத மாகுமா? மக்கட் கூட்டத்தில் அவருக்குப்போல் எதிர்ப்பாளருக்கும் பேச வுரிமை யுண்டு. அதைத் தடுக்க முயல்வது சர்வாதிகாரப் புத்தியேயாம். நவீனருக்கும் நேர்மையான வாதத்துக்குந் தூரம் அதிகம். வாயில் துணியைத் திணித்துக் காரியத்தைச் சாதித்துக் கொள்ளப் பார்ப்பான் கள்ளன். அவனை யனுசரிக்கப் பார்க்கிறாரா அவர்? ஆனால் அவ்வளவு ஏமாறிக ளல்லர் அவரை யெதிர்ப்பவர்.

'நமக்குப் புரிகின்ற நமது உள்ளத்தைத் தொடுகின்ற நமது தாய் மொழியிலே வழிபாடு செய்வது தான் மிகவும் பொருத் தம் என்று நன்றாக உணர்ந்தவர்கள் கூடச் கட்சி வேறுபாடு இயக்க வேறுபாடுகளுக்கு அஞ்சி அந்த உண்மையைப் பலரும் அறியும்படி எடுத்துக் கூறுவதற்கு முன் வருவ தில்லை.'

(24—4—56 தமிழ்நாடு)

என்கிறார் நவீனர். தாய் மொழிதான் புரியும், உள்ளத்தைத் தொடும் என்பது அவர் கருத்து. எல்லா மொழிகளும் போன்று சம்ஸ்கிருதமும் ஒரு மொழி. ஒவ்வொரு மொழியும் ஒவ்வொரு கூட்டத்தாருக்குத் தாய்.

**உள்ளத்தைத் தொடும் மொழி எது?**

ஆனல் சம்ஸ்கிருதம் மலடியா? அதற்கும் பிள்ளைக ளிருக்கவே செய்கின்றனர். அவருங் கோடானு கோடிப்பேர். ஆனல் ஒரு கூட்டத்தாரைச் சுட்டி அவருக்கே அது தாயென்பார் நவீனர். அக் கூட்டத்தார் பிரதேசந்தோறும் வழிவழியாயிருந்து வாழ்கின்றனர். ஒரு பிரதேச மொழி அங்கு வாழ்கின்ற அவருக்குந் தாய்மொழியாகவே யிருந்து வருகிறது. ஆகலின் பிரதேசமொழி யொன்று, சம்ஸ்கிருத மொன்று ஆக இரண்டு தாய்மார் அவருக்கு உளராகின்றனர். தமிழகத்தை யெடுத்துக்கொள்க. இங்குள்ள அவருக்குத் தமிழும் புரிகின்றது, உள்ளத்தைத் தொடுகின்றது. சம்ஸ்கிருதமும் அப்படியே. இந்நிலை மற்றப் பிரதேசங்களிலுள்ள அக் கூட்டத்தாரிடமுங் காணப்படும். அவர் நீங்கலாக மற்ற மக்களனைவருக்கும் அவரவரின் பிரதேச மொழி யொன்றே தாய். அங்ஙனங் கொள்ளுமாறு நவீனர் அத்தனை மக்களையும் அவமானத்துக்குட்படுத்துகிறார். சம்ஸ்கிருதத்துக்கு அக் கூட்டத்தினர் மாத்திரந் தான் பிள்ளைக ளென்பது தவறென முன்னரே விஸ்தாரமாக விளக்கப் பட்டது.

அக் கூட்டத்தினருக்கு இரண்டு தாய்மாருள ரென்பதை நவீனரே சம்மதிக்குமாறு அவருடைய கொள்கை அவரையே நிர்ப்பந்திக்கிறது. அங்ஙனமாக ஏனையோர்க்கும் இரண்டு தாய்மா ரிருத்தல் ஏன் கூடாது? தமிழனுக்குத் தமிழ் போன்று சம்ஸ்கிருதமும் தாய் மொழியே யாம். இன்னென்று இப்போது தாய்மொழி (Mother tongue) யென்ற வழங்கற்பாடு குறைந்து பிரதேச பாஷை அல்லது மாகாண மொழி (Regional language) யென்ற பெயரே மிக்கு வழங்கலாயிற்று. சம்ஸ்கிருதம் பாரததேசப் பொது மொழி (Common language of Bharath) யாகும். ஆகலின் அதுவும் ஒவ்வொரு பிரதேசத்துக்குஞ் சொந்தமாயிருப்பதில் தடையில்லை. மேலும் தாய் மொழிதான் புரியும் உள்ளத்தைத் தொடும் என்பதென்னை? தமிழகத்தில் பன்னூ றாண்டுகளாக வாழ்ந்து வருகின்றனர் தெலுங்கர் முதலியோர். அவருட் பெரும் பாலார் தம் தாய்மொழியை அனேகமாய் மறந்து விட்டனர்; அவருட் பலர் தமிழ்ப் பயிற்சியு டையார். அவருக்குத் தமிழ் புரிகிறது, உள்ளத்தைத் தொடுகிறது ஏன்? தமிழ் அவருக்குத் தாயா? அன்றே. தமிழ ரெல்லாருக்குமே தமிழ் புரிகிறதா? உள்ளத்தைத் தொடுகிறதா? சி-என்-ஏ, இரா-நெடுஞ்செழியன், அன்பழகன் முதலிய தமிழருக்குத் திருமுறைகள் புரிவது மில்லை, உள்ளத்தைத் தொடுவது மில்லை. தேவாரத்திலுள்ள மாலை மாற்று, ஏகபாதம் முதலிய பதிகங்கள் தமிழருக்காயினும் புரிவனவா? உள்ளத்தைத் தொடுவனவா? சைவப் பயிற்சியோடு கூடிய தமிழ்ப் பயிற்சியே

வேண்டும். அஃதுடையார்க்கே சைவத் தமிழ் நூல்கள் புரியும், உள்ளத்தைத் தொடும். அவர்பாலுள்ள நேர்மையான சைவாபிமானம் வேதசிவாகமாதி சைவ நூல்கள் மலிந்த சம்ஸ்கிருதப் பயிற்சியிலும் அவரை உந்தும். அப் பயிற்சியால் அவருக்கு அதுவும் புரியும், உள்ளத்தைத் தொடும். வெறுந் தமிழ்ப் பயிற்சி தமிழ் வெறியை யூட்டுவதற்கே ஏதுவாகும், தமிழ்ப் பயிற்சியும் சைவப் பயிற்சியும் இல்லாத எல்லாத் தமிழருக்கும் புரிகிற, உள்ளத்தைக் தொடுகிற பாடல்கள் சினிமாப் பாடல்களேயாமெனச் சொன்னுல் அது குற்றமாகாது. வசனங்களாயின் கொச்சைத்தமிழ், இழிவழக்கு என்பனவேயென்ருல் அதுவுஞ் சரியே. வழிபாடு அம்முறையி லிருக்கவேண்டுமென நவீனர் விரும்புகிருர்.

'மக்களுக்கு இலக்கியம் பயன்படல்வேண்டும் என்பதற்காக இலக்கியத்தை நமது தரத்திற்குத் தாழ்த்திக் கொணரக் கூடாது. நாம்தான் நமது தரத்தை இலக்கியங்களின் தரத்திற்கேற்ப உயர்த்திக்கொள்ளல் வேண்டும்........இலக்கியங்களின் தரம் குறையுமானுல் அது நமது வர்ழ்க்கையின் தரத்தையும் குறைக்கும் என்பதை உணர்தல் வேண்டும்.'

(6—9—55 தினமணி)

என்கிறர் இன்னெரு நவீனர். வழிபாடும் இலக்கியம் போல்வது. அதன் தாமும் மக்களின் தரத்திற்கேற்பத் தாழக்கூடாது, தாழ்ந்தால் வாழ்க்கையில் தெய்வீகமுந் தாழும். நவீனர் அதை உணர்தல் வேண்டும்.

தமிழ் வழிபாட்டை ஆதரிப்பவருட் பலர் கட்சிகளுக்கும் இயக்கங்களுக்கும் இரையாகித் தம் ஆதரவைத் தெரிவிக்க முன் வருவதில்லை யென்பது மெய்யானுல் அவ்வழிபாட்டை யெதிர்ப்பவருள்ளும் அங்ஙனமே இரையாகித் தம் எதிர்ப்பைத் தெரிவிக்க முன்வராதவருமுளர். அதுவும் மெய்யே. இரு சாரிலுமுள்ள அப் பதுங்கிகள் வன்மை பெற்று முன்வருங் காலத்தில் வரட்டும். நவீனரோ கட்சிகளிலும் இயக்கங்களிலுஞ் சேராதவரெனத் தெரிகிறது. அப்படிப்பட்ட எதிர்ப்பாளருக்கும் பஞ்சமில்லை. உண்மையைத் தெரிவதற்கு அவ்விரு திறத்தினரின் வாதப் பிரதிவாதங்களே போதும். ஆனுல் நவீனருக்குத் தமிழ் மொழியே சைவ சமயம். எதிர்ப்பாளருக்குச் சைவ சமயம் முற்பட்டும், தமிழ் அதைச் சார்ந்துமிருக்கும். அவ்வேறுபாடு அறிஞரின் கவனத்துக்குரியது.

'(பகவத் கீதையை) வடமொழியிலே ஓதினால்தான் சிலபேருக்கு மனநிறைவு உண்டாகிறது. அவர்களுக்கு வடமொழி சுட்டுப் போட்டாலும் தெரியாமல் இருக்கலாம். எனவே அந்த மொழியைச் சரிவர உச்சரிக்கவும் அவர்களால் முடியாது, இருக்கும் என்றாலும், வடமொழி, அரபு இந்த மொழிகள்தாம் மதத்திற்கு உரிய மொழிகள் என்றும் அந்த மொழிகளில் இருக்கும் எதையும் பொருள் தெரியாமல் சொன்னாலும் அது சிறப்புத் தரும் என்றும் ஒரு தவறான மனப்போக்கு உண்டாகிவிட்டிருக்கிறது. இது குருட்டுப்பற்று, மூட நம்பிக்கை என்பது என் கருத்து,

**ஒரு நூலின், சொல்லுக்குச் சக்தி உண்டா? சொல்லின் பொருளுக்குச் சக்தி உண்டா?**

(24—4—56 தமிழ்நாடு)

என்று விநோபா சொன்னார் என்கிறார் நவீனர். சொல்லும் பொருளுஞ் சேர்ந்ததே நூல். நூலாசிரியன் அவ்விரண்டற்கு முரியன். உயர்ந்த நூலில் சொல்லழகும் பொருட் செறிவு மிருக்கும். அச் சொல்லும் பொருளுமே சக்தி வாய்ந்தன. பொருளைத் தம்தம் மொழியிற் பெயர்த்துக் கொண்டுபோய் வைத்துப் படித்து மகிழ்வார் சிலர். ஆனால் அந்நூலாசிரியனது சொல்லையும் படித்து அதனழகை ரசிக்கவோ, சக்தியை வியக்கவோ, பிற பயனையடையவோ கூடாதா? அஃதவசியமன்ற? பொருள் தெரியாமல் சொல்லை ரசிப்பதெப்படி யென்பர் சிலர். அர்த்தமே யில்லாத குழலோசை யாழோசைகளை ரசிக்கும்போது, அவற்றால் நோய் நீக்கம், புதிய ஊக்கம் முதலிய நலன்களைப் பெறும்போது அர்த்தந் தெரியாத சொல்லொலியை ரசிக்கவும் அதனால் நலம் பெறவும் முடியாதென்பது ஒப்பத்தக்கதன்று. தீந்தமிழ், களிதெலுங்கு, கவின் மலையாளம் என மொழிகளை வர்ணிப்பதிலும் பயனில்லை. நல்ல நூலாசிரியன் தன் கருத்துக்களைச் செறித்துச் சொற்களைச் செவ்வையாகக் கோத்திருப்பான். அந்நூலைப் படிப்பவர் முதலில் அச்சொல்லழகில் ஈடுபடட்டும், பிறகு அவரை அப்பொருளே தன்பால் ஈர்த்துக்கொள்ளும் என்பது அவன் நோக்கமாகும். மற்றொரு தலைசிறந்த நூல்சிரியன் தன் குறிக்கோட் பொருளையே கருதி அதனருமையில் தன்னையிழந்து பாடிக்கொண்டே போவான். சொற்கள் அவன் வழிச்சென்று சர்வாலங்காரத்தோடும் சரளமாக அவன் வாயிலிருந்து வெளிவரும். அந்நூலைப் படிப்பவரும் அவன்போன்று முதலிற் பொருளுக்கு வசமாக மாட்டார். அத்துணையாற்றல் அவருக்கிராது. அவரும் அச்சொல்லலங்காரத்தை ரசித்துப் பிறகுதான் பொருளைக் கருதுவார். கண்ணன் வைணவருக்கு வழிபடு

கடவுள். அவன் வாய்மொழியே சம்ஸ்கிருதத்திலுள்ள பகவத் கீதா சுலோகங்கள். அவை வியாசரின் வாய்மொழி யென்பது முண்டு, அதுவுஞ்சரி. அவரும் விஷ்ணுவின் அவதாரந்தான். அக்கீதைக்குப் பிறமொழிகளில் பல பெயர்ப்புக்களுள. அவற்றுக் காசிரியன்மாரும் கண்ணனும் சமதரத்தினரா? அல்லது அவனருளில் அவர் ஆழ்ந்த வரா? முதலில் அதையோசிக்க. மூலத்திலும் பெயர்ப்புகளிலும் பொருளொன்றேயாகுக. அதுகொண்டு அப்பெயர்ப்புகளின் ஆசிரியன்மார் வாய்மொழிகளும் கண்ணன் வாய் மொழியும் சமமாய் விடுமா? அஃதொருக்காலுமில்லை. அவன் வாய்மொழி பிரத்தியேக மதிப்புடையது. வைணவருக்கு அது கடவுள் வாய் மொழி. பெயர்ப்புக்களெல்லாம் மனிதரின் வாய் மொழிகளே. கீதம் நிறைந்தது கீதை. கீதம் சொல்லுக்கேயன்றிப் பொருளுக்கில்லை. ஆகலின் கீதை யென்னும் பெயரே சொற்களின் அழகு ஆற்றல் முதலியவற்றை முன்னிட்டே நூலுக்கு வந்ததென்க. திருவாசகம், திருவிசைப்பா முதலிய பெயர்களும் அப்படித்தான் வந்தன. பொருள்பற்றிய பெயர்களும் உ-ள. சிவஞானபோதம், சிவஞான சித்தியார் முதலிய பெயர்கள் அப்படி வந்தவை. ஒருவனுக்குச் சம்ஸ்கிருதம் எழுதப்படிக்கமாத்திரந் தெரியுமென வைத்துக்கொள்க, கண்ணன் மேலும் கண்ணன் வாய் மொழி யென்கிற காரணத்தால் அச்சம்ஸ்கிருத கீதை மேலும் அவன் பக்தி மேலிட்டு அப்படிப்பைக் கொண்டு அந்நூலைப் பொருள் தெரியாமலே ஓதிவருவானாயின் அதற்குரிய பலனை யடைவானா? மாட்டானா? மாட்டானென்கிறார் விநோபா. அது தவறு. நான் இப்படிச் சொல்வதால் பொருள் தெரியவேண்டா மென்பது என் கருத்தென எவரும் எண்ணற்க. இலௌகீக நூல்களில் மூலமாயுள்ளவற்றிலிருந்து பொருள்களைப் புய்த்து வேறு மொழிகளுக்கு எடுத்துப்போய் வைத்துக் கொண்டு மூலங்களிலுள்ள சொற்களை உதறிவிடலாம். அதிற் குற்றமில்லை. ஆனால் தெய்வ நூல்கள் விஷயத்தில் அப்புத்தி கூடாது. திருவாசகத்திலுள்ள பொருளை வசனத்தில் எழுதியோ, வேறு மொழிகளில் பெயர்த்தோ வைத்துக்கொண்டு அந்நூற் பாடல்களை உதறிவிடுவது மன்னிக்கமுடியாத குற்றம். சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து (உணராவிட்டாலும்) அப்பாட்டையே சொல்லவேண்டும். நவீனர் கூட்டு வழிபாடு நடத்துகின்றனர். அதில் சிவபுராணம் ஓதுவார்க் கெல்லாம் அதன் பொருள் தெரியுமா? பெரும்பாலோர்க்குத் தெரியாது. அங்ஙனமாயின் அவ்வழிபாடு ஏன்? திருவாய்மொழித் தமிழ்ப் பாடல்களைத் தெலுங்கெழுத்தில் அச்சிட்டுப் புத்தகமாக்கி ஆந்திர வைணவர் ஓதிவருகின்றனர். அது பயனற்ற செயலா? நவீனரே பொருளைவிடச் சொல்லுக்கு மதிப்பு வைப்பது முன் சொல்லப்பட்டது.

'எந்த இலக்கியத்தைப் படித்தாலும் முதலில் மூலத்தையே படியுங்கள். ஒன்றுக்குப் பல முறை படித்தால், தானே நன்கு புரிந்து விடும். மூல ஆசிரியரை நாம் அணுகாது உரையாசிரியரை நாம் அணுகிச் செல்வதனால், நாம் அங்கு மூல ஆசிரியனது கருத்துக்களைக் காணமுடியாது. உரையாசிரியரது கருத்துக்கள்தான் பிரதிபலிக்கும். (பலத்த கைதட்டல்)'

(10—9—55 தினமணி)

நூலின் மூல ஆசிரியர், உரையாசிரியர், மொழி பெயர்ப்பாசிரியர், யார் கருத்து வலிமை யுடையது?

என்கிறார் நவீனர். சிவஞானமுனிவரர், சேனாவரையர், பரிமேலழகர் முதலிய உரையாசிரியன்மார் மகாபண்டித சிரோன்மணிகள், மூலங்களிற் புதைந்து கிடக்கின்ற நுணுக்கங்கள் பலவற்றை யெடுத்து வெளியிட்ட பேருபகாரிகள், தமிழுக்கு ஆக்கமளித்த தயாமூர்த்திகள். அவருரைகள் தம்மளவிலேயே பேரிலக்கியங்களாகத் திகழ்கின்றன. அங்ஙனமாக அவரையும் அவருரைகளையும் சாமானிய உரையாசிரியன்மாரோடும் அவருரைகளோடும் சேர வைத்து நிந்தித்தார் நவீனர். அது தமிழ்க் கொலை, நன்றி மறந்த செயல் அதற்குக் கைதட்டல் வேறு. அக்கூட்டத்தின் தரமும் அதனாற் புலப்படும். அது கிடக்க. உரையாசிரியன்மாரையும் உரைகளையும் ஒதுக்குக எனச் சொல்லிவிட்டுப் பெயர்ப்பாசிரியன்மாரையும் பெயர்ப்புக்களையும் நம்புக என அவர் சொல்லலாமா? பெயர்ப்புக்களில் மாத்திரம் பொருள் பிசகாதோ? உரையாசிரியன்மாரையும் உரைகளையும் கீழ்ப்படுத்து முகத்தால் பெயர்ப்பாசிரியன்மாரையும் பெயர்ப்புக்களையுங் கூட அவரே கீழ்ப் படுத்தியவராகிறார். மக்கள், மூலங்களை மதித்துக் கற்கவேண்டுமென்பதே சிறந்த உரையாசிரியன்மார், பெயர்ப்பாசிரியன்மாரின் விருப்ப மென்க.

'இவையெல்லா மருமறையாகமத்தே யடங்கியிடு மவையிரண்டு
மரனடிக்கீ ழடங்கும்',

'அருமறையா கமமுதனூ லனைத்து முரைக் கையினா லளப்பரி
தாம்..........சுருதிசிவாகம மொழியச் சொல்லுவதொன் றில்லை
சொல்லுவார் தமக்கறையோ சொல்லொணாதே',

'வேதநூல் சைவநூ லென்றிரண்டே நூல்கள் வேறுரைக்கு நூலி
வற்றின் விரிந்தநூல்களாதிநூ லனாதி யமலன் றரு நூல்'

என்றது சித்தாந்தசாத்திரம். அவை யிரண்டும் 'ஆரியமாய்' என்றதால் சம்ஸ்கிருதம். பிரதேச மொழிகளிலுள்ள பிற சைவநூல்களெல்லாம் அவ்வேதாகமங்களின் வழிவந்தனவே. சிவம், சங்கரன், சம்புருத்ரன், ஹரன் முதலிய சைவசமய தெய்வநாமங்களும் சம்ஸ்கிருதமே.

சைவம், சைவசமயம், வைதிக சைவம் சைவசித்தாந்தம் என்ற அச்சமயப் பெயர்களும் அம்மொழிதான். சைவ மந்திரங்களும், அம்மொழியிற்ரு னுள. அங்ஙனமாக அம்மொழி சைவசமயத்துக் குரிய மொழி யெனச் சொல்வது சரி. அது உள்ளதை உள்ளபடி சொல்வதாகும். அம்மொழியிலுள்ள சைவ நலன்களை அம்மொழிப் பயிற்சி பெற்ரே, பிறர் அம்மொழியிலேயே படிக்கக் கேட்டோ மகிழ் வதற்கு மனம் வேண்டும். அஃதில்லாத சைவன் தவமில்லாதவனே. அச் சைவன் அவ்வின்மையை யுணர்க, எண்ணி யெண்ணிச் சாகும் வரை கவலவாவது செய்க.

**மொழிப் பயிற்சியும் மன நிறைவும்**

சில பேருக்குச் சுட்டுப்போட்டாலும் சம்ஸ்கிருதம் தெரியாமலி ருக்கலாம், சரியாக உச்சரிக்கத் தெரியாமலிருக்கலாம், ஆயினும் சம்ஸ் கிருதத்தில் ஓதினுல்தான் மனநிறைவு உண் டாகிறது. அது குருட்டுப்பற்று, மூடநம்பிக்கை யென்கிருர் விநோபா. அதைப்பற்றி இன்னுங் கொஞ்சஞ் சொல்லுகிறேன். சமயாபிமானமே சிறந்த தருமம். அக் காரணத்தாலேயே அச்சிலருக்கு அம்மொழியை யோதிக் கேட்பதில் மனநிறைவு வுண்டாகிறது. அம் மன நிறைவு கலங்காத, எளிதிற் கிடைக்கக் கூடாததோ ரடிப்படை. அதை வைத்துக்கொண்டு அம் மொழி நூலை மேலுமேலும் அவருக்கு ஓதிக் கேட்பித்து அவரை அம் மொழிப் பயிற்சியில் ஈடுபடுத்தலாமே. வெறுந் தாய்மொழியைப் பயிலத் தொடங்குபவனும் முன்னமே பயின்று வல்ல தமிழ்க் கலைஞர் பலகால் ஓத அதனைக் கேட்டு அதில் ஆசை யுண்டாகித்தான் தன் பயிற்சியைத் தொடங்குகிருன். தமிழிலுள்ள சைவ நூல்களையே ஓதிக் கேட்டு மனநிறைவுண்டாகப் பெருத தமிழரே மிகப் பலர். அவரிடம் சைவப் பயிற்சி சூனியம். ஆகலின் அச்சில பேருடைய மனநிறைவைப் புரிந்து கொள்ளவும், சம்ஸ்கிருதப் பயிற்சிக்குச் சாதகமாக்கவும் முற்படாமல் குருட்டுப் பற்று மூடநம்பிக்கை யெனக் கூறி விலக்குதல் பெருங் குற்றம். அது அவரது சமயாபிமானத் தையுங் கெடுக்கும்.

> 'ஒரு பாடலின் பொருளை அறிய வேண்டும். அதனைச் சிந்திக்க வேண்டும்............குருட்டுத்தனமாக உருப்போட்டு ஒப்பிப்பதால் கொஞ்சங்கூடப் பயனில்லை. அப்படி ஒப்பித்து அதனுல் பிறரால் தகுதியுடையான் என்று மதிக்கப்பட வேண்டும் என்று விரும்புவது ஒழுங்கற்றது என்றுகூட நான் நினைக்கிறேன். இவ்வளவு இலேசாகப் பிறரது மதிப் பைப் பெற்றுவிட வேண்டுமென்ற விருப்பந்தான் சமயம் சீரழிந்து போனதற்குக் காரணம்'

(24—4—56 தமிழ் நாடு)

என்கிறாராம் விநோபா. அவ்வாக்கியம் தாய் மொழி வழிபாட்டைத் தூக்கிப் பிடிக்கிற தென்பது நவீனர் கருத்து. பொருளை யறிய வேண்டும், சிந்திக்க வேண்டு மென்பதை எவரும் மறுக்கவில்லை. குருட்டுத்தனமாக உருப்போட்டு ஒப்பிப்பதால் கொஞ்சங் கூடப் பயனில்லை என்பதுதான் தப்பு. வேதத்துக்குச் சுருதியென்பது மொரு பெயர். அந்நூல் கேட்டுக் கேட்டுக் குருட்டுத்தனமாக உருப்போட்டு வழிவழியாக வந்த தாற்றான் அப்பெயர் வந்தது என்று சொல்லப்படும். விநோபா பார்ப்பனராயிருந்தும் அப்பெயர் வரலாற்றை மறந்தார். சகவாச தோஷம் போலும். உருப்போடுவதற்கு ஏற்ற பருவம் இளமையே. ஆனால் அப்போது பொருளையறிவதுஞ் சிந்திப்பதும் சிரமந்தான். ஆயினும் அப்பருவத்திற்றான் வேதாத்யயனந் தொடங்கப்படும். பார்ப்பன இளைஞர் அதனை உருப்போடுவதை அவர் பரிகசிக்கிறார். பழங்காலத்தில் அவர் உருப்போட்டுக் காப்பாற்றியதால் வேதம் இன்று நமக்கு எழுத்து வடிவிற் கிடைப்பதாயிற்று அது பயனில்லையா? அல்லது சாமானியப் பயனா? அஃதிருக்கட்டும். திருக்குறளில் 'அகர முதல' எனத் தொடங்குவது முதற்குறள். அந்நூல் இப்போது பாடசாலைகளில் 3 ஆவது 4 ஆவது வகுப்பு முதல் பி-ஏ வரையும் பாடமாக வைக்கப்பட்டிருக்கிறது. பி-ஏ, எம்-ஏ வகுப்பு மாணவனாலும் எளிதில் விளங்கிக்கொள்ள முடியாததொரு பொருள்சேர் விரிவுரையைத் 'திராவிடப் பிரகாசிகை' யென்னும் நூலில் தந்துள்ளார் சபாபதி நாவலர். 3 ஆவது வகுப்பு மாணவன் தன் பக்குவத்தளவில் மு-வரதராசனாருரை போன்றதோ ருரையையுங் குறளையும் படிக்கிறான். அவன் அக்குறளின் விசேடவுரையை யறிந்தவனா? சிந்தித்தவனா? இல்லை. அவன் அக்குறளை மனப்பாடஞ் செய்யக் கூடாதோ? அந்நாவலரின் விரிவுரையை யறிந்து சிந்தித்த பிறகுதான் அது செய்ய வேண்டுமோ? விநோபாவின் உபதேசம் விநோதமாகவே யிருக்கிறது. அவர் கருதுகிறபடி குருட்டுப் பாடமென்பது இல்லவே யில்லை. கேட்டுப் படிப்பவன் குருடன், பார்த்துப் படிப்பவன் செவிடன் என அவர் கருதினார்போலும். அவர் கூறுங் குருட்டுப் பாடத்தால் எவனும் மதிப்புப் பெற விரும்ப மாட்டான். அப்படி விரும்பினதால் சமயம் சீரழிந்து போயிற்றென்பதும் உண்மைக்கு மாறாகும். எங்கோ அடிக்கப் பல்லுப் போயிற்றாம். தென்னை மரத்திலே தேள் கொட்டப் பனைமரத்திலே நெறிகட்டியதாம். சமயஞ் சீரழிந்ததற்கு அவர் கூறிய காரணம் அப்படித்தானிருக்கிறது. மொழி வெறியும், சமய நூல்களைக் கல்லாமையும், சமய பிரமாண நூற்பொருளை மாத்திரம் எடுத்துக் கொண்டு ஆப்த வாக்கியங்களாகிய அந்நூற்களைப் போற்றி யொழுகாமையும், அன்ன பிறவுமே அச் சீரழிவுக்குக் காரண மென்பதை அவரறிய வேண்டும்.

கேட்டுப் படிப்பவன்
குருடனா? பார்த்துப்
படிப்பவன் செவிடனா?

'அவர் (விநோபா) தொடர்ந்து கூறும்போது ஒருவரது ஆன்ம வளர்ச்சிக்கு அவரது சொந்தத் தாய்மொழி போதாது என்று கூறுவதைத் தான் ஒப்புக்கொள்ள முடியாது என்றார். தாய்மொழி ஒன்றே முற்றும் போதுமானது என்பது அவர் கருத்து. ஆகவே, ஆன்ம ஞானம் சில குறிப்பிட்ட மொழிகளில் மட்டுமே பூட்டி வைக்கப்பட்டிருக்கிறது என்ற மூட நம்பிக்கையை ஒழித்து விடுங்கள் என்று கேட்டுக் கொண்டார்'

(24—4—56 தமிழ்நாடு)

மொழிக்கும் ஆன்ம வளர்ச்சிக்கும் என்ன சம்பந்தம்?

என்கிறார் நவீனர். விநோபாவின் கருத்து எதுவேனுமாக. நவீனர் கருத்தே அதுதான். மொழிக்கும் ஆன்ம வளர்ச்சிக்கும் சிறிதும் சம்பந்தமில்லை. அவ்வளர்ச்சிக்குச் சமயமே துணை புரியற்பாலது. மொழிக்கும் சமயத்துக்கும் வேறுபாடு தெரியாத தோஷமே அவர் கூற்றுக்குக் காரணம். இன்னும் சமயங்களுட் சைவமொன்றே அவ்வளர்ச்சிக்கு உறுதுணை. அதன் பிரமாண நூல்கள் முதலில் சம்ஸ்கிருதத்தில்தான் உளவாயின; அவற்றைத் தழுவிப் பின்னர்த் தமிழிலும் பெருகின. மற்றைப் பிரதேச மொழிகளிலும் அன்ன நூல்க ளிருக்கலாம். அங்ஙனமாக ஆன்ம ஞானம் சில குறிப்பிட்ட மொழிகளில் மட்டுமே பூட்டி வைக்கப்பட்டிருக்கிறதெனச் சைவமக்கள் சொல்லுவாரா? மாட்டவே மாட்டார். மூட நம்பிக்கையென வொன்றிருக்குமாறல் அதற்குச் சைவிற்பன்னரே பரமசத்துருவென்பதை நவீனரறிக. ஆனல் அந்த ஞானத்துக்கு அங்குரம் சம்ஸ்கிருதத்திற்றானமைந்து கிடக்கிறது. அதை மறுக்க முடியாது. அவர் அவ்வங்குரத்தைக் கண்டு மகிழப் பிரியப்படாமல் தம் கண்களையே சிக்கென மூடிக்கொள்கின்றனர். அதனல் தாய் மொழியே ஆன்ம வளர்ச்சிக்குப் போதுமானதென்றுரவர். அதுவே மூடநம்பிக்கையாகும்.

'சாந்திநிகேதனத்தில்........அங்குள்ளவர்கள் கூடி சமஸ்கிருத மந்திரங்களைச் சொல்லி வழிபாடு செய்வது........ தெரிந்திருக்கும். ஒரு நாள் ஒரு சிறு பெண் தன் பாட்டனரோடு அப்பக்கம் சென்றது........தன் பாட்டனரை நோக்கி, அவர்கள் என்ன செய்கிறார்கள் என்று கேட்டது. அவர்கள் வழிபாடு செய்கிறார்கள் என்ற விடை வந்ததும், என்ன மொழியில்? என்ற வினவை அக்குழந்தை விடுத்தது. சமஸ்கிருதத்தில் என்று பாட்டனர் சொன்னதும்; அக்குழந்தை ........பாட்டனரிடம் கேட்டது, 'ஏன் தாத்தா சாமிக்குப் பெங்காலி தெரியாதா?'

(24—4—56 தமிழ்நாடு)

என்றொரு கதை பேசுகிருர் நவீனர். அவருக்கு அச்சிறுமியின் விஞவும் ஓராதாரம். அந்நிகேதன ஸ்தாபகர் இரவீந்திரநாததாகூர் என்பவர். அங்கு வழிபாடு சம்ஸ்கிருதத்தில் நடந்து வருமாறு ஒருக்கால் அவரே திட்டஞ் செய்து போயிருக்கலாம். அப்பெண் அங்குச் சென்றபோது அவ்வழிபாடு செய்து கொண் டிருந்தவரும் மூடநம்பிக்கைக்காரரா யிருந்திருப் பாரோ? இல்லையில்லை. அந்நிகேதனத்திலேயே கலை பல பயின்று அறிவு சிறந்தவராய்த்தா னிருந்திருப்பர். தன் அற்ப புத்தியால் அச் சிறுமி அவ்விஞவைக்கேட்ட தென்பதே சித்தம். பாவம், அச் சிறுமியை விட்டுவிடலாம்.

கடவுளுக்குச் சகல பாஷைகளும் தெரியுமா?

'தென்னுடைய சிவனுக்குத் தென்னட்டு மொழியாகிய தமிழ் தெரியுமா? தெரியாதா?'

(21—8—55 தமிழ்நாடு)

என அச்சிறுமியின் புத்தி கொண்ட வொரு பெரிய நவீனரே கேட் கிருர். அவ்விருவர் விஞக்களு மொன்றே. அப் பெரிய நவீனரின் மூளையைச் சிறிதே சோதிக்கலாம். அச்சிவனுக்குத் தமிழ் தெரியுமா? தெரியாதா? என அவர் எவரை வினவுகிருர்? என்னிடமா? ஒரு வனுக்கு ஒரு விஷயந் தெரியும், தெரியா தென்பதை அடுத்தவன் அறிந்திருப்பா னென்பது நிச்சயமில்லை. ஆகலின் அவர் அவ் விஞவை அச்சிவனிடமே கேட்டு விடை பெறுக. மேலும் அவன் தென்னட்டுச் சிவஞகலின் அவனுக்குத் தெரியாத மொழிகளும் பல விருக்கும். ஒரு நாட்டரசன் வேறு பல நாடுகளையுங் கைவசப்படுத்தி அந்நாடுகளுக்கும் இறைவ (அரச) ஞகலாம்.

ஆனல் அவனுக்கு அவ்வசப்பட்ட நாடுகளில் வழங்கும் மொழி களும் தெரியு மென்பதில்லை. ஆங்கிலநாட்டு விக்டோரியா மகாராணி பாரதத்தையும் வசப்படுத்திப் பல வருடங்கள் ஆண்டும் அவளுக் குப் பாரதத்தில் வழங்கிய மொழிகளெல்லாந் தெரிந்திருந்தனவா? அங்ஙனமே தென்னட்டுச் சிவன் எந்நாட்டுக்கும் இறைவஞ யிருந் தாலும் அந் நாடுகளிலுள்ள மொழிக ளனைத்தையுந் தெரிந்திருந்தா னெனச் சொல்ல முடியாது. ஆகலின் அவனுக்குத் தெரிந்தமொழி யிது என்பதோடு தெரியாத மொழிகள் இவை என்பதையும் அவனையே நவீனர் கேட்டுத் தெரிந்து வைத்துக்கொள்வது நல்லது. பிறகு அவர் அர்ச்சனையை அவனுக்குத் தெரிந்த மொழியில் செய்யலாம், தெரியாத மொழிகளிற் செய்யாமலிருக்கலாம். அவனுக்கு எல்லா மொழிகளுமே தெரியுமென்பது அவருக்குங் கருத்தாயின் அவ்விஞ வுக்கே அவசியமில்லை. சிவபெருமானுக்குச் சம்ஸ்கிருத மாத்திரந் தெரியும், மற்ற மொழிகள் தெரியா என்ற அடிப்படையிலா சைவா

லயங்களில் சம்ஸ்கிருத அர்ச்சனை நடந்து வருகிறது? அதை யாதரிப் பவரும் அந்த அந்தி அடிப்படையிலா ஆதரிக்கின்றனர்? வாதப்பிரதி வாதம் நேர்ந்தால் ஒருவர் கூறுவதை அவருள்ளத்தோடு பொருந்த வைத்து மற்றவர் வாங்கவேண்டும். அப்படி வாங்கிக்கொண்டு பிறகு அதை மறுப்பதுதான் ஒழுங்கு. நவீனரிடம் அஃதில்லை. ஒருவர் கூறுவதைத் தாம் மறுப்பதற்கு ஏற்ற வகையில் திரித்துவைத்துக் கொண்டு மறுப்பதே அவர் தொழில். சம்ஸ்கிருத அர்ச்சனையே வேண்டுமென்பதற்கான காரணங்கள் பலவற்றை நான் என் முதற் புத்தகத்திலும், இந்தப் புத்தகத்திலும் மிக விளக்கமாகக் காட்டி யுள்ளேன். பிற சைவ விற்பன்னருரைகளிலுங் காணலாம். நவீனர் அவற்றைக் கண்டு குணமடைவாராக. அவர் தெரிய வேண்டுவன வற்றைத் தெரிய வேண்டும். அக்கவலை அவர்க்குச் சிறிதுமில்லை. அச்சிறுமி போல் அக் கடவுளுக்கு அது தெரியுமா? இது தெரியுமா? அது தெரியாதா? இது தெரியாதா? எனக் கேட்டுக்கொண்டு காலம் போக்குவது பரிதாபகரமான செயல். அச்சிறுமி அவ்வினவைக் கேட்டாள். ஆனால் அப்பாட்டனர் விடை சொல்லவில்லை. ஏன்? விடை சொல்லத் தெரியவில்லை யென்பதாலா? அன்று. ஒரு சிறுமி தன் தந்தையைப் பார்த்து அப்பா! நீ என்னை எப்படிப் பெற்றாய்? என்று வினவக் கூடும். அத் தந்தை விடை சொல்லமாட்டான். பிறகு அது தன் தாயிடஞ் சென்றும் அவ்வினவைக் கேட்கலாம். அவளும் விடை கொடாள். பெற்றோ ரிருவரும் மழுப்புவர், பேச்சைத் திருப்புவர் அல்லது மௌனஞ் சாதிப்பர். அவருக்கு விடை சொல்லத் தெரியா தென்பது காரணமன்று. அங்ஙனமே அப்பாட்டனரும் தம் பேர்த்தியின் பேதைமையைப் பிறகு பெயர்த்தெறியலாமெனக் கருதியே அப்போது விடை சொல்லாமலிருந்தன ரென்க.

'வடமொழியைத் தமிழ் மக்கள் அனைவரும் எந்தக் காலத்திலாவது விளங்கிக்கொண்டு அதில் வல்லவர்களாக இருந்திருக்கிறார்களா? ஒருவர் இருவர் ஒருசிறு குழுவினர் அங்ஙனம் இருந்திருக்கலாம். அதைப்பற்றிக் கேட்கவில்லை. அப்படியே இனி எக்காலத்திலாவது தமிழ்மக்கள் அனை வரும் வடமொழியில் வல்லமை பூண்டவர்களாகி விடப் போகிறார்களா? இன்னும் இலேசாகக் கேட்பதானால் எல் லோர் வாயிலும் என்றைக்காவது வடமொழி நுழையுமா? இதற்கு விடை எல்லோருக்கும் எளிதில் தெரிந்திருந்தா லும்........முன்னாள் இந்திய நீதிமன்ற நடுவர் வரதாசாரியர் ........இது குறித்துக் கூறுவதைக் கேளுங்கள்........அது (வடமொழி) பொதுமக்கள் அறிந்து கொள்ளக்கூடிய தாக எப்போதுமே இருந்ததில்லை. இனி என்றும் இருக்கப் போவதுமில்லை'. (24—4—56 தமிழ்நாடு)

என்கிறார் நவீனர். எந்தக் காலத்திலும் சம்ஸ்கிருதத்தில் தமிழரனை வரும் வல்லவராக இருந்திலராம்; சரி, அப்படி ஆந்திர ரனைவரு மிருந்திருக்கின்றனரா? மலையாளிகளனைவரு மிருந்திருக்கின்றனரா? வங்காளி களனைவரு மிருந்திருக்கின்றனரா? குஜராத்திகளனைவரு மிருந்திருக்கின்றனரா? அம்மொழியை அனை வருமென்ற கணக்கில் படித்தவர் அங்குமில்லை இங்குமில்லை எங்குமேயில்லை எந்தப் பிரதே சத்திலும் அதைப் படித்தவர் அவ்வக்காலை மக்களுட் சிலர்தான். இங்கும் அவர் அன்னரே. அங்ஙனமாக அனை வருங் கற்றில ரென்பதைக் காரணமாக வைத்துக்கொண்டு மற்றைப் பிரதேசங்களுக்குரியார் அதனைத் தமக்கயலெனக் கருதி ஒதுக்கியிருக் கின்றனரா? இல்லை. தமிழர் மாத்திரம் எப்படி யொதுக்கலாம்? அன்றியும் அதற்குச் சொந்தக்கார ரென ஒரு கூட்டத்தாரை நவீனர் சுட்டுவர். அக்கூட்டத்தாராவது அதனை அனைவருமென்ற கணக்கில் கற்று வல்லரா யிருந்திருக்கின்றனரா? அதுவுமில்லை. அதனால் அவரும் அம் மொழியை யொதுக்க வேண்டுமோ? தொல்காப்பியர் காலமுதல் இன்றுவரை இங்கு அவ்வப்போது வாழ்ந்துவந்த தமிழ ரனைவருந் தமிழையாவது கற்று வல்லரா யிருந்தனரா? ஆமெனின்,

சைவந்தமிழ் நூல்களைப் பயில்வதோடு சைவர் சம்ஸ்கிருத நூல்களைப் பயில்வது அவசியமா?

'கண்ணுடைய ரென்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்.'

என்பது போன்ற அறிவுரைகள் அக்காலத்திலேயே தோன்றற் கவசியமில்லை. தமிழை எழுதப் படிக்கப் பேசக் கற்றுக்கொண்டவன் அவ்வளவில் வள்ளுவர் கூறும் 'இலங்கு நூல்' கற்றவனாய் விடான். ஒன்றிரண்டு வயதிலிருந்தே பழகுவதாற் பேச்சுவரும். தற்குறியும் பேசுவான். அதுகொண்டு அவன் கற்றவனாகான். 'ஊமைக்கு உளறுவாயன் சண்டப்பிரசண்டன்' 'வெறுங் கழுத்தோ டிருப்பதை விட அரைப்பணத் தாலியோடிருப்பது மேல்' என்பன பழமொழி. அதுபோல் ஒருவன் தற்குறியா யிருப்பதைவிட எழுதப்படிக்கவாவது கற்றுக்கொள்வது மேல். அதற்காவனவற்றை அரசாங்கம் செய்து வருகிறது. அக் கல்வியினரும் இலங்கு நூல் கற்றார் கூட்டத்திற் சேருந் தகுதி பெறார். எந்தக் காலத்துத் தமிழரும் அனைவருமென்ற கணக்கில் இலங்கு நூற் கல்விமான்களா யிருந்திலர். பெரும்பாலா ரென்ற கணக்குங்கூடச் சொல்லமுடியாது. இன்றும் நிலை அதுதான். 'ஆர்த்தசபை நூற்றொருவ ராயிரத்தொன் றாம்புலவர் வார்த்தை பதினா யிரத்தொருவர்' என்ற பழந்தமிழ்ப் பாட்டையுங் காண்க. எழுதப் படிக்கத் தெரிந்த தமிழருள்ளேயே தொல்காப்பியம் முதலிய

இலக்கணங்களும் சங்க இலக்கியங்களும், சைவ சித்தாந்த சாத்திரங்களும் எத்தனைபேர் கற்று வல்லரா யிருக்கின்றனர்? அவற்றையுங் கற்று வல்லார் சம்ஸ்கிருதத்தை எழுதப் படிக்கவாவது கற்க மாட்டாரா? நன்றாகக் கற்பர். அதிலுள்ள அர்ச்சனை நாமங்களைத் தெரிந்து கொள்ளு மளவிற்காவது அவர் செவ்வையாகக் கற்றுக்கொள்ள முடியும். ஆனால் இப்போதுள்ள தமிழ்ப் புலவருட் பெரும்பாலார் அம்மொழியைக் கருதுவதுமில்லை. ஏன்? தமிழ் வெறி, சம்ஸ்கிருதப் பகை, சைவாபிமானமின்மை முதலியவற்றால் அவருள்ளம் பதங் குலைந்தது. அதுவே காரணம். Something of everything and everything of something என்பது கல்வியுடைமைக்கு அடையாளமென்பர் மேலைநாட்டார். தமிழ்ச் சைவருக்கு everything of something என்பதிலுள்ள something ஆக இருத்தற்குரியது சைவசமய மொன்றே; everything என்பதில் சம்ஸ்கிருதமும் அடங்கி அதிலுள்ள சைவ நூல்களைக் கற்பதும் அவசியமாகும்; Something of everything என்பதிலுள்ள everything என்பதில் சம்ஸ்கிருதமும் ஒன்றாதற்குரியது something என்பதால் அம்மொழியையும் சிறிதேனுங் கற்பதவசிய மென்க. ஆகவே தமிழ்ச் சைவ நூல்களைப் பயில்வதோடு சம்ஸ்கிருதச் சைவ நூல்களைப் பயில்வதும் சைவசமயக் கல்வி பெருகுவதற்கு ஏதுவாகு மென்பது பெறப்பட்டது.

சம்ஸ்கிருதத்தில் வல்லராயிருந்தவர்கள் ஒருவரா? இருவரா?

ஒருவர் இருவர் ஒரு சிறு குழுவினர் சம்ஸ்கிருதத்தில் வல்லரா யிருந்திருக்கலாம், அதைப் பற்றிக் கேட்கவில்லை யென்றார் நவீனர். அவ்வொருவராதியோருந் தமிழர்தான். அவர் அம்மொழியை அப்படிக் கற்றதே னென்பதை அந்நவீனர் அறிவாரா? அந்த ஏன் என்பது வாயாற் கேட்குங் கேள்வி. அதை அவர் கேட்டற் கவசியமில்லை. நான் கேட்க வேண்டும்; ஆகலின் கேட்கிறேன். ஆனால் அதைக் காதாற் கேட்குங் கடன் அவர்க்குண்டு. அப்படிக் கேட்க மறுப்பாராயின் அவர்க்கு விடை சொல்லத் தெரியா தென்பதே முடிவு. அவ்விருமொழி வல்லாரால் சம்ஸ்கிருதத்திலுள்ள பல நலன்கள் தமிழிற் கொண்டு வரப்பட்டன. அறிவுக் களஞ்சியமாகிய சைவ நூல்கள் பல தோன்றின, அவ்வொருவர் இருவர் ஒரு சிறு குழுவினர் போதுபோக்கும் பொருட்டு அம்மொழியைக் கற்றிலர், அம்மொழியில் அருமையைக்கொண்டு என்னதா னிருக்கிறதெனக் காணலாமென்ற மாசுபடிந்த மனத்தினராயுங் கற்றிலர். அவர் கற்ற அக்கல்வி சாமானியமானது மன்று. உண்மையால் நோக்கினால் அக்காலைத் தமிழ்ச் சைவ விற்பன்னருள் மிகப் பெரும் பகுதியினர் சம்ஸ்கிருதக் கல்வியிலும் வல்லராகவே விளங்கின ரென்பது தேற்றம்.

'முன்னர் வாழ்ந்த (தமிழ்) மக்கள் தென் மொழியைச் சிறப்பாகக் கற்றுத்தேர்ந்த பின்னர் வடமொழியை விருப்பமொழியாகக் கற்று அதன் சிறப்பையும் தமிழின் சிறப்பையும் அறிந்தனர். அவர்கள் பிறமொழியைக் கற்றுவிட்ட காரணத்தினுல் தன் தாய் மொழியாம் தமிழ் மொழியை வெறுக்கவும் இல்லே. இகழவும் இல்லே...........வட மொழியைப் பயின்ற குயவன் ஒருவன் தாய் மொழியாம் தமிழைத் தாழ்த்திப் பேசினுன்...........'

(3—12—55 தமிழ்நாடு)

என்கிருர் கல்லூரித் துணை விரிவுரையாளர் கே. எம். கே. அப்துல் காதர். அதனுல் ஒருவர் இருவர் ஒரு சிறு குழுவினர் என்ற குறுங் கணக்குப் பொய்யாதல் காண்க. பண்டைநாளில் தமிழை இகழுமளவிற்கு ஒரு குயவனும் சம்ஸ்கிருதத்தில் பயிற்சி பெற்றிருந்தானென்ருல் அம் மொழிப் பயிற்சி இத்தமிழகத்தில் எவ்வளவு மிக்கிருந்திருக்குமென்பதை அறிஞர் தெரிக.

**எக்காலத்திலாவது தமிழ் மக்கள் வட மொழியில் வல்லுநராக முடியுமா?**

இனி எக்காலத்திலாவது தமிழ் மக்களனைவரும் வடமொழியில் வல்லமை பூண்டவர்களாகிவிடப் போகிருர்களா எனக்கேட்டார் நவீனர். மாட்டாரென்பது அவர் கருத்து. அவர் ஜோஸியங் கூறுவதில் வல்லவர் போலும். எனக்கு ஜோஸியப் படிப்பில்லே. தமிழர்கதி எதிர்காலத்தில் எப்படியிருக்குமோ? எனக்குத் தெரியாது. ஆனுல் எல்லோர் வாயிலும் என்றைக்காவது வடமொழி நுழையுமாவென்று கேட்டாரே அவர். அதை நினைக்கும்போதுதான் சிரிப்பும் வேதனையுஞ் சேர்ந்து வருகின்றன. சம்ஸ்கிருதம் ஆங்கிலத்தை விடக் கஷ்டமா? ஹிந்தியை விடக் கஷ்டமா? தமிழர் வாயில் அவ்வாங்கிலமும் ஹிந்தியும் நுழையும்போது சம்ஸ்கிருத மாத்திரம் நுழையாமற் போமோ? தமிழர் சில தலைமுறைகளாகவே ஆங்கிலத்தில் வல்லுநரா யிருந்திருக்கின்றனர். எத்தனையோ ஆயிரக்கணக்கான தமிழரின் ஆங்கிலப்பேச்சு ஆங்கிலேயரின் பேச்சைவிட அழகாயிருப்பது முண்டு. இப்போது ஹிந்தியிலும் அவர் அத்திறமை பெற்று வருகின்றனர். அங்ஙனமாக அவர் வாயில் சம்ஸ்கிருதம் நுழையுமாவெனச் சங்கிப்பது தவறு. தாராளமாய் நுழையும். ஒருவர் இருவர் ஒருசிறு குழுவினர் என முன் நவீனர் சுட்டிய தமிழர் வாய்போன்றதே நவீனர், ஏனைத் தமிழர் ஆகியோர் வாயும். ஆகலின் அதிலும் சம்ஸ்கிருதம் இலேசில் நுழையுமென்பதையும் நவீனரறிக. இத்தேசத்தில் ஆங்கிலப் படிப்பு வயிற்றுச் சோற்றில் தொடங்கியது. ஆங்கில அரசு அம்மொழியைப் படிப்பித்துப் படித்தவனைத் தனக்குப்

பயன்படுத்திக் கொண்டே அவனுக்குச் சோறும் நீருங் காட்டிவந்தது. அவனுடலும் வளரலாயிற்று. அவ்வனுகூலம் சாமானியருக்கும் புலப் படக்கூடியது. ஆகவே ஒருவர் மேல் ஒருவர் விழுந்து அம்மொழியைக் கற்பாராயினர். உடற்குறுதி தரவே அம்மொழியால் முடியும். ஆனல் உயிர்குறுதி யெனவும் ஒன்றுண்டு. அதைத் தரவல்லது சம்ஸ்கிருதம். உயிர்க்குறுதி பெறுவதே வாழ்க்கையின் குறிக்கோள். அங்ஙனங் கொள்ளத்தக்க சூழ்நிலையை அனைவருக்கும் அரசு உண்டாக்கித் தரட்டும். அப்போது சம்ஸ்கிருதத்தையும் பல்லாயிரவர் ஒருவர்மே லொருவர் விழுந்து கற்க முற்படுவர். இன்றேல் சாமானியரால் அம் மொழியைக் கற்க முடியாதுதான். அப்போது அம் மொழி தமிழர் வாயி லென்பதென்ன, ஆந்திரர் முதலியோர் வாயிலுந்தான் இலே சில் நுழையாது. இன்னும் பண்டைத் தமிழர் தமிழ்க் கல்வியோடு மாத்திரந்தா னிருந்து வந்தனரா? அவர் வாயில் சம்ஸ்கிருதம் நுழைய மறுத்தாலும் வேறு மொழிகளாவது நுழைந்திருந்தனவா? நவீனர் சொல்வதைப் பார்த்தால் அத் தமிழர் வேறு மொழிகளைப் பயின்றறியாதவரென்றே யெண்ண வேண்டியதிருக்கிறது. அங்ஙன மாயின் அவர் கூண்டுக்கிளித் தமிழரே. வள்ளுவர் 'கற்பவை', 'இலங்கு நூல்' என்றெல்லாம் விதந்தாரே; அவை யெல்லாம் தமிழ் மொழி அல்லது தாய் மொழியில் மாத்திரமுள்ள நூல்களைத்தான் குறிக்குமோ? அல்ல என்பதை நவீனர் அறிக.

அவருக்குத் துணையாக ஒரு வரதாச்சாரியா ரகப்பட்டார். சம்ஸ்கிருதம் பொதுமக்கள் அறிந்துகொள்ளக் கூடியதாக எப்போ துமே யிருந்ததில்லை, இனி என்றும் இருக்கப்போவதுமில்லை என அவர் சொன்னாராம். அதை யொரு குறை யென வைத்துக்கொண் டால் அக்குறை சம்ஸ்கிருதத்தின் பாலதா? பொது மக்களின் பாலதா? சம்ஸ்கிருதத்தின் பாலதென அவர் சொல்ல மாட்டார். பொது மக்களின் பாலதெனின் அக்குறையை என்ருவது எப்படியாவது நிவிர்த்திசெய்ய முடியுமா? முடியாதா? முடியுமெனின் 'இனி என்றும் இருக்கப்போவதுமில்லை' யென அவ்வாச்சாரியார் சொன்னது தவறு. அரசாங்கம் ஆவன செய்க; அக்குறை நிவர்த்தியாகும். பொதுமக்கள் அறிந்து கொள்ளக்கூடிய நிலைக்கு அம்மொழி இறங்கி வருவதுந் தப்பாது. முடியாதெனின், அக் குறை யிதுவென அவர் விளக்கிக் காட்டுக. சாமானியரை யெல்லாம் விசேடராக்குவதே நியாயம். சைவருட் சாமானியரை அவரது சமயம்பற்றி விசேட புருஷராக்க வேண்டுமாயின் அவருக்குச் சம்ஸ்கிருதச் சைவநூற் கல்வியைப் புகட்டுவதும் அவசியமாகும்.

# 14

'தமிழ் அரசியல் முதல் ஆலயம் வரை முழங்கத்தான் போகிறது' என நவீனர் சொன்னது முன் காட்டப்பட்டது. தமிழ் ஆட்சி

தமிழாட்சியும் தமிழர்ச்சனையும்

மொழியாகும் அப்போது தமிழர்ச்சனையும் சைவாலயங்களிற் புகுத்தப்படும் என்ற நம்பிக்கை அவருக்குண்டு. தமிழ் ஆட்சி மொழியாவது வரவேற்புக் குரியதே. ஆனால் தமிழாட்சி சைவசமய விவகாரங்களில் தலையிட முனையுமாயின் அது வரம்பு மீறிய செயலென்க. என்னை? தமிழ் ஒருமொழி. மொழியாட்சி பல சமயங்களைச் சார்ந்தவர் கூடிச் செய்வது. கரிச் சட்டை, செஞ் சட்டை, கதர்ச் சட்டை முதலியவற்றுக்கும் அதிற் பங்குண்டு. தமிழர்ச்சனையைப் புகுத்தக் கரிச்சட்டையுங் கைதூக்கும். குலாம் காதர் ராவுத்தருக்கும் கோகுலாஷ்டமிக்கும் என்ன சம்பந்தம், அன்ன சம்பந்தமே அச்சட்டைக்கும் அர்ச்சனைக்குமாம். அச்சட்டையும் கைதூக்கி யியற்றப்பட்ட சட்டத்துக்கு அவ்வர்ச்சனையைப் புகுத்த யோக்கியதை யுண்டா? 'தமிழ் அருச்சனை இயக்கத்தை ஆதரித்துப் பொதுக்கூட்டங்கள் கூட்டித் தீர்மானங்கள் நிறைவேற்றி........அதிகாரிகளுக்குந் தெரியப்படுத்த வேண்டும்' என நவீனர் கூறியதும் முன் காட்டப்பட்டது. அவ்வதிகாரிகளாவார் இவ் வரசாங்கத்ததிகாரிகள். அவருமே பல மொழியினரும் வெவ்வேறு சமயத்தினருமா யிருக்கின்றனர். பொதுக் கூட்டமாவது பொதுமக்கள் கூடுங் கூட்டம். 'பொது மக்கட் காகாதே,' 'முனிதக்கா ராய பொதுமக்கள் பொல்லா வொழுக்கம்' என்பன பழமொழி நானூறு. அத் தொடர்கட்கு 'கல்வியறிவில்லாதவர்களுக்கு விளங்காது,' 'வெறுக்கத் தக்கவர்களாகிய சிறப்பில்லாத மக்கள் தீய ஒழுக்கத்தைப் பூண்டிருத்தல்' என உரை கண்டார் புலவர் ம. இராசமாணிக்கம பிள்ளை. தமிழர்ச்சனையை அப்பொதுமக்கள் கைதூக்கி ஆதரிக்க வேண்டும், அதனால் நிறைவேறிய தீர்மானத்தை அக்கலவை யதிகாரிகள் ஏற்று உத்தரவு பிறப்பிக்க வேண்டும், சைவப் புலமை மிக்கவரும், முது மக்களும் அவ்வுத்தரவுக் கடங்க வேண்டும் என்பது நவீனரின் ஆசை. அவ்வாசை அவருக்கு ஆத்ம சாந்தியை யெய்துவியாது. அக்கிரமம் அதிகாரியின் உத்திரவாக மாறியதாலேயே கிரமமாய் விடுமா?

'வைணவம் என்றும் தமிழுக்கு முதலிடம் கொடுக்கிறது; இன்றும் அது இருக்கிறது. இவ்விஷயத்தில் சைவம் ஒருபடி பின் தங்கியதுதான் எனக் கொள்ள வேண்டும். இந்த நிலைமை மாறும் நிலை ஏற்படவேண்டும். சுந்தரர்

காலத்தில் சைவக் கோவில்களில் தமிழுக்கு முதலிடமிருந்தது. ஆனால் நாளடைவில் இது ஏனோ மாறிவிட்டது.'

(14—1—54 தினமணி)

என்கிறார் நவீனர்.

வைணவத்தில் முதலிடம் தமிழுக்கா வடமொழிக்கா?

வைணவம் தமிழுக்கு முதலிடங் கொடுக்கிற தென்பது உண்மையாயின் அச்சமயம் மற்றைப் பிரதேச மொழிகள் விஷயத்திலும் அப்படித்தா னென்பது போதரும். ஆனால் அப்படியில்லை. அது போலவே தமிழிலுமில்லை யென்க, அஃதிருக்கட்டும். தமிழ், வைணவம் ஆகிய இரண்டனுள் எதற்கு முதலிடம்? எதற்குக் கடையிடம்? அவ்வினவுக்கு வைணவங் கூறும் விடையை நவீனர் காட்டுக. எக் காரணத்தாலும் வைணவம் தனக்குக் கடையிடத்தை ஏற்றுக்கொள்ளவே இசையாது. தானே முதல், தமிழ் தன்னை யனுசரித்ததுதான் என்றே அது கொள்ளும். தானே தேச முழுக்கப் பாஷைகளனைத்திலும் பரவி யிலங்க வேண்டுமென்பது அதற்கு லக்ஷியம். அது தமிழுக்கு முதலிடங் கொடுக்கிறதென நவீனர் எதைக்கொண்டு சொல்கிறார்? பெருமாள் வீதிவலம் வருவார். அவருக்குமுன் தமிழ் நாலாயிரமும் பின் சம்ஸ்கிருத வேதமும் ஓதப்பட்டு வருமென்பது கேள்வி. அதைக் கண்டு நவீனர் அப்படிச் சொல்லுகிறாரென நான் நினைக்கிறேன். அங்ஙனமாயின் அவர் சொல்வது தவறு. எப்படி? வேதம் பெருமாள் வாக்கு; பிரபந்தம் அவர் தாசன்மாராகிய ஆழ்வார் வாக்கு; அச்சமயக் கொள்கை அது. பெருமாள் தம் வாக்கைவிடத் தம் தாசன்மாரின் வாக்கை விரும்புகிறார். அதற்கடையாளந்தான் தமக்குப் பின் தம் வாக்கையும், முன் தாசர் வாக்கையும் ஓதிவரும்படி அவர் பணித்தது. அவ்வளவிற் கொள்வது குற்றமாகாது. உண்மை யப்படியிருக்க மொழிபற்றிய முதலிடங் கடையிடமென்ற கொள்கையைச் சாதிப்பதற்கு அவ்வரிசையை எடுத்துக்காட்டல் நியாய விரோதம். இனி வேதம் சிவவாக்கு, திருமுறைகள் அடியார் வாக்கு என்பது சைவம். அங்கும் சிவபிரான் தம் வாக்கைவிடத் தம் அடியார் வாக்கை விரும்புவார். அதற்கடையாளமாக வீதியுலாவில் அவருக்குமுன் திருவெம்பாவையும், பின் வேதமும் ஓதப்பட்டு வருவதைக் கொள்ளலாம். அவ்வுலாவில் சுவாமிக்குப் பின் வேத பாராயணமும், அதற்குப் பின் திருமுறைப் பாராயணமும் நடந்துவருவது முண்டு. சுவாமியை வேதம் அனுசரிக்கிறது, வேதத்தைத் திருமுறை அனுசரிக்கிறது என்பதைக் காட்டுவது அவ்வரிசை. அதிலும் மொழிபற்றிய முதலிடங் கடையிடங்களென்ற பேச்சுக்கிடமில்லை. நவீனரோ சுவாமியையே தமிழுக்குப் பின் தள்ளப் பார்ப்பார். அவர் சம்ஸ்கிருதத்தைத் தமிழுக்குமுன் இருத்தப் பார்ப்பரோ? என்னே அவரது தமிழ் வெறி

யின் லிங்கம்! அவ் வேதபாராயணத்துக்கும் திருமுறைப் பாராயணத் துக்கும் இடையில் வேறெந்தப் பஜனை கோஷ்டியும் இடம் பெற்றுச் செல்ல அனுமதி கிடையாது. சமீப காலத்திலிருந்து ஒன்றிரண்டு சைவாலயங்களில் உத்ஸவத்தின்போது சுவாமி வீதியுலா வருகையில் அவ்வரம்பு மீறப்படுகிறது, வேறு கோஷ்டிகள் நடுவிற் புகுந்து ஏதேதோ பாடிக்கொண்டு செல்கின்றன. அது திருமுறையை அவ மதிப்பதாகும், நவீனர் கண்ணில் அஃதுறுத்த வில்லை. ஏன்? அக் கோஷ்டிப் பாடல்களுந் தமிழ்தானே. அவ்வளவில் அவர் மகிழ்கிறார். திருவாதிரைத் திருவிழா நாட்களில் திருவாசகந் தவிர மற்றைத் திருமுறைகள் ஓதாமை சைவருள் ஒரு வழக்கமாயிருந்து வருகிறது. அத் திருமுறைகள் தாழ்ந்தனவா? அவற்றை அந்நாட்களில் ஓதுவது பாவமா? ஆமெனின், அது திருமுறை நிந்தை, அவ்வோதுவ தோதாமைகளுக்கு உண்மைக் காரண மிதுவெனக்கண்டு, பன்னிரு திரு முறைகளும் சமப்பிரமாணமே யென்ற சாத்திர வரம்பைக் காத்துக் கொள்வதன்றோ அறிவுடைமை? அங்ஙனமே முதலிடங் கடையிடமென்ற விபரீதத்தை விடுவதூஉமாம்.

> 'தமிழில் அதிகப் பற்றுள்ளவர் வைணவ மதத்தினர். ஆனு லும் அது சம்ஸ்கிருதத்தை அஸ்திவாரமாகக் கொண்டுதான் ஏற்பட்டிருக்கிறது.' (14—1—54 தினமணி)

என்கிறார் ஐயங்காரொருவர். சம்ஸ்கிருதத்தை அஸ்திவாரமாகக் கொண்டதெனச் சொல்லப்பட்ட வைணவம் சம்ஸ்கிருதத்துக்குக் கடையிடங் கொடுக்குமா? கொடுத்தால் மாதாவை மதிக்கவில்லை யென்பதாகாதா? மொழியைத் தாயெனக் கும்பிடும் நவீனர் அதனைச் சிந்திக்க, இன்னொன்று. வைணவம் புறச்சமயங்க ளாறனுள் ஒன்று, புறமாவது வேதப்புறமாகிய நூல்களைப் பிரமாணமெனக் கோடல், அச்சமயம் வேதத்தைச் சேற்றில் நட்ட கம்பமெனச் கூறி நிந்திக் கும். அது அந்நூலை நாலாயிரத்துக்குப் பின்தள்ளலாம். அச் செயலை வைதிக சைவமுங் காப்பியடிக்க வேண்டுமா?

இனி வடகலை, தென்கலை விருத்தாந்தத்தைச் சிறிது பார்க் கலாம்.

வடகலை தென்கலை வரலாறு

> 'பொதுவாக சமயத்துறையில் தமிழுக்கு முதலிடம் தர வேண்டுமென்ற கிளர்ச்சி சில நூற்றாண்டுகளுக்கு முன்பே தோற்றுவிக்கப்பட்டது. குறிப்பாக, வைணவ சமயத்தில்தான் இந்தக் கிளர்ச்சி ஆரம்பமாயிற்று. இதன் விளைவாக, வைணவர்களிடையே வட கலையாரென்றும், தென் கலையாரென்றும் இரண்டு பிரிவுகள் தோன்றி நிலைத்து விட்டன.' (ஒலி 11, குரல் 1, தமிழன்குரல்)

என்கிறார் நவீனர்.

'பொதுவாக' என்பதன் கருத்து வேறு சமயங்களுஞ் சேர்ந்து அக் கிளர்ச்சி செய்தன என்பதா? அவை யாவை? வேருயின் அக் கருத் தென்னே? சில நூற்ருண்டுகளுக்கு முன்பே என்றதால் அக் காலம் குறைந்தது 200 ஆண்டுகளுக்கு முன்புள்ளதாகும். 'தோற்றுவிக்கப் பட்டது' என்பது செயப்பாட்டு வினைமுற்று. வினை முதலாவார் இவரென நவீனர் காட்ட மாட்டாமல் தவிக்கிருர். அவ் வாக்கியம் அம் முற்ருல் முடிக்கப்பட்டதற்கு அதுவே கருத்து. அக் காலத்தில் அக் கிளர்ச்சியை வினைமுதலாயிருந்து தோற்றுவித்த மனிதர் யார்? அவர் இவர், இன்னதரத்தினர் என்பது தெரிய வேண்டும், இன்றேல், அக்கிளர்ச்சியைப் பொறுப்புள்ளவர் ஏற்க மாட்டார். 200 ஆண்டுகளுக்கு மேலாகியும் அக் கிளர்ச்சிக்கு நாளிது வரை பலிதமடையவில்லை, அதனுல் அம் மனிதர் ஓசத்தென்பதே சித்தம். பிறகு 'குறிப்பாக' என்று தொடங்கி வைணவ சமயத்தில் தான் இந்தக் கிளர்ச்சி ஆரம்பமாயிற்று என்ருரந் நவீனர். ஆரம்பத் தில் வைணவம் முழுக்க வடகலையாயிருந்து வைணவர் சிலர் தென் கலையாரென இடையிற் பிரிந்தனரா? தென் கலையாயிருந்து அவருட் சிலர் வட கலையாரென இடையிற் பிரிந்தனரா? எங்ஙனமாயினும், ஒன்றேயாயிருந்த அச்சமயம் இரண்டு பிரிவுகளாகப் பிளந்தது. சமயத் துறையில் தமிழ் முதலிடம்பெற முயன்றதன் விளைவு அது. அப் பிரிவுகள் நிலைத்தும் விட்டன. அது நல்லதா? சைவத்துறை யிலும் அத்தமிழ் முதலிடம் பெறப் புகுந்து அன்னதொரு பிளவை யுண்டாக்க வேண்டுமா? கேட்டை யெடுத்து நலம்போற் காட்டிச் சைவரை வஞ்சிப்பது தமிழர் பண்புபோலும். இழவுக்கு வந்தவ ரெல்லாந் தாலியறுக்க மாட்டார். பிளவை கண்டாற் படுவது சைவ சமூகமே.

ஆனுல் தென் கலையின்...........கோயில்களில் கூட அர்ச்சனை முறை மட்டும் இன்றளவும் வடமொழியில்தான் நடைபெறுகின்றது. வடகலையினர்........கோயில்களைப்பற்றிச் சொல்லவேண்டியதேயில்லை' (ஷ) என்கிருர் நவீனர். அங்ஙனமாயின் மொழிக்கிளர்ச்சிக்கு அப் பாற்பட்டதே அர்ச்சனை விஷயம் என்பதை அவர் அறியாமற் போனதேன்?

> 'அருச்சகர்கள்........செய்யும் பூசை, அருச்சனை முதலியவை களைத் தமிழிலேயே செய்ய வேண்டுமென்ருே, தமிழிலும் செய்ய வேண்டுமென்ருே சொல்வது சாத்திரங்களுடன் பொருந்தாது.' (25—5—55 தமிழ் நாடு)

என்கிருர் அகோபில மடத்துத் தலைவர். அவர் தென் கலையார். நவீனர் சிந்தனு சக்தியை இழந்துவிட்டனரோ? பாவம். வாதமே அர்ச்சனையொன்றே பற்றியதுதான், அவ்வகையில் தென்கலையாரும் நவீனரைத் தெருவில் விட்டனர்.

சுந்தரர் காலத்தில் சைவக்கோயில்களில் தமிழுக்கு முதலிடமிருந்ததாம்; நவினர் சொன்னர். ஆதாரமின்றி வாயில் வந்தன பேசுவதில் அவரை அதிகரிக்க யாராலுமுடியாது.

சுந்தரர் காலம் தமிழர்ச்சனை — அருள் நெறியின் காலம்.

'அது (அருள் நெறி) இடைக்காலத்தில் வந்தது அல்ல. அது காலம் கடந்தது'

(28—2—56 தமிழ் நாடு)

என்கிறாரவர். அவர்தானே

மனிதன் என்று அறிவு பெற்றானே அன்றே அருள்நெறியின் தொடக்ககாலம்'

(28—2—56 தமிழ் நாடு)

எனக் கூறி அதற்கொரு தொடக்க காலமுங் காட்டுகிறார். மனிதன் அறிவு பெற்றதுங் காலங்கடந்ததாதல் வேண்டும் அல்லது அருள் நெறி காலங்கடந்ததென்பது பொய்யாதல் வேண்டும் என்றே அவ்வாக்கியங்களால் ஊகிக்கப்படும்.

'தொல்காப்பியர் காலத்தில் இருந்து நிலவி வந்தது அருள் நெறி'

(28—2—56 தமிழ் நாடு)

என்கிறாரவர். அங்ஙனமேயாகுக

'........அருள் நெறிக்குத் திட்டம் போட்டார்கள். இவ்வாறு கருத்தை முகிழ்த்து விட்டுச் சென்றவர்கள் ஏராளம். அவர்கள் யார், எவர் என்பது தெரியவில்லை'

(28—2—56 தமிழ் நாடு)

என்கிறாரவர். அத்திட்டம் போட்ட ஏராளமான பேருள் ஒருவர் பெயர் கூட இப்போது தெரியவில்லை யென்றால் அக்காலத்தில் ஒருவரும் அத்திட்டம் போடவில்லை, அருள் நெறியே கிடையாது என்பதுதான் உண்மை. அல்லது அத்திட்டம் போட்டவரை யனுசரித்த பிற்காலத்தவரனைவரும் மறதி மன்னராய், ஆசாரிய விசுவாச மில்லாதவராய்ப் போயினரெனவுங் கொள்ளலாம்.

'அருள் நெறிக்கு வித்திட்டவர்கள் சமயமாகவே மாறி விட்டார்கள்'

(28—2—56 தமிழ் நாடு)

என்கிறாரவர். சமயமாக மாறிவிட்டார்களெனபதற்கு அருள்நெறியைச் சமயமாக்கிவிட்டார்க ளென்பது கருத்துப்போலும், வித்திட்டவரே அப்படி ஆக்கினுல் அவர் பின் செல்வோர் அதற்கழுவானேன்? அருள் நெறி சமயமன்றென இப்போது பிரசங்கிப்பவர் குருவுக்கு மிஞ்சிய சீடராய்த்தா னிருப்பர்.

'எப்போதோ தோன்றிய அருள்நெறிக் கருத்து சிந்துநதி நாகரிக காலத்தில் உருவ வழிபாடாக வளர்ந்தது. எனவே சிந்துவெளி நாகரிகத்துக்கு ஆயிரக்கணக்கான ஆண்டு களுக்குமுன்பே அருள்நெறிக் கருத்துத் தோன்றி யிருக்க வேண்டும்' (28—2—56 தமிழ் நாடு)

என்கிருரவர்.

எப்போதோ எங்கோ யாராலோ திட்டமிடப்பட்ட அருள் நெறி யும் ஏதோ வொன்ருகத்தா னிருக்கமுடியும். அதற்குப் பொருளுங் குறிக்கோளுஞ் சூனியந்தான். நேற்றுத் தோன்றியது அருள் நெறித் திருக்கூட்டம். அருள் நெறியென்ற பெயருக்குப் பழமை கற்பிக்கப் புகுந்தார் நவீனர். யானுமறியேன் அவளும் பொய் சொல்லாள் என்ற பழமொழிக் கிலக்காயின அவராசையும் முயற்சியும். அங்ஙன மாய தொரு வெற்றுரையே சுந்தரர் காலத்தைப் பற்றி அவர் கூறியதூஉ மென்க.

'சாதாரண மக்கள் தெய்வத் திருவுருவங்களோடு ஆன் மீகத் தொடர்பு கொள்வதற்காக அர்ச்சனைகள் ஏற்பட்டன'

என அவர் கூறியது முன் காட்டப்பட்டது. சாதாரண மக்களாவர் யார்? பொது மக்களா? பொது மக்களென்பதற்குப் புலவர் ம. இராச மாணிக்கம் பிள்ளை கூறிய பொருள் முன் காட்டப்பட்டது. வேறு பொருளுளதாயின் நவீனர் காட்டுக. அவ்வாக்கியங் கூறிய நவீனர் சாதாரண மனிதரா? அசாதாரண மனிதரா? அர்ச்சனை சாதாரண மக்களுக்காக ஏற்பட்டதே யாமாயின் அசாதாரண மக்கள் பொருட்டு வேண்டாமா? அல்லது அர்ச்சனை யார் பொருட்டுச் செய்யப்பட்டாலும் அவர் சாதாரண மனிதராய் விடுவரா? அரச்சனை செய்யப்போனதன் விளைவு. அதுதானென நவீனர் சொல்வாராயின் அவர் அர்ச்சனையையே அவமதிக்கிரு ரென்பது சித்தம். அர்ச்சனை சாதாரண மக்களுக்காக ஏற்பட்டதென்ருரே அவர். அவ்வேற்பாடு எப் புத்தகத்திற் காணப்படுகிறது? என்று நான் அவரை வினவு கிறேன்.

"வடமொழி தவிர வேறெம் மொழிகளிலும் தெய்வவழிபாடு செய்யக்கூடாது என்ற கொள்கை எச்சாத்திரத்தில் காணப் படுகிறது என்று வினவுகிரேம்" (25—5—55 தமிழ் நாடு)

என்கிருரவர்.

அவர் ஒரு சைவரென நான் கொள்கிறேன். நானுஞ் சைவ சமயிதான். அச்சமயத்துக்குப் பாரம்பரியமான பிரமாண சாத்திரம்

வடமொழி தவிர வேறெம் மொழியிலும் வழிபாடு செய்யக் கூடாது: சாத்திரம் அப்படிச் சொல்கிறதா?

ஏதேனுமிருக்க வேண்டும். அது அவரையும் என்னையும் சேரப் பிணித்துச் சோதரராக்கிச் சைவாலயங்களிற் சேவைசெய்ய உரிமைதரும். அவ்வாலயங்களிற் கிரியையாதிகளும் அத்தகு பிரமாண சாத்திரத்திற் கூறப்பட்ட விதியின்றே நடைபெறும். அச் சாத்திரம் எது? அதன் பெயரை அவர் சொல்க. அந் நூலில் அவர் வினவுக்கு விடையிருக்கிறதாவெனப் பிறகு ஆராயலாம். ஆயினும் சம்ஸ்கிருத அர்ச்சனையே சைவ சாத்திரங்களின் அங்கீகாரம். அவ்வுண்மை பலபடியாலுங் காட்டப்பட்டது. அர்ச்சனை செய்க என்ற அபூர்வ விதியும், அதைச் சம்ஸ்கிருதத்திற் செய்க என்ற நியமவிதியும் அதனுற் போந்தன. பிற மொழியர்ச்சனை எந்தச் சைவாலயத்திலும் எந்தக் காலத்திலும் நடந்ததில்லை. எந்தப் பிரமாண நூலிலும் அதற்கனுமதி கிடையாது. அதுவும் விளக்கப்பட்டது. பிறமொழிகளில் அர்ச்சனை செய்யற்க என்ற பரிசங்கியா விதி அப்பிரஸ்தாப சூனியத்தாற் போதரும், அவர் வினவுக்கு இவ்விடை போதாதா? இன்னென்றுஞ் சொல்கிறேன்.

"நன்றென்பன சிலவே தீதென்பன சிலவே
யொன்றினும் படாதன சிலவே"

என்றது திருமுறை. நன்றென்பன விதி, தீதென்பன விலக்கு. விதியைச் செய்தால் சுகமும், விட்டால் துக்கமும், விலக்கைச் செய்தால் துக்கமும், விட்டால் சுகமும் வருவது நிச்சயம். ஆகலின் செய்வனவற்றையுந் தவிர்வனவற்றையுமே சாத்திரங் கூறும். ஒன்றினும் படாதனவும் பல, அவையெல்லாம் விருதா. தும்முவதும் இருமுவதும் துரும்பு கிள்ளுவதும் பஃகடிப்பதும் போல்வன புண்ணியமா? பாவமா? சாத்திரம் அவற்றை விதிக்கவோ விலக்கவோ செய்யாது. வேறெம் மொழியிலும் அர்ச்சனை செய்யக்கூடாது என்ற கொள்கை எச்சாத்திரத்திலுங் காணப்படவில்லை யென்பது உண்மை யாயினும் அவ்வர்ச்சனை ஒன்றினும் படாதனவற்றினு ளடங்கித் துரும்பு கிள்ளுதல் போன்றதொரு விருதா வினை யாகலின் அதனை எச்சாத்திரமும் தான் கூறும் விலக்குப் பகுதியிற் சேர்த்தில தெனக் கொடலே அறியுமுறையா மென்க. மேலும் அவ்வர்ச்சனை சாத்திரோக்த மாயின் அதற்கான விதியை எச்சாத்திரத்தி லிருந்தாவது அவர் எடுத்துக் காட்டிவிடலாம். வாதமே முடிந்துவிடும்.

'தமிழைத் தாய்மொழியாக் கொண்ட தமிழர்கள், அதைத் தங்கை மொழியாகவோ, வேறு உறவின்முறை மொழியாகவோ எக்காலத்தும் நினைக்க முடியாது. தாய்மொழிக்குக் கொடுக்கும் உயர்வுக்கும் வரம்பு உண்டோ?'

(25—5—55 தமிழ் நாடு)

என்கிறாவர்.

மொழி தன்னளவில் உயர்வுடையதாயின், அதைத் தாயென்ரு லென்ன? தமக்கை யென்ரு லென்ன? பாட்டி யென்ரு லென்ன? எவ்வுறவு முறையும் அவ்வுயர்வைக் கெடாது.

**தாய் மொழியும் தங்கை மொழியும்**

மேலும் தாய், தமக்கை, பாட்டி முதலிய உறவின் முறையாருள் சிலர்க்கு வரம்புள் நின்றும், சிலர்க்கு வரம்பு கடந்தும் உயர்வு கொடுப்ப தெப்படி? நவீனர் அதை ஒரு திருட்டாந்தத்தால் விளக்குக. அவர் தமிழைத் தாயெனக் கொண்டதாலேயே அதற்கு உயர்வு கொடுக்கிருரெனத் தெரிகிறது. தாய்க்கு உயர்வு கொடுக்க என்பது விதிதான். ஆனால் அதற்கும் வரம்புண்டு. உமாதேவியார் தக்க யாகத்தில் தம் பெற்ரேரைச் சபித்தார். எச்சதத்தன் செய்த கொடுமையை அவன் மனைவி செய்திருந்தால் மகனாாகிய சண்டேசுரர் அவளையுந் துண்டாடி யிருப்பர். கோட்புலியார் தம் தாயையுங் கொன்றது, [1]'தந்தை யார்' என்று தொடங்கும் அவர் சரிதச் செய்யுளிற் பிரசித்தம். [2]'எத்தாயர் எத்தந்தை............ஏவர் நல்லார்? செத்தால் வந்து உதவுவார் ஒருத்தரில்லை.' ஒருவன் இருக்கும் போதும், செத்த பிறகும் அவனுயிரோடு ஒட்டியிருந்து, அதற்கு உதவிக் கொண்டிருப்பது சைவசமய மொன்றே. அவ்வுண்மையை யுணர்ந்த சைவாபிமானி தன்னைப் பெற்ற தந்தை தாயர் அச்சமயத்துக்குத் துரோகிகளாயின் அவருக்கு வரம்பு கடந்து உயர்வு கொடுக்கவே மாட்டான். அவரைத் தனக்குத் துரோகிகளெனவே அவன் எண்ணி யொழுகுவான் அப்படியே தமிழ் தாயுறவி லிருந்தாலும் சைவத் துரோகமானகொள்கைகளைத் தாங்கித் திரியுமாயின் அந்தஅளவில் அதற்கு உயர்வு கொடுக்க மாட்டான் சைவன். 'திக் வித்யாம், அசிவாச்ரயாம்' என்பது சிவாஞ்ஞை. சிவபெருமானை ஆசிரயியாத வித்தையை (நூலை)த் தீக்கு இரையாக்கு என்பது அதற்கருத்தம். அது எந்தமொழி நூலாயினுமாக. சைவனால் அவ் வாஞ்ஞையை மீற முடியாது. மீறுவானுயின் அவனை அந்த அப்பன் சும்மா விடான்.

---

[1] *தந்தையார் தாயார்மற் றுடன்பிறந்தார் தாரங்கள்*
*பந்தமார் சுற்றத்தார் பதியடியார் மதியணியு*
*மெந்தையார் திருப்படிமற் றுண்ணவிசைந் தார்களையுஞ்*
*சிந்தவாள் கொடுதுணித்தார் தீயவினைப் பவந்துணிப்பார்*
(கோட்புலி நாயனுர் புராணம் 9)

[2] *எத்தாயர் எத்தந்தை எச்சுற் றத்தார் எம்மாடு சும்மாடாம் ஏவர் நல்லார்*
*செத்தால்வந் துதவுவார் ஒருவ ரில்லை சிறுவிறகால் தீமூட்டிச்*
*செல்லா நிற்பர்,*
*சித்தாய வேடத்தாய் நீடு பொன்னித் திருவானைக் காவுடைய*
*செல்வா என்றன்*
*அத்தாவுன் பொற்பாதம் அடையப் பெற்றால் அல்லகண்டங்*
*கொண்டடியேன் என் செய்கேனே*
(அப்பரடிகள் 6-ம் திருமுறை)

'ராவணனைத் தமிழனைக்கொண்டு ராவண காவியம் படிப்பது தவறு என்பதை உணர வேண்டும்'

(8—10—54 தினமணி)

என நவீனருங் கூறி அக்காவியத் தமிழுக்கு உயர்வு கொடுக்க மறுக்கிறார். தமிழர்ச்சனையும் அக்காவியம் போன்றதே. அவர் தாய் மொழிக்குக் கொடுக்கும் உயர்வுக்கும் வரம்புண்டோ வெனக் கேட்பது சைவசமயத்துக்குள்ள உயர்தனிச் செம்மையைக் கீழ்ப்படுத்தவே யாம். அவருக்குத் தமிழ் சொந்த மொழி யாவது போல் சைவம் சொந்த சமயமாகுமென நான் கருதுகிறேன். அங்ஙனமாயின் அவர் அச்சமயத்தை எவ்வுறவுச் சமயமாகக் கூறி மகிழ்கிறார்? அம்மகிழ்ச்சி தமக்கில்லை யென்பாராயின் அவர் சைவஞ் சாராத் தமிழ ரென்பது தேற்றம்.

'மக்கள் சமுதாயத்திற்குப் பயன் படாத சமயம் பயனற்றுப் போய் விடும்' (24—10—55 தமிழ்நாடு) 'மதம் மக்களை மதியாதிருந்தால் மக்கள் மதத்தைப் புறக்கணிப்பார்கள்.' 'மதம் மக்களுக்குப் பயன்படவேண்டும். பயன் படாவிடில் புதைக்கப்படும்'

(16—6—55 தமிழ் நாடு)

'சமயம் மக்களைப் புறக்கணித்து விட்டதாலேயே இக்காலத்தில் மக்கள் சமயத்தைப் புறக்கணிக்கின்றனர்'

(11—7—55 தமிழ் நாடு)

என்கிறார் நவீனர்.

மதம் மக்களை மதிக்க வேண்டுமாமே. அது அவர் பாதங்களிற் மலர் பறித்திட்டு வணங்க வேண்டும் போலும். அப்படி எந்த மதமும் மக்களை மதியாது. மதிக்கும் மதம் மதமாகாது. மக்கள்தான் மதத்தை மதிக்க வேண்டும். நவீனரின் உபதேசங்களெல்லாந் தலைகீழாகவே யிருக்கும். மதங்கள் மக்களுக்குப் பயன்படவே உளவாயின. பயன் பட்டுக்கொண்டு மிருக்கின்றன. மேலும் பயன்படவில்லை யென்ற காரணத்தாற் புதையுண்டு வருவதொருசமயம் நவீனருடைய தன்றாயின் அச்சமயத்துக்காக அவர் துக்கிக்க வேண்டாம். மதம், சமயம் என அவர் பொதுப்படச் சொன்னார் அதிற் பசையில்லை. ஆயினும்அவர் கருதியது சைவமேயாம். அதை

மதம் மக்களை மதிக்க வேண்டுமா? மக்கள் மதத்தை மதிக்க வேண்டுமா?

'நமது சமயம் மக்களைப் புறக்கணித்ததினால்தான், பின்னர் மக்கள் நமது சமயத்தைப் புறக்கணித்தார்கள்'

(27—6—55 தமிழ் நாடு)

என அவர் கூறுவதா லறிக. அகலிகை கற்பழிக்கப்பட்டாள். அதனுல் அவளுக்குச் சாபங் கிடைத்தது. அவள் கல்லானுள். அத்தீவினை அவளால் நுகரப்பட்டாயிற்று. அவள் முன்போலானதும் அவளைப் பர்த்தாவாகிய கௌதமர் ஏற்றுக்கொண்டார். அப்படியே சைவத்தை விட்டு விலகினுநும் விலகுவாருமுளர். ஆயினுமென்? 'சுற்றிப்போயும் சுங்கத்துறை சேர்ந்தான்' என்பது பழமொழி. ஆகலின் எப்படியும் எல்லா ஆன்மாக்களும் சைவத்திலே வந்து சேரும். அவற்றின் பிறவிக்கடலுக்கு முத்திக்கரை அச் சமயத்திற்கு றுண்டு. அச்சமயமும் அவற்றை ஏற்று உய்விக்கும். அது சத்தியம். ஆகலின் அச் சமயம் யாரையும் புறக்கணிக்கவில்லை யென்பதை நவீனர் அறிய வேண்டும். அகலிகை கற்பழிந்ததற்குக் கௌதமரா காரணம்? புத்திசாலி ஆமெனச் சொல்லமாட்டான். அப்படியே சைவத்தைப் புறக்கணித்துவிட்டுப் போயினுநும் போவாருமே தம் போக்குக்குக் காரணம் அச்சமயமே யெனச் சொல்க. அல்லது நவீனரே சொல்க. அச்சொல் செல்லாது. கற்பழிந்த ஒருத்தி அவ்வழிவுக்குத் தன் கணவனே காரணமெனக் கூறி அவன்மேற் குற்றஞ் சுமத்துவதும், அதை மற்றவர் ஆதரிப்பதும் போன்றதே அச்சொல். பாற்கடலுட் பிறந்த மீன் பாலை யுண்ணுமல் வேறு பலவற்றை யுண்ணும். அந்தப் பால் புறக்கணித்ததாலா அஃதப்படி யுண்கிறது? இல்லை. சைவத்துள்ளும் அம் மீனனையாருளர். அவர் அச் சமயத்தை விட்டுப் போவார்– அதற்கு அவர் பிறவி, அல்லது தவக்குறைவே காரணமாகும். அவரைத் தாங்கிப் பிடிக்கிருர் நவீனர். முன்னர்ச் சைவந்தான் மக்களைப் புறக்கணித்ததாம். பின்னர்த்தான் மக்கள் சைவத்தைப் புறக்கணித்தனராம். அம்முற் பிற் பாடுகள் அவர்க்குத் தெரிந்த தெப்படியோ? அச் சமயத்தை அங்ஙன் பழிப்பது அடாத செயல். கடவுளை மக்கள் புறக்கணித்தால் குற்றம் கடவுள் மேலது, குருவைச் சீடன் புறக்கணித்தால் குற்றம் குருவின் மேலது, தந்தை தாயரை மகன் புறக்கணித்தால் குற்றம் தந்தைதாயரின் மேலது என்று வாதிக்க அவர் யாண்டுத்தான் கற்றனரோ? சைவம் மக்களைப் புறக்கணித்ததாற்ருன் அன்று தமிழகத்தைச் சமணிருளும், பௌத்தாந்தகாரமும் வந்து மூடினவோ? ஆமெனின், அதற்காதார மென்னை? அன்றும் அச் சமயம் சிவபாத விருதயர், மங்கையர்க்கரசியார், குலச்சிறையார். என் போரைப் புறக்கணிக்கவில்லை. எம் நிலையோ தாழ்ந்தது. அப்படியிருந்தும் அது எம்மை இன்றும் புறக்கணித்திலது.

'சேரிக்கும் கோவிலுக்கும் தூரம் கூடாது'

(2—6—55 தமிழ் நாடு)

என்கிருர் நவீனர்.

சைவாலயங்களில் மிருந்த பொருட் செலவில் பல விழாக்கள் நடைபெறுகின்றன. அப்போது சுவாமி அம்பா முதலியோர் வீதியுலா வருவார். சேரி வாழ் மக்களுக்குச் சேவை சாதிப்பதே அவ்வுலா. ஆகலின் அச்சமயம் அம் மக்களையும் புறக்கணிப்பதில்லை யென்க. அங்ஙனமாக அது மக்களைப் புறக்கணித்த தென்பது பெரும் பிழை. நவீனர்,

'மக்கள் சமுதாயத்துக்குப் பயன்படும்படியாகச் சமய நெறியை அமைக்க வேண்டும்.' **(24—10—55 தமிழ் நாடு)**

என்கிறார்.

சைவத்திற் சரியை, கிரியை, யோகம், ஞானம் என நான்கு பாதங்கள் உள. அவையும் சரியையிற் சரியை என்பது முதலாகப் பதினாறு வகைப்படும். தான் மக்களுக்குப் பயன்படவேண்டு மென்பதைக் கருதாமலா அச்சமயம் அவற்றை யெல்லாம் தன்பால் வகுத்து வைத்துக் கொண்டது? மக்கள் நலனைக் கருதவில்லையானால் அச் சமயத்தால் அவற்றை அங்ஙனம் வகை செய்ய முடியுமா? அத்தகைய சைவ நெறியை அமைக்க வேண்டுமென்ற லென்னை? புதுவதாகவா? அதற்கவர் யார்?

'சமயத்தில் மாறுதலும், திருத்தமும் ஏற்படவேண்டுவதற்கு எல்லாக் காரணங்களும் உள்ளன'

**(11—7—55 தமிழ் நாடு)**

என்கிறவர்.

சைவத்தில் அவர் விரும்பும் மாறுதலும் திருத்தமும் ஏற்படாமையாற்றான்போலும் அச்சமயத்து மக்கள் இன்றுவரை முத்திக்கரை சேராமலிருக்கின்றனர். ஐயோ! பாவம்! அவர் அச்சமயத்தை மாற்றியுந் திருத்தியும் வெளியிடட்டும். அவரே அந்த மாறிய சமயத்தின் ஸ்தாபகரெனக் கொண்டாடப்படுவர். அவர்க்கு அஃதொரு சுக்கிரதசை. அச் சமயத்திற் சேருவதற்கும் இப்பரந்தவுலகில் ஆட்களில்லாமலா போகின்றனர்?

'சைவம்............தனது அறியாமையாலும் பிடிவாதத்தாலும் தனக்குரிய சவக்குழியைத் தானே தயாரித்துக் கொண்டது'

**(28—6—55 தமிழ் நாடு)**

என்கிறார் நவீனர்.

சவக்குழி—யாருக்கு?

அவ்வாக்கியம் சைவமக்களைக் குறித்துச் சொல்லப்பட்டதா? சைவசமயத்தைக் குறித்துச் சொல்லப் பட்டதா? சைவமக்களைக் குறித்ததாயின், பல சைவர் இசுலாம், கிறிஸ்தவம் முதலிய பிறசமயங்களுக்குப் போய்விட்டனரேயென அந்நவீனர் இரங்கி அங்ஙனங் கூறினாராதல் வேண்டும். அஃதாயின் அங்ஙனம் ஓடிப்போன மக்களே

தமது அறியாமையாலும் பிடிவாதத்தாலும் தமக்குரிய சவக்குழியைத் தாமே தயாரித்துக் கொண்டனரென்பது அவர் கருத்தெனத் தெரிகிறது. அதனால் சைவமல்லாத வெல்லாம் சவக்குழி யென அவர் சொன்னவரானர். சைவசமயத்தைக் குறித்ததாயின், அச்சமயத்தைக் குழிதோண்டிப் புதைக்க வேண்டுமென்ற சங்கற்பமே கொண்டு பகைத்து எதிர்த்தன சமண பௌத்தங்கள். தாம் தம் அறியாமையாலும் பிடிவாதத்தாலும் அச் சமயத்துக்கெனத் தயாரித்த சவக்குழியில் அவையே விழ்ந்து மண்மூடிப் போயின. அச் சமயமோ அன்றே போல் இன்றும் நிமிர்ந்து நின்று பேரொளி பரப்பிப் பிரகாசிக்கின்றது. பேரொளியைக் காணக் கண்கூசும். நவீனரும் அச் சமயப் பேரொளியைக் காண்டற்கான திறனற்றுத் தம் கண்களைச் சிக்கெனப் பொத்திக் கொண்டார். உயிருள்ளதைச் செத்ததென்றும். செத்தவற்றை உயிருள்ளனவென்றும் விபரீதம் பேசுவோர்

'உலகத்தா ருண்டென்ப தில்லென்பான் வையத்
தலகையா வைக்கப் படும்.'

என்ற குறளுக்கு இலக்காவார்.

சைவம் புதைக்கப்படு மென்றுர் நவீனர். புதைக்க வல்ல மனிதனுமுளனு? நூற்றுக்கு நூறு விதம் மக்கள் ஐந்தும் மூன்றும் ஏழு என்று சொல்லட்டும். எட்டு என்ற உண்மை அவரால் புதைக்கப்பட்டு விடுமா? [1] 'வேதநெறி தழைத்தோங்க மிகு சைவத் துறை விளங்க' என்றது திருமுறை. அதையே பழைய வைதிக சைவம் பரக்கவே' என்றது கோயிற் புராணம், சம்பந்தர் முதலியோர் அதைத்தான் திரும்பக் கொணர்ந்தனர். ஏழெனக் கணக்கிட்ட மக்கட் பெருக்கால் எட்டென்ற உண்மை புதைக்கப்படாததுபோல் அச் சமண பௌத்தங்களால் சைவம் புதைக்கப்பட மாட்டாதென்பதறிக. ஆசூழுடையார் பெருகிய காலத்து அவருக்காக அச் சமயமும் விளங்கித் தோன்றும். அது சாதம் சர்வ மங்கள நிலயமாகிய அச் சமயத்தைச் சவக்குழி தயாரித்துக் கொண்டது, புதைக்கப்படும், செத்துக்கொண்டிருக்கிறது என்ற அமங்கல வாசகங்களுக்கு இலக்காக்கிப் பேசுபவரை நோக்கி நான் இரங்குகின்றேன். நவீனரும் மக்கள்தான். மக்களே செத்துப் புதையுண்டும், எரியுண்டும் போய்க்கொண்டிருக்கிறுர். சைவம் அங்ஙனமன்று. அவர் தம் கதியை அதன்மேல் ஏற்றிக் கூறி மகிழாதிருப்பாராக. தமிழர்ச்சனைக் கிடமில்லையானல் சைவம் போய்விடுமென நவீனர் கூறிச் சைவ சமூகத்தை அச்சுறுத்துகிறுர்.

---

[1] வேத நெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்கப்
பூதபரம் பரைபொலியப் புனிதவாய் மலர்ந்தழுத
சீதவள வயற்புகலித் திருஞான சம்பந்தர்
பாதமலர் தலைக்கொண்டு திருத்தொண்டு பரவுவாம்

(திருஞானசம்பந்தர் புராணம் 1)

'வச்சிர வரிசி மானத் தளர்வுறு நிலைபே றெய்து
முயர்சிவ தருமம்'

என்றது காஞ்சிப் புராணம். அதனை அச் சமூகம் அறியும். ஆகலின் அச்சுறுத்திப் பயனில்லை.

'தென்னாடுடைய சிவனே போற்றி'

என்றது திருமுறை. அதற்கருத்தம் தென்னாடு சிவனுக்கு உடைமை, சிவன் அந்நாட்டைத் தனக்கு உடைமையாகக் கொண்ட உடையவன் என்பதா? சிவன் உடைமை, அந்நாடு அவனைத் தனக்கு உடைமையாகக் கொண்ட உடையது என்பதா? பின்னதை ஏற்பது மதியீனம். முன்னதுதான் அருத்தமாயிருக்க முடியும். அங்ஙனமாயின் சிவனுடையதாகிய தென்னாடு சைவ நாடென்ற பெயருக்கே யுரியது. அது பற்றித் தமிழ் சைவநாட்டு மொழியென்பதே நியாயம். சைவம் தமிழ்நாட்டுச் சமயம் என்பதும், தமிழ் சைவ நாட்டு மொழி யென்பதும் எத்துணை வேறுபா டுடையன என்பதை நுனித்து நோக்குக. பிந்தியது தமிழ் வளர்ச்சியைச் சிறிதுந் தடைசெய்யாது. முந்தியதோ சைவசமய வளர்ச்சியைப் பெரிதும் பாதிக்கும். இசுலாம் அரபு நாட்டில் தோன்றியது. அரபு மக்களுள் எவராவது இசுலாம் அரபு நாட்டுச் சமயம், அந்நாட்டுச் சமயத்தை மற்றை நாட்டுமக்கள் ஏற்று இசுலாமியராகி மேம்பட்டனர் என அரபு நாட்டுப் பெருமையை முன்னும் இசுலாத்தைப் பின்னும் வைத்து உலகெங்கும் பிரசாரம் செய்தனரா? அச் சமயத்தைக் கொண்டு தம் நாட்டுப் பெருமையைத் தம் இனப் பெருமையைத் தம் மொழிப் பெருமையை விளம்பரஞ் செய்யக் கருதி அச் சமயப் பிரசாரத்தை அவர் செய்திருந்தாராயின் அச் சமயம் உலகெங்கும் பரவியிருக்குமா? மற்றைச் சமயங்களையும் அங்ஙனமே காண்க. சைவ சமயம் தமிழ்நாட்டிற் பிறந்ததா? அன்று? என்ற ஆராய்ச்சி ஒரு புற மிருக்கட்டும். அதனைத் தமிழ்நாட்டிற் பிறந்ததாக வைத்துக் கொள்க. அச் சமயப் பிரசார மூலம் அந்நாட்டுப் பெருமை முதலியவற்றை விளம்பரஞ் செய்வதுதான் சமயப் பிரசார ஒழுங்கோ? அப் பிரசாரத்தால் அச் சமயம் மற்றைப் பிரதேசங்களிற் பரவுதலுமுண்டோ? பிற சமயத்தார் செய்யும் பிரசாரமுறையைக் கண்டும் அவர் தெளிகிலர். அவர்க்குத்தான் பிரசார லக்ஷியம் சைவ வளர்ச்சியன்றே. 1. விசுபரூபன் செய்த யாகம் போன்றதே அவர் செய்யும்

**தமிழ் நாட்டுச் சமயம்—**
**சைவ நாட்டுத் தமிழ்.**

---

கைதக்க குரவன் மாயை கருதிலன கேள்வி யொன்று
செய்திட லடிகளென்னத் தேவர்கட் காக்கங் கூறி
வெய்தழல் வளர்ப்பானுள்ளம் வேறுபட்டவுணர்க் கெல்லாம்
உய்திற நினைந்து வேட்டான் றனக்குமே யூறுவதோரான்.

திருவிளையாடல் புராணம், இந்திரன் பழிதீர்த்த படலம் (10)

சைவப் பிரசாரம். தமிழ் வாழ்க, சைவம் வீழ்க என்கிறது அவரது மனம். தமிழ் முக்கியமல்ல, சைவம் செத்துக் கொண்டிருக்கிறது என் கிறது அவரது வாய். அவர் தமிழை கடைக்கணித்துச் சைவத்தைப் புறக்கணிக்கிறவர்.

'இதனல் தேசீயப் பண்பாடும் வளர்ச்சியும் 100 லிருந்து
10 சத வீதமாகக் குறைந்து விட்டது'
(27—6—55 தமிழ் நாடு)

என்கிறு ரவர். இதனல்—சைவம் சமூகத்தையும் சமூகம் சைவத்தை யும் புறக்கணித்ததால் அப்பண்பாடும் வளர்ச்சியும் அவர் கணக்கிட்ட அளவிற் குறைந்துபோகக் காரணம்' அப் புறக்கணிப்பன்று, அவர் செய்து வரும் பிரசாரமேயாம். சைவசமூகம் அவர்மேற்றான் வழக்குத் தொடரவேண்டும்.

'மக்களுக்காகச் சமயமே அன்றிச் சமயத்திற்காக மக்களல்ல.
முன்னேற்ற வழியின் குறுக்கே உண்மையான சமயம் நிற்க
முடியாது' (11—7—55 தமிழ் நாடு)

என்கிறுர் நவீனர்.

**மக்களுக்காகச் சமயமா? சமயத்திற்காக மக்களா?**

முன்னேற்ற வழியின் குறுக்கே உண்மையான சமயம் நிற்க முடியாதென்பது சாமானிய வுண்மை. அதைக் காண்டற்குத் தீர்க்க புத்தி வேண்டாம். ஆனல் முன்னேற்ற மென்பதென்ன? அதற்கான வழியெது? வேதாகமங்களிற் சொல்லப்பட்டவழி அவ் வழி யாகாதா? சைவ சமயம் அம் முன்னேற்ற வழியிற் குறுக்கிடுகிறதா? எப்படி? அவற்றை யெல்லாம் அச்சமின்றி அவர் விளக்குக. அப் புறம் பார்க்கலாம் மக்களுக்காகச் சமயமே யன்றிச் சமயத்துக்காக மக்களல்ல வென்றுரவர். அப்படியே மக்களுக்காகத் தேசமே யன்றித் தேசத்துக்காக மக்களல்ல, மக்களுக்காகப் பாஷையேயன்றிப் பாஷைக் காக மக்களல்ல என்பவையுமாம். ஆனல் மக்கள் எதற்காக இருக் கின்றனர்? அதுவன்ருே தலையாய பிரசினை. அதற்குத் தக்கதொரு தீர்வை நவீனர் தருக. அதன் யோக்கியதையைக் கண்டுதான் இதற் காக இது வென அவர் கூறியது மதிக்கப்படும். ஆயினும் மேலே சொன்ன மூன்றையும் தேசம், பாஷை, சமயம் என்ற வரிசையில் வைத்து நான் சிறிது விசாரிக்கிறேன். உதாரணமாகப் பாரதம், தமிழ், சைவம் என்ற மூன்றையும் எடுத்துக்கொள்ளலாம். பாரத தேசத்துக்கு நான்கு திசையிலும் எல்லையுண்டு. அதாவது வரம்புண்டு. அதனல் அத்தேசம் தனக்கென நாம ரூபம் உடையதாயிற்று. அவ்

வரம்புக் கப்பாலுள்ள நிலத்தில் ஓரங்குலமாவது அவ்வுருவி லடங்கி அப்பெயரை யேற்பதில்லை. அவ்வரம்பைச் சிறிது நகர்த்திப் போடலா மென்ற புத்தி நம் அரசுக்கும் வராது. அவ்வரசின் கண்ணியம் அது. ஆனால் அத்தேச வரம்புட்பட்ட நிலத்தில் ஓரங்குலமும் பக்கத்தரசுக்கு நம்மரசு விட்டுக் கொடுக்குமோ? அதுவுங் கிடையாது. நம்மரசின் ஆண்மை அது. பாரத மக்களுக்காக பாரததேச மிருப்பது போற் பாரத தேசத்துக்காக பாரத மக்களிருக்கிற ரென்பதும் உண்மை. தம் உயிரைக் கொடுத்தாயினும் அத்தேச வரம்பை அவர் காத்தேயாக வேண்டும். அது செய்யாத பாரத மகன் தேசத் துரோகியே. இனித் தமிழும் வரம்புடையது. அது தமிழருக்காகவே யிருந்தாலும் அவர் தம் நலனுக்காக அம்மொழியின் வரம்பைக் குலைக்கக் கூடாது. அவருந் தமிழுக்காகவே யிருக்கின்றனர். அவ்வறிவும் அவருக்கு வேண்டும். அம்மொழிக்கு வரம்பாவது அதன் இலக்கணம். 'இப் பசுந்தமிழ் ஏனை மண்ணிடைச் சில இலக்கண வரம்பிலா மொழி போல் எண்ணிடைப்படக்கிடந்ததா எண்ணவும் படுமோ'என்றது திருவிளையாடற் புராணம். அவ்வரம்பு நூல் தொல்காப்பியம். தனக் காகவே தமிழிருக்கிறது. தான் தமிழுக்காக இல்லையெனப் பிதற்றிக் கொண்டு தன் நலத்தைப் பெரிதெனக் கருதி அதற்காக அம்மொழியை வரம்பழித்துப் பயன் படுத்தித் திரியுந் தமிழன் அம்மொழிக்குச் சத்துருவே. இறுதியாக வுள்ளது சைவம். அது சைவருக்காகத் தானிருக்கிறது. சைவசமயத்தின் வரம்பாவது யாது? எந்தச் சமயத் துக்கும் அதன் பிரமாண நூலே சமய வரம்பாகும் கிறிஸ்தவத்துக்குச் சமய வரம்பு பைபிள். இசுலாத்துக்குச் சமய வரம்பு குரான். அப் படியே பிறவுமாம். அந்நூல்களை அச்சமயங்கள் தம் கடவுள் வாக் கெனக் கூறிப் போற்றும். சைவசமயத்துக்கும் அன்னதொரு வரம்பு இருக்கத்தானே வேண்டும். அஃதெது? நூலியற்றுவோர் மூவகைப் படுவர். வஞ்சர், பிராந்தர், ஆப்தர் என்பாரவர். அவருள் வஞ்சராவார் தாமறிந்த சில வுண்மைகளை மறைத்துப் பொதுமக்களிடமிருந்து நன்கு மதிப்புப் பெறக் கருதி வேறு கூறித் திரிபவர். பிராந்தராவார் ஐய விபரீதங்களுக்கிரையாகி ஒன்றுகிடக்க ஒன்று கூறித் திரிபவர். அவ்விருவகையாரது ஆதரவையும் பெற்றதே தமிழர்ச்சனைக் கொள்கை. ஆப்தரென்ற சொல் நம்பிக்கைக்குப் பாத்திர மானவ ரென்ற பொருளுடையது. தெள்ளறிஞரே அவர். அவர்தான் திரு முறையாசிரியன்மார் முதலியோர். அம் மூவகையினரும் ஆன்மாக் களேயாக, அவ்வாசிரியன்மார் மாத்திரம் எதனால் ஆப்த ராயினர்? சிவபிரானே நவரே முழுமுதற் கடவுள். அவராணையிற் சிறிதும் பிச காமல் நின்றொழுகினர் அப் பெருமக்கள். அவரறியாமை அறவே நீங்கியது. அவர்பால் அப்பிரானாரின் திருவருள் முழுக்கப் பதிந்தது. அதனால் அவர் தெள்ளறிஞராய் விருப்பு வெறுப்பற்ற தூயராய் ஆப்த

ருமாயினர். அவர் திருவாய் மலர்ந்தன வெல்லாம் ஆப்த வாக்கிய மாகும். அவரை ஆட்கொண்ட பரமசிவனூர் பரமாப்தர். அவராணை தான் பரமாப்த வாக்கியம். சம்ஸ்கிருதத்திலுள்ள இருக்காதி நான்கு வேதங்களும், காமிகாதி இருபத்தெட்டுச் சிவாகமங்களும் அவ் வாக்கியம். அவ் வுண்மையை அவ் வாசிரியன்மாரே தம் திருமுறைகளிற் பலபட விளக்கினர். சைவத்துக்கு அவ் வேத சிவாகமங்களே பிரமாண சாத்திரமாகிச் சமய வரம்பாயின, திருமுறையாதியன அவற்றின் வழி வந்து அன்னவாயின. சைவ சமயம் சைவ மக்களுக்காக இருந்தாலும் அச்சமய வரம்பு அழிய வருமாயின் அம்மக்கள் தம் உயிரைக் கொடுத்தாயினும் அவ்வரம்பைப் பாற்றியாக வேண்டும். அது செய்யாத சைவன் அச்சமயத்தை உள்ளிருந்தே கெடுக்கும் பகைவனுவான். ஆகவே சைவ மக்கள் சைவத்துக்காகவு மிருக்கிருரென்பதை யறிக. எல்லாந் தமக்காகவே யிருக்கின்றனவெனச் சொல்லிக்கொண்டு தாமிருப்பது எதற்காக வென்பதை உணராமலலேவது நாடோடிகள் செயலாகும். நவீனர் பொறுப்புணர்ந்து பேசக் கற்றுக் கொள்வாராக

'மக்கள் நலத்துக்குக் கோயிலே தவிரக் கோயில் நலத்துக்காக மக்கள் இல்லை.' (2—12—55 தமிழ் நாடு)

**மக்கள் நலத்துக்காகக் கோயிலா? கோயில் நலத்துக்காக மக்களா?**

என்கிருர் அவருள் ஒருவர். அவரும் மேற்கண்டவாறு ஆராய்ந்து புத்தியறிக. மக்களுக்காக ஆசாரமே தவிர ஆசாரத்துக்காக மக்களில்லை, மக்களுக்காகத் தெய்வபக்தியே தவிரத் தெய்வபக்திக்காக மக்கள் இல்லை. மக்களுக்காகக் கடவுளே தவிரக் கடவுளுக்காக மக்கள் இல்லை, மக்களுக்காகக் கற்புடைமையே தவிரக் கற்புடைமைக்காக மக்கள் இல்லை என்பன போன்றதே அவர் கூற்று. அதன் விளைவு யாது? இட்டத்தை யொழுங்கு படுத்துவதுதான் சட்டம். ஆனல் மக்களைப் பிரபஞ்சத்துக்கு ஏஜமானராக்கி அவரிட்டத்தையே சட்டமாக்கப் பார்க்கிருர் நவீனர். மக்களிட்டமெல்லாம் சட்டமானல் அது சட்ட மெனப்படாது. மக்கள் இட்டப்படி யெல்லாம் நடக்கலாமென்பதே கொள்கையாய் முடியும். அதனல் அவர் விலங்குகளே யாவர்.

'நமக்கு நாமே எஜமான் என்ற எண்ணத்தால் ஒழுக்க முடையவர்களைக்கூட இழிவாகக் கூறும் நிலை ஏற்பட்டுள்ளது' (18—9—54 தினமணி)

என்று நவீனரே கூறி அகம்பாவத்தின் கேட்டைக் காட்டுகிருர்.

'36 ஆண்டுகளுக்கு முன் சிறையிலிருக்கையில் ஒரு நாள் குறிப்பு (டயரி) எழுதியிருந்தேன். அதில் நாட்டிற்கு விடுதலை உறுதியாகக் கிடைக்கு மென்றும் ஆனல் விடுதலைக்குப்பின்

> பல அக்கிரமங்களும், சூது, ஏமாற்றுவது நடக்குமென்றும் எழுதியிருந்தேன். துரதிர்ஷ்ட வசமாக அது இன்று உண்மையாகி வருகிறது.' (26—2—56 தமிழ் நாடு)

என்ற ராஜாஜி வாக்கை அதனோடு இயைத்துக் காண்க. எதிர்காலம் எப்படியோ? திருமுறை யாசிரியன்மாரும், சித்தாந்த சாத்திர ஆசிரியன்மாரும், சித்தாந்த பாஷ்யகாரரும் சைவ மூதாதையர். அவர்வழி வந்தோம் சைவசமயிகளாகிய நாங்கள். நாங்களும் அவரடிச் சுவட்டைப் பின்பற்றி அச்சமய வரம்பைப் போற்றுவோம். இன்றேல் அச்சமய பாரம்பரியமுங் கௌரவமும் போய்விடும். சைவ சமூகம் சிதறுண்டு சீரழிய நேரும். இப்போது அந்நிலை தலைகாட்டிக்கொண்டிருக்கிறது. அதனை முளையிலேயே கிள்ள வேண்டாமா? 'நலத்தின் கண்' என்று தொடங்குங் குறளுக்கு இலக்காக விரும்புவார் யாரே? தமிழ இசுலாமியர் உள்பட அனைத்து இசுலாமியரும் அரபு மொழிக் குரானைத் தம் அல்லாவின் வாக்கேயென அங்கீகரித்து வருகின்றனர். அவர் இசுலாமிய பாரம்பரியத்தைக் கௌரவித்தும், விசுவசித்தும் வருவதே அதற்குக் காரணம். சைவ சமயத்துக்கும் அன்னதொரு பரம்பரையுண்டு. திருக்கயிலாய பரம்பரை அது. துறைசை, தருமை முதலிய ஆதீனங்கள் அப்பரம்பரை.

> 'கடந்த ஆண்டு பல் வேறு மத, வேதாந்த மாநாடுகள் நடந்திருக்கின்றன. மிகவும் அறிவுக்கூர்மையுள்ள பண்டிதர்களும், படிப்பாளிகளும், பல்வேறு மதங்கள், முறைகள், தரிசனங்கள்பற்றிப் பேசியிருந்தும் இந்திய மத தத்துவங்களில் பெரிதும் ஊடுருவியிருக்கும் இந்த சிவமதம் பற்றிப் பேசாதது புதுமையாக இருக்கிறது. குருவாகிய தட்சிணுமூர்த்தி உருவம் மறக்கப்பட்டிருக்கிறது. ஆசிரிய-மாணவ முறையின்றி மதத்துவங்கள் வழிவழி வந்திருக்க முடியாது. மகாத்மா காந்தியோ, டாக்டர் ராதாகிருஷ்ணனோ இதன் அவசியம் பற்றிப் பேசவேயில்லை'
>
> (5—1—56 தமிழ் நாடு)

என்கிறார் ஜான்ஸ்பியர்ஸ். குருபரம்பரையின் அவசியமும், அதை விசுவசிக்க வேண்டியதன் கடப்பாடும் அதில் விளக்கப்பட்டன. அக்கடப்பாட்டை விட்டவரிடந் தான்றோன்றித்தனந்தா னிருக்கும். ஆளுக்காள் பெரியதன மென்பதை அவரிடமே பார்க்கலாம். அவர் சுதந்திரமாய்ச் சிந்திக்கிறாரென்பது தவறு, செருக்குற்றுச் சிந்திக்கிறாரென்பதே சரி. முட்டையிட்ட சிட்டுக் குருவிபோல் அவர் தம்மை வியந்துகொள்வதுமுண்டு. அக்குற்றங்கள் தம்மிடம் இருக்கின்றனவா வென்பதை நவீனர் சிந்தித்துப் பார்க்கவேண்டும். இருந்

தால் அவர் திருந்திக் கொள்வது நலம். அர்த்தமற்றனவும் அழிவுப் பாதையில் செலுத்துவனவுமாகிய விவகாரங்களைக் கிளப்பிச் சைவ மக்களின் நெஞ்சைக் குழப்பிச் சமய வரம்பை அவர்க்கு மறப்பித்து இழப்பித்தாயினுந் தமிழர்ச்சனைக் கொள்கையை உருசிப்பித்து விட வேண்டுமென அந்நவீனர் கருதுவது நியாயமன்று.

**அருச்சனை இயக்கம் மொழிக்கிளர்ச்சியா? தேசீய எழுச்சியா?**

'தமிழ் நாட்டிற்கே உரியதென்று சொல்லப்படும் சைவ சமய'ம், 'இந்து சமயத்தைச் சார்ந்த தமிழரிடையேதான் தமிழில் அருச்சனை நடைபெற வேண்டுமென்ற கிளர்ச்சி ஆரம்பமாகியிருக்கிறது. இஸ்லாமிய-கிறித்தவத் தமிழரிடையே அல்ல. ஆகவே, அருச்சனை மொழிபற்றிய கிளர்ச்சியைத் தேசீய இன எழுச்சியாகக் கொள்வதற்கில்லை'.
(ஒலி 11, குரல் 1, தமிழன் குரல்)

என்கிறார் நவீனர். தமிழ் நாட்டுக்கே யுரியது சைவம், தமிழர் இந்து சமயத்தைச் சார்ந்தவர் என்றால் சைவ சமயமும் இந்து சமயமும் ஒன்றே என்பதாம். ஆனால் இந்து சமயம் தமிழ் நாட்டுக்கே யுரியதா? 'தமிழகத்தில் வடமொழி நுழைவதற்கு முன்பே தமிழரிடையே ............ சமயவுணர்ச்சி செழித்தோங்கி வளர்ந்து வந்திருக்கிறது' (ஷை) என்கிறாரவர். அச்சமயமும் இந்து சமயந்தானே? தமிழ் நாடு என்ற பெயரின் அருமை பெருமைகளையும், அப் பெயர் சென்னை ராஜ்யத்துக்கு இடப்பட்ட பிறகு தமக்கும் தம் நாட்டுக்கும் வரவிருக்கும் பெருமிதத்தினையும் எண்ணி யெண்ணி அப் பெயரைப் பெறுதற்காக அவர் பாய்ந்து பாய்ந்து பேசிப் படும் பாடு பிரசவ வேதனையாகும். அவர் தானே தம் சமயத்துக்கு மாத்திரம் வாயில் வந்தவற்றை யெல்லாம் பெயரெனக் கூறிவந்தால் அவரை என்னென்பது? சமயங்கள் பற்றிய பெயர் விஷயத்தில் அவருக்கு வியவஸ்தை யில்லை அப்படிப்பட்ட அவர் தேசீயம், இனம், சமயம் என மூன்று சொல்லித் தமிழர்ச்சனைக் கிளர்ச்சி தேசீய இன வழிப் பட்டதன்று, சமய வழிப் பட்டதுதான் என்றார். அவர்தானே 'தமிழ்நாடு சம்பந்தப்பட்டவரை எல்லாத் துறைகளிலும் தமிழுக்கே முதலிடம் தரவேண்டுமென்ற கிளர்ச்சி எந்த வட்டாரத்தில் தோன்றினாலும், யாரால் துவக்கிவைக்கப்பட்டாலும் அதற்குத் தமிழர் எல்லோருமே, ஆதரவளிப்பது இயற்கை. அது கடமையுங் கூட. அந்த முறைப் படிதான் அருச்சனை மொழி பற்றிய கிளர்ச்சிக்குத் தமிழரசுக் கழகத்தார் ஆதரவு காட்டுகின்றனர்', 'தமிழ் நாட்டின் எல்லைக்குள் தமிழுக்குரிய உரிமையைப் பறி கொடுக்கக் கூடாது என்பதுதான் அருச்சனை மொழிக் கிளர்ச்சியின் அடிப்படை' (ஷை) என்றுஞ் சொல்கிறார்.

'தமிழ் நாடு சம்பந்தப்பட்ட வரை', 'தமிழ் நாட்டின் எல்லைக்குள்' என்பன தேசியம். 'தமிழ ரெல்லோருமே' 'தமிழுக்குரிய உரிமை' என்பன இனம். அங்ஙனமாக அவ்விரு வழிப்பட்ட அக் கிளர்ச்சியைத் 'தேசிய இன எழுச்சியாகக் கொள்வதற்கில்லை' யென அவர் கூறியது பொய். அவர் கூறிய அடிப்படையும் சமய வழிப்பட்டதன்று. தமிழரசுக் கழகத்தார் தேசிய இன (மொழி) எழுச்சிக்காரரே. சைவத்துக்குத் தமிழர்ச்சனை பாதகமாவதை அவர் ஏன் அறியப் போகிறார்?

**சைவமும் வளரும் தமிழும் பறிபோகாது**

தமிழ் நாட்டின் எல்லைக்குள் தமிழுக்குரிய உரிமை பறி போகக்கூடாது என்றாரவர். தமிழ இசுலாமியர் அவ்வெல்லைக்குள்ளேயே தம் மசூதிகளிலும், வீடுகள் முதலியவற்றிலும் தம் சமய வாழ்க்கையில் அரபு மொழியையே பயன்படுத்தி வருகின்றனர்; மைதீன் அப்துல்லா, காதர், உசேன், கதீஜா முதலிய வேற்றுமொழிப் பெயர்களையே இன்றுந் தமக்கிட்டுக் கொள்கின்றனர். அவர் கொண்டாடும் ரம்ஸான், பக்ரீத் முதலிய விசேடங்களின் பெயர்கள் தமிழல்ல. அவர் தினந்தோறும் ஆறு முறை தொழுகின்றனர். அப்போது அவர் தம் வாய்க்குட் சொல்லிக் கொள்வன தமிழா? அப்படி இன்னும் எத்தனை? எண்ணித் தொலையுமா? எட்டி லடங்குமா? அவற்றா லெல்லாந் தமிழ் பறி போகவில்லையா? அவரிடம் போய் அவ்வடிப்படைப் பிரசங்கத்தை நவீனர் செய்யட்டும். தலை தப்புமா? எளியவன் பெண்டாட்டி எல்லார்க்கும் மைத்துனி என்பது பழமொழி. சைவ சமூகத்தை அப்படி யெண்ணிக் கொண்டு அதன் மேற்றான் சாடுகிறா ரவர். சைவ சமூகமே! நீ அப்படியா?

உண்மையாவது யாது? சம்ஸ்கிருதத்தால் தமிழ் சிறிதும் பறி போகவில்லை யென்பதே. அதை அவரும் சம்மதிக்கிறார் 'தமிழ் தனித் தியங்கும் மொழி: சம்ஸ்கிருதத்தின் சேய்மொழியன்று. என்றாலும் சமயத்துறையைப் பொறுத்தமட்டில் ............ சம்ஸ்கிருதம் தமிழின் செவிலித்தாயாக இருந்து வந்திருக்கிற தென்பதை யாரும் மறுப்பதற்கில்லை. வடமொழியிலுள்ள சாத்திரங்களை எருவாகக் கொண்டு சமயத் தமிழ் நன்கு செழிப்படைந்து வந்திருக்கிறது' (ஷை) என்றது காண்க. தமிழுக்குப் பெற்ற தாய் இல்லை. சமயத் தமிழுக்காவது சம்ஸ்கிருதம் செவிலித்தாயாய் விளங்குகிறது. அம்மொழி அத்தாய் செய்த நன்றியை மறந்து தான் அவளால் பறிபோவதாக நினைக்கலாமா? சாணி முதலியன பயிரை வளர்க்கும் எரு. சோறு முதலியன நவீனர் முதலியோரை வளர்க்கும் எரு. சம்ஸ்கிருத சாத்திரங்கள் சமயத்

தமிழை வளர்க்கும் எரு. எந்தப் பொருளாலுந் தன்னை வளர்க்கும் எருவை விட்டிருக்க முடியாது. நவீனர் தாம் உண்ண வேண்டிய எருவை உண்ணுமற் போனல் வளர்ச்சியற்று அழிவர். அப்படியே சம்ஸ்கிருத சாத்திரங்களாகிய எருவைச் சமயத் தமிழ் உண்டு வளர் வதை நிறுத்திக்கொண்டால் அத்தமிழ் நலிந்து மெலிந்து உருக் குலைந்து போம். 'அருச்சனை தமிழிலும் நடைபெறுவதனல், வேங் கடத்திற்குத் தெற்கே சம்ஸ்கிருத மொழிக்குள்ள சிறப்பு அழிந்துவிடப் போவதில்லை. ஆகவே, ஆழ்ந்த சமய உணர்ச்சி காரணமாக வட மொழியில் பற்று வைத்துள்ள தமிழர்கள் அருச்சனை தமிழில் நடை பெறுவதை ஆதரிக்க முன் வரவேண்டும்' (ஷி) என்கிருரவர். வேங் கடத்துக்குத் தெற்கே யென்பதென்ன, இங்கும் எங்குமே அதன் சிறப்பு என்றும் அழியாது. அது எனக்கும் ஏனைய எதிர்ப்பாளருக்கும் நன்கு தெரியும். அவர் தம் சோதிடக் கடையை விரிக்க வேண்டாம். தமிழருள் ஆழ்ந்த சமயவுணர்ச்சி யுடையவரிடம் சம்ஸ்கிருதப் பற்று இருக்கவே செய்யு மென்பதை அந் நவீனரும் அறிந்திருக்கிருரெனத் தெரிகிறது. தமிழர்ச்சனைக் கொள்கையினரிடமிருப்பது மிதந்த சமய வுணர்ச்சியே. அவருணர்ச்சி ஆழ்ந்து கிடப்பது தமிழிலேயாம். அர்ச் சனையோ சமய விஷயம். ஆழ்ந்த மொழியுணர்ச்சி அதற்குச் சத்துரு வே. ஆகலின் அவரும் சைவத்தில் ஆழ்ந்த வுணர்ச்சி யுடையராதலே நியாயம். அதனை யனுசரித்த தமிழுணர்ச்சி அவருக்குப் போதும் அங்ஙனமாயின் சைவமும் வளரும், தமிழும் பறிபோகாது.

ஆழ்ந்த தமிழுணர்ச்சி சைவ விஷயத்தில் இல்லாதவற்றை யெல்லாம் உளவெனச் சொல்லத் தூண்டும். பிரணவம் சம்ஸ்கிருதம். அதைத் தமிழென்கிருரவர். அது என் முதற் புத்தகத்திற் கண்டிக்கப் பட்டது. சிவய நம என்பது பஞ்சாக்கர மந்திரம். அதுவுந் தமிழாம், அவர் சொல்கிருர், எப்படி? சிறப்பு, வனப்பு, யாப்பு, நடப்பு, மறைப்பு என்ற ஐந்து சொற்களும் சிவம் முதலிய ஐந்து பொருள்களைக் குறிக் கும் அதற்கொரு பாட்டையும் போட்டுக் கொண்டாரவர். அது யார் பாட்டோ? அந்த ஐந்து சொற்களின் முதலெழுத்துச் சேர்ந்து, சிவயநம என்ருயிற்ரும். யாப்பு என்பதிலுள்ள 'யா' என்பது குறுக்கும் வழிக்குறுக்கல் என்ற விதிப்படி'ய'என ஆயிற்ரும். அம்மந்திரம் 'சிவாய நம' என்றும் வரும். அதில் 'வா', என்பது 'வ' என்றதன் நீட்டும் வழி நீட்டலாம். இலக் கண அமைதி கூறுவார் போல ஏதேனு மொன்றைக் கூறிவிட்டால் தம் வாதம்நிலைத்து விடுமென்பது அவரெண்ணம். நீட்டும்வழி நீட்டல் என்றதன்படி சிவாயநம என்பது பெறப்பட்டாலும் சிவயநம என்ற உச்சரிப்புமுண்டு. அதுபோல் குறுக்கும் வழிக் குறுக்கல் என்றதன்படி

பஞ்சாக்ரம மந்திரம்—விபரீத வியாக்யானம்

சிவயநம என்பது கிடைத்தாலும் சிவயாநம என்ற வழக்கும் யாண்டா வது இருக்கவேண்டுமே. சிவயாநமஅல்லது சிவாயாநமஎன்ற பஞ்சாக் கரத்தை எவரேனும் எந்தச் சைவ நூலிலாவது கண்டிருக்கின்றனரா? இயல்பான உச்சரிப்புக்கிடனின்றிக் குறுக்கும் வழிக் குறுக்கியும், நீட் டும் வழி நீட்டியும் உச்சரிக்கப்படுஞ் சொற்களும் உளவென்பதற்கு நவீனர் ஒரு திருட்டாந்தந் தருக. அன்றியும் சில சொற்களின் முதலெழுத்தை மாத்திரம் எடுத்து அவற்றைக் கொண்டு அச்சொற் களின் பொருள்கள் பொதிந்து கிடக்குமாறு ஒரு சொல்லை யாக்கிக் கொள்ளு மரபு சம்ஸ்கிருதத்திலுண்டு. பாவ, ராக, தாள மென்ற சொற்களிலுள்ள முதலெழுத்துக்கள் சேர்ந்து அச்சொற்களின் பொருள் பொதிந்தபரத மென்ற சொற் பிறந்து நாட்டியத்துப் பெய ராக வழங்குவது காண்க. ஆங்கிலத்தில் *News என்ற சொல்லும் அன்னணம் ஆயதே. ஆனல் தமிழில் அம்முறை யுண்டா? ஆயின் அதற்கோ ரெடுத்துக்காட்டையும் நவீனர் தருக. தமிழுக்கு உள்ள புகழே அம்மம்ம! போளவினது. விபரீத விசாரணையால் பொய்ப் புகழுக்கும் ஆசைப்படுவானேன்!

**இறைவழிபாடும் தமிழில் மந்திரங்களும்.**

'இறை வழிபாட்டு முறைக்கு — குறிப்பாக அருச்சனைக் குப் பயன்படக்கூடிய மந்திரங்களும் பாக்களும் தமிழில் இருக் கின்றன என்பது குன்றக்குடி அடிகளார் போன்றவர்களின் வாதம். இந்த வாதம் இதுவரை மறுக்கப்படவில்லை' (டி) என்கிறுர் நவீனர். புத்தக வடிவிலோ பத்திரிகைகளிலோ வெளியாகும் மறுப்புக்கள் பல. அவற்றைத் தேடிக்காணும் பொறுப்பு அவருடையது. மறுப்பவருள் நானும் ஒருவன். என் மறுப்பொன்று புத்தகமாக வந்திருக்கிறது. அதன் பிரதிகள் அடிகளாருக்கும் அவருடைய சகாக்கள் சிலருக்கும் அனுப்பப்பட்டன. மற்றொரு மறுப்பாகிய இப்புத்தகம் தொடர்ந்து 'செட்டி நாடு' பத்திரிகையில் கட்டுரை வடிவில் வெளிவந்திருக்கிறது. ஆதரவுக் கட்டுரைகளை நான் மிகமிக ஊன்றிப் படித்திருக்கிறேன். அதனை என் முதற் புத்தகங் காட்டும். இப் புத்தகத்தைப் படிப்பவரும் நன்கறிவர். நவீ னர் அம்மறுப்புக்களுள் ஒரு சிறு பகுதியையாவது எடுத்து அலசிப் பிழை காட்டினரா? அவ் வழக்கம் அவர் சாதகத்திலேயே கிடையாது. பிசைந்த மாவையே பிசைந்துகொண்டிருப்பதுபோல் சொன்னதையே சொல்லிக் கொண்டிருப்பதுதான் அவருக்கு வழக்கம். 'மறுக்கப்பட வில்லை யென அவர் சொன்னது சூரியனைக் கையால் மறைப்பது போலாம்.

---

*News N—North, E—East, W—West, S—South.

'கோயில் மூலஸ்தானத்தை அணுகும் பக்தர்களைப் பார்த்து, அருச்சனையா, ஆராதனையா என்று கேள்வி போடுகிறுர் அருச்சகர்....

**அருச்சனையா? ஆராதனையா?**

அருச்சனை என்று பக்தர் பதிலளித்தால் தமிழாலா? வடமொழியாலா? என்று அர்ச்சகர் கேட்கலாம். எந்தமொழியில் அருச்சனை செய்ய வேண்டுமென்று பக்தர் விரும்புகிருரோ, அந்த மொழியிலேயே அருச்சகரும் செய்து வைக்கலாம். தமிழ் நாட்டுக் கோயில்களிலுள்ள அருச்சகர்கள் எல்லாம் தமிழைத் தாய்மொழியாகக் கொண்டவர்கள் தானே' (ஷி) என்கிருர் நவீனர். அவர் தானே 'பக்தர்கள் எம்மொழியியினராயினும் சரி: அவர்களுடைய மொழிப்பற்றுக்கும், மனச்சாட்சிக்கும் மதிப்புத்தர வேண்டுமென்பதுதான் அருச்சனை மொழிக் கிளர்ச்சி நடத்துவோரின் ஆவல்' (ஷி) என்றும் சொல்கிருர். மொழிப்பற்றுக்கும் மனச்சாட்சிக்கும் மதிப்புத்தர வேண்டுமென்கிற அவர் தமிழாலா வட மொழியாலா என்ற கேள்வியால் மாத்திரந் திருப்தியடைந்து விட முடியாது. தமிழாலா? தெலுங்காலா? மலேயாளத்தாலா? குஜராத்தியாலா? ஆங்கிலத்தாலா? ஹிந்தியாலா? எனப் பல கேள்விகளை அர்ச்சகர் கேட்க வேண்டும் ஏன்? கோவிலுக்குப் பல மொழிக்காரரும் பக்தராய் வருவர். நவீனரின் கொள்கைப்படி அவரனைவருடைய மொழிப்பற்றுக்கும் மனச்சாட்சிக்கும் மதிப்புத் தர வேண்டும். அருச்சனையைத் தமிழாலா சம்ஸ்கிருதத்தாலா என்ற கேள்வியால் மாத்திரம் அம்மதிப்புத் தரப்பட்ட தாகாது.

'தமிழ் நாட்டுக் கோயில்களில் தமிழுக்கே முதலிடம் தர வேண்டும்.' (ஷி) என்கிருர் நவீனர். தமிழ் நாட்டு மசூதிகளில்,

**தமிழ் நாட்டுக் கோயில் தமிழுக்கு முதலிடம்?**

மாதாகோவில்களில் வழங்கி வருகிற உண்மையிலேயே அயல் நாட்டு மொழிகளாகிய அரபு லத்தீன்களை யெதிர்த்து அவ்வாணையை அவர் முதலிற் பிறப்பிக்கட்டும். அங்கெல்லாம் அவர் வாய்மூடி மூச்சுமுட்டிக் கிடக்கின்றனர். சைவாலயங்கள் தமிழ்நாட்டிற்போல் மற்றைப் பிரதேசங்களிலுமுள. அதனுல் அவை பிரதேச மொழிகளுக்கப்பாற்பட்டன வென்பதைச் சிறுமகாரும் அறிந்து கொள்வர். அவை மொழி நிலயங்களல்ல, சமய நிலயங்களே. அவற்றைச் சைவசமயத்திடமிருந்து தமிழ் மொழி களவாடப்பார்க்கிறதா? சைவாலயங்கள் சைவசாத்திரத்திற் சொல்லப்பட்ட நெறியில் வைத்தே போற்றப்படும். தமிழ்நாட்டிலோ மற்றப் பிரதேசங்களிலோ உள்ள சைவாலயங்களனைத்தும் எல்லாப் பிரதேசங்களிலுமுள்ள எல்லாச் சைவ மக்களுக்குமே பொதுவுடைமை. எந்தப் பிரதேசத்தாரும் தம் பிரதேச மொழி வெறி கொண்டு தம் பிரதேசத்தி

லுள்ள சைவாலயங்கள் பிற பிரதேசங்களிலுள்ள அம்மொழிகளின் சைவ மக்களுக்குப் பயன்படாதபடி அவற்றில் தம் பிரதேச மொழியின் ஆதிக்கத்தைக் கொண்டுவர முற்படுவாராயின் அவரே சைவசமயத் துக்குப் படுதுரோகிக ளென்பது சத்தியம்.

'பாரதி கூறியது போன்று சமயத்துறையில் உயர் ஆரியத் திற்கு நிகர் என்று பேசக்கூடிய பெருமையைத் தமிழ் பெற்றிருக் கிறது. பிற மாகாண மொழிகளுக்கு இந்தச் சிறப்பு இருப்பதாக நான் கேள்விப்பட்டதில்லை.' (ஷி) என்கிருர்

**பிற மாகாண மொழிகளுக்குச் சமயத்துறையில் சிறப்பில்லை.**

நவீனர். சமயத்துறை யென்றூரவர் அச் சமயம் எது? சைவமா? துண்டு போட்டாலும் அவர் ஆமென்ஞர். அது கிடக்க. இசுலாம் சமயத்துறையில் அரபு மொழியும், கிறிஸ்தவ சமயத்துறையில் இலத்தீன் மொழியும் உயர் ஆரியத்திற்கும் மேலாவன என்று அவ்விரு சமயத்தாருஞ் சொல்வ தில்லையா? அதனுற்ருன் தமிழகத்தில் அவ்விரு மொழிகளுக்கும் நவீனர் இடங் கொடுக்க இசைகின்றனர் போலும். கன்னடம் தெலுங்கு மலையாளம் துளு என்பவற்றைப் பெற்ற தாய் தமிழென்பா ரவர். அத்தாய்க்கு இப்போது அக் குழந்தைகள் எதிரிக ளாயின. இருந்தாலும் கவினுங் களியும் நிறைந்தனவே அவை. அவற்றுக்கு அந்நிறைவைக் கொடுத்துச் சிறப்பித்தது சம்ஸ்கிருதம். அதுவே அவற்றுக்குஞ் செவிலித்தாய் என்பதிற் குற்றமில்லை. அத்தாய் இன்னுமிருக்கிருள். அவளிடம் சாத்திரமாகிய எருவு முண்டு. சிவபிரானே* 'என்றெடுத்த மொழி கல்வி எவற்றினுக்கு மிறையோன்' அவன் அத்தாய் மூலம் சமயத் தமிழை வளர்த்தது போல் சமயக் கன் னடம், சமயத் தெலுங்கு, சமய மலையாளம் சமயத்துளுக்களைவளர்க்க மாட்டானு? இன்றில்லாவிட்டாலும் நாளை வளர்க்கலாம். தமிழோ கன்னட முதலியவற்றை யீன்ற அளவில் தாயாயினும் பிறகு அக் குழந்தைகளைக் கைவிட்டுப் புத்திர வாத்ஸல்யமற்றதாய்ப்போயிற்று. 'ஈன்ற தாயைப் போன்றே வளர்த்த செவிலியும் சேயின் அன்புக் குரியவள் தான்.' (இலக்கியச் செல்வம்) என்கிருர் நவீனரே. அத் தமிழே தன் செவிலித்தாயாகிய சம்ஸ்கிருதத்தை உதறி, நன்றி மறந்து, மாத்ரு பக்தியற்றதாகவும் போய்க்கொண்டிருக்கிறது. தமிழர்ச்சனைக் கொள்கை அதற்கடையாளம். அங்ஙனம் இரு வகையானும் அன்பற்றமொழி என்பு தோல் போர்த்த வுடம்பே யாமென்க. என்னே நவீனர் தம் கோணற் புத்தியால் தமிழுக்குத் தரும் அவமதிப்பு.

---

*மூன்ரும் பக்கம் குறிப்பில் பார்க்க:—

'அருச்சனை மட்டுமின்றி வழிபாட்டு முறைகள் அனைத்துமே தமிழில் நடைபெற வேண்டியது அவசிய மாகும்' (ஒலி 11. குரல் 1. தமிழன் குரல்)

என்கிறுர் நவீனர்.

**தமிழில் வழிபாட்டு முறைகள்**

தமிழர்ச்சனைக் கிளர்ச்சியின் குறிக்கோளே அதுதான். அம் முடைநாற்றம் அவருட் பலராற் புறம்பொதிந்து மூடிவைக்கப்பட்டது. அந்நவீனர் வாய்வழியாக அவ்வாக்கிய ரூபத்தில் அந்நாற்றம் வெளியாயிற்று. சைவாலயங்களில் அந்நாற்றத்தைப் பரப்புமுன் அக் கூட்டத்தினர் காலூன்றிக்கொள்ள வேண்டாமா? அதற்காகத்தான் தமிழர்ச்சனைக் கிளர்ச்சியை அவர் முதலில் எடுத்துக் கொண்டார். மற்றை வழிபாட்டு முறைகளெல் லாம் சம்ஸ்கிருதத்தி லிருப்பதைத் தாம் ஆக்ஷேபிக்க வில்லை யெனக் கூறுவாரும் அவருளர். அக்கூற்றுச் சைவசமூகத்தைக் கவிழ்ப் பதற்கான சதியே யாம். முழுப் பூசணிக்காயைச் சோற்றுள் அமுக்கப் பார்க்கிறுரவர்.

**லாப நஷ்டம்**

'அருச்சனை தமிழில் நடைபெறுவதால் லாபமென்ன? வட மொழியில் நடைபெறுவதால் நஷ்டமென்ன?—என்று கேட்கலாம். இந்தக் கேள்விகளுக்கு விடையளிப்பது வேறு விஷயம்? (ஷ) என்கிறுரவர். அது எதனல் வேறு விஷயமாயிற்று? 'எண்ணித் துணிக கருமந் துணிந்தபி னெண்ணுவ மென்ப திழுக்கு' எனறது திருக் குறள். தமிழர்ச்சனையைச் செய்வதற்கும், சம்ஸ்கிருத அர்ச்சனையை விடுவதற்கும் முன் அவற்றால் வரும் லாப நஷ்டங்களை எண்ணிப் பார்க்க வேண்டாமா? அக் கருமத்தைத் துணியுமுன் எண்ண வேண்டியவற்றுள் அவ்விலாப நஷ்டப் பிரசினை பிரதான மாகாதா? அப்பிரச்னைக்குச் சரியான பரிகாரத்தை அவர் எண்ணத் தொடங்கிக் கண்டு கொண்டாராயின் தம் தமிழர்ச்சனைக் கருமத்தைத் தொலைத்தே விடுவர். ஏன்? அப்பரிகாரம் எதிர்ப்புக்கே சாதகமாய் முடியும். வேறு விஷயம் என அவர் சொன்னதால் அஃது யாதோ என எதிர்ப்பாளர் வெருவிப் பதுங்க மாட்டார்.

'நன்றாற்ற லுள்ளுந் தவறுண் டவரவர் பண்பறிந் தாற்றுக் கடை' (ஷ) என்ற திருக்குறளை எடுத்தாள்கிறுர் நவீனர். தம் கொள்கைக்கு அஃதோ ராதர வென்பது அவர் நம்பிக்கை. பாவம். அதுவும் அவரைக் கைவிடுகிறது. எப்படி? நன்று என்பதை அர்ச்சனை யெனவும், அவரவர் பண்பு என்பதை அவரவர் விருப்ப

மெனவும் அவர் வைத்துக் கொண்டார் போலும். அவரவர் எனப் படுவார் யார்? தமிழரே பலகோடிய ருளர். அத்தனை பேரையும் அவரவர் என்பது அகப்படுத்தும். அப்போது தமிழர்ச்சனை யெப்படி யிருக்கும்? அதை 8 ஆவது பகுதியிற் காண்க. இனி ஆலயங்களுக்கு வருகிற பக்தர் வேறு வேறு மொழிகளுக்கும் உரியரா யிருப்பர். அவரவ ரென்பது அத்தனை மொழிகளுக்கும் உரிய அத்தனை பேரையும் அகப் படுத்தும். அப்போது அவ்வர்ச்சனை யெப்படி யிருக்கும்? அதை 13 ஆவது பகுதியிற் காண்க. அதனோடு 8 ஆவது பகுதியிலுள்ளதைப் பிற மொழிகளிலுந் தனித்தனி வைத்துப் பார்க்க வேண்டும். அதற் கான சிரத்தையின்றிப் பொருந்துமாற்றை யோசியாமலே அக்குறளை யெடுத்தாண்டு புரை போயினா ரவர்.

'மொழி வளர்ச்சி யென்று கூறி மக்களைத் தவறான
கருத்துடைய வழியில் நடப்பிக்கிறேம்'
(12–8–55 தமிழ் நாடு)

என்கிறார் நவீனர். அக்கொடுமை தமிழகத்தில் அற்ப சொற்பமன்று, அபரிமிதம். தமிழர்ச்சனையும் தவறான கருத்துடைய வழிதான், மொழி வளர்ச்சி யென்ற கூற்றல் நேர்ந்ததுதான்.

**சைவக் கோயில்களில் சைவசமயப் பிரசாரம் நடக்கிறதா?**

ஆகலின் அதனை விடுக என்பதே நான் சொல்வது. அது கொண்டு நான் தமிழையே வெறுப்பதாக அவர் என்மேற் குற்றஞ் சாட்டு கிறார். *'வைதிக சைவம் நாட்டில் தலை யெடுத்த காரணத்தால் வேதங்களையே அறியாத தமிழர் வாழ்வில் வேதவிதிகள் புகுந்து கொண்டன' என்றாரவர். அதனை முன்னர்க் காண்க. தமிழகத்துக்கு அயல்மொழி சம்ஸ்கிருதம், அதி லுள்ளது வேதம், அவ்வேத விதி தமிழகத்திற் புகுந்தது சைவந் தலையெடுத்ததே அதற்குக் காரணம். அத் தலையெடுப்புக்கு முன் னுள்ள தமிழர் அவ்வேத விதியை யறியார். இப்போதுள்ள தமிழரும் அத்தமிழர் போலாக வேண்டும், அவ்வேத விதி புகுதற்குக் காரணமா யிருந்த சைவந் தலைகவிழ்ந் தொழிந்தாற்றான் அவ்வேத விதி இத்தமிழகத்தை விட்டுப் போகும், அச்சமயம் ஒழிவது எக்காலம் என்பது அவரது ஓலம். வேதம் நெறி. சைவம் துறை. வைதிக சைவமல்லாததொரு சைவம் எங்குமில்லை, என்றுமில்லை. ஆகலின் அவ்வைதிக சைவத்துக்குப் பகைத்துரோகிகள் நவீனரென்பது நான் அவர் மேற் சாட்டுங் குற்றம். நானும் தமிழன். நான் பேசுவதும், எழுதுவதும், படிப்பதும் எல்லாந் தமிழ். நான் போற்றி வணங்கிப் புகழ்ந்து படித்து வரும் என் சமயப் பிரமாண நூல்களுட்பட்ட

* 112-ம் பக்கம் பார்க்க.

திருமுறை யாதியன தமிழ். எனக்குச் சைவ சமய பால பாடமாவது ஓரளவு தெரியுமென்பது உண்மையானல் அவ் வறிவு அத்தமிழ் நூல் களைப் படித்ததனுலேயே வந்தது. அம்மொழி உலகெங்குமே பரவக் கூடுமாயின் பரவட்டும். அஃதெனக்கு மகிழ்ச்சிதான். ஆனல் நான் தமிழ னென்பதுபோற் சைவனென்பதையும் மறக்க மாட்டேன். அதனல் யாரேனுந் தமிழைப் புகழுமுகத்தாற் சைவத்தைக் கவிழ்க்கப் பார்ப்பாராயின் அவர் செயலை என்னுற் சகித்துக் கொண்டிருக்க முடியாது. சைவத்தின் பெருமையைத் தமிழுக் கேற்றிப் பேசுவதும், சைவ நூல்களில் ஆங்காங்குத் தமிழ் புகழப்பட்டிருப்பதன் கருத்தை யோராமல் அப்புகழைக் காரணமாகக் கொண்டு சம்ஸ்கிருதத்தை யிகழ்ந்துரைப்பதுமே நவீனருக்குப் போது போக்காயின. அது சைவ சமூகத்துக்குச் செய்யப்படும் பெருங் குற்றம். திருமுறை யாசிரியன் மார் முதலியோரின் வாழ்க்கையருமைகளும், வாக்குச் சிறப்புக்களும் சர்வ தேசங்களுக்கும் அறிமுகஞ் செய்யப்பட வேண்டுமென நான் ஆசைப்படுவதைக் காட்டிலுமா இன்னெருவர் ஆசைப்படப் போகிருர்? ஆனல் ஒன்று முக்கியம். அவ்வாசிரியன்மாரின் வாழ்க்கையும் வாக்கும் சைவமே. ஆகலின் அவர் சைவாசிரியன்மா ரென்றும், அவர் வாழ்க்கை சைவ வாழ்க்கை யென்றும், அவர் வாக்குச் சைவ வாக் கென்றுமே எங்கும் பகிரங்கப் படுத்தப்பட வேண்டும். அங்ஙன மின்றி அவர் தமிழர், அவர் வாழ்க்கை தமிழ் வாழ்க்கை, அவர் வாக் குத் தமிழ் வாக்கு, அவர் வணங்கிய கடவுள் தமிழ்க் கடவுள், அவர் எய்திய முத்தி தமிழ் முத்தி யென்றே நவீனர் பிரசாரஞ் செய்கின் றனர். அதனல் அச்சீரியரின் ஆசிரியத் தன்மையையும், அவரது வாழ்க்கையின் திட்ப நுட்பத்தையும், அவரது வாக்கின் பிரமாணத் தன்மையையும், அவர் வணங்கிய சிவபிரானின் பரத்துவத்தையும் அவர் எய்திய சித்தாந்த முத்தியின் இலக்கணத்தையும் உலகம் அறிய முடியவில்லை. அவ் வழி யடைக்குங் கல்லானுர் நவீனர். அக்கிரமம். முகமது நபி! அரபு நாட்டினர், அரபு மொழியினர், அவர் வாழ்க்கை அரபு வாழ்க்கை, அவர் வாக்கு அரபு வாக்கு, அவர் வணங்கிய கடவுள் அரபுக் கடவுள் அவர் எய்திய சொர்க்கம் அரபுச் சொர்க்கம் என்ரு அவரை அந் நாட்டினர் உலகிற்கு விளம்பரஞ் செய்தனர்? ஏசுவை அவர் நாட்டினரும், புத்தரை அவர் நாட்டினரும், அன்ன பிறரை அவரவர்க்குரிய நாட்டினரும் அப்படியா விளம்பரஞ் செய்தனர்? இல்லை. செய்திருந்தாராயின் அந்தாபகர் நிலையிட்ட சமயங்கள் உலகிற் பரவியேயிரா. முகமது நபி இசுலாம் சமய தாபகர், ஏசு கிறிஸ்தவ சமய தாபகர், புத்தர் பௌத்த சமய தாபகர் என்றே அவ்வச் சமய முன்னேடிகளால் உலகெங்கும் பறைசாற்றப்பட்டனர். அச்சமயங்களும் பரவின. அப்படியே சைவ மானம், சைவவுணர்ச்சி கொள்ளாத, கொளுத்தாத பிரசாரம் என்ன பிரசாரம்? செத்த

பிரசாரம். சைவம் தமிழகத்திற் கூனிக் குறுகிக் கிடக்கிறது, வெளியிற் செல்லாக் காசாய்க் கிடக்கிறது. எதனுல்? அந்நிய சமயிகளின் பிரசாரத்தாலா? ஆம். அதுவுஞ் சரிதான். ஆனுல் அது சிறிதளவே காரணமாகும். பெரும் பகுதியான காரணம் வேறு. அதுதான் நவீனர் செய்து வரும் விபரீதப் பிரசாரம். சென்ற சில ஆண்டு களாகச் சைவாலயங்களில் சைவப் பிரசாரத்துக்கென ஓரளவு பணச் செலவு செய்யத் திட்டம் வகுக்கப்பட்டு அப்பிரசாரமும் நடத்து வரு கிறது. பல பிரசாரகர் புறப்பட்டு விட்டனர். ஆனுல் அவருள் சைவ சமயத்தை முறையாகக் கற்றவர் எத்தனை பேர்? சைவ சமய மான வுணர்ச்சியுடையார் எத்தனை பேர்? சைவ சமய வரம்புக்குள் நின்று அவ் வரம்பை அழியாமற் காத்துப் பேசுவார் எத்தனை பேர்? விவாதப் பகுதிகள் குறுக்கிட்டால் அவற்றை நேர்மையாக வாதித்துச் சைவத் தைச் சாதிக்குந் திறனுடையார் எத்தனை பேர்? கேட்டார் சைவத்திற் பற்றுக்கொள்கின்றனரா வென அவ்வப்போது சபையின் நாடியை யாராய்ந்தறிந்து பேசுகின்றவர் எத்தனை பேர்? இனிப், பிரசாரத்துக் கழைக்கிற ஆலய அதிகாரிகளுள் எத்தனைபேர் தாம் அழைத்துள்ள பிரசாரகர் பேசுவது சைவந்தானு எனக் கவனிக்கிருர்? அசைவக் கொள்கைகளைப் புகுத்திப் பேசுபவரிடம் அவற்றை யெடுத்துக் காட்டி அக்கொள்கைகளை இனியேனும் நீக்கிப் பேசுகவென அறிவுரை கூற வல்ல அதிகாரிகள் எத்தனை பேரிருப்பர்? மேடையேறிப் பேசக் கற் றுக் கொண்டவருள் ஒரு பகுதியார் விபூதி ருத்திராக்ஷங்களை யணிந்து சைவப்பிரசாரக ரெனத் தம்மை விளம்பரஞ் செய்து கொண்டு பண வருவாயை உத்தேசித்து விண்ணப்பங்க ளனுப்பிச் சிபார்சுகளையுங் கொண்டுபோய் விடுகின்றனர். அச்சிபார்சை மீறமாட்டாமல் ஆல யப் பணத்தை விரயஞ் செய்பவரு மிலரா? ஒன்றிரண்டு மணி நேரம் மேடையேறிப் பேசினதும் ஐம்பது நூறு கைமேற் கிடைக்கின்றது. பேசும் விஷயம் எதுவாயிருந்தாலென்ன? எப்படியிருந்தாலென்ன? அதைக் கவனிப்பார் யாருமிலர் என்ற நெஞ்சழுத்தமுடைய பிரசார கருங் கைவிடப்படார். அம்மட்டோ? சைவப்பிரசாரகரெனச் சொல் லிக்கொண்டு வைணவ நிலயங்களிற் போய் வைணவப் பிரசாரஞ் செய்வாருமுளர். இசுலாம், கிறிஸ்தவம், பௌத்தம் முதலிய சமயக் கூட்டங்களிற் புகுந்து அச்சமயங்களைப் புகழ்ந்து பேசுஞ் சைவப் பிர சாரகருக்கும் பஞ்சமில்லை. பணம் வந்தாற் போதும். சமரச ஞானி யெனப் பேர் வந்தாற் போதும். அவ்வளவுதான். ஆனுல் இந்த மானங்கெட்ட பிழைப்பு இலௌகீக தாபனங்களிற்கூடக் கிடையாது. காங்கிரசுப் பிரசாகரர் கம்யூனிஸ்ட் கட்சிக் கூட்டத்திற் போய் அக்கட்சியை உயர்த்திப் பேசார். கம்யூனிஸ்ட் பிரசாரகர் கருஞ் சட்டைக் கட்சிக் கூட்டத்திற் போய் அக்கட்சிக் கொள்கைகளை ஆதரித்துப் பேசார். அன்னவே அனைத்தும். அப்படி எவரேனும் பேசினுல் அவர்தம் கட்சியையும் பிற கட்சிகளையும் ஏமாற்றி வயிறு

வளர்ப்பவரே யாவர். அவருடைய கட்சியிலிருந்து அவர் தூத்தவும் படுவார். சன சமூகம் அவரையும், அவர் பேச்சையும் வெகு துச்சமென வொதுக்கும். சைவப் பிரசாரகருக்கு மட்டும் அந்த வியவஸ்தை யிருக்க வேண்டாமா? எந்தப் பாதிரி வாயிலிருந்து இசுலாம் பிரசாரம் கேட்டாய்? எந்த மௌல்வி யிடமிருந்து கிறிஸ்தவப் பிரசங்கங் கேட்டாய்? சைவ சமூகமே! கொடு, சரியான விடையை. சைவ சமூகத்துக்குப் பிற சமயங்களின் கலவை சிறிதுமில்லாத சைவத்தையே போதிக்க வேண்டும். அப் பண்பையே புகட்ட வேண்டும். அவ்வார்வத்தையே வளர்க்க வேண்டும். அப்படிச் செய்வதன் மூலமே அச்சமூகம் பெருங் கூட்டத்தில் கரைந்து உரு மறைந்து போகாமல் காக்கப்படும். அவற்றை யெல்லாஞ் செய்ய வல்லது சத்துள்ள சைவப் பிரசாரமே. அப்பிரசாரகரைத் தேர்ந்தெடுத்து நன்கு பயிற்றிப் பிரசார விஷயங்களை யெடுத்துக் கொடுத்து நாடெங்கும் அனுப்பவும், அவரவருக்குக் கொடுக்கப்பட்ட விஷயம் வரம்பிற் பிறழாமல் மக்கள் உள்ளத்திற் பதிந்து அவர் சைவத்தைச் சிக்கெனப் பிடிக்கு மளவுக்கு உணர்ச்சி ததும்பப் பேசப்படுகிறதா வென்பதைக் கூர்ந்து மேற்பார்க்கவும் வல்லதான, பொறுப்பான, யோக்கியமான தொரு தலைமையிருந்து வருவதவசியம். அத்தலைமை ஒரு குழுவா யமைந்தாலுஞ் சரிதான். எல்லாச் சைவாலயங்களும் அத் தலைமைத் தாபனத்தின் மூலமே பிரசாரகரை வரவழைத்துக் கொள்ள வேண்டும். அது நிபந்தனை யாகுக. அங்ஙனமாயின் சைவாலயங்களின் பிரசாரப் பணம் வீண் செலவாகாது. சைவப்பிரசார மென்ற தொடரும் பொருளுடையதாய்ச் சைவ வளர்ச்சியென்ற நோக்கமும் நிறைவேறி வரும். அப்பிரசாரங்களிற் பிதற்றல்கள் நேருமாயின் பொறுப்புள்ள அத்தலைமைத் தாபனத்தையே யிடித்துக் காரணங் கேட்கலாம். இவ்வாசை கொண்ட எனக்குத் தமிழில் ஏன் வெறுப்புண்டாகப் போகிறது? மொழி, நாடு, இனம், கட்சி முதலியவற்றின் வெறியிற்பட்டு மொத்துண்ட நவீனரும் பிறரும் சைவத்தை வெறுத்துப் பேசிவருவது பிரசித்தம். சைவ நூற்கள் தமிழிற் பல. சம்ஸ்கிருதத்திலும் அங்ஙனமே. பாரத தேசம் முழுவதுமே சைவாலயம், சைவஸ்தான். அது என் புத்தகத்தில் விளக்கப்பட்டது. என் தேசத்தின் பெயராகிய 'பாரதம்' என்ற சொல்லுக்கே 'பிறவிக் கடலைக் கடப்பித்து அருளிற் சேர்க்கும் நிலம்' என்பது பொருள்.

'வருசமு சாரவேலா வலயத்தின் கரையே யான
வருளினிற் சேர்த்த லாலே யறைவர்பா ரதப்பேர்'

என்ற பூவாளூர்ப் புராணங் காண்க. அதனாலன்றோ அப்பாரதம் புண்ணிய பூமி யெனப்பட்டது. மற்றைத் தெய்வங்கள் வேதனைப்படும், இறக்கும், பிறக்கும், மேல்வினையுஞ் செய்யும். அவ்வுயிர்க் குணங்க

ளிலாதான் மாதொரு பாகனொருவனே அவனே சர்வான்மாக்களின் சம்சார பந்தத்தையறுத்து அவற்றை முத்தித்தானமாகிய தன் திருவடி நெடுங்கரையிற் சேர்ப்பிக்க வல்லவன். அங்ஙனமாகச் சைவனாகிய நான் சைவஞான நூற் களஞ்சியமாகிய என் தமிழையும், அதுவேயாகிய என் சம்ஸ்கிருதத்தையும், அந்த ஞானத்தின் சாதனத்துக்கு அநாதி நிலைக்களமாகிய என்பாரததேசத்தையும் எப்படி வெறுப்பேன்? அவ்வெறுப்பு எனக்கிருப்பதாகச் சொல்கிற நவீனர் பொய்த்துயிர் வாழ்கிறார். தமிழர்ச்சனை பற்றிய என் மறுப்பை மறுக்க மாட்டாத அவ் வேழையர் என்மேல் அவ்வீண் பழியைச் சுமத்தியாவது

'தமிழ் மக்களுள் பெரும் பாலார் கல்வியறிவற்றவர்'
(14—8—55 தமிழ்நாடு)

'இன்னும் மக்களிடையே சரி, தப்பு தெரிந்து கொள்ள முடியவில்லை'
(23—9—55 தமிழ் நாடு)

என அவராலேயே குறை கூறப்படுகிற தமிழரின் சகாயத்தைப் பெற்றுத் தம் கொள்கையைச் சாதித்துக் கொள்ள எத்தனிக்கின்றனர். அவர் கூறும் பழி எனக்கு வெறுஞ் சலசலப்பேயாம்.

'வட மொழியில் அர்ச்சனை செய்யக்கூடாது என்று யாராவது சொன்னால் நான் அதை எதிர்ப்பேன்' என்றார் நவீனர். அது முன் காட்டப் பட்டது. அதனால் சம்ஸ்கிருத அர்ச்சனை அவர்க்குடன்பாடென்பதும், அவ்வர்ச்சனை சைவசம்பந்த முடைய தென்பதனாலேயே அதற்கவர் உடன்படலாயினர் என்பதும் எனக்குத் தெரிகின்றன. எப்படியும் அவ்வர்ச்சனையில் விவாதமில்லை. விவாதமெல்லாந் தமிழர்ச்சனை பற்றியதுதான். அவ்வளவில் அவர் நிற்பதை விட்டுத்

'தமிழிலும் அர்ச்சனை செய்ய வேண்டும் என்றுதான் நான் சொல்லுகிறேன். ஆனால் சிலர் அதைக்கூட எதிர்ப்பதால் தான் தமிழ் மொழியில் மட்டுமே அர்ச்சனை செய்யவேண்டும். வடமொழி...........கூடாது என்று சொல்லத் தோன்றுகிறது.'
(15—6—55 தினத்தந்தி)

என்கிறாரே அவர். அஃதெப்படித் தோன்றலாம். தோன்றத்தான் செய்யுமென்றால் 'நான் அதை எதிர்ப்பேன்' என அவர் கூறியது விருதா வாசகமே. அவ்வெதிர்ப்புக்குத் தம் மனமொத்ததும் சரியானதுமாகிய காரணம் அவராற் சொல்ல முடியுமா என்பது சந்தேகம். வாதத்துக்குப் பயன் உண்மை காண்பதே. வீம்பு பேசுவ தன்று. அவர் வீம்பே பேசுகிறா ரென்பது

'அருச்சகர்கள் தவருன வழியில் தமிழில் அருச்சனை கூடா தென்றும் தீர்மானம் போட்ட பின்னர்தான் இந்தப் பிரசாரம் தேவைப்பட்டது' (16—6—55 தமிழ் நாடு)

என்ற அவர் கூற்ருலும் வெளிப்படும்.

பார்ப்பனரின் * எச்சிலிலைகளை நக்கி வயிற்றை நிரப்பியவர் ஈ. வே. ரா. தம் மனைவி நாகம்மை கோவிலுக்குப் போய்க்கொண்டிருந்த வழக்கத்தைத் தம்தோழராகிய சில வெறியரை யேவித் தகாதன செய்வித்துத் தடை செய்தவர் ஈ. வே. ரா. அவ்வம்மையின் ஆசார அனுட்டானங்களைக் கள்ள வழியிற் சென்று கெடுத்தவர் ஈ. வே. ரா. தமையன் தங்கையுடன் வாழ்க்கை யொப்பந்தஞ் செய்து கொள்ளலா மெனப் பேசிச் சாதி யொழிப்போடு முறை யொழிப்புக்கும் முயன்றவர் ஈ. வே ரா. தி. மு க. தோன்றுவதற்கு ஒரே காரணமாகத் தம் 72 இல் 28 ஐ வாழ்க்கை யொப்பந்தஞ் செய்து கொண்டவர், ஈ. வெ ரா. கூட்டங்களில் தமக்கு மாலை போட வருபவரிடம் அதற்குங் கூலி வாங்கிப் பணந் திரட்டியவர் ஈ. வே. ரா.

'தனித் தமிழ் நாடு கோரிக்கை ஏற்கப்பட்டு விட்டால் இது வரை தாம் கோரிவந்த திராவிட நாடு கோரிக்கையை கை விடத் தயாராக இருப்பதாக'க் கூறி

(21—9—55 தமிழ் நாடு)

'இதுவரை' என்பதால் புலனுகக் கூடிய எத்தனையோ ஆண்டுகளாகப் பல தமிழரைத் 'திராவிட நாடு திராவிடருக்கே' எனப் பேய்க் கூச்சலிடவைத்து அநாதை நத்தம் புறம்போக்குகளாக்கி, இப்போது தாம் மாத்திரம் அக்கூச்சலிடுவதை விட்டுத் 'தமிழ்நாடு தமிழருக்கே' எனக் கூச்சலிடுபவரின் காலைப் பிடித்து இழுபட விரும்புவர் ஈ. வே. ரா.

'அட, அயோக்கியப் பயலே! நீ ஒரு கடவுளா? என்று கேட்டுக் கொண்டே ராமன் முகத்தில் எச்சிலை காரித் துப்ப வேண்டும், ராமன் சிலையை விளக்கு மாற்ருல் அடிப்பது போல், அடுத்தபடியாக முருகன் சிலையையும் விளக்கு மாற்ருல் அடிப்பேன். இதே போல் கிருஷ்ணன் விஷ்ணு ஆகிய சாமிகளின் சிலைகளையும் விளக்குமாற்ருல் அடிப்பேன். ஜாதிகளுக்குக் காரணம் மதம். மதங்களுக்குக் காரணம் சாஸ்திரம். சாஸ்திரங்களுக்குக் காரணம் கடவுள். ஆகவே

* இக்கருத்து ஆசிரியருடையதல்ல. சிதம்பரனுரென்பவரால் எழுதி ஈ. வே. ராவால் அங்கீகரிக்கப்பட்டு 1941-இல் 2ம் பதிப்பாக ஈரோடு குடியரசுப் பதிப்பகத்திலிருந்து வெளியான 'தமிழர் தலைவர் பெரியார் ஈ. வே. ரா. வரலாறு' என்ற புத்தகத்திலுள்ளது.

கடவுள் ஒழிந்தால் ஜாதிகள் ஒழியும். இதனால் தான் கடவுள் ஒழிப்புப் போராட்டம் நடத்துகிறேன்.'

(23—6—56 தினத் தந்தி)

எனக் கனியிருப்பக் காய்கவர்பவர் போற் கீழ்த்தரமான சொற்களால் தெய்வங்களைப் பழித்துத் திரிபவர் ஈ. வே. ரா. அத்துணைப் பிரதாப சீல ரவர். பலபடியாலும் வர்ணிக்கப்பட்ட அதி திராவிடக் கழகமும் சூரனும் அவருக் கீடாகான். அவருக்குப் அருள் நெறித் திருக் பொன்னாடை போர்த்துக் களிகொண்டார் ஒரு கூட்டமும் நவீனர். அவ் விராத் திராவிட கழகத் தலைவர், இந் நவீனர் அருள் நெறிக் கூட்டத் தலைவர். விநாயகர் முதலிய தெய்வங்களை அவர் நிந்திப்பார், சிவபெருமானையே இவர் நிந்திப்பார். சம்ஸ்கிருதத்தை அவரும் பகைப்பர், இவரும் பகைப்பர். தமிழையே அவருந் தலையென்பர், இவருங் கடவுளென்பர். சாதி முறைகளை அவரும் ஒழிக்க வேண்டு மென்பர், இவரும் ஒழிக்க வேண்டு மென்பர். மடாலயங்களை இடித்துத்தள்ள அவருஞ் சொல்வர் இவருஞ் சொல்வர். கரும மலத்துண்மையை அவருங் கொள்ளார், இவருங் கொள்ளார். வேதாகமங்கள் அவருக்கும் அப் பிரமாணம், இவருக்கும் அப்பிரமாணம். அவரும் பிரமாணத் துவேஷி,

'கோவிலைக்........காக்க பிராமணர்கள் வேறு'

(2—6—55 தமிழ் நாடு)

என்கிற இவரும் அத்துவேஷி. மோக்ஷம் அவருக்கு மில்லை, இவருக்கு மில்லை. இப்படிப் பல விதங்களில் அவ் விருவரும் ஒரே விதப் 'பெரியா'ராய் 'Birds of the same feather flock together என்ற பழமொழியை நினைப்பூட்டி வருவர். அந் நவீனர் அவ்விராவுக்குப் பொன்னாடை போர்த்ததால் அருள் நெறித் திருக்கூட்டமே கல கலத்தது. அக் கூட்டத்தினர் பலர் அவரைக் கண்டித்தனர், அக் கூட்டத்திலிருந்து விலகினர். அதன் பிறகு அந் நவீனரிட மிருந்து அறிக்கை யொன்று வெளிப்பட்டது. அவர் அவ்வாடை போர்த்தது அவ் விராவை ஆத்திகத்துக்கு இழுக்கவேயா மென்பது அவ்வறிக்கை. அவ்விரா ஆத்திகராகிக் கோயிலுட் புகுந்து சாமியைக் கும்பிடப் போவதாகத் தமக்குச் செய்தி வந்துளதெனவும் அவர் பத்திரிகையில் வெளியிட்டார். ஆனால் அந்த ராத்தானே இப்போது

1. 'சாமிக்கு தமிழில் மந்திரம் சொல்லி அர்ச்சனை செய்ய வேண்டும்.
2. சாமிக்குப் பூஜை செய்கிற வேலை தமிழனுக்கு மட்டுமே கொடுக்கப்பட வேண்டும்.

இந்த 2 கோரிக்கைகளையும் ஒரு மாதத்தில் நிறைவேற்று விட்டால் நானும் (ஈ. வே. ராவும்) மற்ற திராவிட கழக தொண்டர்களும் கோவிலுக்குள் புகுந்து கிளர்ச்சி செய் வோம்' (23—12—56 தினத் தந்தி)

என்கிறார். முறைகளையும் சாதிகளையும் ஒழிக்க வேண்டும், அதற்குக் கடவுள் ஒழிப்புப் போராட்டமே சரியான வழி யெனப் பல வருஷங் களாகக் கதறி அப் போராட்டத்தையே நடத்தி வருகிற அவர் தம்மாற் பழிக்கப்பட்ட அத் தெய்வங்களைத் தமிழில் அர்ச்சனை செய்தேனும் வணங்குவாரா? அவர் திருந்தினு ரென்பதை மெய்யெனக் கொண்டா லும், அதுவரை அவராற் கெட்டொழிந்த தமிழர் எத்தனை பேர்? அவரெல்லாம் இப்போது அவ்விராவைப் பின்பற்றச் சித்தமா? இல்லை யெனின், அத்தனை பேரையும் தாம் கெடுத்த கொடுமைக்கு அவர் என்ன சொல்வார்? நிற்க, அவர் செய்யப் போவதாகக் கூறியுள்ள கிளர்ச்சியில் தமிழ்ப் பண்பாடென்ப துண்டா? ஆஸ்திகபுத்தி யுண்டா? சைவாபிமான முண்டா? எதுவுமில்லையே. அவர் செய்த குழப்பங்கள் பல. அவை அவர்க்குத் தோல்வியையே தந்தன. இக் குழப்பம் நடந்தாலும் அவருக்குக் கிடைப்பது அதுதான். இப் போராட்டத்தை வரவேற்றுத் 'திராவிட கழக தலைவர் ஈ. வே. ரா. பெரியார் கோவில் களில் அர்ச்சனை செய்ய வேண்டு மென்று கோரி போராட்டம் நடத்தப் போவதாக தினத்தந்தியில் வெளியான செய்தியைப் பார்த்து மகிழ்ந்தேன். இதுவரையில் கடவுள் சிலைகளையும், படத்தையும் உடைத் தும் தீ வைத்தும் துடைப்பத்தால் அடித்தும் போராட்டம் நடத்தி பக்தர்களின் மனதைப் புண் படுத்திய ஈ. வே. ரா., இப்போது தமிழ் மொழி மீது பற்றுதல் கொண்டு தமிழ் அர்ச்சனை போராட்டம் நடத்த முன் வந்திருப்பது பக்தர்களுக்கு மகிழ்ச்சியை தருவதாக இருக்கிறது. ஈ. வே. ராவின் இந்த தமிழ் அர்ச்சனை போராட்டம் வெற்றி பெற வேண்டுகிறேன்'. (ஷி) என அந்நவீனர் அறிக்கை விட்டுப் பூரித்துப் போகிறார். சென்ற சில ஆண்டுகளாக அவர் பிரசாரஞ் செய்து கொண்டு தமிழ் நாடெங்குஞ் சுற்றினர், வெளி நாடுகளுக்குஞ் சென்று வந்தார். ஆங்காங்கு அவருக்குக் கிடைத்த வரவேற்புகளும், மதிப்புரைகளும் மிகையே. சைவ சமய வளர்ச்சிக்கான பொறுப்பை யும் ஓரளவு வகிப்பவரவர். ஆயினு மென்? அவர் பிரசாரங்களில் சைவ சமய வாசனை கூடக் கிடையாது. வெறுஞ் சமய நாற்றமே யுண்டு. உண்மையில் அவருக்குத் தமிழே சமயம், தமிழே கடவுள், தமிழே எல்லாமும். அதுவும் அவ்விராவுக்குப் போல் அவருக்கும் வாயளவுதான். அவரால் தமிழ் இதுவரை ஆக்கம் பெற்றதுமில்லை, இனிப் பெறுவது மில்லை.

'பொழுது போக்குப் புத்தகங்கள், தரம் குறைந்த புத்தகங்கள் இவைகள்தான் நிகழ்காலத்தைப் பற்றி எண்ணுகிற போது அச்சத்தைக் கொடுக்கிறது'

(20—8—55 தமிழ் நாடு)

'நாம் தரம் தாழ்ந்த இலக்கியங்களைப் படிப்பதனுல் நாமும் தரம் தாழ்ந்து கொண்டே போகிறோம்', 'சமுதாயத்தை உயரிய முறையில் வாழச் செய்யும் இலக்கியக் கருத்துக் களுடன் தரம் தாழ்ந்த நஞ்சான கருத்துக்களைக் கலந்து பிரசாரம் செய்கின்றனர். இவர்களுக்கு எந்த விதமான தண்டனையும் கிடையாதா?' (2—9—55 தமிழ் நாடு)

'ஒவ்வொருவரும் தன் தன் போக்கிற்கேற்ப இலக்கியங் களையும் இலக்கிய கர்த்தாக்களையும் கூறுகின்ருர்களே அன்றி இலக்கிய கர்த்தாக்களின் கருத்துக்களைக் கூறுபவர் களைக் காண முடியவில்லை. அவர்களை நமது கருத்துக் களுடன் ஒப்பிட்டுப் பார்க்கின்ரோமே தவிர அவர்களது கருத்துக்களுடன் நமது கருத்துக்களை ஒப்பிட்டுப் பார்ப்பதே இல்லை. நமது கருத்துக்கும் எண்ணத்திற்கும் அவர்களது கருத்துக்கள் முரண்பாடாக இருந்தால் — ஒத்துவராததாக இருந்தால் இது தவருனது என்று அவர்களை குறைவு படுத்திக் கூறி விடுகின்றர்கள். அவர்கள் வாழ்ந்த காலம் வேறு, அன்றைய சூழ்நிலையும் மக்களின் வாழ்க்கைத் தரமும் இன்றுள்ள சூழ்நிலைக்கும் அன்றைய சூழ்நிலைகளுக்கும் நிறைய வேறுபாடு உண்டு. அதனுல் அவர்களது கருத்துக் கள் இன்றைய சூழ்நிலைக்கு ஒத்துவராது, என்று சமாதான மும் கூறிவிடுவார்கள்........இன்று புதிதாக எந்த இலக்கிய மும் வந்ததே இல்லை. வருகின்ற அனைத்தும் பழைய சிரஞ்சீவி இலக்கியங்களைப்படித்து ஜீரணித்து அதனின்றும் எழுந்தவையாகவே இருக்கின்றன' (6—9—55 தின மணி)

என்றெல்லாம் இக்காலப் புத்தகங்களையும் பிரசாரங்களையும் கருத்துக் களையுங் குறை கூறுகிருர் அந்நவீனர். இந் நிலைக்குத் தமிகழத்தை முதலிற் கொண்டு வந்தவர் தி. க, தி. மு -கக்களே. அடுத்தவர் தமிழரசுக் கழகத்தினர், கடைப்பட்டவர் அருள்நெறித் திருக் கூட்டத்தினர். அந் நவீனருடைய வேடத்தையும் பேச்சையுங் கண்டுங் கேட்டும் அவர் ஆதரிப்பது சைவ சமயந்தா னெனக் கருதி ஏமாறினர் சில சைவர். எனக்கு அந் நவீனரின் உண்மை யியல்பு முன்னமே தெரியும். அவர் சைவப் பற்றற்றவர், நாத்திகப்பற்றே யுடையவர் என்பதைப் பேசியும் எழுதியும் நான் வெளியிட்டேன்.

அதனை யேற்க மறுத்தார் பலர் என்னை வைதனர். இப்போது என்னுயிற்று? ஈ. வே. ராவின் தமிழர்ச்சனைக் கிளர்ச்சிக்கு அவ்விராக் கூறுங் காரணம் எதுவேனுமாக. 'தமிழ் மொழி மீது பற்றுதல் கொண்டு' என்பதே அந் நவீனர் கற்பிக்குங் காரணம். தமிழ் மொழி, திராவிட நாடு, திராவிட இனம், தமிழ்க் கலாசாரம் என்பனவாதிய வற்றைக் காரணமாக் காட்டியே அவ்விரா அத்தெய்வச் சிலைகளை மேற் காட்டியபடி யெல்லாஞ் செய்தும், செய்வதாகக் கூறியும் இகழ்ந்தார், நாத்திகத்தைப் பரப்பினுர்.

> 'அண்ணுதுரையும் அவர் தம்பிமார்களும் (திராவிட முன்னேற்றக் கழகத்தினா)........தமிழைத் துணையாகக்கொண்டு ........நாத்திகத்தை வளர்க்கிறுர்கள்'.
>
> (15—6—55 *தினத் தந்தி*)

என அந் நவீனரே சொல்கிறுர். அவ் விராவோ தமிழரு மல்லர், தமிழ் கற்றவருமல்லர்; ஆயினும் அம் மொழிப் பற்று தமக்கிருப்பது போல் காட்டிக் கொள்கிறுர். அதனுலேயே அவ்விழி செயலாற்றிப் பக்தர்களின் மனதைப் புண்படுத்தினு ரவர். அப் பற்று இப்போது மாத்திரம் ஆத்திகமாய் விடுமா? சைவமாய் விடுமா? இன்றும் அப் பற்று பழைய கறுப்பனே தான். அவர் கோரிக்கைகளும் நாத்தீகமே. சைவாலயங்களை நாஸ்தியாக்கவே அவர் அப் போராட்டத்தைத் தொடங்கப் போகிறுர். அதை வரவேற்றும், அதற்கு மகிழ்ந்தும், அது வெற்றி பெற வேண்டுகிறேனென எந்த அநாமதேய சட்டத்தையோ வேண்டியும் அவருக்குப் பக்க பலமாய், நிற்கிறுர் அந் நவீனர். அவர் சைவ சமயத்தவராத லெப்படி? அவ் விராவின் சகாக்களாகிய தி. கக்கள் போல் அந் நவீனரின் பக்தராகிய அ. நெ. கூக்கள் மகிழலாம். சிவபக்தர் மகிழ்வது எங்ஙன்? 'தமிழ் மொழி மீது பற்றுதல் கொண்டு' என்பதற்குப் பதிலாகத் 'சைவ சமயத்தின் மீது பற்றுதல் கொண்டு' என்ருவது அக் காரணத்தைக் கற்பிக்கப் படாதா அந் நவீனர்? ஆத்திகத்தின்மீது பற்றுதல் கொண்டு என்ருயினும் அவர் கற்பிக்கலாம் அவரது நாத்திக வுள்ளத்தைச் சைவ சமூகம் இப்போதாவது காண்க'

**தமிழரசுக் கழகத்தார் தமிழையுங் கெடுக்க வந்த பேடர்**

நவீனர் எழுதிய புத்தகங்களுள் 'இலக்கியச் செல்வம்' என்பதொன்று அதனுசிரியர் தமிழரசுக் கழகத் தலைவர். அவருந் தமிழ் மொழி வழிபாட்டையே அப் புத்தகத்தில் வற்புறுத்தி யுள்ளார். அதற்கு அவர் கூறுங் காரணங்கள் என் முதற் புத்தகத்திலும் இப் புத்தகத்திலும் என்றுல் மறுக்கப்பட்டவற்றுளடங்கி யொழிந்தனவே யாம். பழஞ் செய்யுட்களுக்கு இக்காலத் தொரு சாரார் உரை காணு முறையை நவீனர்

குறை கூறியிருப்பது மேலே காட்டப்பட்டது. அந் நவீனர் அக் குறைக்கு விலக்கானவ ரல்லர். அவர் 'நூலெனிலோ' எனத் தொடங்குமொரு சாமானிய வெண்பாவை வளைத்து இழுத்து அலைத்துத் தம்போக்கிற் பொருள் கூறினர். அதிலுள்ள * 'நூலெனிலோ கோல் சாயும்' என்பதற்கு 'நூலறிவு, அதாவது சாத்திரம் படித்த சமயவாதிகள் ஆட்சி நடத்தினல் செங்கோல் முறை பிறழும்' என்பது பொருளாம். சாத்திரமும் சமயமும் அவருக்குக் கசந்தன. அக் கசப்பை அவ்வடியிற் புகுத்திச் சமயவாதிகளை நிந்தித்தாரவர். 'சாத்திரப் பொய்மையை நினைந்து நினைந்து அவன் மனம் நொந்தான்' எனக் கூறியதால் அவர் சாத்திரத்தைப் பொய்யெனக் கொண்டவரானர். 'சங்க காலத் தமிழ் இலக்கியங்கள் மன்னர்களின் மடியில் வளர்ந்தாலும் மக்களிடையேதான் பிறந்தன. அதனுற்றான் அவற்றை மக்கள் இலக்கியம் என்கிறோம். இடைக்காலத் தமிழ் இலக்கியங்களில் பெரும்பாலானவை மடங்களில் பிறந்து, மடத்தலைவர்களின் மடியிலே வளர்ந்தன. அவை மக்கள் இலக்கியங்களல்ல; மத இலக்கியங்கள்.' என்ற அடிகளாலும் சமய இலக்கியங்கள் தூற்றப்பட்டன. 'மதம் என்னும் மதுவுண்ட மயக்கத்தால்.......... தமிழ்மொழியை மறந்தனர் மக்கள்' என்றதும் மத நிந்தையே. சமயம், சாத்திரம், மதம் என்பவற்றை அந் நவீனர் இகழ்வது அவற்றில் வெளிப்படை. ஆனல்

> 'மதச் சண்டை இருந்த போதும் சமணனும் சைவனும் வைணவனும் கவிதைகளை வீசித்தான் சண்டையிட்டார்களே தவிர, கத்திகளை வீசியல்ல. அத்தகைய தமிழர்களைப் பார்த்து நேரு காட்டுமிராண்டிகள் என்கிருர்'
>
> (11—2—56 தமிழ் நாடு)

என்கிருர் அவர். நேருவைக் கண்டித்துத் தமிழரின் பெருமையைக் காத்துக் கோடற்கு அச்சமயிகளின் சாத்வீக முறையை யெடுத்துக் காட்டிய அவர் அச்சமயிகளை 'மதம் என்னும் மதுவுண்ட மயக்க' முள்ளவரெனக் கூறியிகழலாமா? தாயை யடக்கி அவள் செய்து வந்த தவற்றை மகள் செய்வதுபோலிருக்கிறது அவர் செயல். 'ஆலயங்களில்........... மூவர் தேவாரத்தைப் பாடினல், அர்ச்சகருக்கு மூச்சு முட்டிப் போகுமோ! மணிவாசகரின் திருவாசகப் பாடல், இறைவனின் திருவுள்ளத்திற்கு ஏற்காதா? வேதமோதின்........... மற்றைய

---

* நூலெனிலோ கோல்சாயு முந்தமரேல் வெஞ்சமராம்
கோலெனிலோ வாங்கே குடிசாயும் - நாலாவான்
மந்திரியு மாவான் வழிக்குத் துணையாவான்
அந்த வரசே யரசு.

(தனிப்பாடல் - ஔவையார்)

ரிலரே என்பது சிவப்பிரகாசரின் திருவாக்கு' என்கிருரவர். அம்மூவரும், மணிவாசகரும், சிவப்பிரகாசரும் சாத்திரம் பொய் யென்பதை அறியாதவரல்லரா? அச்சாத்திரம் படித்த சமய வாதிகளல்லரா? மதம் என்னும் மதுவுண்டு மயங்கியவரல்லரா? அவர் பாடிய தேவார முதலிய தமிழை ஆலயங்களிற் பாட அந்நவீனர் எப்படிச் சிபார்சு செய்யலாம்? ஒருக்கால் அவர் மொழியென்னும் மதுவையுண்ட மயக்கத்தால் அம் மதத் தமிழை மதித்தார் போலும். மேலை நாட்டானெவனே மதம் மக்களறிவை மயக்கும் அபின் என்ருன். அக்கருத்தை அவனிடமிருந்து யாசித்துப் பெற்ருர் அவர். ஆனல் அவருக்கு அவ்வபின் பிடிக்கவில்லை, மதுப் பிடித்தது. அவர் பிறப்பதற்கு முன்னரே தேவார திருவாசகமாதியன சைவாலயங்களில் உரிய இடம் பெற்று இன்றும் ஓதப்பட்டு வருகின்றன.

'தமிழகத்தில் வடமொழி புகுமுன்னரே, தமிழருக்கு இறைவழிபாடு இருந்து வந்த தென்று ஆராய்ச்சியாளர்கள் அறிவிக்கின்றனர்' என்கிருரவர். சம்ஸ்கிருதம் தமிழகத்தில் வந்தேறி மொழியன்று, தமிழை ஆக்கிரமித்த மொழியன்று என்பது முன்னரே நன்கு விளக்கப்பட்டது. அவருக்குச் சைவசமய நூலறிவு (இருப்பதாகத் தெரியவில்லை. 'ஆராய்ச்சியாளர்கள் அறிவிக்கின்றனர்' என்ருரவர். ஆனல் தம் கொள்கைக்குப் பிரதி கூலமான விடங்களில் ஆராய்ச்சித் துறையையே அவர் குறைகூறி ஒதுக்கி விடுவர். 'இராமாயணத்தை வரலாற்றுக் கண்கொண்டு ஆராய்ந்த அறிஞர்கள் வெளியிட்ட கருத்துக்கள் பலவும், இந்த அபிப்பிராய பேதங்களுக்கு அடிப்படையாயின. ஆனல், ஆராய்ச்சி என்பது முற்றுப் பெருத ஒன்று. எனவே, அதைப்போர்க் கருவியாகக் கொள்வது கூடாது' என அவர் கூறுவது காண்க. சமயத்துறையிலும் அஃதங்ஙனமே. ஆகலின் 'இறைவழிபாடு இருந்து வந்த தென்பதை மெய்ப்பிக்க அவ்வறிவிப்பை அவர் போர்க்கருவியாகக் கொண்டது தப்பென்க தமிழகத்தில் அக்காலத்தில் இறை வழிபாடு எந்தச் சமயத்தைச் சார்ந்ததா யிருந்து வந்தது? அவ்வழி பாட்டு முறையை விரித்துக் கூறும் பிரமாண நூலெது? அவ்வழி பாட்டால் அவ்விறையிட மிருந்து யார் என்ன இலாபத்தைப் பெற்றனர்? அவ்வழிபாடு அவசியமா? அது செய்யாத மாந்தரை அவ்விறை என்ன செய்யும்? தண்டிக்கு மெனின், அத்தண்டனைகள் எவை? அவற்றிற்குரிய விடைகளை அந்நவீனர் தரவே வேண்டும். எச்சமயத்தையுஞ் சாராது செய்யும் அவ்வழிபாடும், எல்லாச் சமயங்களையுங் குழப்பிக் கொண்டு செய்யும் அவ்வழிபாடும் இறையிட மிருந்து எந்த நலனையும் வாங்கித் தரா? அவ்வழிபாடு செய்வோர் தாமும் ஆத்திகரே யென சமயத்துறையில் விசேடக் கல்வி பெருமல் பாரம் பரியத் தளவில் சமயங்களைச் சிறிதே ஆசரித்து வருகிற ஏழையரிடங் காட்டி இலௌகிக

மான தம் லக்ஷியங்களைச் சாதித்து அதனால் வரக் கூடிய புகழைப் பெறுதற்கு அவரைப் பயன் படுத்திக் கொள்வர். அதற்கே அவ்வழி பாடு உதவும். தமிழகத்திலும் சைவசமயமே என்று முள்ள தென்பதை அந்நவீனரறிக.

'ஆலயத்தில் புகுந்துள்ள பிறமொழிக்கு விடை கொடுத்து, தமிழ் மொழிக்கு இடந்தர வேண்டும் என்கிறார் அவர். அதனால் வரக் கூடிய விளைவு யாது? அதையும் அவர் சொல்லவேண்டும். அவர் விரும்பிய அது சைவாலயங்களில் நடந்து விட்டால் சைவம் வளரும் சிவபக்தி பெருகும், சைவ சமூகம் வாழும் என்பதையே விளைவென அவர் கூற வேண்டும். ஆனால் அதை அவர் விட்டார். 'அப்போது தான் தமிழ் வாழும். தமிழ் வாழ்ந்தால் தான் தமிழர் வாழ்வர்' என்று விளைவு கூறி முடிக்கிறார் அவர். அதைக் கண்ட மந்தமதியனும் தமிழ் வழிபாட்டுக் கொள்கையில் சைவ வளர்ச்சிக்கான புத்தியோ குறிக்கோளோ சிறிது மிருப்பதாகச் சொல்லமாட்டான். வெறும் பிராகிருதமே அக்கொள்கை. அது கைகூடினால் சைவம் வளரவுஞ் செய்யாது, மிக மிகக் கூனிக் குறுகியும் போம். அக்கொள்கைப் பிரமுகரனைவரும் அச்சமயம் வாழச் சிறிதும் சகியார். பாலின் பாது காப்பைப் பூனையின் பொறுப்பில் வைப்பதும், சைவ சமய வளர்ச்சி யைத் தமிழர்ச்சனைக்காரரின் பொறுப்பில் வைப்பதும் ஒன்றே. அம் மட்டோ? 'பாரதி கூறியது போன்று. சமயத் துறையில் * 'உயர் ஆரியத்திற்கு நிகர்' என்று பேசக்கூடிய பெருமையைத் தமிழ்மொழி பெற்றிருக்கிறது. பிற மாகாண மொழிகளுக்கு இந்தச் சிறப்பு இருப்ப தாக நான் கேள்விப்பட்டதில்லை' என அவர் கூறியது முன் காட்டப் பட்டது. அவ்வர்ச்சனைக் கொள்கை தமிழ் மொழியிலிருந்து சைவ சமயத்தைக் களைந்து, அம்மொழியின் பெருமையைக் குலைத்துச், சம யத்துறையில் உயர் ஆரியத்திற்கு நிகரெனப் பாரதி கூறியதை வெற் றுரை யாக்கிச், சமயத்துறை பற்றிய சிறப்பில்லாதனவெனச் சொல் லப்பட்ட பிறமாகாண மொழிகளின் தரத்துக்கு அம்மொழியைக் கொண்டுபோய் விடுவதுந் தப்பாது. சம்ஸ்கிருதமாகிய செவிலித்தாய் அரும்பாடுபட்டு வளர்த்ததென நவீனரே சொன்ன சமயத் தமிழின் உயிரை அது வாங்குவது நிசம். ஆகலின் அக்கொள்கையினர் தமி ழையுங் கெடுக்கவந்த கேடரென்க.

---

* மூன்று குலத்தமிழ் மன்னர்—என்னை
  மூண்டநல் லன்பொடு நித்தம் வளர்த்தார்;
ஆன்ற மொழிகளி னுள்ளே—உயர்
  ஆரியத் திற்கு நிகரென வாழ்ந்தேன்.

(பாரதியார் - தமிழ்த்தாய். 2)

ஈ. வே. ராக் கன்னட நாட்டார், தமிழகத்தை நாசப்படுத்து வதற்கென அங்கு வந்தேறி. எவரிடந் தவறிருந்தாலும் அவர் திருத்தப்பட வேண்டியவரே. பார்ப்பனரிடம் பல தவறுகளுளவென்பது எனக்குந் தெரியும். எல்லா மொழிகளிலும் போலத் தமிழிலும் ஆக்கங்கெட்ட சுவடிகள் பலவுள வென்பதை அவ்விராக் கூட்டத்தினருந் தெரியவேண்டும். போக்க வேண்டிய தவறுகளையும், ஏற்க வேண்டிய 'கற்பவை'யையும் சோரவிட்டுத் தமிழகத்துக்கு வந்தேறிகள் என்றொரு காரணத்தைக் காட்டிப் பார்ப்பனரையும், சம்ஸ்கிருதத்தையும் வைகிறார் அவ்விரா. பாலம் போட்டால் அது இரண்டு கரைக்குமே யுண்டு. தமிழகத்தில் வந் தேறிய சமூகங்கள் வேறுமுள. அம்மொழிகளும் பல. அவற்றையுந் தமிழகத்திலிருந்து துரத்த அவர் முற்பட வேண்டும். முதலில் அவரே இவ் வகத்தை விட்டு ஓடற்குரியார். மயிலைக் கழித்ததாம் மண் கூகை. அவர் பார்ப்பனரையும் சம்ஸ்கிருதத்தையும் மாத்திரம் கழித்துத் துரத்துக வென்கிறார், — என்ன புத்தி! கோவிலுக்குப் போய்ச் சாமியைக் கும்பிடுவது மடமை, காட்டு மிராண்டித் தனம், மக்களைக் கெடுப்பது, மானங்கெட்ட செயல் என்றெல்லாம் ஆலய வழிபாட்டுக்காரரை மானங் கெடப் பேசிவருகிறு ரவர்.

ஈ. வே. ராவும் தமிழர்ச்சனையும்

'(நான்) கோவிலுக்கு சாமி கும்பிட போகமாட்டேன். (என் தமிழர்ச்சனைப் போராட்டத்தின்) நோக்கம் கிளர்ச்சி(யே)'
(14—12—56 தினமணி)

என்பதும் அவர் கூற்று. தமிழர்ச்சனைக் கொள்கையோ அடாத வொன்று. அவருடைய நாஸ்திக புத்திக் கொவ்வாதது ஆலய வழிபாடு. ஆகவின் அக்கொள்கையை அங்குப் புகுத்துவதற்காக அவர் போராடப் போவது சண்டித்தனம்.

'பலருக்கு நன்மையான ஒரு காரியம் சாதிக்கப் படுகையில், அதற்காக (ச்சாமியை) வழிபட்டு ஒரு கும்பிடு போடுவதால் தான் என்ன தவருகி விடப் போகிறது........காரியம் நிறை வேற சில காரியங்கள் செய்வதால் தன் சொந்தக் கருத்து, நம்பிக்கை கொள்கை மாறிவிடாது.' (14—12—53 தினமணி)

என்கிற ரவர். அப் 'பலர்' தான் யாரோ? அந் 'நன்மை' தான் யாதோ? அவர் பூணும் பொய்வேடத்தாலும், செய்யும் பொய் வழி பாட்டாலும் அவரது சொந்த யோக்கியதை மாறிவிடாதாம். அது கிடக்க, அவரால் தமிழர்ச்சனை புகுத்தப்பட்டு வழக்கத்திலும் வந்து விடட்டும். அப்புறம் கோயில்களில் நியமிக்கப்படும் தமிழ்ப் பூசகர் எப்படிப் பட்டவரா யிருப்பர்? உள்ளத்தில் கரிச்சட்டைப் புத்தியும், வெளியில் சமய வேடமுங் கொண்டவராய்த்தான் அவர் இருக்க

வேண்டும். அப்போதுதான் அவருடைய வயிறு வாடாது. அவர் உண்மையான சமயவுணர்ச்சி மிக்க அர்ச்சகரா யிருந்தால் அவர் முகத்தில் எச்சிலைக் காறித் துப்பியும், அவரை விளக்குமாற்றால் அடித்தும் விடுவர் அவ்விராவும், அவர் கூட்டத்தினரும். இல்லா விட்டால் அத்தனையையுங் கோயிற் சாமிகளுக்குச் செய்யப் போவ தாகச் சொன்ன அவரெல்லாந் தமக்கே செய்து கொண்டு தம் கரிப் புத்தியைப் போக்கி நல்லறிவைப் பெற்று அச் சாமிகளின் காலில் விழுந்து வணங்க வேண்டும். அவற்றுள் அவர் செய்யப் போவது எதுவோ?

அவ்விராச் செய்யவிருக்குந் தமிழர்ச்சனைப் போராட்டத்தை ஒரு நவீனர்

அருள் நெறித் திருக் கூட்டத் தலைவரும் அவர் கொள்கையும் வேட்டும்

'சந்தோஷமாக வரவேற்று தான் இதில் முன்னணியில் வருவதாகத் தெரிவித்தார்' (14—12—56 தின மணி)

'தாயைத் தண்ணீர்த் துறையில் கண்டால் மகளை வீட்டிலா பார்க்க வேண்டும்'. 'தாயைப் போற் பிள்ளை நூலைப் போற் சேலை' என்பன பழமொழி. அவ் விராவுக்குப் பொன்னுடை போர்த்தா ரந் நவீனர்.

> 'நானாக குன்றக்குடி மடத்துக்குப் போகவில்லை. அடிகளார் என்னை மடத்துக்கு வரவேண்டு மென்று அழைத்தனர். நான் போனேன். அங்கு நான் எதிர்பாராத நிலைமையில் ............இளைய பட்டம் என் நெற்றியில் விபூதியைப் பூசி விட்டது. நான் சும்மா இருந்து விட்டேன். பின்பு ஸ்ரீலஸ்ரீ அடிகளார் என் நெற்றியில் வீபூதி பூசின விஷயத்திற்கு தாம் வருந்துவதாகக் கடிதம் எனக்கு எழுதினர்.'
>
> (14—12—56 தின மணி)

என்றாராம் அவ்விரா. அப்படியெல்லாம் அவரை உபசரித்து அவர் மனம் நோவாத வகையில் நடந்துகொண்டார் அந் நவீனர். என்னே அவரது சுயமரியாதை. அவரைப் பற்றி அதிகம் பேசுவானேன்? அவரது வேடோபதேசங்கள் *'மெய் யெலா நீறு பூசி' என்று தொடங்

---

* மெய்யெலா நீறுபூசி வேணிகள் முடித்துக் கட்டி
கையினிற் படை கரந்த புத்தகக் கவளி ஏந்தி
மைபொதி விளக்கே என்ன மனத்தினுட் கறுப்பு வைத்துப்
பொய்தவ வேடங் கொண்டு புகுந்தனன் முத்த நாதன்.
(மெய்ப்பொருள் நாயனார் புராணம் 7)

கும் பாடலையும் [1]'உங்கணுயகஞர்' என்று தொடங்கும் அடிகளையும், மெய்ப்பொருள் நாயஞர் புராண [2]சூசன ஐந்தாவது பாராவையுமே எனக்கு நினைப்பூட்டுகின்றன. அவ் விராவைப் பகலாக்கப் போவதாகப் பிரதாபம் பேசிய அவர் அவ் விராவேயாயினர். வாதத்தின் முன் நிற்க மாட்டாத தமிழர்ச்சனைக் கொள்கையினர் எப்போதாவது எக்கோவிலிலாவது காலித்தனம், கலாட்டா நிகழாதா, அதைக் கொண்டாயினும் தம் கொள்கையைப் புகுத்தி விடலாமே யென இராகு கால, எம கண்ட, மரணயோக சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறர். வெட்கம். வெட்கம்.

'பழக்கம் என்பதன் பெயரால் ஒன்றை மறுப்பது கூடாது'
(16—6—55 தமிழ் நாடு)

'வழக்கத்தில் இல்லையென்பதை மட்டும், மூல காரணமாக வைத்து மாத்திரம் மறுப்பது நியாயமில்லை'
(21—5—55 தமிழ் நாடு)

என்கிறு ரவர். சைவாலயங்களில் அர்ச்சனைமுதற் சகல கிரியைகளும் சிவாகமங்களில் வகுக்கப்பட்ட விதிகளின் படியே நடைபெற வேண்டும், நடைபெற்றும் வருகின்றன. அவ்வுண்மையை யாரும் அறியாம லிரார். ஒரு சிலர் அறியாம லிருந்தால் அவரைத் தமக்குத் துணைவராக்கும் பொருட்டு அந் நவீனர் தம் உள்ளத்தை மறைத்துப் பேசுகிறர். சைவ சமூகம் அதை யறியும். சம்ஸ்கிருத அர்ச்சனை

---

1 மங்கலம் பெருக மற்றென் வாழ்வுவந் தணைந்த தென்ன
இங்கெழுந் தருளப் பெற்ற தென்கொலோ என்று கூற
உங்கள்நா யகஞர் முன்னம் உரைத்தஆ கமநூன் மண்மேல்
எங்குமில் லாத தொன்று கொடுவந்தேன் இயம்ப என்ருன்.
(மெய்ப்பொருள் நாயஞர் புராணம் 12)

2 இம்மெய்ப்பொருளுயஞர் இம்மெய்யுணர்வு உடையராகி, தமது சரீரத்திலும் சிறிதும் பற்று இன்றி, உயிர்க்கு உறவாகிய சிவனது திருவடிகளிலேயே இடையருத பெரும் பற்று உடையராய், தம்வசம் இறந்து பரவசராய் நின்றவர். அது, இவர் தம்முடைய பகைவன் சிவவேடம் கொண்டு வந்து தமக்குச் சிவாகமம் போதிப்பான் போலக்காட்டி, தம்மை உடைவாளினலே குத்தும் போதும், சிவவேடமே மெய்ப்பொருள் என்று அவனை வணங்கினமையாலும், அவனைக் கொல்லப் புகுந்த தத்தனைத் தடுத்து, அவனுக்கு இடையூறு நிகழாவண்ணம் அவனை அழைத்துக் கொண்டு போய் விடும்படி செய்தமையாலும்; துணியப்படும்
[மெய்ப்பொருள் நாயஞர் சூசனம் 5 வது. பாரா.]

பழக்கத்திலுள்ளது. தமிழர்ச்சனை வழக்கத்தி லில்லாதது என்பதை மூலகாரணமாகக் கொண்டா தமிழர்ச்சனையை மறுப்பவர் மறுக்கின்றனர்? இல்லை சம்ஸ்கிருத அர்ச்சனைக்கு விதியுண்டு, தமிழர்ச்சனைக்கு அஃதில்லை யென்பதே அவர் மறுப்பின் மூல காரணம். சைவாலயங்களில் நடைபெறுகிற கிரியைகளெல்லாம் பழக்கம், வழக்கம், மாமூல், ஐதிகம் என்பது அறியாமை; அன்றியும் சிவாகமங்களுக்குஞ் சைவாயலங்களுக்கு முள்ள தொடர்பைத் துண்டிக்க முயல்வதூஉமாம். ஒரு பெண்ணைக் கட்டவிழ்த்து இட்டப்படி திரிய விட்டு விட்டால் அவளை யாரும் அகப்படுத்தி எது வேண்டுமானாலுஞ் செய்ய முந்துவர். அவளைப் போற் சைவாலயங்களையும் சிவாகமத் தொடர்பி லிருந்து விலக்கி வைத்துத் தம்மிட்டம் போல் நடத்தப் பார்க்கிறார் நவீனர். அது கை கூடி விட்டால் சைவசமூகமே! உன் கதி யாதாகும்? அதனைப் பொறுப்புடன் சற்றே எண்ணிப்பார். விருதாவும் சிவாகம விரோதமுமான தொரு கிரியை மாமூலாக நடைபெற்று வந்தாலும் அதைக் கண்டு போக்கவே வேண்டும். அங்ஙனமின்றி அதை யெடுத்துக்காட்டி மேலுமொன்றைப் புகுத்த முயல்வது அநீதி. சைவாலயக் கிரியா விஷயங்களில் சிவாகம விதியை மறக்கடிக்கும் பாமர வாசகங்களாகிய பழக்கம், வழக்கம், மாமூல் ஐதிகம் என்பன ஒழிக்கப்பட வேண்டும்.

> 'நமது அரசாங்கம்........(நமது) சமயத்தின் சொத்திலிருந்து 3½ சத விகிதமும், 5 சத விகிதமும் மற்ற சமயத்தினருக்கும், நாஸ்திகனுக்கும் செலவழிக்கிறது. மற்ற எந்தச் சமயத்தின் சொத்துக்கும் கணக்கோ அல்லது அதன்மீது கட்டுப்பாடோ இல்லாதிருக்கையில் நமது சமயத்தின் சொத்துமீது மாத்திரம் அதிகாரமும் கண்காணிப்பும் வைத்துக் கொண்டிருப்பது எப்படி நீதியாகும்' (27—6—55 தமிழ் நாடு)

என்கிறார் நவீனர். அக் கேள்விக்கு விடை வேண்டுவதே. ஆனால் அங்ஙனம் செலவு செய்யுமாறு வழியை யுண்டாக்கி அரசாங்கத்தைத் தூண்டியவர் அவர்தான். எப்படி?

> 'தமிழும் சமயமும் தனித்து இருக்க முடியாது. இருந்ததுமில்லை........தமிழ்........தமிழ் நாடு என்று ஆர்வமுள்ளவர்கள் சமயத்தை விட்டுப் பிரிந்து செல்கின்றனர். சமயச் சார்புடைய பெருமக்கள் தமிழை விட்டுப் பிரிந்து செல்கின்றனர். தமிழும் சமயமும் பிரிந்ததனுல் தான் இத்தகு நிலைமை தமிழகத்தில் உண்டாகியது. இது விரைவில் மாற்றப்பட்டு தமிழும் சமயமும் கைகோத்து இயங்குதல் வேண்டும்'
>
> (28—2—54 தின மணி)

என்கிறுரவர். 'தமிழ், தமிழ் நாடு என்று ஆர்வமுள்ளவர்கள் சமயத்தை விட்டுப் பிரிந்து செல்கின்றனர்' என்ற குற்றம் அவரிடமே யுள்ளது. அவர் வாயிலிருந்து வருவன வெல்லாம் அந்த ஆர்வ முள்ள பிரசாரங்களே யாம். தமிழே கடவுள் என்று கூறு மளவுக்கு அவர் போனவர். அக்குற்றத்தை அவர் பிறர்மேற் சுமத்தி விட்டுத் தாம் நல்லவராகப் பார்க்கிறுர். சைவச் சார்புடைய பெருமக்கள் தமிழை விட்டுப் பிரிந்து செல்வதேயில்லை. அது முன் பலபடியாலும் விளக்கப்பட்டது. தமிழும் சமயமும் கைகோத்து இயங்க வேண்டு மென்றுரே நவீனர். அச் சமயம் எது? தமிழும் சைவமும் என்று சொல்லத்தானும் அவருக்கு ஆசையோ துணிவோ இல்லை. அஃதொன்று. நாத்திகம் பரவுகிறதாம், அதைக்கண்டு நடுங்குபவர் போல் நடிக்கிறுரவர். சாத்திரப் பயிற்சியோடு கூடிய சைவப் பிரசார மொன்றே அந் நாத்திகத்தை நிர்மூலமாக்கும். அவர் செய்வதோ அப்பிரசார மன்று, வெறுந் தமிழ்ப் பிரசாரமே. அது நாத்திகத்தை வளர்க்கவே செய்யும். ஈ. வே. ராவின் நாத்திக வழிப்பட்ட தமிழர்ச் சனைப் போராட்டத்துக்குத் 'தமிழ் மீது பற்றுதல் கொண்டு' என் பதைக் காரணமாகக் காட்டித் துணை போக நவீனர் கச்சை கட்டுவதே அதற்குச் சான்று. நாத்திகத்தை யொழிப்பதற்கு ஆத்திகமெனப்படுஞ் சமயங்களின் கூட்டணியொன்றை யமைக்க அவர் முயல்கிறுர். அக் கூட்டணிக் காசைப்படும் எச் சமயத்துக்குந் தன்னளவில் நாத்தி கத்தை யெதிர்க்கும் வன்மை யில்லை யென்பதே முடிவு. ஒருவேளை அக் கூட்டணிக்கு அவசியம் நேருமானுலும் எச் சமயமுந் தன்வரம்பை யழித்துக் கொள்ளு முகத்தால் தன் சொருபத்தைக் குலைத்து விடக் கூடாது.

> 'உலகில் வட துருவத்திலிருந்து தென் துருவம் வரையுள்ள மக்கள் சகோதரத்வத்துடன் இணைந்து வாழ்க்கை நடத்த வேண்டு மென்ற ஆசை நிலவுகிறது. ஆனுல் அந்தந்த நாட்டுக் கலாசாரப் பண்பாடு பாதிக்காத முறையில் இது நடைபெற வேண்டு மென விரும்பப்படுகிறது. தனிப்பட்ட சமூக உணர்ச்சி வெறுத்து ஒதுக்கத்தக்க தில்லை. அந்த தனித்த சமூக உணர்ச்சி பொதுவான உலக பொது சமு தாய உணர்ச்சிக்கு இடையூருக இருக்கக்கூடாது'.
>
> (18—9—54 தின மணி)

என அவரே கூறுகிறுர். அரபு நாட்டில் இசுலாம் தோன்றுதற்கு முன் னரும், தோன்றிய பின்னரும் கலாசாரங்க ளிருந்தன. முன்னுள்ளது காட்டுமிராண்டித் தனமானது. பின்னுள்ளது நாகரிகமானது. அவற் றுள் அந்நாட்டுக் கலாசாரமென எதனைக் கொள்வது? இசுலாமிய கலாசாரமே அந்நாட்டினரால் ஏற்றுக் கொள்ளப்படும். ஆகவே நாட்

டுக்கென, மொழிக்கென, இனத்துக்கெனக் கலாசாரங்க ளிருக்குமாயின் அவை யழியுந் தகுதியவே. சமய கலாசாரம் அவற்றைப் போக்கடித்து விடும். அங்ஙனமாக, இங்கும் சைவசமய கலாசாரம், சைவசமய நாகரிகம், சைவசமய பண்பாடு என்றே சொல்ல வேண்டும். அதுவே நவீனருக்கு முறை. அம்மூன்றும் பாதிக்கப்படாத வகையில் சைவசமூகம் உலகமக்களோடு இணைந்து வாழ்வதை யாரும் வேண்டா மென்னர். நவீனரோ அக்கூட்டணியைப் பலப்படுத்த விரும்பி அம்மூன்றுக்கும் முன்னுள்ள சைவசமய மென்ற சொல்லை நழுவவிட்டு அதற்கே யுரிய இடத்தில் தமிழ்நாடு, தமிழ்மொழி, தமிழினம் என்பவற்றை யொட்ட வைக்கிறர். அஃதின்னென்று. இந்நாட்டுச் சமயங்க ளனைத்தையுஞ் சேர்த்து ஹிந்து சமய மென்ற பெயரால் வழங்கி வருவது மற்ருென்று. அப்பெயர் பற்றிய ஆராய்ச்சியை முன்னர்க் காண்க. இன்னும் பலவுள. அவை யெல்லாஞ் சேர்ந்து கொண்டன. அதனல் சைவசமயம், சைவ சமய சமூகம், சைவ சமய நிலயம், சைவ சமய சொத்து என்பவற்றை யெல்லாஞ் சேர்த்துப் பிரத்தியேகமாக அரசாங்கத்தால் அறிய முடியவில்லே. சட்ட சபைகளில் சைவ சமயத்தைச் சார்ந்த உறுப்பினருக்குப் பஞ்சமா? அச்சமய நிலேகண்டு கண் கலங்கி அச்சபைகளில் வாய்திறக்க வல்லார் எத்தனே பேர்? திறந்து பேசினர் எத்தனே பேர்? அச்சமய வுணர்ச்சி சர்வசூன்யமாகிப்போய்க் கிடப்பவர்தானே பெரும் பாலார்? அந்தோ! அவரை நினைத்தாலே சைவ மானவுணர்ச்சி யுடையவரின் குருதி கொதிப்படையாம லிராது. அச் சூனிய நிலே நவீனர் செய்து வருங் கேட்டின் பிரதிபலனமே. சமீபத்தில் 'சமயத் தலேவர்கள்' என்ற புத்தக வெளியீடு அரசாங்கத்தையே இசுலாமியர்முன் பணிய வைத்தது. என்னே அவரிடமுள்ள சமயாபிமானம்! அச்சமயம் எந்தப் பிரதேச மொழியோடாவது கைகோத்து இயங்கின துண்டா? இல்லே. அஃது அம்மொழிகளே யெல்லாங் கடந்து தனித்தியங்குவது. அம் மொழிகளே அதை அனுசரிப்பன. சைவ சமயமும் அன்னதாதல் வேண்டும், ஆனல் சைவர் பால் அன்னதொரு சமயாபிமானம் அங்குரிக்கவும் இடங்கொடார் நவீனர். அங்ஙனமாகச் சைவ சமயச் சொத்து ஏன் புறம்போகாது? அதற்காக அவர் கண்களில் நீர் வடியலாம். அது துயரக் கண்ணீரன்று, ஆனந்த பாஷ்ப மென்க. இருக்கிறவன் சரியா யிருந்தால் வேலே செய்கிறவனுஞ் சரியாய்ச் செய்வான்.

ஒரு சைவாலயத்தில் 'சமயப் பெரியார்களின் வரலாற்றுச் சொற்பொழிவு போட்டி' யொன்று நடந்தது. அச்செலவு அத்தேவஸ்தானத்தைப் பொறுத்ததென நான் நினேக்கிறேன். அத்தேவஸ்தானத்துத் தர்மகர்த்தர் ஐந்து பேரும், நிர்வாக அதிகாரியும்

அவ்விளம்பரப் பத்திரிகையிற் கையெழுத்திட்டிருக்கின்றனர். அதிலுள்ள 'போட்டி சொற்பொழிவுப் பொருள்' என்பதை யடுத்து 'அறுபத்து மூன்று நாயன்மார்கள், 12 ஆழ்வாராதிகள், பட்டினத்தடிகள், தாயுமானவர், இராமலிங்க சுவாமிகள்

**சைவ சமயக் கோயில்களில் சைவ சமயத்துக்கு விரோதமான பிரசாரம்**

ஸ்ரீ இராம கிருஷ்ண பரமஹம்சர், ஸ்ரீ விவேகானந்தர், அருணகிரிநாதர், திருவள்ளுவர், ஸ்ரீ சங்கரர், மத்வாசாரியார், ஸ்ரீ இராமானுஜர் ஆகிய பெரியோர்களின் வாழ்க்கை வரலாறு' என்று காணப்படுகிறது. அச் சாபிதாவிற் கண்டவருள் அந்நியசமயங்களின் தலைவர் இலரா? அவர் வரலாறு பற்றிய பேச்சுக்கும் அத் தேவஸ்தானத்தில் இடங் கொடுக்க வேண்டுமா? கொடுக்கலாமெனின், அத் தேவஸ்தானம் அச் சாபிதாவில் புத்தர், ஏசு, முகமது முதலியோரை ஏன் சேர்க்கவில்லை? சைவ சமயத்தைப் பேர் சொல்லி நிந்தித்தவர், அதை விட்டு ஓடிப்போனவர் இராமலிங்கர். அவரைச் சேர்த்துக் கொண்ட அச் சாபிதா யாழ்ப்பாணத்து ஆறுமுகநாவலரைச் சேர்த்துக் கொள்ளவில்லை. ஏன்? சிவாகம விரோதிகளாய்ச் சைவ சமயத்துக்கு முற்றிலும் புறம்பான பாடியங்கள் எழுதினர் சங்கரரும் இராமானுஜரும், மத்வரும். அச் சாபிதா அம் மூவரையும் ஏற்றுக்கொண்டது. நீலகண்டரோ சைவ பாடியகாரர், சிவஞான முனிவரோ திராவிட மாபாடியகாரர். அச் சாபிதா அவ் விருவரையும் விட்டது அது தகுமா? தமது செயல் சைவ சமய வளர்ச்சிக்கு உதவக்கூடியதா? அன்றா? என்பதைச் சிந்திக்கும் ஆசையோ, அவகாசமோ, ஆற்றலோ அவ்விளம்பரத்திற் கையெழுதிட்டவரிடஞ் சிறிதேனு மிருப்பதாகத் தெரியவில்லை. அங்ஙனம் சைவ தேவஸ்தானங்களே அந்நிய சமயங்களின் ஆக்கத்திற்கு உபகரிக்கும் போது அரசாங்கத்தைக் குறை கூறுவானேன்.

**காந்திஜியின் சமரச மனப்பான்மையும் மதமும்**

'பண்டைக் காலத்தில் பல்வேறு மதத்தினரிடையே காணப்பட்டதைவிட அதிகமான பரஸ்பர சகிப்புத் தன்மை இக்காலத்தில் காணப்படுகிறது. இது முன்னேற்றம் என்று எனக்குத் தோன்றவில்லை..............இப்பொழுது மதத்தில் அலட்சியம் காரணமாக, இந்த சகிப்புத் தன்மை ஏற்பட்டிருக்கிறது என்றே நினைக்கிறேன். நம்பிக்கை பலஹீன மடைந்து தளர்ந்து வருகிறது...........ஒருவர் தமது மதத்தின் மீது வைத்திருந்த நம்பிக்கையை இழந்த விட்டார்களென்றால், மற்ற மதங்களிடம் சகிப்புத்தன்மை காட்டுவது அவருக்குச் சுலபமாகி விடுகிறது. இவ்விதம் நம்பிக்கைத் தளர்வால் ஏற்படும்

சமரசபாவத்தைப் பாராட்ட முடியாது. காந்திஜி போதித்த சகிப்புத் தன்மையும், சமரச உணர்ச்சியும் இதுவல்ல........... மத நம்பிக்கை புதுப்பிக்கப்பட்டு பலப்படுத்தப்பட வேண்டும் என்பது அவரது விருப்பம். ஒவ்வொருவரும் அவரவர் பிறந்த மதத்தில் பெரும் நம்பிக்கை வைத்து, அந்த மதக் கிரியைகளை அனுஷ்டித்து, வந்தனைவழிபாடுகளைச் செய்வதுடன், மற்ற மதங்களையும் இகழாது உரிய மதிப்புக் கொடுக்க வேண்டு மென்பதே காந்திஜியின் கருத்து. ஆதலால் ஒவ்வொருவரும் தாம் பிறந்த மதத்தினிடம் பெரும் நம்பிக்கை கொண்டு அந்த மதநம்பிக்கையை பலமடைய ஆவனயாவும் செய்ய வேண்டும். வெறும் ஆஷாட பூதித்தனமாகவோ, ஏதோ செய்து தொலைப்போம் என்றோ அனுஷ்டானங்களைச் செய்யாமல் உண்மையிலேயே பிறருக்கு உதாரணமாகவும் விளங்குமாறு கிரியைகளைச் செய்ய வேண்டும்...........பல மதங்களிலுள்ள அனுஷ்டானங்களை ஒன்று சேர்த்துக் குழப்புவது நல்லதல்ல. இதுவல்ல காந்திஜி கூறிய சமரச மனப்பான்மை.

"..............பலமதஸ்தர்கள் ஒரே இடத்தில் ஒன்று கூடி கூட்டு வழிபாடு செய்வதும் விரும்பத் தக்கதல்ல. ஹிந்து மதத்தின் மீது அதீத நம்பிக்கை வைத்திருக்கும் எந்த நபரையும் அந்த நம்பிக்கை தளர்வுறுத்த முயற்சி செய்யாதீர். சகிப்புத்தன்மை சமரசம் என்ற பிரசாரத்தால் அலட்சியத்தை வளர்க்காதீர் என்றுதான் இறுதியாகக் கேட்டுக் கொள்கிறேன்? (29—4—56 தினமணி)

என்கிறார் ராஜாஜி. ஹிந்து வென ஒரு சமயமில்லை. அது முன் ஆராய்ந்து காட்டப்பட்டது. சைவ சமயம், வைணவசமயம், மாயா

**ராஜாஜியின் சமயப்பற்று**

வாத சமயம், மத்வ சமயம் முதலியவே அவ்வயல்மொழிப் பொதுப் பெயரால் வழங்கப் பட்டு வருகின்றன. அச் சமயங்களையும் அப் பெயரே பற்றி ஒன்றெனக் கருதுவது தவறு. அவையுந் தம்முட் சிறிதுங் கலவாமை வேண்டும். எப்படிப்பட்ட சமரசம், சகிப்புத் தன்மை ஒருவனுக்கு அவன் பிறந்த சமயத்தின் மீதுள்ள நம்பிக்கையைக் குட்டி சுவராக்குமென அவர் அதிற்காட்டியிருக்கிறாரோ அப்படிப்பட்ட சமரசத்தையே, சகிப்புத் தன்மையையே நவீனர் சைவ சமூகத்திற் பரப்புகிறார். அதனால் அச்சமூகத்தில் அச்சமயாபிமானங் கெடுக்கப்படுகிறது. அக்கேட்டில் விதைத்து முளை காணப் பார்க்கிறார் தமிழ் மொழி, தமிழ்நாடு, தமிழினம் ஆகிய வற்றின் பற்றுக்களை அந்நவீனர். வேற்று மொழிக் கலப்பால் தமிழ்

மொழி கெட்டு விடுமெனப் பேசுகிற அவர் அந்நிய சமயக் கலப்பால் சைவசமயங் கெடுமென்பதை உணராமை ஏனோ? சைவசமயச் சொத்து சைவசமய வளர்ச்சிக்கும், சைவசமூக நலனுக்கும், சைவ நிலய பரிபாலனத்துக்குமே செலவாக வேண்டும். அவ்வுணர்ச்சி மெய்யாகவே அவருக்கிருக்குமானால் அவர் அச்சமயத்தை எல்லா வற்றுக்கு முற்பட, மேலாக வைத்துப் பிரசாரஞ் செய்வதே சரியான வழி. அரசாங்கத்தின்பா லுள்ள குறையும் அதனால் நீக்கப்பட்டு விடும்.

ராஜாஜி எழுதிய ஆத்திக புத்தகங்களுங் கட்டுரைகளும் பல. அவற்றில் கடவுள், இறைவன், ஆண்டவன், பரம் பொருள், பர மாத்மா முதலிய பொதுச் சொற்களைத்தான் அவர் அதிகம் வழங்குவர் ஆனாலும் தாம் வைணவ ரென்பதை அவர் காட்டிக் கொள்ளாம லிரார். சந்தர்ப்பங் கிடைத்து விட்டால் அவர் விஷ்ணு பரத்வமே சாதிப்பர்.

> 'வானிலிருந்து மழையாக வரும் நீர் பல்வேறு ஆறுகச் சென்றாலும் முடிவில் ஒரே கடலைத்தான் போய் அடைகிறது. அதே போல எந்த தேவனைக் குறித்து வணங்கினாலும், அந்த வணக்கம் கேசவனையே சென்று சாருகிறது என்பது ஹிந்து மதம் போதிக்கும் உண்மை'
>
> (29—4—56 தின மணி)

என்கிறா ரவர். 'ஆகாசாத் பதிதம் தோயம் யதாகச்சதி சாகரம் சர்வ தேவ நமஸ்காரம் கேசவம் ப்ரதிகச்சதி' என்ற வசனத்தின் பெயர்ப்பு அது. அவ்வசனம் ஸ்மிருதியி லுள்ளது. சமரசம் பேசுவது தவறு தான் ஆனால் வைணவர் ஹிந்துவெனச் சொல்லிக் கொண்டு தம் சமயத்துக்கே மறைமுகமாக ஆக்கந் தேடிக் கொள்வர். ராஜாஜி அந்த ஸ்மிருதி வசனத்தை யெடுத்துக் காட்டியது கொண்டு அவரியல்பு அறியப்படும். அப்படி யிருந்தும்

> 'வியாசர் விருந்து. 'சக்கரவர்த்தித் திருமகன்' என்று பாரதம் இராமாயணம் என்ற பெருமானின் இரு கண்களைத் திறந்து காட்டிய ராஜாஜி பாகவதத்தையும் எழுதி மூன்றாவது கண்ணையும் திறக்க வேண்டும் என்று'
>
> (31—12—56 தின மணி)

ஒரு சைவர் கூறுகிறார். அவருக்கு அவ்வாசை அவசியமா? சைவ சமயத்துக்கு அப் புத்தகம் எவ் வகையில் உதவும்?

'............many orthodox Hindus even now believe it (The Bhagavata) to be a work of a comparatively recent grammarian — Bopadeva' என்றது

The Indian Review, September 1904 Page 596.

'வைதிகர்களாகிய அனேக இந்துக்கள் அப்புஸ்தக (பாகவத) த்தை மிகவுஞ் சுவல்ப காலத்திற்கு முன்னிருந்த வையாகரணியாகிய பொப்ப தேவரென்பவரால் இயற்றப்பட்ட தென்று இக்காலத்தும் நம்புகிறார்கள்' என்பது அதற்கருத்தம். அதனால் பாகவதம் புராணங் களுள் ஒன்றன்றாய்க் கற்பனை யென்பதாயிற்று. அவ்வுண்மை அச் சைவருக்குத் தெரியுமோ? அன்றோ? பதினெட்டுப் புராணங்களுள் பத்துப் புராணங்கள் சிவபரமாகவும், நாலு புராணங்கள் வேறு பல தெய்வங்கள் பரமாகவும், நான்கே புராணங்கள் விஷ்ணு பரமாகவுஞ் செய்தார் வியாசர். அவர் நாமக்காரரா யிருக்கமுடியுமா? வேதத்தில் விபூதி தாரண மாசாத்மியம் பல விடங்களிற் பேசப்பட்டிருக்கிறது. 'திக் பஸ்மரஹிதம் பாலம்,' 'நமஸ்தேஸ்து நமஸ்தேஸ்து த்வா மஹம் சரணம் கத: த்வத் பாதயுகளே சம்போ பக்தி ரஸ்து ஸதாமம பஸ்மதாரண ஸம்பந்தோ மம பக்தோ பவிஷ்யதி' என்றது ப்ருஹஜ் ஜாபாலோபநிஷத்து. 'திருநீறில்லாத நெற்றியைச் சுட்டுவிடு 'உமக்கு நமஸ்காரம், உமக்கு நமஸ்காரம், உம்மை நான் சரணமடைந் தேன். ஓ சம்புவே! உமது திருவடிகளிரண்டிலும் எனக்கு எப்போதும் பக்தியிருக்கட்டும், எனது பக்தன் பஸ்மதாரணத்துடன் கூடினவனு யாகக் கடவன்' என்பன அவற்றிற் கருத்தம். இரண்டாவது வாக்கியம் விஷ்ணு சொன்ன தென்பதை அவ்வுபநிஷத்திற் காண்க. நாமதார ணம் பற்றிய சாமானிய வசனமேனும் வேதத்தில் ஓரிடத்திலுங் கிடை யாது. அங்ஙனமாக 'வியாசர் விருந்து' என்ற புத்தகத்து அட்டைப் படத்தில் அவ்வியாசருக்கு நாமந்தீட்டப்பட்டிருக்கிறது. வைணவர் போக்கு அப்படி. இனி 'ஸ்தோமம் வோ அத்யாருத்ராய சிக்வஸே க்ஷயத் வீராய நமஸாதி திஷ்டந யேபி: சிவ: ஸ்வவாம் ஏவயாவபிர் திவ: ஸிஷக்தி ஸ்வயசா: நிகாமபி:' என்ற வசனம் ருக்வேதத்தி லுள்ளது. உங்களுடைய ஸ்தோத்ரத்தை நிக்ரஹாநுக்ரஹ சக்தியுடை யவரும், வீரபத்ரர் முதலிய கணங்களாற் சூழப்பட்டவருமாகிய உருத்தி ரருக்கு நமஸ்காரத்தோடுகூடக் காட்டுங்கள். அந்த ஸ்துதி நமஸ்காரங் களால் தேவர்களாகிய நீங்கள் எண்ணும் விருப்பங்களிலெல்லாம் அடையக் கூடிய பலன்களை எஜமானரும், பிறர்க்கில்லாத கீர்த்தியை யுடையவருமாகிய சிவபெருமான் ஒருவரே சேர்த்திருக்கிறார் என்பது அதற்கருத்தம். எவர் எத்தெய்வத்தை வணங்கினாலும் அவ்வணக் கத்தை அத்தெய்வம் சிவபெருமானுக்கே அர்ப்பணம் பண்ணிவிடு மென்பது கருத்து. ஸ்மிருதி வசனத்தைக் காட்டிலும் சுருதி வசனமே வலியுடைத்து. அச்சிவபரத்வ விஷயத்தில் நவீனரின் புத்தி யெப்படி?

சிவசப்தம் சம்ஸ்கிருதம். அது தமிழாயிருந்ததில்லையே யென்ற ஏக்கம் அவருக்கதிகம். வகை கெட்டு அது தமிழெனச் சொல்லிச் சாதிக்கவு முயல்வாரவர். ஆசைக்கு ரோஷமில்லை யென்பது பழமொழி. ஆயினும் அந்நாமத்தை உச்சரியாமல் அவர் விட்டு வருவதே பெரும்பான்மை. ஏன்? அந்நாமம் சம்ஸ்கிருதமே யென்ற வுண்மை அவர் நெஞ்சில் உறுத்திக் கொண்டே யிருக்கிறது. அதுவே காரணம். கள்ள மனந் துள்ளு மென்பது பழமொழி. ஆகையால் கடவுள் முதலிய பொதுச் சொற்களைப் பிரயோகிப்பதோடு அவர் நின்று விடுவர். அவர் வாயிலிருந்து சைவமென்ற சொல் எப்போதாவது வரும். அச்சொல் சத்தற்றது. ஏன்? அவரிடம் சிவபரத்வ புத்தியோ, அங்கீகாரமோ, பிரசங்கமோ கிடையாது. அவர் செய்துவரும் சைவப்பிரசார மெல்லாம் 'ஞமண ஞாஞண ஞாண ஞோண மென்'றே யிருக்கும்.

"The question of introducing Tamil Archana in temples rested solely with the trustees and Government could not intervene in the matter, said Mr. A. Uthandaraman Pillai Commissioner, Hindu Religious Endowments.... The Commissioner said it was not proper to launch any compaign for the purpose of introducing Tamil Archanas in temples." (12-1-57 The Indian Express)

ஹிந்துமத அறநிலய பாதுகாப்பு நிலய ஆணையாளரும் தமிழர்ச்சனையும்

என்ற செய்தி வந்துளது. அதில் ஹிந்துமத போர்டு கமிஷனர் ஆலயங்களில் தமிழர்ச்சனையைப் புகுத்தும் பொறுப்பு சர்க்காருடையதன்று, அவ்வவ்வாலய தர்மகர்த்தரின் அபிப்பிராயத்தைப் பொறுத்தது என்று கூறி விட்டு, அவ்வர்ச்சனையை ஆலயங்களிற் புகுத்த முயல்வது நியாயமன்றெனத் தம் கருத்தையும் வெளியிட்டிருக்கிறார். அக் கருத்தே சமய வளர்ச்சிக்கு முற்றிலும் ஏற்றது. அதற்காகச் சைவசமூகம் அவரைப் போற்றுக. ஆனால் மேலே காட்டிய தேவஸ்தான தர்மகர்த்தரையும் நிர்வாக அதிகாரியையும் போலல்லாமல் எந்தெந்த ஆலயம் எந்தெந்தச் சமயத்தைச் சார்ந்ததோ அந்தந்த ஆலயத்தை அந்தந்தச் சமயசாத்திர விதிகளுக்கே பொருந்துமாறு நடத்தக்கூடியவராயும், சமயஞான சமய அபிமான மிக்குடையவராயுமுள்ள பெருமக்களையே தர்மகர்த்தர் நிர்வாக அதிகாரிகளாக நியமிக்கும்படி அக்கமிஷனரைச் சைவசமூகம் வேண்டிக்கொள்வதவசியம்.

# 15

தமிழர்ச்சனை வேண்டு மென்பதற்கான காரணங்கள், மேற் கோள்கள் போல்வன மாத்திரம் நவீனரிடமிருந்து வரவில்லை. வேறு பலவற்றையும் அதற்காதரவு போல அவர் காட்டியுள்ளார். அவற்ருலும் சைவருட் பலர் மயங்கலாம். அதனையுங் களைந்தெறிய வேண்டும்.

முடிப்புரை

அதற்காகத்தான் அவர் ஓடிய இடமெங்கும் நானும் ஓடி அவரைப் பிடித்து நிறுத்தி அவர் கூறியவற்றுட் சில பலவற்றை அலசினேன். இந்தப் புத்தகம் இவ்வளவு வளர்ந்ததற்குக் காரணம் அதுவே. இன்னும் அவர் எங்கெங்கும் ஓடி என்னென்னவேனுஞ் சொல்லட்டும். அத்தனையும் என் பேனுவுக்கிரைதான். படித்த மக்களுந் தவறுதல் கூடும். அத்தவறுகளை யிடித்துக்காட்ட வல்லார் எடுத்துக் காட்டினுல் அவற்றைச் செய்தவர் திருந்திக் கொள்ள வேண்டும். இன்றேல் அவர் நரகவேதனைக்குள்ளாவார். பார்ப்பன ரல்லாதார் சம்ஸ்கிருதம் படிக்கக் கூடாது, அவருக்கு அம்மொழியின் உச்சரிப்புச் சரியாய் வராது, என்று கூறி அம்மொழிப் பயிற்சிக்கு அவரை விலக்காக்கி வைத்தனர் பார்ப்பனர். அவருள் அம்மொழி பயின்றவர் பலர். அவ்வல்லாதாருள் தாமான சமூகத்தைச் சேர்ந்த ஒருவரிருவர் அம்மொழியைக் கற்க விரும்பி அவரிடஞ் சென்ருலும் அவ்வொருவரிருவருக்குக் கூட அவருட் பலர் கற்றுக் கொடார். அவர் போக்கு அது சம்ஸ்கிருதம் அயல் மொழி; அறிவு, பண்பாடு ஆகியவற்றின் வளர்ச்சிக்கான நூல் அதிலொன்றுமில்லை, ஆகலின் தமிழச் சைவர் அம்மொழியைக் கற்க வேண்டா மென்பது நவீனர் கூற்று. 'ஒட்டக் கூத்தன் பாட்டுக்கு இரட்டைத் தாழ்' என்பது பழ மொழி. அதன்படி சைவர் அம்மொழியைக் கற்பதற்கின்றி அந் நவீனரும் தடை செய்கிருர். அங்ஙனம் அவ்விரு சகோதரர்து கொடுமையாலும் சைவ சமூகம் ஒற்றைக் கண் பொட்டையாகி வரு கிறது. சகித்தற்கரிய சங்கடம் அது. சைவ சமயிகள் தாமும் ஒரு திவ்விய தனிப்பட்ட சமயத்தையுடையர் என்பதைப் பெருமிதத்தோடு உலகிற்கு அறிமுகஞ் செய்ய வேண்டும். அஃதவர்க்குக் கடன். அதனை யாற்ற அவர் விரும்பினுல் சம்ஸ்கிருதத்தையும் நலக்கக் கற்று அதிலுள்ள வேதாகமாதி சைவ நூல்களனைத்தையும் வளம் பெறப் பயின்று போற்றிக் கொள்வது அவருக்கு அவசியம். இன்றேல் அவர் விருப்பம் நிறைவேருது. தமிழ் மொழி யென்னும் வேலியை யமைத்துத் தமிழகத்துக்குள்ளேயே வட்டமிட்டு அகப்பைக் காம்பு சிலம்பம் விளையாடித் திரிகிருர் நவீனர். அவர் சம்ஸ்கிருத சைவ நூற்களைப் பயில்வதெங்கே? கூனிக் குறுகிக் கிடக்கும் அச் சமயத்தை அப்பயிற்சி மூலம் மற்றப் பிரதேசங்களிலும் பரப்புவ தெங்கே? அவர் சைவத்தைச் சமய ஞானக் கண்கொண்டு பாராமல்,

நாடு, மொழி, இனம், அரசு முதலியவாகிய இலௌகீக ஊனக் கண் கொண்டே பார்க்கிறார். அதனால் அவரது தமிழர்ச்சனைக் கொள்கை அச்சமயத்தை இனிமேல் தமிழகத்திலும் கூனிக் குறுகிப் போமாறு செய்யும். அதனோடு பிரதேசந்தோறும் ஸ்நானப் பிராப்தி கூட இல்லாமல் வேறு வேறுமாறு அச்சமயத்தை அக்கொள்கை கண்ட துண்டமாக்கியும் விடும். அந்தோ அக்கேடு பெரிது, பெரிது. அது சம்பவியாதிருக்க வேண்டும் அதற்காகச் சைவ மக்கள் தமிழோடு சம்ஸ்கிருதத்தையுங் கற்பாராக. அக்கல்விக்கான எல்லா வசதிகளை யுஞ் செய்து கொடுக்கும் பொறுப்பு சைவ மடாலயங்களைச் சேர்ந்தது. அரசாங்கத்துக்கு முண்டு. சைவமுந் தமிழுந் தழைத்தினிதோங்குக என்று முழங்குவதைவிட்டுச் சைவமுந் தமிழ் சம்ஸ்கிருதங்களும் தழைத்தினி தோங்குக என்று முழங்குவதே சைவாபிவிருத்திக்கு உகந்ததாகும். அகில பாரத இசுலாமிய மகாநாடு, அகில பாரத கிறிஸ்தவ மகாநாடு, அகில பாரத பௌத்த மகாநாடு என எத்தனை மகாநாடுகள் நடைபெறுகின்றன! அப்படியே அகில பாரத வைதிக சைவ மகாநாடு அவ்வப்போது நடைபெற வேண்டாமா? சைவ சமூகத்துக்கு அவ்வாசை யிருப்பது தகாதா? அதனால் உலக அரங்கில் மதிப்பு வராதா? மேலும் பல நலன்கள் விளையாவா? ஆனால் அம் மகாநாடு நடைபெறுவதற்குச் சம்ஸ்கிருத சைவ நூற் பயிற்சிதான் முக்கிய சகாயமாகும். சைவ சமூகம் அதை உணர்ந்து செயலாற்றும் நாள் இன்னுமா தூரத்திலிருக்கிறது? இமய முதற் குமரி வரை சம்ஸ்கிருத சைவ நூற்களின் வாயிலாகவே சைவசமயம் வியாபித்திருப்பதைச் சைவசமூகம் அறிக. அச்சமய வளர்ச்சிக் குச் சிறிது பாதகமுஞ் செய்யாமல் முழுச் சாதகமே செய்து வருவது சம்ஸ்கிருத மந்திரங்களோடு கூடிய அர்ச்சனைதான். ஆகலின் தமிழகம் உள்பட சர்வ பிரதேசங்களிலுமுள்ள எல்லாச் சைவாலயங்களிலும் அவ்வர்ச்சனையே வேண்டும். தமிழர்ச்சனை யென்பது சைவசமயத்தின்மேலும் சம்ஸ்கிருத மொழியின் மேலும், பார்ப்பன சாதியின்மேலும் நவீனர் தம் நாத்திக புத்தி யால் துவேஷங் கொண்டு தமிழிற் பற்றுள்ளவர்போல் நடித்துக் கட்டிவிட்ட கற்பனையே அது தமிழகத்துச் சைவாலயங்களில் கூடவே கூடாது, வேண்டவே வேண்டாம்.

இந்தப் புத்தகத்தில் ஆங்காங்கே விழுந்துள்ள சில சொற்கள் தமக்கு மனக்கசப்பைத் தருவனவாக நவீனர் சொல்லலாம். அவருட் பலர் என்னை யறிவர், என் வணக்கத்துக்கு முரியர். அவருக்காகச் சாத்திரோக்தமாகிய என் கொள்கையை நான் சிறிதே விட்டுக் கொடுத்தேனாயின் அவரால் எனக்குப் பல சகாயங்கள் கிடைத்திருக்கு

மென்பதும் தெரியும். அச் சகாயங்களை உதறிவிடத்தக்க நிலையிலும் நானில்லை. ஆனால் என் சமயத்தை விட்டுக்கொடுக்க என் மனச் சாட்சி மறுத்தது.

'எந்தப் பேச்சாளனும் பேசும் செய்தியைக் கேட்டுத் தலையாட்டிப் பொம்மைகளாக இல்லாமல் அறிவையும் ஆராய்ச்சியையும் பயன்படுத்திக் கொள்ளத் தக்கவற்றைக் கொண்டு, தள்ளத் தக்கவற்றைத் தள்ளி வாழ்தலே சைவப் பொது மக்களின் கடமை யாகும்'. (2—12—55 தமிழ் நாடு)

என்கிறார் நவீனர். விஷயந்தெரியாத மடயன் தலையாட்டிப் பொம்மையாய்த்தா னிருப்பான்; இழுத்த பக்கமெல்லாந்தான் சாய்வான். 'கலியாணம் பண்ணியுஞ் சந்நியாசியா? கடன் வாங்கியும் பட்டினியா'? என்பது பழமொழி, அதன்படி என் பாக்கியப் பயனாகிய சைவசமயத்துக்குத் தமிழர்ச்சனைக் கொள்கை பெருங் கேடு செய்யு மென்பதை ஆராய்ந்து கண்டும் நான் மௌனஞ் சாதிக்க வேண்டுமா? என் சமயத்துறையில் தலையாட்டிப் பொம்மையென்ற நிந்தைக்கு இலக்காகக் கூடிய அவ்வளவு மடத்தனத்தில் மானங்கெட்ட நிலையில் ஈசுரன் என்னை வைக்க வில்லை. அவ்வர்ச்சனைக் கேட்டை நினைக்கும் போது எனக்குக் கவலையுண்டாயிற்று. அச் சொற்கள் விழுந்தமைக்கு அக் கவலையே காரணம் அவருள்ளத்தைப் புண்படுத்த வேண்டுமென்ற நோக்கம் எனக்கில்லை. அது சத்தியம். சைவசமயமே எனக்கு அனைத்துமாம் அதில் எந்தச் சைவருஞ் சந்தேகங் கொள்ள மாட்டார். நவீனருந் தம்மைச் சைவரெனச் சொல்லிக் கொள்வராகலின் அவர் என்னை அவ்வளவி லறிந்து ஆதரிப்பாராக; அதுவே பற்றித் தம் மனக் கசப்பையும் மாற்றிக் கொள்வாராக. அஃதவரால் முடியவில்லையானல் அவரிடம் மன்னிப்புக் கேட்கவும் நான் சித்தமா யிருக்கிறேன்.

இந்தப் புத்தகத்தில் அவருட் பலரின் வாக்கியங்கள் பத்திரிகைகளிலிருந்து எடுத்துக் காட்டப்பட்டிருக்கின்றன. அவரெல்லாம் தமிழர்ச்சனைக்காகப் போராடும் பிரதான புருஷரே. முன்னேடிகளே. அவருட்பலர் அக்கொள்கையை வரவர நழுவ விடுகின்றனர். காலித்தனம் நிகழ்ந்தால் மாத்திரம் அதைத் துணையாக நம்பி மீண்டும் அவர் தலை தூக்குவர் போலும். ஆனால் தமக்கென வொன்றிலராய் அவரைப் பின்பற்றிச் செல்வாரும் ஒரு படையா யுளரே. அவர்தான் அடிக்கடி குதிக்கிறார், அவரை அங்ஙனங் குதிக்க வைத்த அல்லது கிளப்பிவிட்ட பாவம் அறக்கொடிது. அம்முன்னேடிகள் தாம் திருந்தினலும் அவரைத் திருத்துவது கஷ்டம். ஆகலின் அப்பாவத்திலிருந்து அம் முன்னேடிகளால் தப்ப முடியாது.

பயிரோடு களையும் வளரும். பயிரை வளர்ப்பதொன்று. களையைப் பறிப்ப தொன்று. பயிரை வளர்த்துக் கொண்டே போனால் களை தானாக மறைந்துவிடு மென்று எந்த உழவனுஞ் சொல்லான். ஆனால் சைவப் பயிரை வளர்க்க விரும்புகிற சில பத்திரிகைகள் அதற்குக் களையா யிருப்பதைப் பறித்தெறிய அஞ்சுகின்றன, திறனற்றவாயு மிருக்கின்றன. அக் குறைகளை மறைக்கக் கருதி, அப் பயிரை வளர்த்தால் அக்களை தானாகப் போய் விடுமென அவை சமாதானம் பேசும். களையைப் பறித் தெறியு முறையில் இப் புத்தகம் இருக்கிறது, களை பறிப்பதன் அவசியத்தை யுணரக் கூடியதும், அதற்கேற்ற ஆற்றலையுடையது மாகிய பத்திரிகைதான் இதைக் கட்டுக்கரையாக வெளியிட முற்படும். அது முடியுமா வென நான் ‘செட்டிநாடு’ பத்திரிகையிடங் கேட்டேன். ‘சைவத்துக்கு ஆக்கமளிக்க வல்ல உண்மையைக் கூற அஞ்சுவானேன்? கட்டுரை வருக. நான் பரப்புகிறேன்’. எனச் சொல்லி எனக்கு அப்பத்திரிகை கை கொடுத்தது அப்பத்திரிகையின் ஆசிரியர் பாலகவி வயினாகரம் இராமநாதன் செட்டியார் அவர்களிடம் இந்தக் கட்டுரையைப் பிரசுரிக்க வேண்டா மெனக் கூறிய நவீனருமுளர். அச்செய்தியை அந் நவீனரே என்னிடம் சில நண்பரின் முன்னிலையில் தெரிவித்தார். சிவகிருபையால் அவ்வாசிரியரின் அஞ்சாமை இன்றேபோல் என்றும் நின்று நிலவுக. இக்கட்டுரையை எழுதிய என் சேவை பெரிதன்று, வெளியிட்ட அப்பத்திரிகையின் சேவையே பெரிது. அப்பத்திரிகைக்கு என் நன்றி உரித்தாகுக.

## முற்றும்

மேன்மை கொள் சைவநீதி விளங்குக வுலக மெல்லாம்.

ஸ்ரீமத் சிவஞான சுவாமிகள் திருவடி வாழ்க.

Jai Bharath.

# பிழை திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 4 | 19 | நோக்கி | நோக்கிக் |
| 6 | 2 | கொண்டு ..... | கொண்டு.....' |
| 9 | 4 | வேழிசைப் | வேழிசை |
| ,, | 15 | தமிழ்ப் | தமிழ் |
| 10 | 2 | சிவாச் | சிவா |
| ,, | 17 | இன்னொன்று | இன்னொன்று. |
| 15 | 7 | சொல்லி | சொல்லிச் |
| 17 | 30 | வளி | வழி |
| ,, | 32 | கச்சி | கச்சிக் |
| 22 | 8 | அவனே | அவனே |
| 25 | 22 | பெயற்க | பெயர்க்க |
| 30 | 5 | தன் | தம் |
| 32 | 8 | களின் | களில் |
| ,, | 32 | நாமத்தில் | நாமத்திலும் |
| ,, | 33 | தேவாரத் | தேவார |
| 35 | 22 | திரட்டு | திரட்டுச் |
| ,, | 24 | தேவராதி | தேவாராதி |
| ,, | 33 | தலைர் | தறைக் |
| 36 | 7 | தேவராதி | தேவாராதி |
| 40 | 14 | ஆத்திச் | ஆத்தி |
| 41 | 38 | கேட்டான் | கேட்டான்' |
| ,, | 40 | ொள்க | கொள் |
| 42 | 13 | தொல்காப்பியம் | தொல்காப்பியம். |
| 44 | 8 | அனைத்துந் திருத்தி | அனைத்தும் அங்ஙனந் திருத்தி |
| ,, | 21 | கிருந்து | றிருந்து |
| 45 | 3 | குறித்து | குறித்துத் |
| ,, | 5 | எவ்வளவி | எவ்வளவிலி |
| ,, | 26 | புத்தியே | புத்தியே. |
| 46 | 32 | முடியு | முடியுமென |
| 47 | 17 | வில்லை | வில்லையே |
| 48 | 11 12 | மேலும் மனிதரை மோக்ஷவுலகிற்கு அழைத்துச் சென்றுளர், மோக்ஷவுலகை மனிதரிடம் கொணர முடியாதென்க. | × |
| 51 | 16 | வாழ்ந்தனர். | வாழ்ந்தனர்; |
| 52 | 33 | ஆலயக் | சைவாலயக் |

# பிழை திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 56 | 34 | வெகு | 'வெகு |
| 58 | 32 | தமிழ் நாடு | தமிழ் நாடு) |
| 60 | 6 | 14-8-55 தமிழ் நாடு | (14-8-55 தமிழ் நாடு) |
| ,, | 25 | ,, | ,, |
| 61 | 10 | ,, | ,, |
| ,, | 13 | 13-11-55 தமிழ் நாடு | (13-11-55 தமிழ் நாடு) |
| ,, | 36 | 14-8-55 தமிழ் நாடு | (14-8-55 தமிழ் நாடு) |
| 63 | 23 | தமிழ் | தமிழ்ச் |
| 64 | 35 | 28-2-54 தினமணி | (28-2-54 தினமணி) |
| 65 | 14 | மென்கிறான் | மென்றான் |
| 66 | 8 | அடிப்படை | அடிப்படை, |
| ,, | 16 | சமயத்தின் | சமயத்தின் தலைவர் |
| ,, | 27 | என்பதைச் | என்பதே |
| ,, | 29 | சைவம் | சைவன் |
| 71 | 23 | துரோகமும். | துரோகமும், |
| ,, | 24 | துரோகமும். | துரோகமுமாம். |
| 72 | 5 | பிரத்தியேகச் | பிரத்தியேக |
| 74 | 8 | வாக்கியத்தை | வாக்கியத்தில் |
| 76 | 15 | அவ்ரவசு | அவ்வரசு |
| 89 | 31 | சீடராரனை | சீடராளுரனை |
| 93 | 34 | மாகி | மாதி |
| 94 | 17 | யிருக்கின்றார்கள். | இருக்கின்றார்கள்' |
| ,, | 18 | பாணிணீயம்' | பாணினீயம். |
| 97 | 7 | ருடையதே | ருடையதே. |
| 99 | 25 | இலொகீ | இவௌகி ✗ |
| 105 | 6 | மென்று | மென்பது |
| 106 | 8 | கலசார | கவாசார ✗ |
| ,, | 15 | அம்முன்றஞ் | அமரூன்றஞ் |
| ,, | 16 | முன்னிட்டதன | முன்னிட்டன |
| 107 | 30 | பிரமாணச் | பிரமாண |
| 108 | 11 | கல்வியிற் | கலவியிற் |
| 120 | 10 | Hidus | HINDUS (ஹிண்டஸ்) |
| ,, | 27 | விசிச் | விசித் |
| 121 | 2 | சாஸ்தி | சாஸ்திரி |
| ,, | 16 | ஒன்று | ஒன்று. |
| 124 | 14 | (அவருள் | அவருள் |
| ,, | ,, | வைணவர்) | வைணவர். |

# பிழை திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 127 | 16 | காட்டினேன். நான் | காட்டினேன் நான். |
| ,, | 29 | கடவுளொனுமாக | கடவுளுமாக |
| ,, | 35 | விபச் | விப |
| 128 | 11 | இப்புக் | இப்புத் |
| ,, | 14 | சிந்தித்து | சிந்தித்துத் |
| ,, | 23 | தெரித்து | தெறித்து |
| 131 | 23 | மின்றி | மின்றிக் |
| 132 | 32 | சாமரர் | சாமர் |
| 136 | 39 | மன்றோ | மன்று |
| 139 | 5 | லதவ | லாதவ |
| 146 | 22 | விரிவரை | விரிவுரை |
| 149 | 3 | அந்தஅந்த | அந்த |
| 151 | 18 | திருத | கிருத |
| 157 | 20 | துரை | துறை |
| 160 | 5 | அத்த | அந்த |
| ,, | 26 | பல் | பற் |
| 174 | 12 | நாட்டியத்து | நாட்டியத்துக்கு |
| 176 | 29 | மற்றதாய் | மற்றதாய்ப் |
| 180 | 13 | வாசித்து | வாதித்து |
| ,, | 20 | வுறை | வுரை |
| 185 | 18 | இப் | ‘இப் |
| 187 | 19 | பற்று | பற்றுப் |



இம்பீரியல் அச்சகம், திருநெல்வேலி

## ஸ்ரீ மாதவச் சிவஞான யோகிகள் சரித்திரம் (தொடர்ச்சி)

### முத்தப் பருவம்

சித்தநிலை திரியாது சித்தாந்த சைவமரீ இ
நத்தமல வலியகல நல்வினையுந் தீவினையு
மொத்தநிலை யுடையோரா யுற்றவருக் காரியனுன்
முத்தமவன் தனித்திடுவார் முத்தமுவந் தளித்திடுவார்.

### வாரானைப் பருவம்

வருககதிர் மணிவிளக்கே வருககுல பூடணமே
வருகவிரு ளறுசுடரே வருகவிளங் கருமருந்தே
வருகமுழு மலப்பகையே வருககரு ணைக்கடலே
வருகவரு கெனவழைப்ப வந்துவப்புச் செய்குவரே.

### அம்புலிப் பருவம்

மதியவனு தலினெுத்தா யல்லோனு தலின்மானுய்
விதியமையுங் கலைக்குறைவு மேவாது பொலிதருவாய்
துதியொடுவா ராமையினுற் சுடுகனற்சா பமும்பெறுவா
யதிவிரைவி னம்புலியே யாடவா வெனவுவப்பார்.

### சிற்றிற் பருவம்

பொருவினுதற் சுட்டியொடு பொலிமார்பைம் படைதயங்கத்
திருவிலிடு சதங்கையும் பொற் சிலம்புஞ்சீ றடியிரட்ட
வருதரும புரத்தர்முரண் மரபனைத்துஞ் சிதைப்பதுபோற்
றெருவின்மட வியரியற்று சிற்றில் சிதைத் தருளினுர்.

### சிறுபறைப் பருவம்

எடுத்தெனுஞ்சொற் கிடுவயிரக் குப்பாய மெண்டிகையும்
மடுத்துசிறை வதுபொருவ மண்முழுதும் போய்சிறைய
வடுத்தகுணில் கரம்பற்றி யழகியவெண் ணீறலங்கத்
தொடுத்தசிறு பறைமுழக்கி யருளினர்சொல் கலைமுழக்கார்.

### சிறுதேர்ப் பருவம்

இந்திரிய மெனும் பெருந்தே ரெண்ணிய வாறுருட்டுவதற்
கந்திமதி சடைக்கணிந்த வண்ணலார் சீறடியார்
முந்தியுறப் பழகுதல்போன் மொய்யழகு நலம்படைப்பப்
புந்திமகிழ்ந் தினிதிவர்ந்து பொற்சிறுதே ருருட்டினுர்

### வணக்கம்,

சீலநிகழ் மூலவா கமப்பொருளோன் ஞென்ருகித்திறம்புருது
ஞானநிகழ் குலதெய்வ மெனப்பலருங் கொண்டாட நாங்களுய்யச்
சாலநிகழ் சமவாத முதலியபோ யொளித்திடவு தயமாய் வந்த
பாலநிகழ் விழிமறைத்த சிவஞான யோகிபதம் பணிந்து வாழ்வாம்

திருச்சிற்றம்பலம்

# எங்கள் கழக வெளியீடுகள்

| வெளியிட்ட தேதி | எண் | பெயர் |
|---|---|---|
| 5—12—57 | 1 | திருவெம்பாவை — திருப்பள்ளியெழுச்சி (உரையுடன்) |
| 28—12—57 | 2 | தத்துவமுறை விளக்கப்படம் |
| 6— 1—58 | 3 | குருபூசை |
| 10— 2—58 | 4 | தாயுமானவர் — சமரசம் — அத்வைதம் |
| 27— 4—58 | 5 | ஸ்ரீ மாதவச்சிவஞான சுவாமிகளின் பெருமை |
| 31— 5—58 | 6 | நான் |
| 14— 9—58 | 7 | எது சமயம்? |
| 19—10—58 | 8 | சித்தாந்தக் கட்டளை |
| 17—12—58 | 9 | கொடிக்கவி |
| 1— 2—59 | 10 | சிவலிங்க தத்வார்த்தம். தக்ஷிணாமூர்த்தி தத்வார்த்தம் |
| 25— 2—59 | 11 | திருக்குறள் பொதுநூலா? |
| 7— 3—59 | 12 | சிவராத்திரி, நவராத்திரி, ஏகாதசி விரதங்கள் |
| 15— 9—59 | 13 | சிந்தாந்த ஞான ரத்னாவளி |
| 17—12—59 | 14 | திருநெல்வேலிப் பதிகம் உரையுடன் |
| 4— 1—59 | 15 | உண்மை விளக்கம் |
| 22— 1—60 | 16 | நம: பார்வதீ பதயே |
| 25— 2—60 | 17 | திருவெம்பாவை, திருப்பாவை பற்றிய விளக்கம் |
| 13— 4—60 | 18 | மனமே! சிந்தனை செய்; தெளிந்து செயலாற்று. (இராமலிங்கம் பிள்ளை பாடல்கள்) |
| 4— 5—60 | 19 | நாடும் நவீனரும் |

தருமம் செய்ய விரும்பும் அன்பர்களிடமிருந்து நன்கொடை பெற்று சைவசமய சம்பந்தமான விஷயங்களைப் புத்தகமாக அச்சிட்டு இலவசமாக வழங்கிவருகிறோம். இப்பணியில் எங்களுக்கு ஊக்க மூட்டிப் பொருளுதவி செய்ய விரும்பும் நேயர்கள் தங்களாலியன்றதைக் கீழ்க்கண்ட விலாசத்திற்கு அனுப்பினால் நன்றியுடன் ஏற்றுக் கொள்கிறோம். வணக்கம்.

73, கீழப்புதுத் தெரு,
திருநெல்வேலி-6

காரியதரிசி,
சித்தாந்த சைவச் செந்நெறிக் கழகம்

இம்பீரியல் அச்சகம், திருநெல்வேலி – 6.